MADRAS UNIVERSITY TAMIL DEPARTMENT

PUBLICATION NO. 18 - 7.

*General Editor*:

R. P. SETHU PILLAI, B.A., B.L.,

*Professor of Tamil,*

UNIVERSITY OF MADRAS.

---

# TIRUVĀYMOḺI

## ĪṬṬIN TAMIḺĀKKAM

VOLUME - VII (Hymns 663 - 772.)

Sri:

Srīmatē Rāmānujāya namaha

# Bagavat Vishayam

# TIRUVĀYMOḺI

## ĪṬṬIN TAMIḺĀKKAM

## VOLUME - VII (Hymns 663 - 772)

by

VIDVAN

B. R. PURUSHOTHAMA NAIDU

*Lecturer in Tamil (Retd.)*

UNIVERSITY OF MADRAS.




UNIVERSITY OF MADRAS

1971

பகவத் விஷயம்

# திருவாய்மொழி

(ஏழாம் பத்து)

## ஈட்டின் தமிழாக்கம்

இரண்டாம் பதிப்பு


சென்னைப்
பல்கலைக்கழகத்து ஓய்வு பெற்ற
தமிழ் விரிவுரையாளர்
வித்துவான்
பு. ரா. புருஷோத்தம நாயடு
ஆக்கியது.





சென்னைப் பல்கலைக்கழகம்

1971

# பொருளடக்கம்

# முகவுரை

குணம்வேண்டு மேநற் குலம்வேண்டு மேஅக் குலத்துஒழுக்காம்
பிணம்வேண்டு மேசெல்வப் பேய்வேண்டு மேபெருந் தண்வகுள
மணம்வேண்டும் தண்தெரி யல்பெரு மான்செய்யுள் மாமணியின்
கணம்வேண்டும் என்றுஅறி வாரைக்கண் டால்சென்று கைதொழுமே.

—சடகோபரந்தாதி, 82

*பெரியீர் !*

முறையே, தமிழ் மறையாகிய திருவாய்மொழியின் ஏழாம் பத்து ஈட்டின் தமிழ் ஆக்கம் இறைவன் திருவருளால் வெளி வருகின்றது. முன்னைய பத்துகளை ஏற்ற தமிழ் உலகம் இதனையும் ஏற்று அடியேற்கு ஊக்கம் அளிக்கும் என்பது அடியேனது துணிவு.

இவ்வுரையை எழுதி வந்த காலத்தும் பதிப்பித்த காலத்தும் ஆங்காங்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்த பெரியார்கட்கும் அன்பர்கட்கும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

இந்நூலைச் சென்னைப் பல்கலைக்கழகத்தார் அச்சிடுதற்குக் காரணராய் இருந்த சொல்லின் செல்வர், தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. R. P. சேதுப்பிள்ளை, B.A., B.L., அவர்கட்கும், தொடர்ச்சியாக வெளியிட்டு உதவி வரும் சென்னைப் பல்கலைக் கழக அதிகாரிகட்கும் என்றென்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

'குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.'

சென்னை,
3-7-1956.

இங்ஙனம்,
**B. R. புருஷோத்தம நாயடு**

# திருவாய்மொழி

## ஏழாம் பத்து

## முதல் திருவாய்மொழி—‘உண்ணிலாவிய’

### முன்னுரை

ஈடு: முதற்பத்தால், பகவத் கைங்கரியம் புருஷார்த்தம் என்று அறுதியிட்டார்; இரண்டாம் பத்தால், அந்தக் கைங்கரியத்தில் களையறுத்தார்; மூன்றாம் பத்தால், களையறுக்கப்பட்ட அந்தக் கைங்கரியமானது பாகவத சேஷத்துவ பரியந்தமான பகவத்கைங்கரியம் என்றார்; நான்காம் பத்தால், இப்படிப்பட்ட கைங்கரியத்திற்கு விரோதிகள் ஐஸ்வரிய கைவல்யங்கள் என்றார்; ஐந்தாம் பத்தால், அந்த விரோதிகளைப் போக்குவானும் அவனே என்றார்; ஆறாம் பத்தால், விரோதிகளை அழிக்கும் இயல்பினனான சர்வேஸ்வரன் திருவடிகளிலே சரணம் புகுகார்; இப்படிப் பெரிய பிராட்டியார் முன்னிலையாகச் சரணம் புக்கவிடத்திலும், [1] தக்தபட நியாயம்போலே சம்சாரம் தொடருகிறபடியைக் கண்டு நோவுபடுகிறார் இந்த ஏழாம் பத்தால்.

---

1. தக்தபடம் - எரிந்துபோன வஸ்திரம். ‘மடிப் புடைவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக்கிடக்கும்; காற்று அடித்த வாறே பறந்துபோம்’ என்பது, ஸ்ரீ வசனபூஷணம், 2-ஆம் பிரகரணம், சூ. 191.

[1] 'அமர்ந்து புகுந்தேன்' என்று தம்மால் ஆன அளவும் புகுர நின்றார். பின்பு [2] அவனைப் புகுர நிற்கக் கண்டிலர். 'இனிக் கை விடப் பார்த்தான் ஆகாதே' என்று விழுந்துகிடந்து கூப்பிடுகிறார். [3] விளம்பத்திற்குக் காரணம் இல்லாத சாதனத்தைப் பற்றி நின்றவன், அது பலத்தைக் கொடுக்குந்தனையும் கிடந்து கூப்பிடுவானத்தனை அன்றோ? [4] இவர்தாம் மேலே செய்ததாயிற்றது, திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய ஆகிஞ்சந்யத்தை விண்ணப்பஞ்செய்து கொண்டு சரணம் புக்காராயன்றோ இருக்கிறது? [5] அது, 'என்னையே எவர்கள் சரணம் அடைகிறார்களோ, அவர்கள் இந்த மாயையினைத்

---

1. மேல் திருவாய்மொழியோடு இத்திருவாய்மொழிக்குச் சுருக்கமாகச் சங்கதி அருளிச்செய்கிறார், 'அமர்ந்து புகுந்தேன்' என்று தொடங்கி. தம்மாலானவளவும் புகுர நிற்கையாவது, 'அகலகில்லேன் இறையும்' என்று உறையும் அலர்மேல்மங்கையைப் புருஷகாரமாகக் கொண்டு, புகல் ஒன்றில்லா அடியராகிய இவர் அவன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்து பற்றுமிடத்தில் உபாய புத்தியையும் தவிர்த்து நிற்றல்.

2. 'அவனைப் புகுர நிற்கக் கண்டிலர்' என்றது, 'விரோதியைப் போக்கிப் பேற்றினைக் கொடுத்தலைக் கண்டிலர்' என்றபடி.

3. 'ஒரு சாதனத்தை அநுஷ்டித்தவன் பலத்தை அடையுமளவும் ஆறியிருக்குமாறு போலே, செய்த சரணாகதி பலிக்குமளவும் ஆறியிராமல் கூப்பிடுகிறது என்?' என்ன, 'விளம்பத்திற்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். விளம்பம் - கால நீட்டிப்பு.

4. மேலே சுருங்க அருளிச்செய்ததனை விரித்து அருளிச்செய்கிறார், 'இவர்தாம்' என்று தொடங்கி. மேலே அருளிச்செய்த 'ஆனவளவும்' என்றதனை விவரணம் செய்கிறார், 'திருவேங்கடமுடையான' என்று தொடங்கி. ஆகிஞ்சந்யமாவது, கர்மம் ஞானம் பத்திகளிலும், அவற்றுக்குக் காரணங்களான சமம் தமம் முதலான ஆத்மகுணங்களிலும் அந்வயம் இன்றிக்கே, அவற்றுக்கு விபரீதங்களானவற்றாலே தான் பரிபூர்ணனாயிருக்கிற இருப்பையும், தன்னுடைய சொரூபம் எல்லா வகையாலும் ஈச்வரனுக்கே பரதந்திரமாயிருக்கிற இருப்பையும் நினைத்து, 'நம் காரியத்துக்கு நாம் கடவோம் அல்லோம்' என்றிருத்தல்.

5. மேலே, 'பின்பு அவனைப் புகுர நிற்கக் கண்டிலர்' என்றதனை விவரணம் செய்கிறார், 'அது, என்னையே' என்று தொடங்கி.

'மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே.'

என்பது, ஸ்ரீ கீதை, 7 : 14.

தாண்டுகிறார்கள்,' என்கிறபடியே, கடுகப் பலிந்துகொடு நிற்கக் கண்டிலர். [1] இனி, '**நம்மைக் கைவிடப் பார்த்தான் ஆகாதே**' என்று இன்னாதாகிறார். [2] 'சர்வேஸ்வரன் திருவருள் செய்வதற்கு வேண்டுவன, சம்சாரத்தினுடைய தண்ணிமை நெஞ்சிலே படுதல், சர்வேஸ்வரனுடைய வைலக்ஷண்யத்தை நினைத்தல், சரணாகதி செய்தல் என்னும் இவற்றிற்கு மேற்பட இல்லை அன்றோ?' என்று சம்சாரத்தின் சுபாவத்தை நினைத்துப் போக்கடி அற்று அவ்வடியைப் பற்றிச் சரணம் புக்கார்; புக்க இடத்திலும் தாம் விரும்பிய காரியத்தைச் செய்யாமையாலே, சரணம் புககார்மேலே வேல்காரரை ஏவித் துன்புறுத்தும் அருளற்றவரைப்போலேயாக அவனை நினைத்து அஞ்சினவராய், இவ்வளவிலும பலிக்கக் காணாமை யாலே, 'வைப்பனாக வைத்த பிரஹ்மாஸ்திரம் வாய்மடிந்ததுகாண்! என்று கூப்பிடுகிறார்.

[3] 'இனித்தான், 'தள்ளுகிறேன்' என்பதும், 'கொடுக்கிறேன்' என்பதும், இரண்டேயன்றோ? அவற்றுள், 'தள்ளுகிறேன்' என்னு மளவிலேயன்றோ நாம்' என்றிருந்தார். [4] 'அது என்? இவர்க்குக் 'கொடுக்கிறேன்' என்ற புத்தி யோகத்தைச் செய்து கொடுத் தானே?' என்னில், 'அதுவும் நோவுபடுகைககு உடலாகத் தந்தான்' என்றிருக்கிறார். [5] தம்முடைய சத்திகொண்டு பெற இருந்தார் அல்லர்; அவனுக்குச் சத்தி இல்லாமல் இழக்கிறார் அல்லர்; பேற்றுக்கு வேண்டுவது முன்பே செய்து நின்றார்; 'ஆன பின்பு,

1. *பேல் 'இனிக் கைவிடப் பார்த்தானாகாதே' என்றதனை விவரணம் செய்கிறார், 'இனி, நமமை' என்று தொடங்கி.*

2. *இன்னாதாகிற பிரகாரத்தைக் காட்டுகிறார், 'சர்வேஸ்வரன்' என்றது முதல் 'கூப்பிடுகிறார்' என்றது முடிய.*

3. *'விரைவில் பலியாவிட்டால் 'முறையாகப் பலிக்கிறது' என்றி ராமல், 'பலியாது' என்று பட்டுக் கூப்பிடுகைக்குக் காரணம் யாது?' என்ன, 'இனித்தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். 'க்ஷிபாமி' என்பது, ஸ்ரீகீதை, 16 : 19. 'ததாமி' என்பது, ஸ்ரீ கீதை, 10 : 10.*

4 *'தள்ளுகிறேன் என்றதற்கு, இலக்கானோம்' என்று அதிசங்கை பண்ணுவான் என்?' 'கொடுக்கிறேன்' என்ற புத்தி யோகத்தைப் பண்ணிக் கொடுத்தானே என்கிற சங்கையை அநுவதித்து, அது இப் போது காரியகரமாகாமையாலே அதுவும் வேறு ஒன்றற்காம் என்று வெறுக்கிறார் என்று பரிஹரிக்கிறார், 'அது என்? இவர்க்கு' என்று தொடங்கி.*

5. *மேலே 'விளம்பத்திற்குக் காரணம் இல்லாத' என்று தொடங்கிய வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'தம்முடைய' என்று தொடங்கி. 'முன்பே செய்து நின்றார்' என்றது, பிரபத்தி செய்து நின்றமையைக் குறித்தபடி.*

இவர்க்கு இப்போது இழக்க வேண்டுவது இல்லை அன்றோ? [1] ஆயின், பலியாது ஒழிவான என் ?' என்னில், [2] 'இவர் குறையால் வைத்தாலன்றோ பலித்தது இல்லையாவது? நமக்காக இருக்கிற பின்பு இவர் இங்கே இருந்தால் நல்லது,' என்றிருந்தான். [3] அவனும் இவரைக் கொண்டு ஒரு காரியம் கொள்ள அன்றோ எண்ணி இருக்கிறது? [4] அதுவும் ஒழிய, இவருடைய திருமேனி இறுதியானதாகையாலே, இவர் சரணாகதி செய்த இடத்திலும், இவர் திருமேனியில் தனக்குப் பிராவண்யத்தாலே காரியம் செய்திலன். இவர் திருமேனியில் அவனுக்கு உண்டான பிராவண்யத்தைக் கண்டே அன்றோ [5] 'மங்க ஒட்டு' என்று அவனைக் காறகட்டிற்றும்? [6] மெய்யான பிரேமம் உண்டானால் இங்ஙன் அல்லது இராதே. [7] இது பிரகிருதி ஆயிற்றே அவனுக்கு. [8] அவன் தம்மைக்கொண்டு கொள்ள

---

1. 'அப்படியாயின், இவருடைய விருப்பத்தை முடிக்காததற்குக் காரணம் என்?' என்கிற சங்கையை அநுவதிக்கிறார், 'ஆயின்' என்று தொடங்கி.

2. அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவர் குறையால்' என்று தொடங்கி.

3. 'நமக்காக இருக்கிற பின்பு' என்று தொடங்கும் மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'அவனும்' என்று தொடங்கி. 'ஒரு காரியம் கொள்ள' என்றது, இவரைக்கொண்டு உலகத்தைத் திருந்தச்செய்வது ஒரு காரியத்தை.

4. மேலதற்கே வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார், 'அதுவும் ஒழிய' என்று தொடங்கி.

5. 'மங்க ஒட்டு' என்பது, திருவாய்மொழி. 10. 7 : 10.

6. 'மற்றையோரிடத்தில் இங்ஙனம் பிராவண்யத்தைச் செலுத்தக் காணோமே?' என்ன, 'மெய்யான' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

7. மெய்யான பிரேமமுடையார் திருமேனியிலே அவனுக்குப் பிராவண்யம் சஹஜம் என்னுமதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'இது பிரகிருதியாயிற்றே அவனுக்கு' என்று. இது - பிராவண்யம். பிரகிருதி - இயல்பும் பிரதானமும்.

8. 'மயர்வற மதிநலம் அருளப்பெற்றவராகையாலே ஈஸ்வரன் தம்மை இங்கு வைத்திருக்கும் காரியத்தை அறிந்திருக்கக்கூடுமே? அங்ஙனமிருந்தும், இவர் விரைவதற்குக் காரணம் என்?' என்ன, 'அவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'இதில் பொருந்துவாரை' என்றது, திருமழிசைப்பிரான் போல்வாரை.

இருக்கிற காரியத்தை இதில் பொருந்துவாரைக் கொண்டு கொண்டால் ஆகாதோ என்றாயிற்று இவர் நினைத்திருக்கிறது. [1] 'செய்து கொடுத்த ஞானலாபம் இவர் தரித்திருப்பதற்குக் காரணமாம்,' என்றிருந்தான் அவன்; அதுதானே விரைவதற்குக் காரணமாயிற்று இவர்க்கு. [2] 'கிரமத்திலே காரியம் செய்கிறோம்' என்றிருந்தான் அவன்; அதுதன்னையே கொண்டு 'நம்மைக் கைவிட நினைத்தான்' என்றிருக்கிறார் இவர்.

[3] நித்தியவிபூதியையும் திவ்விய மங்கள விக்கிரஹத்தையும் கண்ணுற்கண்டு, 'அங்கே போய் அப்படியே அநுபவிக்கவேணும்' என்னும் பதற்றத்தையுடைய இவர்க்கு, 'சம்சாரம் ததீயமாயிருப்பதும் ஓர் ஆகாரம் உண்டு' என்னும் ஞானமாத்திரததாலே தரித்திருக்கப் போகாதே. [4] 'யானும் நீ தானாய்த் தெளிதோறும் நன்றும் அஞ்சுவன் நரகம் நான் அடைதல்' என்றே அன்றோ இவர் இருப்பது?

[5] இப்படி இருக்கிற தம்மையும், [6] அவனுக்குப் பாதுகாக்கப்படும் பொருள் குறைவற்று இருக்கிறபடியையும், காக்குந்தன்மை சொரூப

---

1. 'மேற்கூறிய காரணத்தால் வைத்தானேயாகிலும், துன்புறுகிற இவரைத் தரிப்பிக்க வேண்டாவோ?' என்ன, 'செய்துகொடுத்த' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிசசெய்கிறார். 'ஞானலாபம்' என்றது, ஏதேனும் ஒன்றைப் பற்றினாலும் அது தன்னையே பற்றியது என்று சொல்லலாம்படியான ததீயத்வபிரதிபத்தியை. ததீயத்வம் - அவனுக்கு உரிய பொருள், பிரதிபத்தி - நினைவு.

2. 'நமக்காக இருக்கிற பின்பு' என்ற மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'கிராமத்திலே' என்று தொடங்கி.

3. 'மேலே காட்டிக்கொடுத்த ததீயத்வ பிரதிபத்தியாலே தரித்திருக்க ஒண்ணாதோ?' என்ன, 'நித்திய விபூதியையும்' என்று தொடங்கி. அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. அந்த ஞானமாத்திரத்தாலே தரித்திருக்கப் போகாமைக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'யானும்' என்று தொடங்கி. இது திருவாய்மொழி. 8. 1 : 9. 'அஞ்சுவன்' என்றது, 'சேஷமாக இருக்கும் தன்மைக்கு விரோதமாகையாலே' என்றபடி. இதற்கு, 'வானுயர் இன்பம் மன்னி வீற்றிருந்தாய்' (ஷை. திருவாய்.) என்றதிலே நோக்கு.

5. இங்ஙனம் இடைப்பிறவரலாக வந்த சங்கைக்கு விடை அருளிச்செய்து, பின், திருப்பாசுரங்களுக்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இப்படி இருக்கிற' என்றது முதல் 'கிடந்து கூப்பிடுகிறார்' என்றது முடிய. 'இப்படி இருக்கிற தம்மையும்' என்றது, 'அவனைப் பெற வேண்டும் என்னும் ஆர்த்தியோடே சரணாகதி செய்த தம்மையும்' என்றபடி.

6. 'உலக மூன்றுடை', 'கடல் ஞாலம் காக்கின்ற', 'அண்ணலே', 'வலமுதல் கெடுக்கும் வரமே தந்தருள்', 'குணங்கள் கொண்ட மூர்த்தி'

மாயிருக்கிறபடியையும், காத்தற்குத்தொடர்பு இருக்கிறபடியையும், தமக்கு இவற்றில் தொடர்பு அற்று இருக்கிறபடியையும், சத்துவம் முதலான குணங்கள் அவற்றிற்கு அடியான [1] கர்ம தேஹ இந்திரியங்கள் இவற்றிற்கு அடியான மூலப்பகுதி மஹான் அஹங்காரம் அதன் காரியமான விஷயங்கள் அவித்யை கருமம் வாசனை ருசி ஆகிய இவை எல்லாம் அவனுக்கு வசப்பட்டவைகளாய் இருக்கிறபடியையும் நினைத்து,) [2] 'விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகிற சம்சாரத்தே வைத்தபோதே இவற்றுக்கு நம்மை இரையாக்கிப் போகட நினைத்தானித்தனை: 'தள்ளுகிறேன்' என்கிற கூட்டத்திலே புக்கோம். 'இனித்தான், இவன் பரிகரங்கள் கண்டதும் நம்மை அகற்றுகைக்கு உறுப்பாக. அவற்றுள், நித்திய விபூதியில் ஓலக்கம் இருககிறது, நாம் படுகிற நலிவு கண்டு அங்குள்ளாருடனே கூடச் சிரித்திருககைக்கு; லீலாவிபூதி கண்டது, நமக்குச் சிறைக்கூடமாக. மயர்வற மதிநலம் அருளிற்றும், அல்லாதாரைப் போன்று சுகமே இராமல் துடித்து நோவு படுகைக்காக' என்று அறுதியிட்டு, அவன் திருவடிகளிலே தலையை மடுத்து, கேட்டார் அடங்கலும் நீராம்படி கிடந்து கூப்பிடுகிறார்.

[3] 'மின்னிடை மடவார்' என்ற திருவாய்மொழியில், ஒரு பிராட்டியின் நிலையை அடைந்தாராய்ப் பிரணய ரோஷம் தலை

---

*என்பனவாக இத்திருவாய்மொழியில் வருகின்றனவற்றைத் திருவுள்ளம் பற்றி, 'அவனுக்குப் பாதுகாக்கப்படும் பொருள்' என்றது முதல் 'சத்துவம் முதலான குணங்கள்' என்றது முடிய அருளிச்செய்தபடி. 'இவற்றில்' என்றது, 'பாதுகாத்தல் முதலானவற்றில்' என்றபடி.*

1. *'குணங்கள் கொண்ட மூர்த்தி' என்று சத்துவம் முதலான குணங்களைச் சொல்லுகையாலே, அவற்றால் போதருகின்ற 'கர்ம தேஹ இந்திரியங்கள்' முதலானவற்றையும் சேர்த்து அருளிச்செய்கிறார்.*

2. *'குமை தீற்றி நலிவான் இன்னம் எண்ணுகின்றாய்' என வருதலைத் திருவுள்ளம் பற்றி, 'விஷயங்களும்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'க்ஷிபாமி' என்பது, ஸ்ரீ கீதை. 'பரிகரங்கள்' என்றது, நித்திய விபூதி தொடக்கமானவற்றை. இதனை விவரணம் செய்கிறார், 'அவற்றுள்' என்று தொடங்கி.*

3. *மேலே போந்த திருவாய்மொழியைக்காட்டிலும் இத்திருவாய்மொழியில் துன்பம் அதிகரித்திருக்கும் என்கிறார், 'மின்னிடை மடவார்' என்று தொடங்கி.*

எடுத்துச் சொன்னவை எல்லாம் பிறர் வாயாலே சொன்னாற்போலே இருக்கையாலே, ஆழ்வாரான தன்மையிலே நின்று இன்னதாம்படி யான நிலை விளைந்தது இவர்க்கு. [1]இவர், எல்லா அளவிலும் ஸ்ரீ ஜனகராஜன் திருமகளாரோடு ஒப்பார் ஒருவராயிற்று. என்றது, அத்தலையில் குறை இடுவார் ஒருவர் அன்றிக்கே ‘இவற்றுக்கெல் லாம் அடி நம்முடைய பாபம்’ என்றிருப்பார் ஒருவர் என்றபடி.

இங்ஙனே இருக்கக்கடவ இவர், அவன் தலையிலே குறையை ஏறிட்டுக் கூப்பிடுகிறார் அன்றே அந்த நிலை விளைகையாலே? [2]‘இவர் தாம் தம்மாலே வந்ததனை அவன் தலையிலே ஏறிடுவான் என்?’ என்னில், சம்பந்தத்தை உணர்ந்தால், இத்தலையாலே வந்ததனையும் அவன் பக்கலிலே ஏறிடலாய் இருக்கும் அன்றே? குழந்தை கிணற்றிலே விழுந்தால், ‘தாயானவள் தள்ளினாள்’ என்னக்கடவதாயிருக்கும். என்றது, ‘தாயானவள் கண்களிலே வெண்ணெய் இட்டுப் பார்த் திருந்தாளாகில் இக்குழந்தை விழுமோ? இவள் நோக்காமை அன்றே கேடுற்றது?’ என்று கொண்டு அவள் தலையில் குறை சொல்லக் கடவதாய் இருக்கும் என்றபடி. [3]உதங்கன் கிருஷ்ணன் பக்கலிலே வந்து, ‘உனக்கு இரு திறத்தாரோடும் சம்பந்தம் ஒத்திருக்கச் செய்தே, பாண்டவர்களை அழிக்காமல் துரியோதனாதியர்களை அழித் தாய்; இப்படிச் சார்வு செய்யப்போமோ?’ என்றாற்போலே வார்த்தை கள் சிலவற்றை அவன் சொல்ல, கிருஷ்ணனும் அவர்கள் குறைகளை எல்லாம் சொல்லி, ‘அவர்கட்குத் தருமத்தில் ருசி இல்லைகாண்’ என்ன, ‘நீ பின்னை அவர்களுக்குத் தருமத்தில் ருசி உண்டாக்கிக், கொடாது ஒழிவான் என்?’ என்றான் அன்றே?

---

1. ‘இன்னதாம்படியான நிலை விளைந்தது இவர்க்கு’ என்பதற்கு, ‘இவருடைய இயற்கைத் தன்மை யாது?’ என்ற சங்கையிலே, இவரு டைய உண்மை நிலைமையையும், இப்படி இருக்கிற இவர் அவனை வெறுக் கிறது ஒரு நிலை விசேடம் என்னுமதனையும் தெளிவாக அருளிச்செய்கிறார், ‘இவர் எல்லா அளவிலும்’ என்று தொடங்கி.

2. அவனை வெறுப்பதற்குக் காரணம் ஒரு நிலை விசேடமே அன் றிக்கே, சம்பந்தமடியாகவும் வெறுக்கலாம் என்னுமதனைச் சங்காபரிஹார மூலமாக அருளிச்செய்கிறார், ‘இவர்தாம்’ என்று தொடங்கி.

3. தாம் அருளிச்செய்ததற்கு அநுஷ்டானமும் காட்டுகிறார், ‘உதங்கன்’ என்று தொடங்கி. உதங்கன் - ஒரு முனிவன்.

[1] ‘பலநீ காட்டிப் படுப்பாயோ?’, ‘கிறிசெய்து என்னைப் புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ?’ என்று சொல்லுகிறபடியே அவற்றின் அண்மையும் சகிக்க முடியாதபடியாய், (இனி, தாம் அறியா திருக்கச்செய்தேயும் பகவத் விஷயத்தில் பிரவணமான ‘முடியானே’ என்ற திருவாய்மொழியிற் கூறப்பட்ட உறுப்புகளையுடைய இவர்க்கு இந்திரியங்கட்கு வசப்படுதல் உண்டு என்னுமிடம் மேலே கூறியதோடு முரணுகாதோ?’ என்னில், [2] பக்கத்து வீடு நெருப்புப் பற்றி வேவாநின்ருல், தமது தமது வீடுகளைப் பாதுகாத்துக்கொள்ளாமல் இருப்பவர் இலர் அன்றே? புற்றின் அருகே பழுதை கிடந்தாலும் ‘பாம்பு’ என்று நினைத்து மயங்கக் கூடியதாய் இருக்கும் அன்ருே? [3] அங்குத்தைக்கும் இங்குத்தைக்கும் பொதுவான உடம்போடே இருக்கிறபடியைக் கண்டார்: உலகத்தார் முழுதும் இந்திரியங்களுக்கு வசப்பட்டவராய்க் கிடந்து நோவுபடுகிறபடியையும் கண்டார்: ‘இது நம்மளவும் வரின் செய்வது என் ?’ என்று அஞ்சிக் கூப்பிடுகிருர்.)

[4] ஶாகா ம்ருகா-பூசலிலே புக்கு அங்கு உண்டான பழக்கம் இன்றிக்கே இருக்கை. பணையோடு பணை தத்தித் திரியுமவை அன்ருே? ராவண ஸாயகார்த்தா:- திசைப் பாலகர்களையுங்கூட

1. இவர் இந்திரியங்களுக்குப் பயப்பட்டுக் கூப்பிடுகிற இது, அசம்பாவிதம் என்று சங்கிக்கிருர், ‘பல நீ காட்டி’ என்று தொடங்கி. திருவாய். 6. 9. 9. ஷ 6 9: 8.

2. இந்த இரண்டு விதமான சங்கைகட்கும் பரிஹாரம் அருளிச்செய்கிருர், ‘பக்கத்து வீடு’ என்று தொடங்கியும், ‘புற்றின் அருகே’ என்று தொடங்கியும்.

3. ‘நன்று; இங்கு உபமேயத்தில் (தார்ஷ்டாந்திகத்தில்) மயக்கத்திற்குக் காரணம் யாது?’ என்ன, ‘அங்குத்தைக்கும்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

4. வியசனத்தாலே கூப்பிடுகிறதற்கு மூன்று திருஷ்டாந்தங்கள் காட்டுகிருர்: முதல் திருஷ்டாந்தம், ‘ஶாகா ம்ருகா:’ என்று தொடங்குவது.

‘தேவத்யமானா: பதிதாக்ரய வீரா:
நாநத்யமா நாபய ஶல்ய வித்தா:
ஶாகாம்ருகா ராவண ஸாய கார்த்தா:
ஜக்மு: ஶரண்யம் ஶரணம் ஸ்மராமம்’

என்பது, ஸ்ரீராமா. யுத். 59 : 45, ‘வாநரா:’ என்னுமல், ‘ஶாகா ம்ருகா:’ என்று விசேடித்ததற்கு பாவம் அருளிச்செய்கிருர், ‘பூசலிலே’ என்று

அச்சமுறுத்தி வளர்ந்தவன் கையில் அம்புகள். ஐக்மு: ஶரண்யம் ஶரணம் ஸ்மராமம் - தங்களுடைய ஆபத்தை அறிந்து போக்கக் கூடியவனையும் பார்த்துப் பற்றினார்கள். [1] ‘அரக்கர்களால் துன்புறுத்தப்பட்ட வானரங்களுடைய பெரிய கூட்டமானது, பாதுகாக்கின்றவனும் சக்கரவர்த்தி திருமகனுமான பெருமாளைச் சரணமாக அடைந்தது,’ என்கிறபடியே, முதலிகள் அடங்கலும் அரக்கர்கள் வாயிலே கிடந்து பெருமாளைச் சரணம் புக்காற்போலே, இவரும் மனம் ஆளும் ஓர் ஐவர் வன்குறும்பரான இந்திரியங்களுக்குப் பயப்பட்டுக் கூப்பிடுகிறார். [2] ‘பிரியமான ஜனங்களைப் பாராதவளும், அரக்கியர்களின் கூட்டத்தைப் பார்ப்பவளும், தன் கூட்டத்தால் விடப்பட்டதும் நாய்க்கூட்டத்தால் சூழப்பட்டதுமான பெண் மான் போன்றிருப்பவளும்’ என்கிறபடியே, ஸ்ரீஜனகராஜன் திருமகள் பட்டது படுகிறார்.”

---

தொடங்கி. “‘ஶாகா ம்ருகா:’ என்றால், இப்பொருள் படுமோ?’ என்ன, ‘பிணையோடு’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ‘ராவண’ என்ற சொல்லுக்குப் பொருள், ‘திசைப்பாலகர்களையும்’ என்று தொடங்கும் வாக்கியம். ‘ஸமர்த்த: காருணிகோ ஹி ஶரண்ய:- சமர்த்தனாயும் கருணையுடையவனாயுமிருப்பவன் அன்றோ சரண்யன்?’ என்றதனைத் திருவுள்ளம் பற்றி ‘ஶரண்யம்’ என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘தங்களுடைய’ என்று தொடங்கி.

1. இரண்டாவது திருஷ்டாந்தம், ‘அரக்கர்களால்’ என்று தொடங்குவது.

‘ராக்ஷஸை: வத்யமாநாநாம் வாநராணாம் மஹாசமூ:
ஶரண்யம் ஶரணம் யாதா ராமம் தஶரதாத்மஜம்’

என்பது, ஸ்ரீராமா. யுத். 94 : 17.

2. மூன்றாவது திருஷ்டாந்தத்தை அருளிச்செய்கிறார், ‘பிரியமான’ என்று தொடங்கி.

‘ப்ரியம்ஜநம் அபஶ்யந்தீம் பஶ்யந்தீம் யராக்ஷஸீகணம்
ஸ்வகணேந ம்குகீம் ஹீநாம் ஶ்வகணை: ஆவ்ருதாமிவ’

என்பது, ஸ்ரீராமா. சுந். 15 : 24.

‘மயிலி யற்குயின் மழலையாள் மானினம் பேடை
அயிலெ யிற்றுவெம் புலிக்குழாத் தகப்பட்ட தன்னாள்’

என்பது, கம்பரா. சுந். காட்சிப். 4.

[2]

பிள்ளை திருநறையூர் அரையர் [1] 'இப்பாசுரங்களில் முன் அடிகள் இரண்டும், புலியின் வாயிலே அகப்பட்ட குழந்தை தாய் முகத்திலே விழித்துக்கொண்டு புலியின் வாயிலே கிடந்து நோவு படுமாறு போலே இருக்கிறது,' என்று பணிப்பர். [2] 'தாவத் ஆர்த்தி:' என்ற சுலோகத்திற்படியே, சரணம் புக்கால் தம்மை இன்னாதாகச் சம்பந்தம் இல்லையே; அவனை இன்னாதாமித்தனை அன்றோ? [3] திருமலையிலே புகுந்து கிட்டி நின்றதுவும் இவர்க்குப் பேற்றுக்குக் காரணமாதல் தவிர்ந்து கூப்பிடுகைக்குக் காரணமாயிற்றித்தனை அன்றோ?

663

உண்ணி லாவிய ஐவ ராற்குமை
தீற்றி என்னைஉன் பாத பங்கயம்
நண்ணி லாவகை யேநலி வான்இன்னம்
எண்ணு கின்றாய்
எண்ணி லாப்பெரு மாய னே!இமை
யோர்கள் ஏத்தும் உலக மூன்றுடை
அண்ணலே! அமுதே! அப்பனே!
என்னை ஆள்வானே!

பொழிப்புரை: எண்ணிறந்த காரியங்களையெல்லாம் உண்டாக்குகின்ற பெரிய மூலப்பகுதியைச் சரீரமாகவுடையவனே! நித்தியசூரிகளால் துதிக்கப்படுகின்ற மூன்று உலகங்களையுமுடைய அண்ணலே! அமுதே! அப்பனே! என்னை ஆள்கின்றவனே! உள்ளே வசிக்கின்ற ஐந்து இந்திரியங்களால் நலிவுபடுத்தி, உன் திருவடித் தாமரைகளை நான்சேராதபடியே என்னை நலிவதற்கு இன்னம் எண்ணுகின்றாய்.

---

1. பிள்ளை திருநறையூர் அரையர் நிர்வாஹத்திற்கு, திருப்பாசுரங்களின் பின் இரண்டு அடிகளும் குணுநுசந்தான பரமாகக் கொள்க. மற்றைய நிர்வாஹத்திற்குப் பின் இரண்டு அடிகளெல்லாம் வெறுப்பிலே நோக்கு.

2. அவனிடத்திலே வெறுப்புக் கொள்வதற்கு, மூன்றாவதாக வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார், 'தாவத் ஆர்த்தி:' என்று தொடங்கி. என்றது, 'பிரபத்தி பலியாமையாலும் இன்னாதாகிறார்' என்றபடி. இந்தச் சுலோகத்தையும் பொருளையும் ஆறும் பத்து ஈட்டின் தமிழாக்கம் 444-ஆம் பக்கத்திற்காண்க.

வெறுப்பிற்கு, முற்கூறிய இரண்டு காரணங்களாவன: 'மின்னிடை மடவார்' என்று தொடங்கி அருளிச்செய்ததும், 'சம்பந்தத்தை உணர்ந்தால்' என்று தொடங்கி அருளிச்செய்ததுமாம்.

3. 'அடியார்களுடைய காரியம் செய்கைக்காகத் திருமலையிலே எழுந்தருளியிருக்க, அவனை வெறுக்கிறது என்?' என்ன, 'திருமலையிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

விசேடக்குறிப்பு: குமை தீற்றுதல் - துன்பத்தை நுகரச்செய்தல். 'குமை தீற்றி' நலிவான் இன்னம் எண்ணுகின்றாய்,' என்க. நலிவான்—வினையெச்சம். 'உன் பாத பங்கயம் நண்ணிலாவகையே எண்ணுகின்றாய்,' என்க. மாயன் - மூலப்பகுதியையுடையவன்.

இத்திருவாய்மொழி, ஆசிரியத்துறை.

ஈடு: முதற்பாட்டு. [1] 'உன்னால் அல்லது செல்லாதபடியாய் உன் திருவடிகளிலே சரணம் புகுந்த என்னை இந்திரியங்களாலே நலியப் பாராநின்றாய்,' என்கிறார்.

உள் நிலாவிய ஐவரால் குமை தீற்றி என்னை உன் பாதபங்கயம் நண்ணிலா வகையே நலிவான் இன்னம் எண்ணுகின்றாய் - [2] இரட்சகன் அண்மையில் இருத்தல் தவிர்ந்து கொலைஞர் அண்மையில் இருத்தலாயிற்றுக்காண். [3] தேவா எனக்குப் பகை புறம்பிட்டு வருகிறது என்றோ இருக்கிறது? [4] உள்ளானாலும், போககு வரத்து உண்டாமாகில் படைப்போது அறிந்து இருக்கலாம் அன்றோ? நிலாவிய - இருக்கிற. [5] ஆக, பாதகர் கூட்டம் அந்தரங்கமாய் நின்று நலிகிறபடியைத் தெரிவித்தபடி. [6] 'தேகத்திற்கு வேறுபட்டதாய் இருப்பது ஓர் ஆத்துமவஸ்து உண்டு,' என்று அறிகிலர்; இவையே உள்ளே இருக்கின்றன என்றிருக்கிறார். [7] 'இப்படி நலியாநின்றாலும், ஒருவர் இருவராகில் அறிந்து விலக்கலாமன்றோ?'

---

1. 'என்னை ஐவரால் குமை தீற்றி நலிவான் இன்னம் எண்ணுகின்றாய்' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. முன் இரண்டு அடிகட்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'இரட்சகன்' என்று தொடங்கி.

3. 'உள்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தேவர்' என்று தொடங்கி.

4. 'நிலாவிய' என்ற நிகழ்காலத்துக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'உள்ளானாலும்' என்று தொடங்கி. படைப்போது-போர் செய்யுங் காலம்.

5. 'தேவர், எனக்கு' என்று தொடங்கி மேல் அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'ஆக' என்று தொடங்கி.

6. 'நிலாவிய ஐவர்' என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'தேகத்திற்கு' என்று தொடங்கி.

7. 'ஐவர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இப்படி' என்று தொடங்கி.

என்பார், 'ஐவரால்' என்கிருர். [1] இவர்களிலே நால்வர் ஒரு முகமாய் நின்று நலிய, ஒருவர் உடலாந்தமாய் இருந்து நலிகிறபடி. [2] இரட்சகன் ஒருவனாய் இருக்க, பாதகர் ஐவராய் இருக்கிறபடி. இவை அறிவில் பொருள்களாய் இருக்கச்செய்தே, தீங்கு செய்வதில் ஊற்றங்கொண்டு உயர்திணைப்பொருளைப் போன்று சொல்லுகிருர் 'ஐவரால்' என்று. என்றது, 'ஆத்துமா என்று ஒன்று உண்டாய், அதனுடைய ஞானம் சொல்லுவதற்கு வழி மாத்திரம் மனமாய், அதற்கு இவை அடிமைப்பட்டவை என்று அறிகின்றிலர்,' என்றபடி. குமை தீற்றி - நலிவுபடுத்தி. [3] விடுநகம் கட்டுவாரை 'நெகிழக்கட்டினுய்' என்று உறுக்கிக் கட்டுவிப்பாரைப் போலே, 'இந்திரியங்கள் தண்ணளி செய்யாமே ஒக்க இருந்து நலிவிக்கிருன்' என்றிருக்கிருர். நலிகிற நலிவைக் கொண்டு, உயர் திணையைப் போலே சொன்னேமாகில், இவற்றின் பக்கல் குறை உண்டோ? இவை நலிகிற போதும் இவன் இல்லாமை இலன் அன்றே? இவைதாம் இவனுக்கு அடங்காமல் இருப்பவையும் அன்றே? இருடிகேசன் அல்லனே!

என்னை - [4] 'பல நீ காட்டிப் படுப்பாயோ?', 'இன்னங் கெடுப்பாயோ?' என்று அவற்றின் காட்சியாலே முடியும்படியான என்னை.

---

1. நலியும் கிரமத்தை அருளிச்செய்கிருர், 'இவர்களிலே' என்று தொடங்கி. கண், மூக்கு, செவி, வாய் என்னும் இந்நான்கு இந்திரியங்களும் முகத்திலே உள்ளனவாகையாலே 'ஒரு முகமாய் நின்று' என்றும், மெய் என்பது, சரீரம் எங்கும் பரந்திருப்பதாகையாலே 'உடலாந்தமாய்' என்றும் ரசோக்தியாக அருளிச்செய்கிருர். உடலாந்தம் – சரீரம் எங்கும் பரந்திருப்பது என்றும், மெய் இந்திரியம் என்றும் பொருள்படும்.

2. பிள்ளை திருநறையூர் அரையர் நிர்வாஹத்திலே பாவம் அருளிச்செய்கிருர், 'இரட்சகன்' என்று தொடங்கி.

3. 'இந்திரியங்கள் நலிகின்றன என்றவர், 'குமை தீற்றி' என்று சர்வேஸ்வரன் நலிவுபடுத்துகிருன் என்பான் என்?' என்னில், 'விடுநகம் கட்டுவாரை' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிருர். விடுநகம் – கிட்டிக்கோல். இவை நலிகிற போது இறைவன் அணமையிலிருக்கிருனகையாலும், இருடிகேசனுகையாலே தடுப்பதற்கு ஆற்றலுள்ளவனுகையாலும், துன்புறுத்தாதபடி செய்தல் தகுதியாயிருக்க, அது செய்யாமையாலே, 'இவனே துன்புறுத்துகிருன்' என்னலாம் என்பது இவ்வாக்கியங்களுக்குக் கருத்து.

4. 'பல நீ காட்டி' என்பது, திருவாய்மொழி. 6. 9 : 9.

உன் பாத பங்கயம் - [1] 'தாவி வையங்கொண்ட தடந்தாமரைகள்' என்றும், 'பூவார் கழல்கள்' என்றும் சொல்லுகிற திருவடிகளை. 'என் ஆற்றாமை அன்றோ உனக்குச் சொல்ல வேண்டுவது? சுக அனுபவத்திற்கு உரியனவான திருவடிகளையுடைய உன்னை நீ அறிதி அன்றோ?' என்பார், 'உன் பாத பங்கயம்' என்கிறார். என்றது, [2] 'அடி அறியாமல்தான் அகற்றுகிறாய் அன்றோ? [3] பேதைக் குழவி பிடித்துச் சுவைத்து உண்ணும் பாதக் கமலம் அன்றோ?' என்பதனைத் தெரிவித்தபடி. [4] சம்சாரத்தில் அருசி பிறவாதார்க்கும் விட ஒண்ணாத படி போக்கியமான திருவடிகளை. தேனே மலரும் திருப்பாதம் அன்றோ? நண்ணிலா வகையே - [5] காதாசித்கமாகக் கிட்டாது ஒழிகை அன்றிககே, கிட்டாது ஒழிதலே சுபாவமாக. என்றது, 'இனி நண்ணப் புகாநின்றேமோ?' என்றிருக்கிறார் என்றபடி. நலிவான் - [6] நணுணுமை என்றும், நலிவு என்றும் இரண்டு இல்லை இவர்க்கு; [7] திருவடிகளைக் கிட்டாது ஒழிகையே இவ்வாத்துமாவுக்கு நலிவு. [8] இந்தக் கொடுமையான வகையே நலிவான். இன்னம் - 'அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா!

---

1. திருவடிகளைத் தாமரையாகச் சொன்னதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'தாவி' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி, 6. 9 : 9. 'பூவார்' என்பது, திருவாய்மொழி. 6. 10 : 4.

2. 'உன் அடி' என்பதில், 'அடி' என்பதற்குத் திருவடி என்பதும், மூலம் என்பதும் பொருள்.

3. 'திருவடிகளின் இனிமையை அவன் அறியும்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பேதைக்குழவி' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி, 1. 2 : 1.

4. திருவடிகளுடைய இனிமையின் எல்லையையும் அதற்குப் பிரமாணத்தையும் அருளிச்செய்கிறார், 'சம்சாரத்தில்' என்று தொடங்கி. 'தேனே மலரும்' என்றது, திருவாய்மொழி, 1. 5 : 5.

5. 'வகையே' என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'காதாசித்தமாக' என்று தொடங்கி. காதாசித்தம் - யாதாயினும் ஒரு காலத்தில் உண்டானது.

6. 'நண்ணிலா வகையே' என்றதன் பின், 'நலிவான்' என்கையாலே, 'கிட்டாமையே இவர்க்கு நலிவு,' என்கிறார், 'நண்ணுமை என்றும்' என்று தொடங்கி.

7. 'இவர்க்கே அன்றி, சொரூபத்தின் நிலையை ஆராய்ந்தாலும் இதுவே நலிவு' என்கிறார், 'திருவடிகளை' என்று தொடங்கி.

8. 'இந்தக் கொடுமையான வகையே' என்றது, 'நண்ணிலா' என்றதனை.

உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்' என்ற பின்பும். எண்ணுகின்றாய்- [1]ஈஸ்வரனுக்கு வேறு வேலை இல்லை என்றிருக்கிறார். [2]'எந்தத் தரும புத்திரனுக்கு, மூன்று உலகங்கட்கும் நாதனும் ஜநார்த்தனனு மான கண்ணபிரான், மந்திரியாயும் காக்கின்றவனாயும் சிநேகிதனாயும் இருக்கிறான்?' என்கிறபடியே, பாண்டவர்கள் காரியத்தை எண்ணினாற்போலே, இங்குக் காரியம் செல்லாநிற்கச்செய்தே, மந்திரமும் செல்லுகிறபடி. 'இவரை நம் பக்கலினின்றும் பிரித் தோமாம் விரகு என்னோ?' என்று சிந்திக்கிறான் என்றிருக்கிறார்.

எண் இலாப் பெருமாயனே- [3]'ஈஸ்வரன் இந்த மூலப் பிரகிருதி யினின்றும் இந்த உலகத்தைப் படைக்கிறான்,' என்றும், 'என்னுடைய மாயை தாண்ட முடியாதது,' என்றும் சொல்லுகிறபடியே, எண்ணிறந்த செயல்களைச் செய்யவற்றாய், நீ வேண்டாதாரைச் சிறை இட்டு நலியக்கடவதான பிரகிருதியைப் பரிகரமாகவுடைய வனே! அன்றிககே, 'எண்ணிறந்த மஹா ஆச்சரியமான குணங் களையுடையவனே!' என்று பிள்ளான் பணிக்கும்படி. [4]'இப்படிக் குணவானாயிருக்கிற உனக்கு என்னை நலிகைக்கு என்ன சேர்த்தி

---

1. 'எண்ணுகின்றாய்' என்னும் நிகழ்காலத்தின் பொருளை விளக்கு கிறார், 'ஈஸ்வரனுக்கு' என்று தொடங்கி.

2. 'குமை தீர்ப்பி' என்றதனைக் கடாட்சித்து, 'இன்னம் எண்ணு கின்றாய்' என்ற நிகழ்காலத்துக்குத் திருஷ்டாந்தத்தோடு வேறும் ஒரு வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார், 'எந்தத் தருமபுத்திரனுக்கு' என்று தொடங்கி.

'யஸ்ய மந்த்ரீச கோப்தாச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:
ஹரி: த்ரைலோக்ய நாத: ஸ: கிந்து தஸ்ய ந நிர்ஜிதம்'

என்பது, பாரதம், ராஜசூயம்.

3. 'மாயன்' என்றதற்கும், 'பிரகிருதி எண்ணிறந்த செயல்களைச் செய்யும்,' என்பதற்கும் பிரமாணம், 'ஈஸ்வரன்' என்று தொடங்குவது. 'பெருமாயன்' என்பதற்குப் பிரமாணம், 'என்னுடைய' என்று தொடங்குவது.

'அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஸ்வமேதத்'

என்பது, உபநிடதம்.

'மம மாயா துரத்யயா'

என்பது, ஸ்ரீகீதை, 7 : 14.

4. பிள்ளை திருநறையூர் அரையர் நிர்வாஹத்திலே கருத்து அருளிச் செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

உண்டு?' [1] விடுநகங்கட்டி நலியாநிற்கச்செய்தே 'தண்ணீர்' என்பாரைப் போலே, அவன் குணங்களைச் சொல்லுகிறபடி. இமையோர்கள் ஏத்தும் - [2] 'தன்னால் அல்லது செல்லாதாரை ஒருவன் போகட வல்லபடியே என்று' கொண்டாட ஒரு விபூதி உண்டாவதே! [3] அவர்கள் முகங்கொடுக்கையாலன்றோ அவன் இங்கு வாராதிருக்கிறது?' என்றிருக்கிறார். [4] திரிசங்குவினுடைய ஓலக்கம் கிளர்ந்தாற் போலே கிளர்ந்ததாகில், அவனுக்கு என்னை விட்டிருக்கப்போமோ?

உலகம் மூன்றுடை அண்ணலே - [5] 'தான் நினைத்த போது காரியம் செய்கிறான்,' என்று இவர் இருப்பதற்காகத் தன்னுடைய சேஷித்துவத்தைக் காட்டினான் அவன்; 'இப்படி இரட்சிக்கிறவன் நம்மை நலியுமோ?' என்றிருக்கும்படி செய்து பின்னை நலிகைக்குக் காட்டினான் என்றிருக்கிறார் இவர். அமுதே-அவன் தன்னுடைய இனிமையைக் காட்டிற்றும் தம்மை அனுபவிப்பிக்கைக்கு அன்று; புறம்பு ஒன்று பொருந்தாதே நோவுபட என்றிருக்கிறார். அப்பனே - 'இப்படி உபகாரகனானவன் நலியாநின்றானே?' என்று நம்பும்படி செய்து பின்பு அபகரித்தற்காகக் காட்டினான் என்றிருக்கிறார். என்னை ஆள்வானே - [6] பிராங்நியாயம் பலிக்கும் என்றிருக்கைக்காகக்

---

1. *'மற்றை நிர்வாஹத்திலே கருத்து அருளிச்செய்தார் திருவுள்ளம் பற்றி, நலிகிறவனைக் குணவான் என்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'விடுநகம்' என்று தொடங்கி.*

2. *'இமையோர்கள் ஏத்தும்' என்றதற்கும், 'நலிவான் இன்னம் எண்ணுகின்றாய்' என்றதற்கும் தகுதியாக, பாவம் அருளிச்செய்கிறார், 'தன்னால் அல்லது' என்று தொடங்கி.*

3. *'நித்தியசூரிகளை வெறுப்பான் என்?' என்ன, 'அவர்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

4. *'அவர்கள் முகங்கொடாவிடில் அவன் இங்கு வருவானோ?' என்ன, 'திரிசங்குவினுடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

5. *ஈஸ்வரன், இவர் தரிக்கைக்காகக் காட்டின சேஷித்துவத்தை, 'நலிவான் இன்னம் எண்ணுகின்றாய்' என்றதற்குத் தகுதியாக யோஜிக்கிறார் என்கிறார், 'தான் நினைத்தபோது' என்று தொடங்கி. இந்த யோஜனை மேலே வருகின்ற 'அமுதே' என்பது போன்றனவற்றிற்கும் ஒக்கும்.*

6. *பிராங் நியாயமாவது, முன் நியாயம். என்றது, மேலே, மயர்வற மதி நலம் அருளித் தன்னால் அல்லது செல்லாமையை உண்டாக்கினமை. 'பலிக்கும்' என்றது, 'இனி மேலும், அநிஷ்டநிவ்ருத்தி பூர்வமாக இஷ்டப் பிராப்தியும் செய்துகொடுக்கும்' என்றபடி.*

காட்டினன் என்றிருக்கிறார். [1]'இதற்கு முன்பெல்லாம் நம்மை நிர்வஹித்துக்கொண்டு போந்தது நாமும் சில செய்தோ? அப்படியே மேலும் நம் காரியம் அவன் செய்யும்,' என்றிருக்கைக்காகச் செய்தானத்தனை; நினைவு வேறே என்றிருக்கிறார். [2]'என்னை ஆள்வானே! நலிவான் இன்னம் எண்ணுகின்றாய்' என்கிறார். (1)

664

என்னை ஆளும் வன்கோ ஓரைந்
 திவைபெய்து இராப்பகல் மோது வித்திட்
டுன்னை நான்அணு காவகை
 செய்து போதி கண்டாய்
கன்னலே! அமுதே! கார்முகில் வண்ணனே!
 கடல்ஞாலம் காக்கின்ற
மின்னு நேமியினாய்!
 வினையேனுடை வேதியனே!

பொ-ரை: கரும்புக்கட்டியே! அமுதே! கரிய மூகில் வண்ணனே! கடலாற்சூழப்பட்ட உலகத்தை எல்லாம் காக்கின்ற மின்னுகின்ற சக்கரத்தையுடையவனே! வினையேனுடைய வேதியனே! என்னை அடிமை கொண்டு ஆளுகின்ற வலிய சுவதந்தர புத்தியோடு கூடின ஒப்பற்ற ஐந்து இந்திரியங்களாகிற இவற்றை என் சரீரத்திலே வைத்து இரவும் பகலும் இவற்றால் தாக்குவித்து உன்னை நான் வந்து கிட்டாத படி செய்து முகம் தோற்றாதபடியே போகாநின்றாய்.

வி-கு: 'என்னை ஆளும் ஐந்து இவை,' என்க. 'பெய்து மோது வித்திட்டுப் போதி' என்க. 'வேதியனே! அணுகா வகை செய்து போத,' என்க. கண்டாய்-முன்னிலையசை. கன்னல்-கரும்பு. 'காக்கின்ற நேமி' என்க. அன்றிக்கே, 'காக்கின்ற' என்பதனை நேமியினானுக்கு அடையாக்கலுமாம். வேதியன் - வேதங்களால் பேசப்படுகிறவன்.

ஈடு: இரண்டாம் பாட்டு. [3]வலி இல்லாதவனான என்னை இந்திரியங்களாலே காலமெல்லாம் நலிவித்து, இந்த நோவை அறிவிக்க ஒண்ணாதபடி 'போதி' என்கிறார்.

---

1. மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'இதற்கு முன்பெல்லாம்' என்று தொடங்கி.

2. பிள்ளை திருநறையூர் அரையர் நிர்வாஹத்துக்கு அந்வயம் காட்டுகிறார் 'என்னை ஆள்வானே' என்று தொடங்கி. மற்றை நிர்வாஹத்திற்கு, ஆற்றநீர்ப் பொருள்கோள்.

3. முன் இரண்டு அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

என்னை ஆளும் வன் கோ.[1] என்னை நோக்குவாய் நீயாய், பணி கொள்வார் வேறே சிலர் ஆவதே! அத்தலை இத்தலை ஆயிற்றுக் காண். [2] ஈஶ்வரன் என்பான் ஒருவன் உண்டாய், அவனுக்கு ஆத்துமா சேஷமாய், அவனுக்கு மனம் அந்தரங்கத் துணையாய், அதற்கு இந்திரியங்களும் சேஷமாகை தவிர்ந்து கலகத்தில் பள்ளிகள் போலே என்னை இந்திரியங்கள் ஆளும்படி ஆவதே! வன்கோ. [3] பிரபலருமாய் வந்தேறிகளானவர்களுக்குப் பணி செய்து வெறுத்தேன். [4] 'கோவாய் ஐவர் என்மெய் குடி ஏறிக் 'கூறை சோறு இவை தா,' என்று குமைத்துப் போகார்' என்கிறபடியே. [5] அன்றிக்கே, 'ஒரு நீர்மையுடையவன் சேஷியாகை தவிருவதே' என்னுதல். என்றது, 'எல்லா நற்குணங்களையுமுடைய சர்வேஶ்வரன் சேஷியாகை தவிர்ந்து, குணம் இல்லாதவர்கள் சேஷிகள் ஆவதே?' என்கிறார் என்றபடி. ஓர் ஐந்து-[6] குணப்பிரதாந பாவத்தால் அன்றிக்கே, சமப்பிரதாநமாய் நலிகிறபடி. [7] கடவான் ஒருவனாய், பணி செய்வதும் அவனுக்கான நிலை குலைந்தது. என்றது, 'பதிம் விஶ்வஸ்ய - 'உலகத்திற்குத் தலைவன்' என்றும், 'அனைத்துலகு

---

1. 'ஆளும்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'என்னை' என்று தொடங்கி. 'அத்தலை இத்தலையாயிற்று' என்றது, ஈஶ்வரன் ஆளுதல் தவிர்ந்து இந்திரியங்கள் ஆளுதல்.

2. அதனை விவரணம் செய்கிறார், 'ஈஶ்வரன்' என்று தொடங்கி.

3. 'வன்கோ' என்றது, 'வலியாலே கோ' என்றாய், இடையிலே வந்தது என்கிறார், 'பிரபலருமாய்' என்று தொடங்கி.

4. 'வந்தேறி' என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'கோவாய்' என்று தொடங்கி. இது பெரிய திருமொழி, 7. 7 : 9.

5. 'வன்' என்பதற்கு, 'பலாத்காரமாக' என்று மேலே பொருள் அருளிச்செய்கிறார்; 'மனத்தின் வன்மை' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'என்றது' என்று தொடங்கி.

6. குணப்பிரதான பாவத்தால் என்றது, அப்பிரதான பாவத்தால் என்றபடி. அதாவது, நலிகிற காலத்தில் ஒன்று பிரதானமாய் நலிதலும் மற்றொன்று அப்பிரதானமாய் நலிதலுமின்றிக்கே, எல்லாம் ஒரே தன்மையாக நலிதலைக் குறித்தபடி. இதனையே அருளிச்செய்கிறார், 'சமப்பிரதானமாய் நலிகிறபடியே' என்று. ஈண்டுக் குணம் என்பதற்கு, அப்பிரதானம் என்பது பொருள். 'குணம்' என்பது அப்பிரதானம் என்ற பொருளைக் காட்டுதலைக் 'குணோப்ரதாநே ரூபாதௌ' என்ற நிகண்டால் தெளிதல் தகும்.

7. 'ஆளும் ஐந்து' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'கடவான் ஒருவனாய்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'என்றது' என்று தொடங்கி.

முடைய அரவிந்த லோசனன்' என்றும் சொல்லுகிறபடியே ஒருவன் சேஷியாதல் தவிர்ந்ததன்றே என்றபடி. [1]'ஒருவனுக்குச் சேஷமாதல் தவிர்ந்தது' என்பார், 'ஐந்து' என்கிறார்.

இவை பெய்து-[2]அவற்றின் பக்கல் குறை உண்டோ? அவற்றை இட்டு நலிவிக்கிறாய் நீ அல்லையோ? [3]ஸ்ரீபிரஹ்லாதனைப் பாம்புகளைக் கூட விட்டுக் கட்டி நலிந்தாற்போலே இருக்கிறதுகாணும், இவற்றை உண்டாக்கி என் பக்கலிலே நீ விட்டது. இராப்பகல் மோதுவித்திட்டு-[4]காலத்துக்கு உபயோகம் இதுவே ஆவதே! 'ஒழிவில் காலமெல்லாம்' என்று அழகிதாக அடிமை செய்ய ஆசைப்பட்டேன். [5]'அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்றுகொலோ!' என்று ஆசைப்பட்ட எனக்கு இவற்றினுடனே கூடும்படி ஆவதே! உன்னை நான்-பெற்றல்லது தரிக்க ஒண்ணாதபடியிருக்கிற உன்னைக் கிட்டி அல்லது பிழைக்க மாட்டாத நான். என்றது, [6]'நிரதிசய போக்கியனான உன்னை, புசித்து அல்லது பிழைக்கமாட்டாத நான்' என்றபடி. அணுகா வகை செய்து-கிட்டாதபடி செய்து. போதி கண்டாய்-[7]உன்னை அனுபவிக்க வேணும் என்று போந்த பிராட்டியை மாய மானைக் காட்டிப் பிரித்து, ஒற்றைக்கண்ணன், ஒற்றைக்காதள்

---

1. 'ஒருவனுக்குச் சேஷமாதல் தவிர்ந்தது,' என்றதற்குக் கருத்து, 'தகுதியில்லாததாகிலும் ஒரு பொருளுக்கே அடிமை ஆகலாமன்றோ? அதுவும் தவிர்ந்தது,' என்றபடி.

2. அவற்றை அசேதனமாகச் சொல்லி, நலிகிறவனை ஈஸ்வரனாகச் சொல்லுவதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அவற்றின் பக்கல்' என்று தொடங்கி.

3. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'ஸ்ரீபிரஹ்லாதனை' என்று தொடங்கி. கம்பராமாயணம், இரணியன் வதைப்படலம், 87 முதல் உள்ள மூன்று செய்யுள்களை ஈண்டுக்காண்க.

4. 'இராப்பகல்' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'காலத்துக்கு' என்று தொடங்கி. அதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'ஒழிவில் காலம்' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி, 3. 3 : 1.

5. 'இவை பெய்து' என்றதனைக் கடாட்சித்து பாவம் அருளிச்செய்கிறார், 'அடியார்கள' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி, 2. 3 : 9.

6. நிரதிசய போக்கியன் - நிரதிசயம் - இனிமையில் தனக்குமேல் ஒன்று இல்லாதது; போக்கியன் - இனியன். 'எல்லையில்லாத இனியன்' என்றபடி.

7. 'நான் உன்னைக் கிட்டாதபடி செய்து கடக்கப் போனாய்,' என்னுமதனைத் திருஷ்டாந்தம் மூலமாக அருளிச்செய்கிறார், 'உன்னை' என்று தொடங்கி.

இவர்கள் கைகளிலே காட்டிக்கொடுத்து உன்னைக் கொண்டு அகன்றாற்போலேகாண் இதுவும்! கன்னலே அமுதே.[1] ஒரு வகையால் வந்த இனிமையாகில் நான் ஆறி இரேனோ? 'ஸர்வகந்த: ஸர்வரஸ:' என்கிறபடியே, எல்லா விதமான இனிய பொருள்களுமாய், அளவு இறந்து, கொள்ள மாளா இன்பவெள்ளமாய் இராநின்றதே. 'அமுது' என்பது, இனிய பொருளுமாய், சாவாமல் காக்குமதுவுமாய் இருப்பது.

கார்முகில் வண்ணனே -[2] அந்த இனிமையைத் தன் பேருகத் தருமவன்; பரமோதாரன் என்றபடி. அன்றிக்கே, 'கார் காலத்தில் மேகம் போலே காண்பதற்கு இனியதான வடிவையுடையவனே!' என்னுதல். கடல் ஞாலம் காக்கின்ற மின்னுநேமியினாய் -[3] 'போதி கண்டாய்' என்று யார் கால் கட்ட நீ அன்று நோக்கிறது! 'இந்திரியங்களாலே நோவுபட்டோம்' என்று இவர்கள் அபேக்ஷித்த பேதோ நீ நோக்கிற்று![4] நீ இனியன் என்று அறியாதாரையுங்கூட நோக்குமவன் அல்லையோ?[5] கடலோடு கூடின பூமியைக் கண்களிலே வெண்ணெய் இட்டுக்கொண்டு நோக்கும் தன்மையன் அல்லையோ? 'காத்தல்தான்[6] காதாசித்கமோ உனக்கு?' என்பார், 'காக்கின்ற' என்று நிகழ்காலத்தாற்கூறுகின்றார். மின்னு நேமியினாய்-[7] 'இயற்றி உண்டு என்னா, சங்கற்பத்தால் நோக்குமவனோ? ஆசிலே வைத்த

---

1. 'கன்னலே' என்றது, எல்லா ரசத்துக்கும் உபலக்ஷணமாகக் கொண்டு அருளிச்செய்கிறார், 'ஒரு வகையால்' என்று தொடங்கி.

2. 'வண்ணன்' என்பதற்கு, இரண்டு பொருள்: 'முகில் போன்று கைம்மாறு கருதாது கொடுக்கும் தன்மையன்' என்பது முதற்பொருள்; அதனாற்பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'அந்த இனிமையை' என்று தொடக்கி.

3. 'கடல் ஞாலம்' என்று அஃறிணையாகச் சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'போதி கண்டாய்' என்று தொடங்கி. கால் கட்ட - பிரார்த்திக்க. அதனை விவரணம் செய்கிறார், 'இந்திரியங்களாலே' என்று தொடங்கி.

4. 'கன்னலே அமுதே' என்றதன் பின், 'கடல் ஞாலம்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'நீ இனியன்' என்று தொடங்கி.

5. 'கடல் ஞாலம் காக்கின்ற' என்றதற்குப் பதப்பொருள் அருளிச்செய்கிறார், 'கடலோடு' என்று தொடங்கி.

6. காதாசித்கம் - ஒரு காலத்தில் இருப்பது.

7. 'காக்கின்ற' என்றதன் பின் 'நேமியினாய்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இயற்றி' என்று தொடங்கி. இயற்றி - ஆற்றல். ஆசிலே - ஆயுதப்பிடியிலே.

கையும் நீயுமாயன்றோ நோக்குவது? [1] 'அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினை கெடச் செங்கோல் நடாவுதிர்,' என்னக்கடவதன்றோ? [2] உருவின வாள் உறையில் இடாதே அன்றோ நோக்குவது? விளங்காநின்றுள்ள திருவாழி. வினையேனுடை வேதியனே - [3] 'தேவர்களுக்கும் தானவர்களுக்கும் பொதுவான தெய்வம்' என்றும், 'பொது நின்ற பொன்னங்கழல்' என்றும் சொல்லுகிறபடியே, ஊர்ப்பொதுவாயிருக்கிற நீ, என்னளவிலே வந்தவாறே வேதங்களாலேயே அறியப்படுகின்றவனுனாய். [4] இன்று இருந்து ஓலைப்புறத்திலே கேட்கும்படியான பாபத்தைச் செய்வதே நான்! (2)

665

வேதி யாநிற்கும் ஐவ ரால்வினை
யேனை மோதுவித்து உன்தி ருவடிச்
சாதி யாவகை நீதடுத்து
என்பெறுதி! அந்தோ!
ஆதி யாகி அகலி டம்ப டைத்துண்
டுமிழ்ந்து கடந்திடந் திட்ட
சோதி நீள்முடி யாய்!தொண்ட
னேன்மது சூதனனே!

பொ-ரை: உலகத்திற்கு எல்லாம் காரணனாகி அகன்ற இந்த உலகத்தைப் படைத்துப் பிரளய காலத்தில் உண்டு, அது நீங்கிய வுடனே உமிழ்ந்து, திரிவிக்கிரமனாகி உலகத்தை எல்லாம் அளந்து, வராஹ அவதாரமாகி இடந்துகொண்டு வந்த சோதி நீள்முடியாய்! அடிமைப்பட்டவனை என்னுடைய விரோதிகளை அழிக்கவல்லவனே! நலியாநிற்கும் ஐந்து இந்திரியங்களால் தீவினையேனாகிய என்னைத் தாக்கி உன் திருவடியை நான் சாராதபடி தடுத்து நீ என்ன பயனைப் பெறப்போகின்றாய்! ஐயோ!

---

1. சக்கரங்கொண்டு உலகத்தைக் காப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அருளார்' என்று தொடங்கி. இது, திருவிருத்தம், 33.

2. 'மின்னு' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'உருவின வாள்' என்று தொடங்கி.

3. 'கடல் ஞாலம் காக்கின்ற' என்றதனைக் கடாட்சித்து, 'வினையேனுடை வேதியனே' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தேவர்களுக்கும்' என்று தொடங்கி.

'தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யம் அதிதைவதம்'

என்பது, ஜிதந்தா. 1 : 2. 'பொதுநின்ற பொன்னங்கழல்' என்பது, மூன்றாந்திருவந். 88.

4. 'வினையேன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இன்று இருந்து' என்று தொடங்கி.

வி-கு: 'வினையேனை ஐவரால் மோதுவித்துச் சாதியா வகை தடுத்து என் பெறுதி?' என்க.

ஈடு: மூன்றும் பாட்டு. [1] 'உலகத்திற்கு எல்லா வகையாலும் இரட்சகனாயிருந்து வைத்து, என்னை உன் திருவடிகளிலே கிட்டாத படி இந்திரியங்களாலே நலிவித்தால் உனக்கு என்ன பிரயோஜனம் உண்டு?' என்கிறார்.

வேதியாநிற்கும்-[2] அழகிதாக எல்லா நிலைகளிலும் அடிமை செய்ய ஆசைப்பட்டேன். 'உடனாய் மன்னி' என்று பாரித்த எல்லாம் இவற்றுக்குப் பணி செய்கைக்கு ஆவதே! வேதியாநிற்கும்-வேதனையே செய்யாநிற்கும். [3] 'தான் உயிருடன் வாழும் வகையிலும் அக்நிஹோத்திரம் செய்யவேண்டும்' என்றால், 'ஸாயம் ப்ராத:-மாலை காலை' என்று ஒரு காலத்திலே ஒதுக்காநின்றதன்றே? அங்ஙன் அன்றிக்கே, எல்லா நிலைகளிலும் அடிமை செய்ய ஆசைப்பட்டுச் சொன்ன எல்லாம் இவற்றின் பக்கலிலே ஆனபடியைத் தெரிவித்த படி. வினையேனை - போகத்துக்குப் பாரித்த எல்லாம் கிலேசப் படுகைக்குக் காரணம் ஆவதே! உன் திருவடிச் சாதியா வகை நீ தடுத்து-[4] என்ன உறவின் கனந்தான்! தம்முடைய குற்றத்துக்கும் அவனை வெறுக்கும்படிகாணும் சம்பந்தம் இருக்கிறபடி. [5] சாதநாநுஷ்டானம் செய்து பலததுக்குத் தடை செய்வாரைச் சொல்லு

---

1. திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

2. 'வேதியாநிற்கும்' என்ற நிகழ்காலத்தைத் திருவுள்ளம் பற்றி ஆழ்வாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'அழகிதாக' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'உடனாய்' என்று தொடங்கி. 'உடனாய்' என்பது, திருவாய்மொழி, 3. 3 : 1.

3. மேல் திருப்பாசுரத்தில் 'இராப்பகல்' என்றவர், இங்கு, 'வேதியா நிற்கும்' என்று நிகழ்காலமாக அருளிச்செய்வதற்குக் காரணத்தை அருளிச் செய்கிறார், 'தான் உயிருடன்' என்று தொடங்கி. என்றது, 'எல்லா நிலை களிலும்' என்றபடி.

'யாவஜ்ஜீவம் அக்நிஹோத்ரம் ஜுஹுயாத்'
என்பது, யஜுர் வேதம்.

4. வியாக்கியாதாவின் ஈடுபாடு, 'என்ன' என்று தொடங்கும் வாக்கியம்.

5. 'சம்பந்தத்தை நினைத்து இவர் வெறுக்கும்படியாமாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சாதநாநுஷ்டானம்' என்று தொடங்கி. 'சொன்னபடி பாரீர்' என்றது, 'சம்பந்தத்தாலே சொன்னபடி பாரீர்' என்றபடி.

மாறு போலே சொன்னபடி பாரீர். உன் திருவடிகளைச் சாராதபடி தகைந்து, என் பெறுதி -[1]என் சொரூபம் அழியுமித்தனையோ வேண்டுவது? நான் படுகிற வியசனத்தால் உனக்கு ஒரு பிரயோஜனம் உண்டாகில் எனக்கு அதுவே அமையும்; [2]உனக்காக இருக்குமதன்றே எனக்கு வேண்டுவது? [3]தண்ணீரினின்றும் மேலே எடுக்கப்பட்ட மீனைப்போன்றவர்' என்கிற இளையபெருமாள், [4]துர்வாசர் வர, 'பெருமாளுக்கு ஒரு துன்பம் வர ஒண்ணாது' என்று தம் நோவு பாராதே விடை கொண்டார் அன்றே?

என் பெறுதி-[5]நீ, சொன்ன சொல் தவறாதவன் ஆகைக்காக ஸ்ரீபரதாழ்வானைப் பிரித்து வைத்தாய். என் இருப்புக்கு உனக்கு என்ன பிரயோஜனம் உண்டு? அந்தோ-[6]தனக்கு ஒரு பிரயோஜனம் இன்றியிலே பிறர் கேடே பிரயோஜனமாக நலியும்படி பிறந்தேனே!

---

1. 'என் பெறுதி?' என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'என் சொரூபம்' என்று தொடங்கி. என்றது, 'என்னை நீ தகைந்து என்ன பிரயோஜனத்தைப் பெறப்போகிறாய்? என் சொரூபம் அழியுமது ஒழிய வேறு ஒரு பிரயோஜனம் காணேன்' என்றபடி. 'ஆனால், ஒரு பிரயோஜனம் உண்டானால் ஆறியிருப்பரோ?' என்ன, 'நான் படுகிற' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'ஈஸ்வரனுக்கு ஒரு பிரயோஜனம் உண்டானால், தம்மை அழிய மாறக் கூடுமோ?' என்ன, 'உனக்காக' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. அப்படித் தம்மை அழிய மாறியதற்குத் திருஷ்டாந்த மூலமாகப் பிரமாணம் காட்டுகிறார், 'தண்ணீரினின்றும்' என்று தொடங்கி.

'ஜலாந் மத்ஸ்யாவி வோத்த்ருதௌ'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 53:31.

'நீருள வெனின்உள மீனும் நீலமும்
பாருள வெனின்உள யாவும் பார்ப்புறின்
நாருள தனுவுளாய் நானும் சீதையும்
யாருள ரெனின்உளோம்? அருளு வாய்என்றான்'

என்பது, கம்பராமாயணம்.

4. இச்சரிதப் பகுதியைக் கம்பராமாயணம் உத்தரகாண்டம், சந்திர கேது நகர்ப் படலத்தில், 48-ஆம் செய்யுள் முதல் காண்க.

5. 'தன்னுடைய பிரயோஜனத்தின்பொருட்டுப் பிறருடைய துக்கத்தைப் பாராமல் காரியம் செய்த இடமுண்டோ?' என்ன, 'நீ சொன்ன சொல்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. 'என் பெறுதி?' என்றதனைக் கடாட்சித்து, 'அந்தோ' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தனக்கு ஒரு பிரயோஜனம்' என்று தொடங்கி.

[1]பாதுகாத்தலே பிரயோஜனமாக இருக்கிறவன், அருள் அற்றாரைப் போலே ஆவதே! ஆதியாகி அகல் இடம் படைத்து உண்டு உமிழ்ந்து கடந்து இடந்திட்ட சோதி நீள் முடியாய்-[2]உனக்கு ஒரு பிரயோஜனம் இன்றிக்கே இருக்கச்செய்தேயும் பாதுகாப்பவன் அல்லேயோ நீ! ஆன பின்பு உனக்கு இது போருமோ?' [3]திருமுடி தொடக்கமான திவ்விய ஆபரணங்களைத் தரித்துக்கொண்டு நித்திய சூரிகள் நடுவே இருக்கக்கடவ நீ, உலகத்திற்கு எல்லாம் காரணனாய்ப் பரப்பையுடைத்தான பூமியைப் படைத்து, பின் பிரளய ஆபத்து வர வயிற்றிலே எடுத்துவைத்து, பின் வெளி நாடு காணப் புறப்பட விட்டு, பின் மஹாபலி கவர்ந்துகொள்ள எல்லை நடந்து மீட்டுக்கொண்டு, பின் நைமித்திகப் பிரளயத்திலே மஹாவராஹமாய் எடுத்துக்கொண்டு ஏறி, இப்படிகளாலே எல்லா இரட்சணங்களையும் செய்யுமவன் அல்லேயோ? தொண்டனேன் மதுசூதனனே - இவன் இரட்சகன் என்னுமிடத்துக்கு முன்னே ஒன்று தேடிச் சொல்ல வேணுமோ? மதுவைப் போக்கினாற்போலே நான் இந்திரியங்கட்குக் கட்டுப்பட்டிருத்தலை இன்று இருந்து போக்கினவன் அன்றோ? [4]தன் படிகளைக் காட்டி எனக்குப் புறம்பு உண்டான வாசனையைப் போக்கி, இன்று கைக்கு எட்டாதிருக்கிற இதுவே அன்றோ குறை? (3)

666

சூது நான்அறி யாவ ணைச்சு ழற்றினோர்
　　ஐவரைக் காட்டி உன்னடிப்
போது நான்அணு காவகை
　　செய்து போதி கண்டாய்
யாதும் யாவரும் இன்று நின்ன
　　கம்பால் ஒடுக்கினோர் ஆலி னீளிலை
மீது சேர்குழவி! வினையேன்
　　வினைதீர் மருந்தே!

---

1. பின் இரண்டு அடிகளைக் கடாட்சித்து 'அந்தோ' என்பதற்கு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'பாதுகாத்தலே' என்று தொடங்கி.

2. பின் இரண்டு அடிகளாலும் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'உனக்கு' என்று தொடங்கி.

3. பின் இரண்டு அடிகட்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'திருமுடி' என்று தொடங்கி.

4. 'இந்திரியங்கட்குக் கட்டுப்பட்டிருத்தலைப் போக்கினானாகில் 'மோதவித்திட்டு' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தன் படிகளை' என்று தொடங்கி.

பொ-ரை: அஃறிணைப்பொருள்களும் உயர்திணைப்பொருள்களும் ஒன்றும் இல்லாமல் எல்லாவற்றையும் உன் வயிற்றிலே ஒடுக்கிக் கொண்டு, ஒப்பற்றதான ஆலினது முகிழ் விரிந்து நீளும்படியான இலையின்மேலே சேர்ந்து திருக்கண் வளர்ந்த குழவியே! வினையேனுடைய வினைகளைத் தீர்க்கின்ற மருந்தே! ஒப்பற்ற ஐந்து இந்திரியங்களையும் காட்டி, உறுவதனை நான் அறியாத வகையாகச் சுழலச்செய்து, உனது அழகிய திருவடித் தாமரைகளை நான் சேராதபடி செய்து கண்கள் காணாதபடி கடக்க நிற்கின்றாய்காண்.

வி-கு: 'ஒடுக்கிச் சேர் குழவி' என்க. ஐவரைக் காட்டி அறியா வகை சுழற்றி அணுகா வகை செய்து போதி' என்க. சூது-உறுவது.

ஈடு: நான்காம் பாட்டு [1]'நீயே இவ்வாத்துமாவுக்குத் தனக்கு மேல் ஒன்றில்லாததான புருஷார்த்தம் என்னுமதை யான் அறியாதபடி ஐம்புலன்களைக் காட்டி என்னை மயக்குவிக்கின்றாய்,' என்கிறார்.

சூது- 'இந்த ஆத்துமாவுக்கு விஷயத்தில் ஈடுபட்டிருத்தல் நாசத்திற்குக் காரணம்; பகவானுடைய அனுபவம் உய்வதற்குக் காரணம்' என்னும் உபாயத்தை. சூது - உறுவது. நான் அறியா வகை- இது நான் அறியாதபடி. ஓர் [2]ஐவரைக் காட்டிச் சுழற்றி- நான் உறுவது அறியாதபடி [3]சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் விஷயங்களைக் காட்டி மயங்கச்செய்து. என்றது, 'உன்மத்தங்காய் தின்னப்பண்ணி' என்றபடி. உன்னடிப்போது நான் அணுகா வகை செய்து- உன் திருவடிகளாகிற செவ்விப்பூக்களை நான் கிட்டாதபடி செய்து. என்றது, [4]'மயிர் கழுவி இருக்கிறவனைச்

---

1. 'சூது நான் அறியாவகை' என்பதனையும், 'ஐவரைக் காட்டி, சுழற்றி, போதி கண்டாய்' என்பதனையும் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ஈண்டு, 'ஐவர்' என்றது, ஐம்புலன்களை.

3. 'சுவைஒளி யூறோசை நாற்றமென் றைந்தின்'
என்பது, திருக்குறள். உன்மத்தங்காய் தின்னப் பண்ணுகையாவது, அவற்றிலே இன்பம் உண்டு என்ற புத்தியைப் பிறப்பித்து நெஞ்சமானது கலங்கும்படி செய்தல்.

4. 'அடிப்போது' என்று, திருவடிகளை மலராக உருவகம் செய்ததற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'மயிர் கழுவி' என்று தொடங்கி. ஆழ்வாராகிய தாம் திருவடிகளை அடைவது எப்போதோ என்று பிரபத்தி செய்திருக்கிற தன்மையை நினைத்து, 'மயிர் கழுவி இருக்கிறவனை' என்கிறார். இப்படி இருக்கிற தமக்கு, ஈச்வரன் தன் திருவடிகளில் அனுபவ கைங்கரியங்களைக் கொடாமையைத் திருவுள்ளம் பற்றிச் 'செவ்விப்பூச் சூடாமல் தடுப்பாரைப் போலே' என்கிறார்.

செவ்விப்பூச் சூடாமல் தடுப்பாரைப் போலே' என்றபடி. போதி கண்டாய் -[1] கூட நிற்கில் இவை எல்லாம் பட வல்லேன்காண்! [2] 'கூடநிற்கில் கண்ணோட்டம் பிறக்கும்' என்று கடக்கப் போவாரைப் போலே போனான். 'நீர் சொல்லுகிறவை எல்லாம் நமக்குச் செய்ய அரிதுகாணும்' என்ன, [3] 'ஓம்; நீ அரியவை செய்யமாட்டாய் அன்றோ?' என்கிறார் மேல். யாது யாவரும் இன்றி நின் அகம்பால் ஒடுக்கி ஓர் ஆலின் நீள் இலை மீது சேர் குழவி - அறிவில் பொருள் அறிவுடைப்பொருள் என்னும் இவற்றில் ஒன்றும் பிறிகதிர்ப் படாத படி உன் வயிற்றிலே வைத்து, ஒருபவனாய் முகிழ் விரியாதது ஓர் ஆலந்தளிரின்மேலே, [4] உனக்கு இரட்சகர் வேண்டுவது ஒரு நிலையை அடைந்து திருக்கண் வளர்ந்தருளுவான் ஒருத்தன் அல்லையோ? [5] அரியவை செய்ய வல்லை என்னுமிடத்துக்கு ஒரு பழங்கதை சொல்லவேணுமோ? வினையேன் வினைதீர் மருந்தே - பாபமே நிரூபகமான என்னுடைய பாபத்தைப் போக்கும் மருந்தாம் வல்லவனே! என்னுடைய ஐம்புல இன்பங்களிலே உண்டாகும் ஈடுபாட்டினைப் போக்கி என்னை இப்படித் துடிப்பித்தவன் அல்லையோ? (4)

667

*தீர்மருந் தின்றி ஐவர் நோயடும்*
*செக்கி லிட்டுத் திரிக்கும் ஐவரை*
*நேர்மருங் குடைத்தா அடைத்து*
*நெகிழ்ப்பான் ஒக்கின்றாய்*
*ஆர்ம ருந்தினி யாகு வார்!அட லாழி*
*ஏந்தி அசுரர் வன்குலம்*
*வேர்மருங் கறுத்தாய்! விண்ணு*
*ளார்பெரு மானேயோ!*

பொ - ரை: கொல்லுகின்ற சக்கரத்தை ஏந்தி வலிய அசுரர்களுடைய குலத்தைப் பக்கவேரோடு அறுத்தவனே! நித்தியசூரிகளுக்குப் பெருமானே! வேறு பரிகாரம் இல்லாதபடி ஐம்புலன்களாகிய நோய்கள் வருத்துகின்ற சரீரமாகிற செக்கிலே இட்டு மயங்கச்

---

1. 'போதிகண்டாய்' என்பதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கூட நிற்கில்' என்று தொடங்கி.

2. 'அவன் தான் கூட நில்லாமல் போவான் என்?' என்ன, 'கூட நிற்கில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'ஓம்' என்பது, உடன்பாட்டைக் காட்டுவது.

4. 'குழவி' என்றதற்குப் பொருள், 'உனக்கு இரட்சகர் வேண்டுவது' என்று தொடங்கும் வாக்கியம்.

5. 'வினையேன் வினைதீர் மருந்தே' என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'அரியவை' என்று தொடங்கி.

செய்கின்ற ஐந்து இந்திரியங்களையும் எதிரும் பக்கங்களுமாக அடைத்து நிறுத்தி நெகிழ விடுகின்றவரைப் போலே இராநின்றாய்; இரட்சகனான நீ பராமுகம் செய்தால் இனி உபகாரர் ஆவார் யாவர்?

**வி - கு:** 'இன்றி அடும் செக்கு' என்க. இன்றி - இல்லாதபடி. 'இட்டுத் திரிக்கும் ஐவரை அடைத்து நெகிழ்ப்பான் ஒக்கின்றாய்' என்க. நெகிழ்ப்பான் ஒக்கின்றாய் - 'கைவிடுமாறு போலே இருக்கின்றாய்' என்னுதலுமாம்.

ஈடு: ஐந்தாம் பாட்டு. [1] 'மாற்றுச் செய்கை இல்லாதபடி விஷயங்களாலும் இந்திரியங்களாலும் நலிந்து என்னை நீ கைவிட்டால் வேறு இரட்சகர் உளரோ?' என்கிறார்.

தீர் மருந்து இன்றி - [2] வேறு பரிகாரம் உண்டாகிலும் ஆற்றலாம் அன்றோ? [3] சர்வசத்தியாலும் போக்கப் போகாதன்றோ? ஐந்து நோய் அடும் செக்கில் இட்டு - ஐம்புலன்களாகிற நோயாலே இவ்வாத்துமாவை [4] முடிக்கும் சரீரமாகிற செக்கிலே இட்டு. திரிக்கும் ஐவரை - வருத்துகின்ற ஐம்பொறிகளை. என்றது, 'சரீரத்திலே புகுவித்து ஓசை முதலிய புலன்களைக் காட்டி நெருக்குகிற செவி முதலிய பொறிகளை' என்றபடி. நேர்மருங்கு உடைத்தா அடைத்து - எதிரும் பக்கங்களுமாக அடைத்து. என்றது, [5] 'அபிமந்யு என்ற ஓர் இளைஞனை நலிகைக்கு அதிரதர் மஹாரதர் என்னுமவர்கள் அடங்கலும் சூழப் போந்து அடைத்தாற்போலே, இந்திரியங்களுக்குக்

---

1. 'ஆர் மருந்து இனி ஆகுவார்?' என்னுமளவும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'தீர் மருந்து இன்றியே' என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'வேறு ஒரு' என்று தொடங்கி.

3. இன்னாராலே என்று விசேடியாமல் பொதுவிலே 'தீர் மருந்தின்றி' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'சக்கரவர்த்தியாலும்' என்று தொடங்கி. சர்வசத்தி – சர்வேஸ்வரன்.

4. முடிக்கும் - முடிகைக்காக. இட்டு - புகுவித்து. 'ஐந்து நோயைக் கொண்டு இவ்வாத்துமாவை முடிக்கைக்காகச் செக்கிலே இட்டுத் திரிக்கும் ஐவரையும் நேர்மருங்குடைத்தா அடைத்து நெகிழ்ப்பான் ஒக்கின்றாய்' என்று கூட்டுக.

5. அடைத்தலாவது, நிறுத்துதல். அதனைத் திருஷ்டாந்த மூலமாகக் காட்டுகிறார், 'அபிமந்யு' என்று தொடங்கி. அதனை, வில்லிபாரதம் பதின்மூன்றும் போர்ச்சருக்கத்தில், 91 முதல் 136 முடியவுள்ள செய்யுள்களில் காணல் தகும். கையடைப்பாக்கி - வசமாக்கி.

கையடைப்பாக்கி ' என்றபடி. நெகிழ்ப்பான் ஒக்கின்றாய் -[1] இதுவோ தான் எனக்கு நிலைநிற்கப் புகுகிறது? [2]'இங்ஙனேதான் செல்லு கிறதோ?' என்று இருக்க ஒண்ணாதபடி உன் பக்கல் செய்த நம்பிக்கையையும் குலையாநின்றாய். [3]'ஆனால், நம் படி இதுவாகில், உமக்கு ஒரு பரிகாரம் தேடிக்கொண்டாலோ?' என்றான்; ஆர் மருந்து இனி ஆகுவார் -[4] என இடையாட்டம் பிறரைக்கொண்டு காரியம் இல்லை: நான் நோவுபடாநின்றேன். நீ கைவாங்கினாய். ஆன பின்பு எனக்கு ஒரு இரட்சகர் உளரோ? நானும் பிறரும் இல்லாத அன்று நீ உண்டு: நீ விட்ட அன்று யார் உண்டு? [5]'ஆனால் நீரோ?' என்றான்; நானும் கையும் திருவாழியுமாய் இருந்தேனாகில் நான் என்னை நோக்கிக்கொள்ளேனோ? [6]மருந்தாம் போதும் ஒரு சேதநன் வேணுமன்றோ? [7]மருந்தும் பொருளும் அமுதமும் அவனே அன்றோ இவர்க்கு?

---

1. ' 'நெகிழ்ப்பான் ஒக்கின்றாய்' என்பது என்? ' இந்திரியங்கள் பாதகங்கள் ' என்னும் புத்தியைத் தந்தோமே?' என்ன, 'இதுவோதான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ' இதுவோதான் ' என்றது, ' இந்திரியங்கள் பாதகங்கள் என்ற புத்தியோதான் ' என்றபடி.

2. ' நிலை நில்லாமைக்கு அடி யாது?' என்ன, ' இங்ஙனேதான் ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, ' இவை பாதகங்கள் என்ற புத்தியோடு செல்லவும் ஒண்ணாதபடி, தேவர் திருவடிகளில் இருக்கும் நம்பிக்கையையும் நெகிழ்க்கைக்காக இருந்தாற் போலே இராநின்றாய் ' என்றபடி ' இங்ஙனேதான் ' என்றது, ' இவை பாதகங்கள் என்ற புத்தியோடேதான் ' என்றபடி.

3. 'ஆனால்' என்றது, ' நாம் கைவிட்டோம் என்று உமக்குத் தோற்று கிறதாகில் ' என்றபடி. அதனை விவரணம் செய்கிறார், ' நம்படி ' என்று தொடங்கி.

4. ' இனி ' என்றதன் பொருளை அருளிச்செய்கிறார், ' என் இடையாட்டம் ' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், ' நானும் பிறரும் ' என்று தொடங்கி.

5. 'ஆர் மருந்து ஆகுவார்?' என்பதற்கு, 'வேறு உபாயங்கள் இரட்சகங்கள் ஆகமாட்டா ' என்று பொருள் அருளிச்செய்த திருவுள்ளம் பற்றி, ' அடல் ஆழி ஏந்தி ' என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், ' ஆனால் நீரோ ' என்று தொடங்கி.

6. 'யாது மருந்து இனி ஆகும்?' என்னாது, ' ஆர் மருந்து இனி ' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ' மருந்தாம் போதும் ' என்று தொடங்கி.

7. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், ' மருந்தும் ' என்று தொடங்கி. இது, மூன்றாந்திருவந்தாதி, 4.

அடல் ஆழி ஏந்தி அசுரர் வன்குலம் மருங்கு வேர் அறுத்தாய்-போரிலே முயற்சியையுடைய திருவாழியை ஏந்தி அசுரருடைய வலிதான குலத்தைப் பக்கவேரோடே வாங்கினவனே! [1] 'அந்த வாசனையோ உம்மை நலிகிறது? பின்னையும் நலிகிறது உண்டோ?' என்ன, விண்ணுளார் பெருமானேயோ - [2] ஒருவன் சிறை இருக்க, தாயும் தந்தையும் உடன் பிறந்தார்களுமாய்க் கலியாணம் செய்யக் கண்டு தான் கூடப் பெறுதே நோவுபடுமாறு போலே, நித்தியசூரிகளும் அவனும் பிராட்டியுமாகப் பரமபதத்திலே இருக்கிறபடியே நினைத்து அங்கே கேட்கும்படி கிடந்து கூப்பிடுகிறார். [3] 'ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஹா ஸுமித்ரே!' என்று பிராட்டி தனியே கிடந்து கூப்பிட்டாற்போலே, பரமபதத்தில் இருப்பும் அணி கலங்கும்படி கூப்பிடுகிறார்.

668

*விண்ணுளார் பெருமாற் கடிமைசெய்*
*வாரை யும்செறும் ஐம்பு லனிவை*
*மண்ணுள்என் னைப்பெற்றால் என்செய்யா*
*மற்று நீயும் விட்டால்?*
*பண்ணு ளாய்!கவி தன்னுளாய்!*
*பத்தியி னுள்ளாய்! பரமீசனே! வந்தென்*
*கண்ணுளாய்! நெஞ்சுளாய்! சொல்லுளாய்!*
*ஒன்று சொல்லாயே.*

---

1. 'அந்த வாசனையோ?' என்றது, 'விரோதிகளை அழித்தது மாத்திரமேயோ உம்மை நலிகிறது?' என்றபடி.

2. 'பெருமானேயோ' என்றதிலுள்ள 'ஓ' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'ஒருவன்' என்று தொடங்கி. 'பெருமானே!' என்பது விளிப்பெயர்.

3. அதனைத் திருஷ்டாந்த மூலம் விரிக்கிறார், 'ஹா ராம' என்று தொடங்கி.

'ஹா ராம ஹா லக்ஷ்மண ஹா ஸுமித்ரே
ஹா ராமமாத: ஸஹமே ஜநந்யா'

என்பது, ஸ்ரீராமா. சுந். 28 : 8.

'இருதாதியர் வேரற நீண்முகில்போல்
சரதாரைகள் வீசினர் சார்கிலிரோ?
வரதா! இளை யோய்! மறு வேதுமிலாப்
பரதா! இளை யோய்! பழி பூணுதிரோ?'

என்பது, கம்ப. சடாயு உயிர் நீத்த பட. 79.

பொ - ரை : பண்ணில் இருக்கிறவனே ! கவியில் இருக்கிறவனே ! பத்தியில் இருக்கிறவனே ! மேலான ஈசனே ! எனது கண்ணில் இருக்கிறவனே ! நெஞ்சில் இருக்கிறவனே ! சொல்லில் இருக்கிறவனே ! நித்தியசூரிகளுக்குப் பெருமானான சர்வேஸ்வரனுக்கு அடிமை செய்கின்ற வைநதேயன் முதலாயினோரையும் இந்த உலகத்திலே வருத்துகின்ற ஐம்புலன்களாகிற இவை என்னைப்பெற்றால் என்ன காரியத்தைச் செய்யமாட்டா ? அதற்குமேல் நீரும் கைவிட்டால் அவை என்ன செய்ய மாட்டா ? ஆதலால், என் தளர்த்தி தீரும்படி ஒரு வார்த்தை சொல்ல வேண்டும்.

வி - கு : 'செய்வாரையும்' என்பதிலுள்ள உம்மை, உயர்வு சிறப்பு. 'செய்வாரையும் மண்ணுள் செறும் ஐம்புலன்' என்க. அன்றிக்கே, 'செய்வாரையும் செறும் ஐம்புலன் இவை மண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா ?' என ஆற்றொழுக்காகக்கொண்டு பொருள் கூறலுமாம். 'வந்து ஒன்று சொல்லாய்' என்று கூட்டுக.

ஈடு : ஆறும் பாட்டு. [1]'அறிவிற்சிறந்தாரையும் வருத்துகின்ற ஐம்பொறிகள், நீயும் கைவிட்டால் பலமற்றவனான என்னை என்படுத்தா ?' என்கிறார்.

விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் - அயர்வறும் அமரர்கள் அதிபதிக்கு அடிமை செய்வாரையும் செறும். என்றது, 'அயர்வறும் அமரர்கள் அதிபதியாயிருக்கிற சர்வேஶ்வரனுக்குச் சம்சாரத்திலே முமுக்ஷுக்களாய்க் கைங்கரியத்திலே மூழ்கி இருக்கக் கடவரானவர்களையும் செறும்' என்றபடி. [3]'ஒரு விசுவாமித்திரன் சுக்கிரீவன் முதலாயினோர்களைக் கண்டோம் அன்றோ?' என்றது, [4]ஞானத்தால் மேம்பட்டவனான விசுவாமித்திரன்

---

1. 'மற்று நீயும் விட்டால்' என்னுமளவும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும்' என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார் : முதற்பொருள், 'முமுக்ஷுக்கள்' என்பது ; இப்பொருளையே அருளிச்செய்கிறார், 'அயர்வறும்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'என்றது' என்று தொடங்கி.

3. 'முமுக்ஷுக்கள் இந்திரியங்கட்குக் கட்டுப்பட்டிருந்த இடமுண்டோ ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒரு விசுவாமித்திரன்' என்று தொடங்கி.

4. அதனை விவரணம் செய்கிறார், 'ஞானத்தால்' என்று தொடங்கி. இங்குக் கூறிய சரிதங்களை முறையே கம்பராமாயணம், பாலகாண்டம், மிதிலைக்காட்சிப் படலத்தில் 104 - 107 செய்யுள்களிலும், கிட்கிந்தா காண்டம், கிட்கிந்தைப் படலத்தும் காண்க.

அகப்பட ஒரு விஷயத்தின் காற்கடையிலே கிடந்தான் அன்றோ? பெருமாளுக்குப் பரிவரான மஹாராஜர், பெருமாளை மின்னுக்கும் இடிக்கும் இரையாக நான்கு மாதங்கள் விட்டுவைத்து இந்திரியங்களுக்குப் பரவசப்பட்டவராய் அல்வழி என்று நினைத்திலர் அன்றோ? இவற்றைத் தெரிவித்தபடி. [1] அன்றிக்கே, 'விண்ணுளாராய்ப் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும்' என்னுதல். [2] ஒக்கப் பிறந்து இளையபெருமாளைப் போலே அடிமை செய்து திரிவார் உளர் அன்றோ? [3] திருவடியையும் அகப்பட 'எனக்கு' என்னப் பண்ணிற்றே அன்றோ? என்றது, சுமுகன் என்கிற பாம்பு திருவடிகளிலே சென்று கிட்ட, பெரிய திருவடி ஓடிச்சென்று, 'எனக்கு உணவாக இருக்கிற இதனைக் கைக்கொண்டு நோக்குவதே!' என்று வெறுத்து, 'தேவரீரையும் நாய்ச்சிமாரையும் நெடுங்காலம் தாங்கிக் கொண்டு திரிந்தேன்: நான் என் பெற்றேன்?' என்றதனைத் தெரிவித்தபடி. [4] இதுவன்றோ சம்சாரத்தின் தன்மை இருக்கிறபடி? [5] அவன் தான் அவதரித்துச் சோகிப்பது மோகிப்பதானாற்போலே ஆயிற்று இவர்களும்.

---

1. இரண்டாவது பொருளை அருளிச்செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி.

2. 'நித்திய சூரிகள் இவ்வுலகத்தில் அடிமை செய்வார்களோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒக்கப் பிறந்து' என்று தொடங்கி.

3. 'அவதார தசையில் இந்திரியங்களால் இடர்ப்பட்ட இடம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்யெய்கிறார், 'திருவடியையும்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'சுமுகன்' என்று தொடங்கி. இச்சரிதப்பகுதியை.

'நஞ்சு சோர்வதோர் வெஞ்சின அரவம்
வெருவி வந்துநின் சரணெனச் சரண்
நெஞ்சில் கொண்டுநின் அஞ்சிறைப் பறவைக்கு
அடைக்கலம் கொடுத்துஅருள் செய்த தறிந்தும்'

என்னும் திருப்பாசுரத்தால் உணர்தல் தகும். பெரிய திருமொழி, 5. 8 : 4.

4. 'சம்சார சம்பந்தம் சிறிதும் இல்லாதவரை இந்திரியங்கள் பாதிக்குமோ?' என்ன, 'இதுவன்றோ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. 'கர்மங்கட்கு வசப்படாதவர்களுக்கும் இது பொருந்துமோ?' என்ன, 'அவன்தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, 'பாவனை' என்றபடி.

மண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா -[1] இவர்தாம் விண்ணுளாரில் ஒருவரே அன்றோ? [2] இவற்றுக்குத் தந்நிலமாவது, நான் இவை இருந்த இடம் தேடிச் சென்று கழுத்திலே கயிறு இட்டுக் கொடு நிற்கவல்லேன் ஒருவனாவது; இங்ஙனே இருக்கிற என்னைப் பெற்றால் இவை என் செய்யா? மற்று நீயும் விட்டால் -[3] எல்லாரும் விட்டு விழுந்து தரிக்கும் வழியான நீயும் விட்டால். [3] இரட்சகனை நீ விட்டிலையாகில், மஹாராஜர் வாலியை வென்றாற்போலே நானும் இந்திரியங்களை வெல்லலேனோ?' [5] 'அந்த மனத்தினை அடக்குதல் காற்றை அடக்க முடியாதது போலச் செய்ய முடியாத காரியமாக நான் நினைக்கிறேன்,' என்றான் அன்றோ? என்றது, 'காற்றை ஓரிடத்தில் கட்டிவைக்கில் அன்றோ மனத்தினை நியமிக்கலாவது?' என்றபடி. அன்றிக்கே, [6] 'இந்திரியங்களை அடக்குதல் அரிது' என்று சொல்லுகிறாயாகில் நம் பக்கலிலே மனத்தினை வை' என்று அருளிச்செய்த நீயும் விட்டால்' என்னலுமாம். [7] 'நான் விட்டிலேனே! உம்மைக் கைவிடுகையாவது என்?' என்றான். 'ஆகில்,

1. 'மண்ணுள்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இவர்தாம்' என்று தொடங்கி. 'மண்ணுள் என்னை' என்கையாலே, முன் விண்ணுளார் என்பது தோற்றுகிறது.

2. 'மண்ணுள் என்னை' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இவற்றுக்கு' என்று தொடங்கி.

3. 'எல்லாரும் விட்டு' என்றது, 'தாய் தந்தை உறவினர் முதலிய எல்லாரும் விட்டாலும்' என்றபடி. 'விழுந்து தரிக்கும் பூமியான' என்றது, 'அவர்கள் விட்டதே காரணமாக மேல் விழுந்து தரிக்கும் பூமியான' என்றபடி.

4. 'நான் விடாவிடில் நீர் செய்வது என்?' என்ன, 'இரட்சகனை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. 'அவன் கைவிட்டால் இந்திரியங்களை வெல்லல் அரிதோ?' என்ன, 'அந்த மனத்தினை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

'தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்' என்பது, ஸ்ரீ கீதை, 6 : 34.

6. 'மற்று நீயும் விட்டால்' என்பதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'இந்திரியங்களை' என்று தொடங்கி. 'மச்சித்த: ஸததம் பவ' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'நம் பக்கலிலே மனத்தினை வை என்ற நீயும்' என்று அருளிச்செய்கிறார்.

7. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'நான் விட்டிலேனே' என்று தொடங்கி.

[1] நீ அண்மையில் இல்லாமையினாலேயோ, உனக்குச்சத்தி இல்லாமையினாலேயோ நான் இழக்கிறது?' என்கிறார் மேல். பண்ணுளாய் - என் துன்ப ஒலியைக் கேளாதிருக்கிறாய் அல்லையே. கவிதன்னுளாய் - என்னுடைய ஆர்த்தியை உட்கொண்ட சொற்களைக் கேளாதிருக்கிறாய் அல்லையே? பத்தியினுள்ளாய் - இப்படிச் சொல்லுவிக்கிற ஆற்றாமையை அறியாதிருக்கிறாய் அல்லையே? பரம் ஈசனே - உனக்கு முடியாதது ஒன்று உண்டாக அதனைச் செய்யமாட்டாது இருக்கிறாய் அல்லையே? [2] உன் சேஷித்துவம் ஏறிப் பாயாத இடம் உண்டோ?

[3] 'இது கிடக்கிடு; நீதான் [4] முன்பே செய்யாதது ஒன்று உண்டோ?' என்கிறார். 'ஆனால், இனிச் செய்ய வேண்டுவது இல்லையே' என்றான்; [5] 'நானும் செய்த காரியத்தில் குறை உண்டு என்கிறேன் அல்லேன்; நீ செய்யாத காரியத்தை அன்றோ சொல்லுகிறது?' என்கிறார்: என் கண்ணுளாய் நெஞ்சுளாய் சொல்லுளாய் - புறக்கரணங்கட்கும் அகக்கரணத்துக்கும் உன்னை ஒழிய விஷயம்

---

1. 'பண்ணுளாய், கவிதன்னுளாய், பத்தியினுள்ளாய்' என்ற மூன்றனையும் திருவுள்ளம் பற்றி, 'நீ அண்மையில் இல்லாமையினாலேயோ' என்றும், 'பரமீசனே' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'உனக்குச் சத்தியில்லாமையினாலேயோ' என்றும் அருளிச்செய்கிறார். 'கேளாதிருக்கிறாய் அல்லையே? அறியாதிருக்கிறாய் அல்லையே?' என்றதனால், அண்மையைத் தெரிவித்தபடி. 'உனக்கு முடியாதது ஒன்று உண்டாக' என்றதனால், அவன் சத்தியைத் தெரிவித்தபடி.

2. 'பரம்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'உன் சேஷித்துவம்' என்று தொடங்கி.

3. நான்காம் அடிக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'இது கிடக்கிடு' என்று தொடங்கி.

'போன படைத்தலை வீரர்த மக்கிரை போதாவிச்
சேனை கிடக்கிடு தேவர் வரிற்சிலை மாமேகம்'

என்பர் கம்பநாட்டாழ்வார் (குகப்படலம். 20).

4. 'முன்பே' என்றது, 'முடியானே' என்ற திருவாய்மொழியில் என்றபடி.

5. 'கண்ணுளாய் நெஞ்சுளாய் சொல்லுளாய்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'நானும்' என்று தொடங்கி. 'கண்ணுளாய் நெஞ்சுளாய் சொல்லுளாய்' என்றது, செய்த காரியம்; 'ஒன்று சொல்லாயே' என்றது, செய்யாத காரியம்.

உண்டோ? [1] நெடியானே என்று கிடப்பது, உன்னை மெய்கொள்ளக் காண விரும்புவது, வஞ்சனே என்பதாயன்றோ அவை இருக்கின்றன? ' 'கவி தன்னுளாய்' என்று பாசுரத்தைச் சொல்லிற்று; 'சொல்லுளாய்' என்று வாக்கு இந்திரியத்தைச் சொல்லுகிறது. 'ஆனால், நம்மைச் செய்யச் சொல்லுகிறது என்?' என்ன, வந்து ஒன்று சொல்லாயே-எனக்காக நாலடி நடந்து வந்து, 'நீ அஞ்சாதே கொள்' என்று, என்னை, மாசுச: - துக்கப்படாதே என்னவேணும். [2] அன்றிக்கே, 'உன் இருப்பில் எனக்கு ஐயம் உண்டோ? என் கண் காண வந்து ஒன்று சொல்லுகை அன்றோ எனக்குத் தேட்டம்?' என்கிறார் என்னுதல். (6)

669

ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கி
லாதஓர் ஐவர்வன் கயவரை
என்றுயான் வெல்கிற்பன்
உன்திருவருள் இல்லையேல்?
அன்று தேவர் அசுரர் வாங்க
அலைகடல் அரவம் அளாவிஓர்
குன்றம் வைத்த எந்தாய்! கொடியேன்
பருகுஇன் னமுதே!

பொ - ரை: அக்காலத்தில் தேவர்களும் அசுரர்களும் பின் வாங்க, அலைகளையுடைய கடலிலே வாசுகி என்னும் பாம்பினைச் சுற்றி ஒப்பற்ற மந்தரம் என்னும் மலையை வைத்த எந்தையே! கொடியேனாகிய அடியேன் பருகுவதற்குரிய அமுதாய் இருப்பவனே! ஒரு விஷயத்தைச் சொல்லி அந்த ஒருமைப்பாட்டிலேயே நில்லாத ஒப்பற்ற ஐம்பொறிகளாகிய வலிய கயவர்களை, உன் திருவருள் இல்லையேல் என்றைக்கு யான் வெல்வேன்?

வி - கு: 'அளாவி வைத்த எந்தாய்' என்க. ஒருத்து – ஒருமைப்பாடு. கயவர் - கீழ்மக்கள்.

ஈடு: ஏழாம் பாட்டு. [3] 'நீ பராமுகம் செய்தால், மிகுந்த கயமையையுடைய இந்திரியங்களை என்னாலே வெல்ல உபாயம் உண்டோ?' என்கிறார்.

---

1. 'எல்லாக் கரணங்களுக்கும் விஷயம் அவனாக இருக்க இயலுமோ?' என்ன, 'நெடியானே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'முடியானே' என்ற திருவாய்மொழி பார்க்க.

2. 'பண்ணுளாய்' என்று தொடங்குகிற பதங்கள் மூன்றற்கும், அண்மையிலிருப்பவன் என்று கொண்டு பொருள் அருளிச்செய்தார் மேல்; 'நீயும் இருக்க நான் இழப்பதே?' என்று இருப்பிலே கருத்தாகப் பொருள் அருளிச்செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி.

3. 'உன் திருவருள் இல்லையேல் வன்கயவரான ஓர் ஐவரை என்று யான் வெல்கிற்பன்?' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

ஒன்று சொல்லி - [1] 'இராமன் இரண்டு பேசமாட்டான்,' என்பாரைப் பற்றிப் பயம் கெட்டு இருக்கிறேனோ? [2] அங்ஙனேயாகில், 'இது எனக்கு விரதம்' என்றதுவும் தப்பாதே அன்றோ? ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத - ஒரு வார்த்தையைச் சொல்லி அதற்கு ஈடாக ஓர் அர்த்தத்திலே நிற்கக் கடவதல்லாத. என்றது, 'ஒரு விஷயத்தைச் சொல்லி, அது அனுபவிக்குந்தனையும் ஓர் இடத்திலே நில்லாத' என்றபடி. ஒருத்து - ஒருமைப்பாடு. ஓர் ஐவர் - இப்படி இருப்பார் பலர். வன்கயவரை - பழகப்பழக அன்பு இல்லாதவர்களாய் இருப்பவர்களை. என்று யான் வெல்கிற்பன் - [3] 'இன்று இல்லையாகில் நாளை வெல்லுகிறான், தானே வென்று வருகின்றான்,' என்றிருக்கிறாயோ? உன் திருவருள் இல்லையேல் - அவன் திருவருள் உண்டாகில் வெல்லுதலுமாம் அன்றோ? [4] 'அருள் என்னும் ஒள்வாள் உருவி எறிந்தேன் ஐம்புலன்கள்' என்னக்கடவதன்றோ? [5] உன்னை அண்டைகொள்ளாதே பாண்டவர்கள் துரியோதனனை வெல்லுமன்றன்றோ, நான் இந்திரியங்களை வெல்லுவது? கிருஷ்ணனை அடைந்து அருச்சுனன் பகைவர்களை வென்றான் அன்றோ? [6] 'பாண்டவர்கள் கிருஷ்ணனை அடைந்தவர்கள்;

---

1. *'ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத' என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இராமன்' என்று தொடங்கி.*

*'ராமோ த்வி: நாபிபாஷதே' என்பது, ஸ்ரீராமா. அயோத்.* 18 : 30.

2. *'அவரைப் பற்றினால் பயம் கெட்டிருக்கும் பிரகாரம் எப்படி?' என்ன, 'அங்ஙனேயாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'அங்ஙனேயாகில்' என்றது, 'இரண்டாம் வார்த்தை இல்லை என்றாராகில்' என்றபடி. 'ஏதத் விரதம் மம' என்பது, ஸ்ரீராமா. யுத்.* 18:33.

3. *'என்று யான் வெல்கிற்பன்?' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இன்று இல்லையாகில்' என்று தொடங்கி. 'ஒரு நாளும் வெல்ல முடியாது' என்பது கருத்து.*

4. *அவன் திருவருள் இருந்தால் வெல்லலாம் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அருள் என்னும்' என்று தொடங்கி. இது பெரிய திருமொழி,* 6. 2 : 4.

5. *'உன் திருவருள் இல்லையேல் என்று யான் வெல்கிற்பன்?' என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'உன்னை அண்டை' என்று தொடங்கி.*

6. *பாண்டவர்கள் கிருஷ்ணனையே அடைந்தவர்கள் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பாண்டவர்கள்' என்று தொடங்கி.*

*'க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ண நாதாஶ்ச பாண்டவா:' என்பது, பாரதம், ஆரண். பர்.* 18. 3 : 24.

கிருஷ்ணனையே பலமாகக் கொண்டவர்கள்; கிருஷ்ணனையே நாதனாகவுமுடையவர்கள்,' என்கிறபடியே.

அன்று தேவர் அசுரர் வாங்க - 'நம் அருள் பெற்று வென்றார் உளரோ ?' என்ன, [1] துர்வாச முனிவருடைய சாபத்தின் அன்று உன் திருவருளைப் பெற்றன்றோ தேவர்கள் கடலைக் கடைந்தது? தேவர்களும் அசுரர்களும் கைவாங்கக் கடைந்தான் என்னுதல். அன்றிககே, வாங்குதல் - வலித்தலாய், அவர்கள் தங்களுக்கே கடையலாம்படி செய்து கொடுத்தான் என்னுதல். அலைகடல் அரவம் அளாவி ஓர் குன்றம் வைத்த எந்தாய் - பெரிய அலையையுடைத்தான கடலிலே, ஒரு சித்துப் பொருளான வாசுகியைக் கயிறாகக்கொண்டு, சலிப்பிக்க ஒண்ணாதது ஒரு மலையை மத்தாகக்கொண்டு, அதனை வாசுகியை இட்டுச் சுற்றிவைத்த [2] நொய்ப்பம் எல்லார்க்கும் கடையலாம்படி இருக்கை: நமக்கும் கடையப் போம்படியாயிருக்கை. [3] தாமும் ஒரு பிரயோஜனம் பெறப் பார்க்கிறாராகையாலே அது தம் பேறாய் இருக்கிறபடியைத் தெரிவிக்கிறார், 'எந்தாய்' என்று. கொடியேன் பருகு இன்னமுதே - [4] கடைந்ததனையே ஆசைப்படப் பெற்றிலேன். அன்றிககே, [5] நீ செய்தது கொண்டு திருப்தனாக

---

1. இந்தச் சரிதப் பகுதியைக் கம்பராமாயணம், பாலகாண்டம், அகலிகைப்படலத்தில் 5 முதல் 26 முடியவுள்ள செய்யுள்களில் காண்க.

2. நொய்ப்பம் - நேர்ப்பு. 'எல்லார்க்கும்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'நமக்கும்' என்று தொடங்கி.

3. 'வேறு பிரயோஜனங்களை விரும்புகிறவர்களுக்காகச் செய்த செயலுக்குத் தோற்று, 'எந்தாய்' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தாமும்' என்று தொடங்கி. என்றது, 'அடியார்களில் ஒருவர் விரும்பிய காரியத்தைச் செய்தால், மற்றையோர் விரும்பிய காரியங்களையும் செய்ய வேண்டுகையாலே, தாம் விரும்பிய காரியத்தையும் செய்வான் என்று அறுதியிட்டு, அவர்களுக்குச் செய்ததைத் தம் பேறாக நினைத்து அருளிச்செய்கிறார்' என்றபடி.

4. 'இன்னமுதே' என்றதனைக் கடாட்சித்துக் 'கொடியேன்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'கடைந்ததனையே' என்று தொடங்கி.

5. மேலதற்கே வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'நீ செய்தது' என்று தொடங்கி. 'அட்டது ஒழியச் சுட்டது கொண்டுவா' என்றது, தாபதவேடம் கொண்டு சென்ற சிவபிரான் கூற்று; சிறுத்தொண்டநாயனார் புராணம்.

வேண்டி இருக்க, 'அட்டது ஒழியச் சுட்டது கொண்டு வா,' என்று உன்னை நிர்ப்பந்திக்கும்படியான பாவத்தைச் செய்துள்ளேன் என்னுதலுமாம். (7)

670

இன்ன முதெனத் தோன்றிஓர் ஐவர்
யாவரையும் மயக்கநீ வைத்த
முன்னம் மாயமெல்லாம் முழுவேர்
அரிந்துஎன்னையுன்
சின்ன மும்திரு மூர்த்தியும் சிந்தித் தேத்திக்
கைதொழ வேஅருள்எனக்கு
என்னம்மா! என்கண்ணா!
இமையோர்தம் குலமுதலே!

பொ - ரை: என் அம்மா! என் கண்ணா! நித்தியசூரிகள் கூட்டத்துக்கு முதல்வா! ஒப்பற்ற ஐவராலே இனிய அமுதத்தைப் போன்று தோன்ற, அதனாலே யாவரையும் மயக்க நீ வைத்த அநாதியான எல்லா மாயத்தையும் அடியோடு வேரை அரிந்து, நான் உன்னுடைய சின்னங்களையும் அழகிய மூர்த்தியையும் சிந்தித்து ஏத்திக் கையால் தொழும்படியாகவே எனக்குத் திருவருள் செய்யவேண்டும்.

வி - கு: 'தோன்றி மயக்க நீ வைத்த மாயம்' என்க. தோன்றி - தோன்ற. 'அரிந்து சிந்தித்து ஏத்திக் கைதொழ எனக்கு அருள்' என்க. இனி, அரிந்து – அரிய என்னலுமாம். 'சிந்தித்து ஏத்திக் கைதொழ' என்ற இடத்தில் முக்கரணங்களின் செயல் கூறப்பட்டது.

ஈடு: எட்டாம் பாட்டு. [1]'எனது பிரகிருதி சம்பந்தத்தை அறுத்து, நான் மனம் வாக்குக் காயம் இவற்றாலே உன்னை எப்பொழுதும் அனுபவிக்கும்படி செய்தருள வேணும்' என்கிறார்.

இன் அமுது எனத்தோன்றி - [2]முடிவில் பலிக்குமது முகப்பிலேயாகப் பெற்றேனாகில் கைவிடலாங்காண். [3]'பொறிகள், புலன்க

1. 'மாயம் எல்லாம் முழுவேர் அரிந்து சிந்தித்து ஏத்திக் கைதொழவே அருள்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'இன் அமுதமாய்' என்னாமல், 'அமுதே எனத் தோன்றி' என்கையாலே, முதலில் அமுதமாய், முடிவில் விடமாம் என்பது சித்திக்கையாலே, அங்ஙனம் போதரும் பொருளைச் சொல்லி வேறுபடுகின்ற ஆழ்வாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'முடிவில்' என்று தொடங்கி.

3. முதலில் இன்னமுது எனத்தோன்றுவதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பொறிகள்' என்று தொடங்கி.

'விஷயேந்திரிய ஸம்யோகாத் யத்தத் அக்ரே அம்ருதோபமம்
பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம்'

என்பது, ஸ்ரீகீதை, 18 : 38.

ளோடு பொருந்தியுண்ணும் இன்பமானது தொடக்கத்தில் அமிர்தம் போலாம்; பரிணும நிலையில் விஷத்தைப் போலாம் என்பது 'இராஜச சுகம் என்று சொல்லப்படும்,' என்கிறபடியே, பரிணுமத்தில் விஷமேயன்றே? [1] முடிவில் உண்டாமது முதலிலே தோன்றிற்ருகில் மேல் விழாது ஒழியலாயிற்று. பழியும் தருமத்திற்குக் கேடுமாய், மேல் நரகமானுலும் விடப்போகாதிருத்தலின், 'இன்னமுது' என் கிறது. [2] சரீரத்துக்கும் சரீரத்தோடு சம்பந்தப்பட்ட பொருள் களுககும் இங்ஙனே ஒரு தன்மை உண்டு; திருதராஷ்டிரனேடு ஒக்கும். 'எங்ஙனே?' என்னில், [3] அகவாயில் தரும ருசி இன்றிககே இருக்கச் செய்தே, வாயாலே அனுகூலம் போலே இருக்குமவற்றைச் சொல்லாநிற்பான் அவனும். ஓர் ஐவர் - தனித்தனியே பிரபலமாய் ஒப்பற்றவையாய் இருககிற சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் விஷயங்கள் ஐந்தும். யாவரையும் மயகக - அற்பரான மனிதர்களோடு, அளவுடையரான பிரமன் முதலான தேவர்களோடு வாசி அற அறிவு கெடுக்கும்படிக்கு ஈடாக. நீ வைத்த - சர்வசத்தி யான நீ வைத்த. [4] தன்னுலே படைக்கப்பட்டது என்று அறியாமல், 'அதிலே ஓர் இனிமை உண்டு' என்று விருப்பத்தைச் செய்கிருன் அன்றே பிரமனும்? முன்னம் மாயம் எல்லாம் - அநாதியான சம்சாரத்தை எல்லாம். முழு வேர் அரிந்து-வாசனையோடே போக்கி. என்னை - சம்சார பயத்தாலே பயந்திருக்கின்ற என்னை. [5] செய்த அமிசத்தே திருப்தனுய் இருக்குமன்றே அவன்? 'ஞானலாபம்

---

1. மேலே கூறியதனை விவரணம் செய்கிருர், 'முடிவில்' என்று தொடங்கி.

2. 'பிரகிருதிக்கும் பிரகிருதி சம்பந்தப்பட்ட பொருள்களுக்கும் உள்ள சுபாவம் இது' என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய் கிருர், 'சரீரத்துக்கும்' என்று தொடங்கி.

3. 'அகவாயில்' என்று தொடங்கும் வாக்கியத்தின் பொருளை வில்லி பாரதம் சூதுபோர்ச்சருக்கம் 126 முதல் 133 முடியவுள்ள செய் யுள்களைப் படித்து அறிதல் தகும்.

4. 'பிரமனும் இந்திரியங்கட்குக் கட்டுப்பட்டவனுனன்' என்பதனை அருளிச்செய்கிருர், 'தன்னுலே' என்று தொடங்கி.

5. 'முழுவேர் அரிந்து கைதொழுவே அருள்' என்பது என்? முற்றறிவினனை சர்வேஸ்வரன் அறியானே?' என்னில், 'செய்த அமிசத்தே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். அதனை விவரணம் செய்கிருர், 'ஞானலாபம்' என்று தொடங்கி.

பண்ணிக்கொடுத்தோம்,' என்றே அன்றோ அவன் இருக்கிறது? அது போராதே அன்றோ? சம்சாரத்தை வாசனையோடே போக்க வேண்டி இருக்குமன்றோ இவர்க்கு?

உன் சின்னமும் திருமூர்த்தியும் - 'தவள ஒண்சங்கு சக்கரம் என்றும், 'வலக்கை ஆழி இடக்கைச் சங்கம்' என்றும், 'அரவிந்த லோசனன்' என்றும் சொல்லுகிறபடியே, திவ்விய ஆயுதங்களையும் அவற்றுக்கு ஒப்பாயிருக்கிற திருமேனியையும். சிந்தித்து ஏத்திக் கை தொழவே அருள் எனக்கு - இவற்றை நெஞ்சாலே நினைத்து, உள்ளடங்காமல் வாய் விட்டுத் துதி செய்து, பின்னைத் திருவடிகளில் விழுகைக்குத் தகுதியாக எனக்கு அருளவேணும். என்றது, [1] 'வாயாலே ஒன்று சொல்லாநிற்க, நெஞ்சு வேறே ஒன்று நினைத்தல்; 'உனக்கு அடிமை' என்று வேறே ஓர் இடத்தில் தொழில் செய்தல் செய்கை அன்றிக்கே, மனம் வாக்குக் காயம் என்னும் இம்மூன்றும் உன் பக்கல் ஈடுபடும்படி செய்தருள வேணும்' என்றபடி. என் அம்மா-எனக்குத் தாய்போல் பரிவன் ஆனவனே! அழைக்கும் பெயராகையாலும் சேதநனைச் சொல்லுகையாலும் 'அம்மே' என்பது ஆகாரம் ஏற்று விளியாய் 'அம்மா' என்று கிடக்கிறது. என் கண்ணா-[2] அந்தப் பரிவை அநுஷ்டான பரியந்தமாக்கினவனே! இமையோர்தம் குலமுதலே-ஒரு நாட்டுக்காக உன்னைக் கொடுத்துக் கொண்டு இருக்குமவனல்லையோ? [3] பலருடைய ஆசைப்பாடு ஒருவனுக்கு உண்டானால் கொடுக்கலாகாதோ? என் அம்மா என் கண்ணா இமையோர்தம் குல முதலே-[4] எனக்குச் சுவாமியாய், 'சொத்தை நசிக்கக் கொடுக்க ஒண்ணாது' என்று கிருஷ்ணனாய்

---

1. 'தொழவே' என்ற ஏகாரத்தின் பொருளை விரிக்கிறார், 'வாயாலே' என்று தொடங்கி. என்றது, 'முக்கரணங்களும் உன் பக்கலிலே ஆக வேண்டும்' என்றபடி.

2. அந்தப் பரிவை-மேலே கூறிய தாயினது பரிவை. பரிவு-அன்பு.

3. 'அவர்கள் பலர் ஆகையாலே செய்தோம்' என்ன, 'பலருடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. 'அம்மா' என்பதற்குத் தாயினது அன்பு போன்ற அன்புடையவன் என்று மேலே பொருள் அருளிச்செய்தார்; 'ஸ்வாமி' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'எனக்குச் சுவாமியாய்' என்று.

வந்து அவதரித்து என்னை நோக்கினவனே! [1] அவதாரம் எல்லார்க்கும் பொதுவாக இருக்கச்செய்தே, இவர் தமக்காகச் செய்தது என்று இருப்பரே? [2] மனம் வாக்குக் காயம் என்னும் இம்மூன்றும் ஒருங்கி உன் பக்கலிலே பிரவணமாம்படி ஒரு நாட்டுக்குச் செய்து கொடுத்த நீ, அதனை என் ஒருவனுக்கும் செய்யத் தட்டு என்? (8)

671

குலமு தல்அடுந் தீவி னைக்கொடுவன்
    குழியினில் வீழ்க்கு மைவரை
வலமுதல் கெடுக்கும் வரமே
    தந்தருள் கண்டாய்
நிலமு தல்இனி எவ்வுல குக்கும்
    நிற்பன செல்வன எனப்பொருள்
பலமுதல் படைத்தாய்!என்
    கண்ணா!என் பரஞ்சுடரே!

பொ - ரை: பூமி முதலாக மற்றும் எல்லா உலகங்கட்கும் தாவரம் ஜங்கமம் என்று சொல்லப்படுகின்ற பல பொருள்களையும் ஆதியில் படைத்தவனே! என் கண்ணனே! என் பரஞ்சுடரே! குலத்தை அடியோடு கெடுக்கின்ற தீவினைகளாகிய கொடிய வலிய குழியிலே தள்ளுகின்ற ஐந்து இந்திரியங்களினுடைய வலிமையை அடியோடு அழிப்பதற்குத் தக்க சிறப்பை எனக்குக் கொடுத்தருள்வாய்.

வி - கு: நிற்பன - சஞ்சரிக்காத பொருள்கள்; மரம் முதலியன. செல்வன - சஞ்சரிக்கின்ற பொருள். 'ஐவரைக் கெடுக்கும் வரம்' என்க. வரம் – பலமுமாம்.

ஈடு: ஒன்பதாம் பாட்டு. [3] 'விஷயங்களிலே ஆத்துமாவைத் தள்ளும் இந்திரியங்கள் என்னை நலியாதபடி செய்ய வேணும்,' என்கிறார்.

குலம் முதல் அடும் தீவினைக் கொடு வன் குழியினில் வீழ்க்கும் ஐவரை - ஒருவன் செய்த பாவம் அவனறன்னளவிலே போகை அன்றிக்கே, குலமாக முதலற முடிக்கவற்றான பாவங்களை விளைக்கக் கடவனவாய், கொடியனவாய், [4] அனுபவித்து முடிய ஒண்ணாதபடி

1. 'அவதாரம் பொதுவாய் இருக்க, 'என் கண்ணா' என்கிறது என்?' என்ன, 'அவதாரம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'இமையோர்தம் குலமுதலே! சிந்தித்து எத்திக் கைதொழவே அருள் எனக்கு' என்று கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார், 'மனம் வாக்கு' என்று தொடங்கி.

3. 'வரமே தந்தருள் கண்டாய்' என்னுமளவும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

4. 'கொடு' என்ற சொல்லின் பொருள், 'அனுபவித்து முடிய ஒண்ணாதபடியாய்' என்பது.

யாய், வலியனவாய், கால்வாங்க ஒண்ணுதபடியான ஐம்புலன்களாகிற குழிகளிலே தள்ளுகின்றனவான இந்திரியங்களை. [1] 'செய்யக்கூடியன அல்லாதனவாய், சொல்லுகிற பலத்தின் அளவல்லாத அபாயங்களையுடையனவாய், குலத்தை முதலற முடிக்கக் கூடியனவான செயல்களிலே, உன் போல்வராயுள்ள அறிஞர்கள் செல்லார்கள் காண்!' என்றுன் அன்றே மால்யவான், இராவணனுக்கு?

வலமுதல் கெடுக்கும் வரமே தந்தருள் கண்டாய்-இவற்றினுடைய வலிமையை முதலிலே வாராதபடி முடிக்கக்கூடியதான உன்னுடைய திருவருளைச் செய்தருள வேணும். 'நம்மாலே தனியே இங்ஙனே செய்யலாயிருக்குமோ?' என்ன, நிலம் முதல் இனி எவ்வுலகுக்கும் நிற்பன செல்வன எனப் பொருள் பல முதல் படைத்தாய்-[2] 'நீ, உலகத்தைப் படைத்தல் முதலாயினவற்றைச் செய்கிற போது உனக்கு ஆர் துணைப்படச் செய்தாய்?' என்கிறுர். அன்றிக்கே, [3] 'படைத்தலுக்குப் பயன் மோக்ஷம் அன்றே? அது பெற வேண்டாவோ?' என்னலுமாம். பூமி முதலாக மற்றும் இப்படி உண்டான எல்லா உலகங்களிலும் தாவர ஜங்கமங்களாகிற பல பொருள்களையும் முன்பே உண்டாக்கினுய். என் கண்ணு என் பரஞ்சுடரே-அப்படிப் பொதுவான காத்தல் ஒழிய, கிருஷ்ணனுய் வந்து அவதரித்து எனக்கு பவ்யனுய், வடிவழகினை எனக்கு உபகரித்தவனே! [4] ஒருநாடாக அனுபவிக்கும் வடிவழகினை என்னை ஒருவனையும் அனுபவிப்பித்தவனே! [5] அழிந்த உலகத்தை உண்டாக்கின உனக்கு, உள்ளதற்கு ஒரு குணத்தைக் கொடுத்தல் அரிதோ? (9)

---

1. விஷயங்களிலே ஈடுபாடு குலத்தை அடியோடு அழித்துவிடும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறுர், 'செய்யக்கூடியன அல்லாதனவாய்' என்று தொடங்கி.

'நஹி தர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷு கர்மஸு
மூலகாதிஷு ஸஜ்ஜந்தே புத்திமந்தோ பவத்விதா:'

என்பது, ஸ்ரீராமா. யுத்.

2. உலக சிருஷ்டியைச் சொல்லுவதற்கு பாவம் அருளிச்செய்கிறுர், 'நீ, உலகத்தை' என்று தொடங்கி.

3. மேலதற்கே வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறுர், 'படைத்தலுக்கு' என்று தொடங்கி.

4. 'என் பரஞ்சுடரே' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறுர், 'ஒருநாடாக' என்று தொடங்கி.

5. 'நிலமுதல்......படைத்தாய்' என்பதற்கு, அருளிச்செய்த இரு வகைக் கருத்துகளுள், முதல் கருத்தினை விவரணம் செய்கிறுர், 'அழிந்த உலகத்தை' என்று தொடங்கி.

**என்பரஞ் சுடரே! என்றுன்னை அலற்றி**
**உன்இணைத் தாமரை கட்கு**
**அன்புருகி நிற்குமது நிற்கச் சுமடு தந்தாய்**
**வன்ப ரங்கள் எடுத்து ஐவர் திசைவலித்து**
**எற்று கின்றனர்**
**முன்பரவை கடைந்து அமுதம் கொண்ட மூர்த்தியோ!**

பொ-ரை: 'என் பரஞ்சுடரே! முற்காலத்தில் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதங்கொண்ட மூர்த்தியே!' என்பதாக உன்னையே அலற்றி உனது இரண்டு திருவடிகட்கு அன்போடு உருகி நிற்குமது ஒழிய, சரீரமாகிய சும்மாட்டைக் கொடுத்தாய; ஐவர், வலிய விஷயங்களாகிய பாரங்களைச் சுமத்தித் திக்குகள்தோறும் இழுத்துத் தாக்குகின்றனர்; அந்தோ!

வி-கு: சுமடு - சும்மாடு. ஐவர் - ஐம்பொறிகள். வலித்து - இழுத்து. 'ஓ' என்பது, துக்கத்தின் மிகுதியைக் காட்ட வந்தது.

ஈடு: பத்தாம் பாட்டு. [1]'அடிமைக்கு விரோதியாய் விஷய அனுபவத்திற்குப் பாங்கான உடம்பைத் தநதாய்; அதுவே காரணமாக ஐந்து இநதிரியங்களும் நலியாநின்றன; அவற்றைப் போக்கியருளவேண்டும்!' எனத் துயரத்தோடு கூப்பிடுகிறார்.

என் பரஞ்சுடரே என்று உன்னை அலற்றி - 'எனக்கு உன் வடிவழகினைக் காட்டி உபகரிக்குமவனே!' என்று உன்னைக் குறித்து அடைவுகெடக் கூப்பிட்டு. உன் இணைத் தாமரைகட்கு அன்பு உருகி நிற்குமது நிற்க - ஒன்றுக்கு ஒன்று ஒப்பாய் இருப்பன இரண்டு செவ்விப்பூப் போலே இருக்கிற உன் திருவடிகளில் இனிமையை நினைத்து அன்பு வசப்பட்டவனாய் நெகிழ்நது நீராய் நிற்கை இவ்வாத்துமாவுக்குச் சொரூபமாகக் கடவது. சொரூபம் இதுவாக இருக்க, சுமடு தந்தாய் - உன் பக்கலினின்றும் அகற்றி விஷயங்களிலே கொடுபோய் மூட்டக் கூடியதான சரீரத்தைத் தந்தாய்; என்னை அனுபவிக்கைக்கு உறுப்பாகச் சரீரத்தைத் தந்தாயானாய் நீ; அதுதானே எனக்கு இழவுக்கு உடலாயிற்று. [2]இராஜ புத்திரன் தலையில் முடியை வாங்கிச் சும்மாட்டைக்கொண்டு வழியிலே நின்றால், அடி அறியாதார் சுமை எடுத்துக்கொண்டு

---

1. 'சுமடு தந்தாய், எற்றுகின்றனர், அமுதம் கொண்ட மூர்த்தியோ' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'அது நிற்கச் சுமடு தந்தாய்' என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'இராஜபுத்திரன்' என்று தொடங்கி. அடி அறியாதார் – இராஜபுத்திரன் என்ற காரணம் அறியாதார்.

போமாறுபோலேயாயிற்று, பகவானுடைய அனுபவத்துக்கு ஈடாகக் கொடுத்த சரீரம் இந்திரியங்களுக்குப் பணி செய்யும்படியாய்விட்டது. சுமடு - சும்மாடு. சரீரமாகிற சும்மாட்டைத் தந்தாய்.

வன் பரங்கள் எடுத்து - [1]'தகுதி இல்லாத விஷயத்திலே போனேன்' என்றோ நான் இப்போது அஞ்சுகிறது? பொறுக்கலாமளவு சுமை எடுத்ததாகில் நான் சுமவேனோ? வலிய பாரத்தைச் சுமத்தி - கனத்த சுமையைச் சுமத்தி. ஐவர் - அவர்கள்தாம் ஒருவர் இருவராகில் நான் ஆற்றேனோ? திசை திசை வலிதது - இவர்கள் அனைவரும் ஒரு திக்கிலே போக இழுத்தார்களாகில்தான் மெள்ளப் போகேனோ? எற்றுகின்றனர் - உடையவனுகில்லனோ போக்குவிட்டு நலிவது? வலியில்லாதான ஒருவன் தலையிலே மிக்க பாரத்தைச் சுமத்திச் சுற்றும் நின்று தந்தாம் வழியே இழுத்துக்கொண்டுபோகத் தேடுமாறு போலேகாணும் இவையும். முன பரவை கடைந்து அமுதம் கொண்ட [2]மூர்த்தி - கடலை நெருக்கி அதில் அமுதத்தை வாங்கி, வேறு பிரயோஜனங்களை விரும்புகின்றவர்களுக்குங்கூடக் கொடுக்கக்கூடிய பெரிய தோள்களையுடையவனே! [3]என்னுடைய இந்திரியங்களைப் பாற அடித்துப் போகட்டு, கடல் கடைந்த போதை ஒப்பனையோடே கூடின வடிவினைக் காட்ட வல்லையே! (10)

கொண்ட மூர்த்திஓர் மூவ ராய்க்குணங் கள்படைத்தளித்
துக்கெ டுக்குமப்
புண்டரிகக் கொப்பூழ்ப் புனற்பள்ளி அப்ப னுக்கே
தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்
சொல்லா யிரத்துள் இப்பத்தும்
கண்டு பாட வல்லார் வினைபோம் கங்குலும் பகலே.

---

1. 'வன்பரங்கள்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தகுதியில்லாத' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'பொறுக்கலாமளவு' என்று தொடங்கி. சொற்பொருள் அருளிச்செய்கிறார், 'வலிய' என்று தொடங்கி. பாரத்தின் வன்மையை விளக்குகிறார், 'கனத்த' என்று தொடங்கி. 'பாரம்' என்றது, ஐம்புலன்களை.

2. மூர்த்தி - வடிவு. 'மூர்த்தி' என்ற சொல், உபலக்ஷணத்தால் தோள்களைக் குறிக்கிறது.

3. 'எற்றுகின்றனர்' என்றதன் பாவத்தைக் கூட்டி, 'மூர்த்தி' என்றதற்கு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'என்னுடைய' என்று தொடங்கி,

**பொ - ரை:** குணங்களைக் கொண்ட மூர்த்தி மூவராய்ப் படைத்துக் காப்பாற்றி அழிக்கின்ற, அந்தத் திருவுந்தித்தாமரையையுடைய, தண்ணீரிலே திருக்கண்வளர்கின்ற அப்பனுக்குத் தொண்டுபட்டவர்களுக்குத் தொண்டுபட்டவரான ஸ்ரீ சடகோபராலே சொல்லப்பட்ட ஆயிரத்துள் இந்தப் பத்தையும் பொருளைக் கொண்டு பாட வல்லவர்களுடைய வினைகள் எப்பொழுதும் நீங்காநிற்கும்.

**வி - கு:** 'குணங்கள் கொண்ட மூர்த்தி மூவர்' என்க. கெடுத்தல் - அழித்தல். புண்டரிகம் - தாமரை. 'கங்குலும் பகலும் வினை போம்' என்க.

**ஈடு:** முடிவில், [1]'இத்திருவாய்மொழியைக் கற்றவர்கட்கு இந்திரியங்களால் ஆத்துமாவுக்கு வரும் நலிவு போம்,' என்கிறார்.

குணங்கள் கொண்ட மூர்த்தி ஓர் மூவராய் - [2]சத்துவம் முதலான குணங்களுக்குத் தகுதியான வடிவையுடைய மூவராய். [3]குணங்கட்குத் தகுதியான படைத்தல் முதலிய தொழில்கள் அந்த அந்த உருவங்தோறும் நிறைந்திருக்குமன்றோ? [4]பிரமன் சிவன் என்னும் இரண்டு உருவங்களிலும் சீவனுக்குள் அந்தர்யாமியாய் நின்று, விஷ்ணு உருவத்தில் தானே நின்றபடி. படைத்து அளித்துகெடுக்கும் - [5]ரஜோகுணத்தையுடையனைக்கொண்டு படைத்து, தமோ குணத்தையுடையனைக்கொண்டு அழித்து, சத்துவ குணத்தையுடையனைக்கொண்டு இவற்றை அடையக் காத்துக் கொடு நிற்கிறபடி. அப்புண்டரிகக் கொப்பூழ்ப் புனல் பள்ளி அப்பனுக்கு - இவை எல்லாவற்றையும் உண்டாக்குகைக்காக ஏகார்ண

1. *'கண்டு பாட வல்லார், கங்குலும் பகல் வினை போம்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

2. *'சத்துவம் முதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு அவற்றால் மூவராகிய முதற்கடவுளரொடு இயைபுண்டாகலான்' என்பது பரிமேலழகருரை. (திருக்குறள் கடவுள் வாழ்த்து)*

3. *''படைத்து அளித்துக் கெடுக்கும்' என்று பொதுவாகச் சொன்னால், இன்ன தொழிற்கு இன்னார் என்று அறியும்படி யாங்ஙனம்?' என்ன, 'குணங்கட்குத் தகுதியான' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

4. *'தானே மூவர் ஆனானோ?' என்னில், 'பிரமன் சிவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்,*

5. *'குணங்கட்குத் தகுதியான' என்று தொடங்கி மேலே கூறிய வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'ரஜோ குணத்தையுடையனை' என்று தொடங்கி.*

வத்திலே திருக்கண் வளர்ந்தருளினபடியைச் சொல்லுகிறது. [1] உலகம் தோன்றுவதற்குக் காரணமாயிருத்தலின், பிரசித்தமான திருநாபிக் கமலத்தையுடையனுய்க்கொண்டு, படைத்தலில் நோக்குள்ளவனாய் ஏகார்ணவத்திலே திருக்கண்வளர்ந்தருளின உபகாரகனானவனுக்கே. [2] 'அப்புண்டரிகக் கொப்பூழ்' என்கையாலே, பிரமன் சிவன் முதலாயினோர் காரியம் என்னுமிடமும், அவன் காரணன் என்னுமிடமும் சொல்லிற்று. [3] ஒருவனுடைய பிறப்பை அன்றோ சொலல வேண்டுவது? 'பிரமனுடைய ஜ்யேஷ்ட புத்திரனுக்கு, சிறந்தவனுக்கு' என்கிறபடியே, மற்றையோனான சிவனுடைய பிறப்பு, தன்னடையே வரும் அன்றோ? 'நான்முகனை நாராயணன் படைத்தான்' என்றால், மற்றையவன் பிறப்பும் உடனே சொல்லப்படும் அன்றோ? இப்படி வேத வைதிகங்கள் சொல்லாநின்றன அன்றோ?

---

1. 'பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனை'

என்பது, சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை.

'இருபது மந்தரத் தோளும் இலங்கைக் கிறைவன்சென்னி
ஒருபது மந்தரத் தேஅறுத் தோன்அப்பன் உந்திமுன்னாள்
தருபது மம்தர வந்தன நான்முகன் தான்முதலா
வருபது மம்தரம் ஒத்தபல் சீவனும் வையமுமே.'

என்பது திருவேங்கடத்தந்தாதி.

'ஒருநாலு முகத்தவனோடு உலகீன்றாய் என்பர் அதுன்
திருநாபி மலர்ந்ததல்லால் திருவுளத்தில் உணராயால்.'

என்பது, திருவரங்கக் கலம்பகம்.

2. 'நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவன் பயந்த பல்விதழ்த்
தாமரைப் பொகுட்டின்'

என்பது, பெரும்பாணாற்றுப்படை, அடி 402 - 404.

3. ''அப்புண்டரிகக் கொப்பூழ்' என்ற இதனால், பிரமனுடைய பிறப்பினைச் சொன்னால், சிவனுடைய பிறப்பினையும் சொல்ல வேண்டாவோ?' என்ன, 'ஒருவனுடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்; 'ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய' என்பது, சுருதி.

"நான்முகனை நாரா யணன்படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்'

என்பது, நான்முகன் திருவந்தாதி.

தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் - [1] விஷயங்களையும் இந்திரியங்களையும் நினைத்த நெஞ்சாரல் தீர, சேஷத்துவத்தினுடைய எல்லை நிலத்திலே போய் நிற்கிறார்; [2] தாபத்தாலே வருந்தினவன் மடுவிலே தாழ இழியுமாறு போலே. கண்டு பாட வல்லார் - [3] இவருடைய நிலையை நினைத்தால் பாடப் போகாதே அன்றோ? கண்டு - நமக்குத் தஞ்சம் என்று நினைத்து. வினை போம் கங்குலும் பகலே - இரவு பகலில் வினை போம். [4] 'இராப்பகல் மோதுவித்திட்டு' என்ற துயரம் போம். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

'உண்ணிலா ஐவ ருடன்இருத்தி இவ்வுலகில்
எண்ணிலா மாயன் எனைநலிய—எண்ணுகின்றான்'
என்றுநினைந் தோலமிட்ட இன்புகழ்சேர் மாறனெனக்
குன்றிவிடு மேபவக்கங் குல். (61)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. ''தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்' என்று சேஷத்துவத்தின் எல்லையைச் சொல்லுவான் என்?' என்ன, 'விஷயங்களையும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'தாபத்தாலே' என்று தொடங்கி.

3. 'வல்லார்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இவருடைய' என்று தொடங்கி.

4. 'இரவு பகலில் வினையாவது யாது?' என்ன, 'இராப்பகல்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

# இரண்டாந்திருவாய்மொழி—'கங்குலும்'

## முன்னுரை

ஈடு: [1]'உண்ணிலாவிய' என்ற திருவாய்மொழியில், 'நம:' என்ற சொல்லின் பொருள் பல வகையாலும், 'தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்' என்று ததீய சேஷத்துவ பரியந்தமாக உள்ளபடி அநுசந்தித்தாராயற்றது. [2]'உலகமுண்ட பெருவாயா' என்ற திருவாய்மொழியில், பெரியபிராட்டியார் முன்னிலையாகத் திருவேங்கமுடையான் திருவடிகளிலே விழுந்து சரணம் புக்கார்; 'விஷயங்களும் இந்திரியங்களும் நடையாடுகிற சம்சாரத்திலே வைத்த போதே தன் பக்கலினின்றும் நம்மை அகற்றப் பார்த்தானே அன்றோ?' என்று கூப்பிட்டார் 'உண்ணிலாவிய' என்ற திருவாய்மொழியில். [3]பலத்தோடே கூடியுள்ளதாயும், காலதாமதம் இன்றிப் பலிக்கக் கூடியதாயும் இருக்கிற சாதனத்தைப் பற்றின பின்பும் அது பலியாவிட்டால் அவன் தன்னையே இன்னதாய்க்கொண்டு

---

1. 'உண்ணிலாவிய' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து 'உலகமுண்ட பெருவாயா!' என்ற திருவாய்மொழியில் 'புகல் ஒன்று இல்லா அடியேன்' என்கையாலே, திருமந்திரத்தில் பிரணவத்தின் பொருள் சொல்லப்பட்டது; 'உண்ணிலாவிய' என்ற திருவாய்மொழியில், பிரணவத்தின் அடுத்த பதமான 'நம:' என்றதன் பொருள் சொல்லப்பட்டது; இத்திருவாய்மொழியில், அதற்கு அடுத்த பதமான 'நாராயணாய' என்றதன் பொருள் சொல்லப்படுகிறது என்பது. 'நன்று; இத்திருவாய்மொழியில் 'நாராயணாய' என்ற சொல்லின் பொருள் சொல்லப்படுமாறு யாங்ஙனம்?' எனின், 'ஆய' என்ற நான்காம் வேற்றுமையின் பொருள் கைங்கரியமாகையாலும், அந்தக் கைங்கரியந்தான் அநுபவத்தால் உண்டாகும் பிரீதியின் காரியமாதலாலும், அந்த அநுபவந்தான் பிராவண்யத்தின் காரியமாதலாலும், அந்தப் பிராவண்யமே இத்திருவாய்மொழியில் சொல்லப்படுதலால் என்க.

2. இத்திருவாய்மொழிக்குச் சங்கதி அருளிச்செய்வதற்குத் திருவுள்ளம் பற்றி, மேல் இரண்டு திருவாய்மொழிகளிலும் அருளிச்செய்த பொருளை அநுவதிக்கிறார், 'உலகமுண்ட' என்று தொடங்கி.

3. 'ஒரு சாதனத்தைச் செய்தவர்கள் பலம் சித்தியாகுமளவும் ஆறியிருக்குமாறு போலே ஆறியிராமல் கூப்பிடுவான் என்?' என்ன, 'பலத்தோடே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'சித்தசாதனமாகையாலே இரண்டும் இல்லை,' என்றபடி.

கூப்பிடுமத்தனை அன்றோ? [1] 'இப்படிக் கண்ணழிவற்றது பின்னையும் பலியாது ஒழிவான் என்?' என்னில், அது பலியாநிற்க, கிரமப் பிராப்தி பொறுக்கமாட்டாமல் படுகிறார்; [2] ஈஸ்வரனுடைய முற்றறிவிற்கும் அவ்வருகான இவருடைய மிருதுத்தன்மையின் சொரூபம் இருக்கிறபடி. [3] பிராட்டியைப் போலே 'அவ்வாறு செய்தல் அவருக்கு ஒத்ததாகும்' என்று இருக்கமாட்டார், ருசி அளவு இல்லாமையாலே. [4] சம்சாரத்தினுடைய தோஷத்தையும் நினைத்து, எம்பெருமானுடைய குணங்களின் உயர்வையும் நினைத்தால் ஆறி இருக்கப் போகாதே அன்றோ? [5] பகவத் விஷயம் அறியாத சம்சாரிகள் இவர்க்குக் கூட்டு அல்லர்; பகவானுடைய பிரிவு அறிய வேண்டாத நித்தியசூரிகளும் இவர்க்குக் கூட்டு அல்லர்; பிரிவில் நோவுபடுகைக்கு இவர் ஒருவருமே உள்ளார்.

[6] பட்டர், இத்திருவாய்மொழி அருளிச்செய்யும்போதெல்லாம் '**ஆழ்வார்க்கு ஓடுகிற நிலை அறியாதே அவனுடைய உள்ளக்கிடையும் இன்றிக்கே இருக்கிற நாம் என் சொல்லுகிறோம்?**' என்று திருமுடியிலே கையை வைத்துக்கொண்டிருப்பர். [7] அவனும்,

---

1. 'இப்படியிருக்கிற சரணாகதி, பலத்தைத் தாராது ஒழிவான் என்?' என்ற சங்கையை அநுவதித்துப் பரிகரிக்கிறார், 'இப்படி' என்று தொடங்கி.

2. பொறுக்கமாட்டாமைக்குரிய காரணத்தை அருளிச்செய்கிறார், 'ஈஸ்வரனுடைய' என்று தொடங்கி.

3. 'ஆனால், பிராட்டியைப் போன்று தரித்திருக்க ஒண்ணாதோ?' என்ன, 'பிராட்டியைப் போலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'தத் தஸ்ய ஸத்ருஸம்பவேத்' என்பது, ஸ்ரீராமா. சுந். 39 : 30.

4. ருசி அளவு இல்லாமையைக் காரணம் கூறி விவரிக்கிறார், 'சம்சாரத்தினுடைய' என்று தொடங்கி.

5. 'இப்படி, பெருமையாலே நோவுபட்ட இவர்க்கு ஒப்பு ஆவார் இலர்,' என்கிறார், 'பகவத்விஷயம்' என்று தொடங்கி.

6. இப்படி இருக்கிற இவருடைய ஆர்த்தியைக் காட்டுகிற இத்திருவாய்மொழிக்குப் பொருள், கரைமேலே நிற்கிற நம் போன்றார் சொன்னால் சுவை இராது என்பதனை ஆப்த வாக்கியத்தாலே காட்டுகிறார், 'பட்டர்' என்று தொடங்கி.

7. 'நன்று; சர்வேஸ்வரன்தான் இவரை இங்கு வைத்திருப்பதற்குக் கருத்து என்? என்ன, 'அவனும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

'இவர் நமக்கே பரம் என்று அறிவித்தாராகில், நாமும் இவர் காரியம் செய்வதாக அற்ற பின்பு செய்து முடித்ததேயாமன்றோ? இவர் அங்குப் போய் அனுபவிக்கும் அனுபவம் இங்கே இருந்தே குறை அற அனுபவியா நின்றாராகில், 'விரோதி போயிற்றில்லையே' என்று இவர் கொள்ளுகின்ற ஐயமும் போக்குகிறோம்; நான்கு நாள் முற்பாடு பிற்பாடன்றோ? இதில் காரியம் என்?' என்று இருந்தான். 'பிற்பாடு பொறுக்கமாட்டாத இவரை வைக்கப் போருமோ?' என்னில், குழந்தைகளைப் பட்டினி இட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப் போல, 'இவர்தாம் நான்கு நாள்கள் நோவு பட்டாராகில் படுகிறார்; இவருடைய பிரபந்தத்தைக் கொண்டு உலகத்தை வாழ்விப்போம்,' என்றிருந்தான். [1] இவர் ஒரு முகூர்த்த காலம் இருப்பதானது, தன்னாலும் திருத்த ஒண்ணாத சம்சாரம் திருந்தி வாழும்படியாயிருந்தது என்றதற்காக வைத்தான் அவன்; [2] இவர், 'நம்படி அறிந்தானாகில், தனக்குச் சத்தியில் குறை இல்லையாகில், இது பொருந்தாத நம்மை இட்டுக் காரியம் கொள்ள வேணுமோ? இவ்விருப்பில் பொருந்துவார் ஒருவரைத் திருத்திக் காரியங் கொள்ளத் தட்டு என்?' என்றிருந்தார். [3] அவனும், 'அது பொருந்தாதாரைக்கொண்டே காரியம் கொள்ள வேணும்' என்றே அன்றோ இருக்கிறது? [4] தேசிகரைக்கொண்டு

1. 'இவர் இங்கு இருந்தால் உலகம் திருந்துமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவர் ஒரு முகூர்த்த காலம்' என்று தொடங்கி.

2. 'அந்த நிலை அறியும் இவர் விரைவதற்குக் காரணம் என்?' என்ன, 'இவர், நம்படி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். 'இவ்விருப்பில் பொருந்துவார்' என்றது, திருமழிசைப் பிரான் போல்வாரை.

3. 'நன்று; அவனும் இதில் பொருந்துவாரைக்கொண்டு காரியங் கொண்டால் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவனும்' என்று தொடங்கி.

4. அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'தேசிகரை' என்று தொடங்கி. 'தேசிகர்' என்றது, 'சம்சார தோஷத்தையும் பகவானுடைய வைலக்ஷண்யத்தையும் நன்கு அறிந்தவர்கள்' என்றபடி. என்றது, 'சம்சாரிகளைத் திருத்தும்போது சம்சாரத்தை வெறுக்கின்றவர்களைக்கொண்டே காரியம் கொள்ள வேண்டும்; அப்படி இன்றி, அதில் பொருந்துவாரைக் கொண்டு காரியம் கொண்டால் 'தனக்கு ஒன்றும் பிறர்க்கு ஒன்றுமாய் இவன் சொல்லுகிறபடி பாரீர்!' என்றுகொண்டு அவர்கள் திருந்தார்கள் என்பது ஈச்வரனுக்குக் கருத்து' என்றபடி.

காரியம் கொள்ள வேணுமே. [1]செய்த சரணுகதி சடக்கெனப் பலியாதொழிந்தது, பிரஹ்மாஸ்திரம் வாய் மடிந்த மாத்திரம் அன்றே ?

[2]இனித்தான் அவனும், ஸ்ரீ பரதாழ்வான் மாதுல குலத்தினின்றும் வந்து தாயாரை வணங்க, அவள், 'ராஜ்ஜ' என்ற வெம்மை பொறுக்கமாட்டாமல் பெருமாள் திருவடிகளிலே தன் ஆற்றுமையோடே விழுந்து சரணம் புக்கு, 'தேவரீர் மீண்டருள வேணும்' என்ன, பெருமாளும், மீளாமைக்குக் காரணமாயிருப்பன பலவற்றை அவனுக்குச் சொல்லி, 'பிள்ளாய் ! நீ நிர்ப்பந்திக்கக் கடவையல்லே : உன்னைச் சுவதந்திரனுக்கி வார்த்தை சொன்னுர் எதிரே, உன் சொருபத்திற்குத் தகுதியான பாரதந்திரியத்தைப் பெற்று நீ போ,' என்று சொன்னுற்போலே, இவர் விரும்பியது ஒழிய ஏதேனும் ஒன்றனைக் கொடுத்துப் போகட்டுப் போக வல்லான் ஒரு சுவதந்திரன் அல்லனே ? ஆகையாலே, தான் நினைத்த போது காரியம் செய்யக் கடவனுமாய் இருப்பன் அன்றே ? [3]முற்றறிவினனுன சர்வேஶ்வரன் இவர்க்கு ஓடுகிற தசையை அறிந்து, தன்னுடைய வரம்பில் ஆற்றலைக் கொண்டு இவர்க்கு ஒரு பரிகாரம் செய்ய ஒண்ணுதபடி இவருடைய நிலை விசேடம் இருக்கிறபடி.

[4]இவர்தாமும் 'விண்ணுளார் பெருமானேயோ' என்றும், 'முன் பரவை கடைந்து அமுதங்கொண்ட மூர்த்தியோ !' என்றும், 'பல முதல் படைத்தாய் !' என்றும் சொல்லுகிறபடியே, பரத்துவம், அவதாரம், உலகத்திற்குக் காரணனுய் இருக்குந் தன்மை இவற்றைச்

---

1. *'அங்ஙனமாயின், அவன் திருவுள்ளத்தை அறிந்திருக்கும் இவர் கூப்பிடுவான் என் ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'செய்த சரணுகதி' என்று தொடங்கி.*

2. *'பிற்பாடு பொறுக்கமாட்டாத இவரை வைக்கப் போருமோ ?' என்னில், என்று மேலே அருளிச்செய்த சங்கைக்கு வேறும் ஒரு பரிகாரம் அருளிச்செய்கிருர், 'இனித்தான் அவனும்' என்று தொடங்கி. என்றது, 'ஸ்ரீ பரதாழ்வானை வைத்தாற்போலே சுவாதந்திரியத்தாலே வைத்தான்' என்றபடி.*

3. *'ஈஶ்வரனுடைய முற்றறிவிற்கும்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிருர், 'முற்றறிவினனுன' என்று தொடங்கி.*

4. *இதுகாறும் 'உண்ணிலாவிய' என்ற திருவாய்மொழியில் சொல்லப்பட்ட பொருளை அநுவதித்தார் ; அநுவதித்து, இத்திருவாய்மொழிக்கு இயைபு அருளிச்செய்கிருர். 'இவர்தாமும்' என்று தொடங்கி. 'உலகத்திற்குக் காரணனுய் இருக்குந்தன்மை' என்றது, வியூகத்தை.*

சொல்லியன்றோ கூப்பிட்டது ? அவற்றுள், பரத்துவம் வேறு உலகம் ஆகையாலே, 'கிட்டப் பெற்றிலோம்' என்று ஆறியிருக்கலாம்; அவதாரம் வேறு காலமாகையாலே, 'அக்காலத்தில் உதவப் பெற்றிலோம்' என்று ஆறியிருக்கலாம்; உலகத்திற்குக் காரணனுய் இருக்குந்தன்மை, [1]தான் அறிந்து செய்யுமது ஆகையாலே, 'நம்மால் செய்யலாவது இல்லை' என்று கொண்டு ஆறியிருக்கலாம்; அந்த இழவுகள் எல்லாம் தீரும்படி எப்பொழுதும் அண்மையிலிருந்து கொண்டு கோயிலிலே திருக்கண்வளர்ந்தருளுகிற பெரிய பெருமாள் திருவடிகளிலே விழுந்து தாம் விரும்பியவை பெருவிட்டால் தரிக்க ஒண்ணுதே அன்றோ? [2]விஷயம் அண்மையில் இல்லாமலிருத்தல், ஞானத்திலே கொத்தை உண்டாதல் செய்யிலன்றோ தரித்திருக்கலாவது? [3]நீர்மையில் கண்ணழிவுண்டாயாதல், மேன்மையில் கண்ணழிவுண்டாயாதல் இழக்கின்ருர் அன்றே ?

[4]'இப்படி இருக்கச்செய்தேயும் அவன் திருவடிகளிலே தமக்கு நினைத்த பரிமாற்றம் பெருமையாலே தாமான தன்மை போய் ஒரு பிராட்டி நிலையை அடைந்தாராய் அவ்வளவிலும் தமக்கு ஓடுகிற நிலையைத் தாம் அறிந்து கூப்பிடப் பெருமல், திருத்தாயார் கூப்பிடும் படியாய் விழுந்தது. [5]கலவியிலும் பிரிவிலும் பிறக்கும் லாபாலாபங்

1. 'தான் அறிந்து செய்யுமதாகையாலே' என்றது, இவர் அசித்தோடு வேறுபாடில்லாதவராய்க் கிடக்க, ஒரு கால விசேடத்திலே தான் அறிந்து செய்யுமதாகையாலே என்றபடி,

2. தாம் விரும்பினவை இங்குக் கிடையாவிட்டால் தரித்திருக்கப் போகாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிருர், 'விஷயம்' என்று தொடங்கி. 'ஞானத்தில்' என்றது, 'ஈஸ்வரனுடைய ஞானம் சத்தி முதலியவைகளில்' என்றபடி.

3. மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிருர், 'நீர்மையில்' என்று தொடங்கி. 'மேன்மை' என்றது, ஞானம் சத்தி முதலியவைகளால் நிறைந்திருத்தல்.

4. இப்படி, மேன்மை நீர்மைகள் இரண்டும் குறைவற்றிருக்கிற விடத்திலும் விரும்பியவை கிடையாமையாலே வந்த ஆற்ருமையின் கனத்தை அருளிச்செய்கிருர், 'இப்படி இருக்கச்செய்தேயும்' என்று தொடங்கி.

5. 'பிராட்டியின் நிலையும் திருத்தாயார் நிலையும் ஒரே காலத்தில் உண்டாகில், இவருடைய பிராவண்யம் குறையாதோ?' என்கிற சங்கையை அநுவதித்துப் பரிகரிக்கிருர், 'கலவியிலும்' என்று தொடங்கி. என்றது, 'தாயாராயும் பேசலாம்; பேரவாவுக்கும் குறைவில்லை,' என்றபடி.

களாலே தாம் பிராட்டிமார் நிலையையுடையராகிறார்; 'திருத்தாயா ரான நிலை விளைந்தபடி எங்ஙனே? விளைந்ததாகில் இவருடைய காதலுக்குக் குறைவு வாராதோ?' என்ன, கிண்ணகம் பெருகி ஓடாநின்றால் இரு கரையும் ஆறுகளாகப் பெருகிப் போகாநிற்கச் செய்தேயும் கடலிற்புகும் பாகம், குறையாமல் போய்ப் புகுமாறு போலே ஆயிற்று, இவருடைய 'அதனிற்பெரிய என் அவா' என்கிற பேரவாக் குறையாது இருக்கிறபடி. ஆகையாலே, [1] இவர்க்கு எல்லார் பேச்சும் பேசக் குறை இல்லை.

[2] இப்பெண் பிள்ளை மோகித்துக் கிடக்க, இவளைக் கண்டு உறவு முறையார் அடங்கலும் மோகித்துக் கிடக்க; [3] பெருமாளைக் காட்டிலும் இளையபெருமாளுக்குத் தளர்த்தி உண்டாயிருக்கச் செய்தே, பெருமாளுடைய இரட்சணத்துக்காக இளையபெருமாள் உணர்ந்திருக்குமாறு போலே, திருத்தாயாரும் இவளுடைய இரட்சணத்துக்காக உணர்ந்திருந்து, எந்த நிலையிலும் தங்கள் காரியம் தலைக்கட்டும் குடியாகையாலே, பெரிய பெருமாள் திருவடிகளிலே இவளை இட்டு வைத்துக்கொண்டிருந்து, 'இவள் அழுவது, தொழுவது. மோகிப்பது, பிரலாபிப்பது, அடைவு கெடப் பேசுவது, நெடுமூச்சு எறிவது, அதுதானும் மாட்டாது ஒழிவது, தன்னை மறந்திருப்பது, இப்படி அரதி விஞ்சிச் செல்லநின்றது; இவள் திறத்தில் நீர் என் செய்யக் கடவீர்?' என்று கூப்பீடாய்ச் செல்லு கிறது. [4] எல்லா அளவிலும் அவனையே பரிகாரம் கேட்கும் குடியே அன்றோ?

---

1. 'ஞானத்தில் தம் பேச்சு, பிரேமத்தில் பெண் பேச்சு,' 'தேறும் கலங்கி என்றும் தேறியும் தேறாதும் ஸ்வரூபம் குலையாது.' 'பெருக்காறு பலதலைத்துக் கடலை நோக்குமாபோலே நெக்கொசிந்து கரைந்து அலைந்து இடிந்து உடையப் பெருகு காதல் கடல் இடங்கொண்ட கடலை பஹுமுக மாக அவகாஹிக்கும்' என்றும் ஸ்ரீசூக்திகள் இங்கு அநுசந்தேயம். (ஆசார்ய ஹ்ருதயம், துவிதிய பிரகரணம், சூ. 32, 33, 45.)

2. இத்திருவாய்மொழியில் வருகின்ற நாயகி துன்புறும் வகைகளை விரிவாக அருளிச்செய்கிறார், 'இப்பெண் பிள்ளை' என்று தொடங்கி.

3. 'உறவினர் அடங்கலும் மோகித்துக் கிடந்தார்களாகில், திருத் தாயார் உணர்ந்திருக்கும்படி யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார், 'பெருமாளைக்காட்டிலும்' என்று தொடங்கி.

4. 'அவனைக் கேட்பது என்? தாங்களே தீர்த்துக்கொள்ள லாகாதோ?' என்ன, 'எல்லாவளவிலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

**ஆண்டாள்** ஒரு நாள் ஆழ்வானுக்கு, 'பிள்ளைகள் விவாகம் செய்வதற்குத் தக்க பருவத்தை அடைந்தார்கள்: இவ்விடை யாட்டம் ஒன்றும் ஆராயாதிருக்கிறது என்?' என்ன, 'பகவத் குடும்பத்துக்கு என்னை இன்று இருந்து கரையச் சொல்லுகிறயோ? நாளை நான் வாசித்துச் சமையக் கொள்ள, அங்கே வரக் காட்டு,' என்ன, பட்டரையும் சீராமப் பிள்ளையையும் கொடுத்துப் போகவிட, வாசித்துச் சமைந்து பெருமாள் திருவடிகளிலே நிற்க, 'ஒன்று சொல்லுவாய் போலே இருந்தாயே' என்று திருவுள்ளமாக, 'இவர்கள் விவாகம் செய்வதற்குத் தக்க பருவத்தை அடைந்தார்கள் என்னுநின்றார்கள்' என்று விண்ணப்பம் செய்ய, 'எல்லாம் செய்கிறேம்' என்று திருவுள்ளமானர்; பிற்றைநாளே மன்னியைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். **அகளங்க பிரஹ்மராயர்** அடையவளைந்தான் செய்யாநிற்கச்செய்தே மதிள்போக்குகைக்காக இளையாழ்வான் அகத்தை வாங்கப்புக, பட்டர் அதனைக் கேட்டருளி, 'வாரீர் பிள்ளாய்! நீர் செய்கிற மதிள் பெருமாளுக்கு இரட்சகம் என்று இராதே கொள்ளீர்; இங்குக் கிடக்கும் நான்கு குடிகளுங் காணும் பெருமாளுக்குக் காவல்; ஆன பின்பு நீர் செய்கிறவை எல்லாம் அழகிது; இவை எல்லாம் நாம் செய்கிறேம் என்றிராதே, பெருமாள் செய்விக்கிறர் என்று இரீர்; உமக்கு நல்வழி போக உடலாங்காணும்' என்று அருளிச்செய்தார்.

இத்திருத்தாயாரும் எல்லாப் பாரங்களையும் அவன் தலையிலே போகட்டுப் பெண்பிள்ளையைத் திருமணத் தூணுக்குள்ளே போகட்டுப் பற்றிலார் பற்ற நிற்றல் முதலாகிய அவனுடைய குணங்களை விண்ணப்பம் செய்யாநின்றுகொண்டு, ஒரு கால நியதியாதல், ஒருதேச நியதியாதல், அதிகாரி நியதியாதல் இன்றிக்கே எல்லாரும் சென்று பற்றலாம்படி இருக்கிறபடியை நினைத்து, தன் பெண்பிள்ளையினுடைய நிலையைத் திருவுள்ளத்திலே படுத்துகிறள் இத்திருவாய்மொழியாலே.

---

1. மேலதற்கு இரண்டு ஐதிஹ்யங்கள் காட்டுகிறர், 'ஆண்டாள்' என்று தொடங்கியும், 'அகளங்க பிரஹ்மராயர்' என்று தொடங்கியும். 'மன்னி' என்பது முன் பல இடங்களில் வந்திருக்கிறது; இச்சொல், **கன்னி அல்லது பன்னி** என்றிருக்கலாம் என்று நினைக்கிறேன்.

'கன்னி யிவள்பிறர் பன்னி எனதிரு கண்ணின் மணிநிகர் **சன்மனும்' என்பது, வில்லிபாரதம், வேத்திரகீயச்சருக். 44.**

674

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்;
'சங்குசக் கரங்கள்' என்றுகை கூப்பும்;
'தாமரைக் கண்'என்றே தளரும்;
'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு!' என்னும்;
இருநிலம் கைதுழா இருக்கும்;
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறந்து என்செய்கின் றாயே?

பொ - ரை : இரவும் பகலும் தூங்கி அறியாள் ; கண்களினின்றும் பெருகுகிற நீரைக் கைகளால் இறைப்பாள் ; 'சங்கு சக்கரங்கள்' என்று சொல்லிக் கை கூப்பி வணங்குவாள் ; 'தாமரை போன்ற திருக் கண்கள் !' என்றே தளர்வாள் ; 'உன்னைப் பிரிந்து எப்படித் தரித் திருப்பேன் !' என்பாள் ; பெரிய நிலத்தைக் கையால் துழாவிப் பின் அதுவும் செய்யமாட்டாது இருப்பாள் ; சிறந்த கயல்மீன்கள் பாய்ந்து செல்லுகின்ற தண்ணீர் நிறைந்த திருவரங்கத்தில் பள்ளிகொண் டிருப்பவனே ! இவள் சம்பந்தமாக என்ன காரியத்தைச் செய்யப் போகின்றாய் ?

வி - கு : 'இறைக்கும், கைகூப்பும், தளரும். என்னும், இருக்கும்' என்பன, செய்யும் என் முற்றுகள்.

இத்திருவாய்மொழி, **எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.**

ஈடு : முதற்பாட்டு. [1] பேச்சுக்கு நிலம் அன்றிக்கே இருக்கிற இந்தப் பிராட்டியுடைய நிலையைப் பெரிய பெருமாளுக்கு அறிவித்து, 'இவள் திறத்துச் செய்தருள நினைத்திருக்கிறது என் ?' என்கிறாள்.

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள் - [2] இவளை எப்போது கண் துயிலப் பண்ண இருக்கிறீர் ? [3] விரஹிணிகளுக்கு ஓடுகிற

---

1. *திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.*

2. *'தூங்குதற்குரிய இரவும் பகலும் கண்துயிலறியாள்' என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இவளை எப்போது' என்று தொடங்கி.*

3. *'கண் துயில் அறியாள்' என்னுமல், 'கங்குலும் பகலும்' என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'விரஹிணிகளுக்கு' என்று தொடங்கி.*

வியசனம் மாற்றுகைக்காக 'இரவு; பகல்' என்று ஒரு வரம்பு கட்டின இத்தனை அன்றோ? அது இவளுக்குக் காரியமாகிறது இல்லை; [1] இரவில் விஷயலாபத்தாலே போது போக்கவும், பகலில் இந்திரியங்களானவை வேறு விஷயங்களிலே கொடுபுக்கு மூட்டி, 'அப்போது ஆயிற்று, இப்போது ஆயிற்று' என்று காலத்தைக் கழிப்பதற்கு உடலாயிருக்கவும் ஆமன்றோ? [2] 'எங்ஙனே தரிக்கேன் உன்னை விட்டு!' என்று சொல்லுகையாலே, இவளுக்கு அங்ஙன் ஒன்று சொல்லித் தரிக்க ஒண்ணாதே. ஆகையாலே, தனக்கு ஆறியிருத்தற்குக் காரணமாகச் செய்து வைத்த இரவு பகல் என்ற வேறுபாடும் அறிகின்றிலள். [3] பகலும் இரவோடு ஒக்க உறங்கக் கண்டது அன்றோ? 'யாங்ஙனம்?' எனின், 'யௌவனம் குடி புகுந்தால் இரவில் நாயகனுக்கு அலை கொடுக்கையாலே உறக்கம் இல்லை; அந்த இழவுக்கும் எற்றி உறங்குவது பகல் அன்றோ! அதுவும் பெறுகிறது இல்லை' என்றபடி. [4] 'பெருமாள் எப்பொழுதும் உறக்கம் இல்லாதவராய் இருக்கிறார்,' என்கிறபடியே, இவளையும் தன் படி ஆக்கினான். என்றது, [5] 'மேலான ஒப்புமையை அடைகிறான்' என்கிறபடியே, தம்மோடு ஒத்தபடியைக் கொடுத்தபடி. கலவியில் அவன் உறங்க ஒட்டான்; பிரிவில் விரஹநோய் உறங்க ஒட்டாது; ஆகையாலே, இவளுக்கு இரண்டுபடியாலும் உறக்கம் இல்லாமையாலே 'கண் துயில் கொள்ளாள்' என்னாமல், 'கண்

---

1. 'வியசனம் ஆறும் பிரகாரம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இரவில்' என்று தொடங்கி.

2. 'இவளுக்கும் அப்படிப் போது போக்க ஒண்ணாதோ?' என்ன, 'எங்ஙனே தரிக்கேன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

3. ''பகலும் கண்துயில் அறியாள்' என்பது என்? பகலில் உறங்குவது உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பகலும்' என்று தொடங்கி. 'அலை கொடுக்கையாலே' என்றது. 'கலவிக்கு இடம் கொடுக்கையாலே' என்றபடி. 'அலை' என்பது செயலாய், கலவியைச் சொல்லுகிறது.

4. அதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'பெருமாள்' என்று தொடங்கி.

'அநித்ர: ஸததம் ராம:' என்பது, ஸ்ரீராமா. சுந். 36 : 44.

5. 'பரமம் ஸாம்யம் உபைதி' என்பது, முண்டகோபநிடதம்.

**துயில் அறியாள்**' என்கிருள். [1]'இவள் கலந்த அன்று உறங்கிஞலும், இவள் இப்போது படுகிற நோயினை அனுபவித்த திருத்தாயார்க்கு அது ஒன்ருகத் தோற்ருதே!' என்றது, [2]'இந்த நோய்க்குப் பூர்வாங்கமாய் வந்தது ஒன்ருகையாலே அதனை ஒன்ருக நினைக்கின்றிலள்' என்றபடி. [3]என்றும் சிறைக்கூடத்திலே பிறந்து வளர்ந்தாரைப் போலே பிரிந்த நாள்களின் இழவேகாணும் இவள் நெஞ்சிலே பட்டுக்கிடக்கிறது. அறியாள் - [4]உறக்கம் ஒக்க இருக்கச் செய்தே '**கைங்கரிய விரோதி**' என்று கைவிட்டவரைக்காட்டிலும் இவளுக்கு உண்டான வாசியைத் தெரிவிப்பாள், '**அறியாள்**' என்கிருள். முன்பு இல்லையாகிலும் இப்பிறவியில் மெய்ப்பாட்டால் பற்றி விடவேண்டிற்று.

கண்ணநீர் கைகளால் இறைக்கும் - தன் கையாலே கண்ண நீரை இறைக்கப்பாராநின்ருள். [5]இவளுக்கு இந்த அறியாமை எங்கும் ஒக்கத் தொடரப்பெற்றதில்லை! [6]'இந்த ஆற்ருமையில் எப்படியும் நாயகன் வாராது இரான்' என்று பார்த்து, அப்போதாகப் பகை கொண்டாட ஒண்ணுது; முதல் நடை தொடங்கிக் காண

---

1. 'நன்று; நாயகன் உறங்குகிற போதும் இவள் உறங்காளோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'இவள் கலந்த அன்று' என்று தொடங்கி,

2. அதனைக் காரணம் முன்னுக விவரணம் செய்கிருர், 'இந்த நோய்க்கு' என்று தொடங்கி. பூர்வாங்கமாவது, மேலே நடிக்கப் போகிற செயலுக்கு அறிகுறியான ஒரு செயல்.

3. 'ஆனுல், இவள் நெஞ்சில் பட்டுக் கிடக்கிறதுதான் யாது?' என்ன, 'என்றும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். என்றது, 'சிறைக்கூடத்திலே பிறந்து வளர்ந்தவர்கட்குக் கலவி தோன்ருதாற்போலே' என்றபடி.

4. 'அறியாள்' என்றதனுல் இளையபெருமாளைக்காட்டிலும் இவளுக்கு இருக்கும் வேறுபாட்டினைக் காட்டுகிருர், 'உறக்கம்' என்று தொடங்கி. கைவிட்டவர் - இளையபெருமாள். 'முன்பில்லையாகிலும்' என்றது, இளையபெருமாள் திருவனந்தாழ்வானுடைய அவதாரமாதலைத் திருவுள்ளம் பற்றி.

5. 'நாயகன் வரும்' என்கிற தெளிவையும், உறக்கத்தை அறியாமையையும் நினைத்து வியாக்கியாதா ஈடுபடுகிருர், 'இவளுக்கு' என்று தொடங்கி. 'எங்கும் ஒக்க' என்றது, 'நித்திரையில் அறியாமை போன்று, அவன் வரவிலும் அறியரமை தொடரப் பெற்றதில்லை' என்றபடி.

6. கண்ணநீரைக் கைகளால் மாற்றுதற்குக் காரணத்தை அருளிச்செய்கிருர், 'இந்த ஆற்ருமையில்' என்று தொடங்கி. பகை கொண்டாட - நடையாக.

வேணும்' என்று கண்ணநீரை மாற்றப் பாராநின்றாள். [1] 'இது என்ன சாகஸந்தான்! இது, தன்னால் இயலும் என்று தொடங்கினாளே. கடல் கொண்ட கண்ணீர் அன்றோ? [2] கோகுள் இலையைக்கொண்டு கடலை வற்ற இறைப்பதாக நினைப்பாளே! [3] 'தேவரீர் கண்களிலிருந்து சோகத்தால் உண்டான நீர் எதற்காகப் பெருகுகிறது?' என்னும்படி காணும் இருக்கிறது. சங்கு சக்கரங்கள் என்று கை கூப்பும் - [4] கண்ணநீரை மாற்றினால், கண்களாலே காண வந்து தோற்றும் படியை நினையாநின்றாள். [5] 'தவள ஒண்சங்கு சக்கரம்' என்று திவ்விய ஆயுதங்களோடே காண அன்றோ இவள்தான் ஆசைப் பட்டிருப்பது! [6] உகவாத கம்ஸன் முதலாயினோர்களுக்கு அன்றோ

---

1. 'கைகளால் இறைக்கும்' என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இது என்ன' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார், 'இது, தன்னால்' என்று தொடங்கி. 'கடல் கொண்ட' என்பது, திருவிருத்தம், 18. கடல் கொண்ட - கடலோடு ஒத்த.

2. 'கையால் இறைக்கிறது சாஹஸமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கோகுள்' என்று தொடங்கி. கோகுள் - ஒரு வகை மரம்.

3. 'கண்ணநீர் கைகளால் இறைக்கும்' என்பதற்குக் கணக்கில்லாமல் மேலும் மேலும் பெருகிக்கொண்டேயிருப்பதனாலே இறைக்க முடியாது என்று மேலே பொருள் அருளிச்செய்தார். 'கண்ணநீர் போக்கியமாக இருக்க, எதற்காக இறைக்க வேண்டும்?' என்று வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'தேவரீர்' என்று தொடங்கி. 'கிமர்த்தம் தவ நேத்ராப்யாம்' என்பது, ஸ்ரீராமா. சுந். 33 : 4. இது பிராட்டியைப் பார்த்துத் திருவடி கூறியது.

4. 'கண்ணநீர் கைகளால் இறைக்கும்' என்றதன் பின் 'சங்கு சக்கரங்'களைக் கூறுவதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கண்ணநீரை' என்று தொடங்கி.

5. 'தாமரைத் தடங்கண்' என்பது போலே அவயவங்களைக் கூறாமல் திவ்விய ஆயுதங்களைக் கூறியதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'தவள ஒண்சங்கு' என்று தொடங்கி. இது, திருவாய்மொழி, 6. 5 : 1.

6. 'பெரிய பெருமாள் இரண்டு தோளராய் அன்றோ இருக்கிறார்? அவர்க்குச் சங்கு சக்கரங்கள் உண்டோ?' என்ன, 'உகவாத' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'தேநைவ ரூபேண சதுர்ப் புஜேந' என்பது, ஸ்ரீ கீதை, 11. 46.

'கையி னார்சுரி சங்குஅனல் ஆழியர் நீள்வரைபோல்
மெய்யனார் துளப விரையார் கமழ்நீள் முடிஎம்
ஐயனார் அணியரங்கனார் அரவின் அணைமிசை மேய மாயனார்
செய்யவாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே.'

என்பது, அநுசந்தேயம். (அமலனாதிபிரான். 7.)

இரு தோளனாக வேண்டுவது? 'நான்கு தோள்களையுடைய அந்த உருவமாகவே ஆகக் கடவீர்' என்றான் அன்றோ காண ஆசைப் பட்ட அருச்சுனன்? [1]'கூரார் ஆழி வெண்சங்கு ஏந்தி வாராய்' என்னக் கணிசித்து, வலி இல்லாமையாலே தலைக்கட்ட மாட்டாதே, விடாயன் கையை மடுத்துத் தண்ணீரை வேண்டுமாறு போலே, குறையும் அஞ்சலியாலே தலைக்கட்டாநின்றாள்.

தாமரைக்கண் என்றே தளரும் - [2]அவ்வாழ்வார்கள் அளவு வந்து அலை எறிகிற கண்களின் அழகினைச் சொல்லப் புக்கு, நடுவே தளராநின்றாள். என்றது, 'உன் தாமரைக் கண்களால் நோக்காய்' என்று சொல்லப் புக்கு, நடுவே தளராநின்றாள் என்றபடி. [3]'கடையில் செந்நிறம் பொருந்திய கண்களையுடைய ஸ்ரீ ராமபிரானைப் பாராதவளான காரணத்தால் மிக்க துக்கமுடையவளானேன்' என்னுமாறு போலே. 'தளருகிறது என? வேறு ஒன்றாலே போது போக்கினாலோ?' என்பர்களே! உன்னை விட்டு எங்ஙனே தரிக்கேன் என்னும்.-[4] பரத்துவம் வியூகம் விபவம் என்னுமிவற்றில் ஆசைப்பட்டேனாய் ஆறி இருக்கிறேனோ? உறக்கத்தாலே, சூது சதுரங்கத்தாலே போது போக்கலாம் விஷயத்திலேயோ அகப்பட்டது என்னும். [5]'உம்முடைய வைலக்ஷண்யம் நீர் அறிந்தால், நம்மைப் பிரிந்தார் தரிக்க

---

1. சங்கு சக்கரங்களோடே வரவேண்டும் என்னுமல், 'கைகூப்பும்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'கூரார்' என்று தொடங்கி. இது, திருவாய். 6. 9 : 1. கணிசித்து - விரும்பி.

2. 'சங்கு சக்கரங்கள்' என்றதன் பின் 'தாமரைக்கண்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அவ்வாழ்வார்கள்' என்று தொடங்கி. 'உன் தாமரைக் கண்களால்' என்பது, திருவாய். 9. 2 : 1.

3. தாமரைக்கண் என்று தளர்ந்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'கடையில்' என்று தொடங்கி.

'ராமம் ரக்தாந்த நயநம் அபஶ்யந்தீ ஸுதுக்கிதா'

என்பது, ஸ்ரீராமா. சுந். 26 : 37.

4. 'திருவரங்கத்தாய்' என்றதனோடே 'உன்னைவிட்டு' என்றதனைக் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார், 'பரத்துவம்' என்று தொடங்கி. 'தாமரைக்கண்' என்றதனைத் திருவுள்ளம்பற்றி வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'உறக்கத்தாலே' என்று தொடங்கி. என்றது, 'அகப்பட்டது விலக்ஷண விஷயத்திலே அன்றோ என்னும்,' என்றபடி.

5. 'விலக்ஷண விஷயத்திலே அகப்பட்டாளாகில் நம்மை என் செய்யச்சொல்லுகிறாய்?' என்ன, 'உம்முடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

மாட்டார்கள்' என்னுமிடம் நீரே அறிய வேண்டாவோ? [1] உன்னைக் கண்ணாடிப் புறத்திலேயும் கண்டு அறியாயோ? கண்டாயாகில் பிரியாய்; பிரிந்தாயாகில் இவள் பட்டது படுவுதி. 'எங்ஙனே தரிக்கேன்?' என்ற உடனே வரக்காணாமையாலே, இருநிலம் [2] கைதுழா இருக்கும் - பெரிய நிலமானது ஒரு பீங்கானுக்கு உட்பட்ட சந்தனக் குழம்பு பட்டது படாநின்றது.

செங்கயல் - [3] அவ்வூரில் வசிக்கிற திரியக்குகளின் தன்மை இவளுக்கு அரிதாவதே! அவை தம் நிறம் பெற்று வாழ்கின்றன; இவள் நிறம் இழந்தாள். [4] நாரத்தைப் பற்றினது களித்து வாழா நின்றது. நாராயணனைப் பற்றிய இவள் துக்கிப்பதே? செங்கயல் - [5] அழகிய கயல். அக்கயல் தண்ணீரைப் பிரிந்து தரிக்கில் அன்றோ இவள் உன்னை விட்டுத் தரிக்க வல்லது? 'தண்ணீரினின்றும் எடுக்கப்பட்ட மீன்கள் போன்று கணநேரமே பிழைத்திருப்போம்' என்னக்கடவதன்றோ இவளையும்? இவள் திறத்து - [6] 'சரீரங்களைப் பார்க்க வேண்டும் எழுந்தருள வேண்டும்' என்னுமாறு போலே,

---

1. வைலக்ஷண்யம் - கண்ணழகு. 'அது நமக்குத் தெரியுமோ?' என்ன, 'உன்னை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'கண்டால் என்செய்வோம்?' என்ன, 'கண்டாயாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கண்டாயாகில் - கண்ணாடிப்புறத்தில் கண்டாயாகில். பிரியாய் - கண்ணாடியைப் பிரியாய் என்றபடி.

2. கைதுழா இருக்கும் - கையாலே துழாவி, பின் அச்செயலுக்கும் சக்தையன்றிக்கே வாளா இருக்கும்.

3. 'செங்கயல்' என்று, கயலினுடைய நிறத்தைச் சொல்லுகிற வளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'அவ்வூரில்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'அவைதம் நிறம்' என்று தொடங்கி.

4. 'பாய் நீர்' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'நாரத்தை' என்று தொடங்கி. நாரம் - தண்ணீர்.

5. 'செங்கயல்' என்றதற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'அழகிய கயல்' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'தண்ணீரினின்றும்' என்று தொடங்கி.

'ஜலாத் மத்ஸ்யா விவோத்த்ருதௌ'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 53 : 31. இது பெருமாளை நோக்கி இளைய பெருமாள் கூறியது.

6. இவள் ஆற்றாமை இன்னபடிப்பட்டது என்னாமல், 'இவள் திறத்து' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'சரீரங்களை' என்று தொடங்கி. 'ஏஹி பஶ்ய ஶரீராணி' என்பது, ஸ்ரீராமா. ஆரண்ய. 6 : 16. இது பெருமாளைச் சரணாகதி அடைந்த முனிவர் கூற்று.

இவள்படி பேச்சுக்கு நிலம் அல்லாமையாலே காட்டுகிருள். என்றது, 'இராக்கதர்கள் தின்ற உடம்பைக் காட்டினுற்போலே, விரஹம் தின்ற உடம்பைக் காட்டுகிருள்' என்றபடி. என் செய்கின்ருயே - இவள் திறம் செய்யப் பார்த்தது என்? [1] உம்முடைய ஊரில இருககும் பொருள்கள் பெற்றதும் பெற வேண்டாவோ, உம்மை ஆசைப்பட்ட இவள்? (1)

675

என்செய்கின் ருய்?என் தாமரைக் கண்ணு!
என்னும்கண் ணீர்மல்க இருக்கும்
என்செய்கேன் எறிநீர்த் திருவரங் கத்தாய்!
என்னும்வெவ் வுயிர்த்துயிர்த் துருகும்
முன்செய்த வினையே முகப்படாய் என்னும்
முகில்வண்ணு! தகுவதோ என்னும்
முன்செய்திவ் வுலகம் உண்டுமிழ்ந் தளந்தாய்!
என்கொலோ முடிகின்றது இவட்கே?

பொ - ரை: 'என் தாமரைக்கண்ணு! என்ன செய்ய நினைக்கிருய்?' என்பாள்; கண்களில் நீர் நிறையும்படி இருப்பாள்; 'அலைகள் வீசுகின்ற நீர் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே! என்ன செய்வேன்?' என்பாள்; வெம்மை தோன்றப் பலகாலும் மூச்சு விட்டு உருகுவாள்; 'முன்னே செய்த பாவமே முகம் தோற்ற நில்லாய்' என்பாள்; 'முகில்வண்ணு! தக்கதாமோ?' என்பாள்; 'இந்த உலகங்களை எல்லாம் முன்னே படைத்துப் பின்பு உண்டு உமிழ்ந்து அளந்தவனே! இவளுக்கு முடிகின்றது என்கொலோ?' என்கிருள்.

ஈடு: இரண்டாம் பாட்டு. [2] 'இப்பெண்பிள்ளையினுடைய நிலை என்னுய் விளையக்கடவது?' என்கிருள்.

என் செய்கின்ருய் - [3] ஆற்ருமை மிகமிக அவனைக் கேட்கு மித்தனை அன்ருே? என் தாமரைக் கண்ணு என்னும் -

1. 'என்செய்கின்ருய்' என்கிறவளுடைய மனேபாவத்தை அருளிச் செய்கிருர், 'உம்முடைய' என்று தொடங்கி.

2. 'என்கொலோ முடிகின்றது இவட்கே?' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

3. ''என் செய்கின்ருய்?' என்று தலைமகள் தலைமகனைக் கேட்பது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'ஆற்ருமை' என்று தொடங்கி.

[1] 'ஒரு நீர்ச்சாவியான பயிருக்கு ஒரு பாட்டம் மழை பெய்யக்கடவ தன்றோ?' என்கிறாள். [2] 'தேவனே! அடைந்தவர்க்கு அருள் செய் பவனே! கேசவனே! அருள் புரிவாய்; அச்சுதனே! பார்வையாலே மறுபடியும் என்னைக் காப்பாயாக,' என்னக் கடவதன்றோ? என் தாமரைக் கண்ணா என்னும் - [3] 'தாமரைக் கண் என்றே தளரும்' என்றது; உணருகிற போது கண்களை வாய் வெருவிக்கொண்டா யிற்று உணர்ந்ததும். [4] கிட்டின காலத்தில் 'நானும் என்னுடை மையும் நீ இட்ட வழக்கன்றோ?' என்றது கண்களாலே அன்றோ? அக்கண்களிலே அன்றோ இவள் எழுதிக்கொடுத்தது? [5] கண்களாலே நோக்கி அணைக்கும் படியை நினைத்து, அந்த பாவனையின் மிகுதி யாலே கலந்து பிரிந்தாற்போலே கண்ணீர் மல்க இருக்கும். என் செய்கேன் எறிநீர்த் திருவரங்கத்தாய் என்னும் - [6] 'என் தாபம் ஆறும் படி அவ்வலை ஏற்றிலே கொண்டுபோய்ப் போகடவல்லீர்கோளே'

1. 'தாமரைக் கண்ணா' என்கிற தலைமகளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'ஒரு நீர்ச்சாவி' என்று தொடங்கி. ஒரு நீர்ச்சாவி-ஒரு நீருக்காகப் பட்டுப் போகிற சாவி.

2. அவன் பார்வை வேண்டப்படுவது என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'தேவனே' என்று தொடங்கி. 'அவலோகந தாநேந பூயோ மாம் பாலய' என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 1. 20 : 16.

3. தளர்வதற்குக் காரணமும், தளர்ச்சி நீங்கித் தெளிவதற்குக் காரணமும் இக்கண்களே என்றுகொண்டு அருளிச்செய்கிறார், 'தாமரைக் கண் என்றே தளரும் என்றது' என்று தொடங்கி. என்றது, மேல் திருப்பாசுரத்தில் 'தளரும்' என்று மோஹத்தைச் சொல்லி, இத்திருப் பாசுரத்தில் 'என் தாமரைக்கண்ணா' என்கையாலே, இது உணர்த்தியில் வார்த்தை என்றபடி. ''தாமரைக்கண் என்றே தளரும்' என்று தளர்த் திக்கு உடலானது இப்போது தாரகமாய்ச் செல்லுகிறது. 'நீர் ஏறுண் டார்க்கு அந்நீரைத் தெளித்து ஆஶ்வஸிப்பிக்குமாபோலே, எனக்கு ஆற்றா மையை விளைத்த கண்களாலே என் ஆர்த்தி தீர்க்கப் பார்த்தாயோ, இல்லையோ? கண்களாலே பிறர்க்கு ஆகாதபடி பண்ண அமையுமோ? ஸதாதர்சனத்தையும் பண்ண வேண்டாவோ?' என்பது இருபத்து நாலா யிரப்படி.

4. 'என்' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கிட்டின காலத்தில்' என்று தொடங்கி.

5. 'என் தாமரைக் கண்ணா' என்றதன் பின் 'கண்ணீர் மல்க இருக்கும்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'கண்களாலே' என்று தொடங்கி.

6. 'எறிநீர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'என் தாபம் ஆறும்படி' என்று தொடங்கி. அலை ஏற்றிலே - எறியும் அலைகளிலே.

என்னும். [1] 'திருப்பொருநலில் தண்ணீர், பிரிந்தார்க்கு நிலாப் போலே சுடுகின்ற நீராய் இராநின்றது போலேகாணும். உன்னைக் கிட்டுகைக்கு நான் செய்வது என்?' என்பாள், '**என்செய்கேன்**' என்கிறாள். [2] அப்போதே கிட்டப் பெறுமையாலே, 'ஆசைப்பட்ட நாம் அழகிதாகப் பெற்றோம்' என்று நெடுமூச்சு எறியாநிற்கும். [3] 'தளிர்களைத் தரித்திருக்கின்ற மரங்களைத் தன் மூச்சுக் காற்றினால் எரிக்கின்றவளைப் போல இருக்கிறவளை' பெருமூச்சாலே தன் பகை அறுக்கப் பாராநின்றாள். பல்லவங்களைத் தரித்தனவா யிருத்தல் இப்போது இவளுக்குப் பகை அன்றோ? ஒரு படிப்பட நின்று நலிகிறபடி அன்றோ அவை? அரக்கியர்கள் உறங்கும்போதும் உண்டே அன்றோ! உருவ இப்படியே நிற்கிற இத்தனை அவை. உருகும்-உருகுகிறபடியே நிற்குமத்தனை. நெடுமூச்சு எறிகைக்குத் தர்மியும் இல்லையோ என்னும்படி உருகும். வெவ்விதாகப் பலகால் நெடுமூச்சு எறிந்து, அந்த வெப்பத்தாலே உருகாநிற்கும்.

முன் செய்த வினையே முகப்படாய் என்னும் - [4] வலிக்கைக்கு விரகு பார்க்கிறபடி. 'நான் முன்பு செய்த பாவமே, என் முன்னே வந்து நிற்க வல்லையே?' என்னும். [5] நீ முகங்காட்டினையாகில், 'தாமரைக்கண்ணா, என் செய்கின்றாய்?' என்று அவனைக் கேளாது ஒழியலாயிற்றே. என்றது, 'நான் செய்த வினையின் பயன் இதுவான

---

1. 'இங்கே திருப்பொருநல் நதி உண்டே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'திருப்பொருநலில்' என்று தொடங்கி.

2. 'என் செய்கேன்' என்றதன் பின் 'வெவ்வுயிர்த்து உயிர்த்து உருகும்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அப்போதே' என்று தொடங்கி.

3. வெப்பத்தோடு நெடுமூச்சு எறிகிறதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'தளிர்களை' என்று தொடங்கி.

'தஹந்தீமிவ நிஃச்வாஸை: வ்ருக்ஷாந் பல்லவ தாரிணை:'

என்பது, ஸ்ரீராமா. சுந். 17 : 29. 'தஹந்தீம்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'பெருமூச்சாலே' என்று தொடங்கி. 'பகை' என்றது, மரங்களை. பல்லவம் - தளிர். 'தாரிண:' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அரக்கியர்கள்' என்று தொடங்கி.

4. 'உருகுகிற சமயத்தில் 'முன் செய்த வினையே முகப்படாய்' என்கிறது என்?' என்ன, 'வலிக்கைக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். பதப்பொருள் அருளிச்செய்கிறார், 'நான் முன்பு' என்று தொடங்கி.

5. 'நான் முன்னே நின்றால் பெறுகிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நீ முகங்காட்டினையாகில்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'நான் செய்த' என்று தொடங்கி.

பின்பு நாம் யாரை வெறுப்பது ?' என்று இருக்கலாயிற்றே என்றபடி. [1] ஸ்ரீ ஜனகராஜன் திருமகளுக்கும் இவர்க்கும் உள்ளது ஒன்றுயிற்று; 'நன்மை அவனுலே' என்றும், 'தீமை தந்தம்மாலே' என்றுமாயிற்று இருப்பது. [2] 'என்னுடைய பாவம் அதிகமாய் இருக்கிறது; சந்தேகம் இல்லை,' என்றுள் அன்றே? முகில் வண்ணு தகுவதோ என்னும் - [3] நான் செய்த பாவம் கிடக்கட்டும், கர்மங்கட்குத் தகுதியாகவோ நீர் காரியம் செய்யுமது? தண்ணீர் என்றும் தரை என்றும் வேறுபாடு பாராமல் மழை பெய்வது போன்று, திருவருள் செய்யும் உம்முடைய ஒளதார்ய குணத்துக்குப் போருமோ ?' என்னும். [4] 'ஒரு வினைக்கு இத்தனை உயிர் உண்டோ? 'நான்காண் இது விளைத்தேன்,' என்று அவ்வடிவைக் கொண்டு வந்து காட்ட வல்லையே' என்னும். [5] இது பத்தியின் காரியமேயாகிலும், பகவானுடைய அனுபவத்திற்கு விரோதி ஆகையாலே, பாவம் என்கிறது. [6] விருப்பம் இல்லாததனைக் கொடுப்பது பாவம் இத்தனை அன்றே? [7] 'தகவிதோ' என்ற பாடத்திற்கு, 'நான்

---

1. 'அவன் வாராததற்குக் காரணம் தன் பாவம் என்று சொன்ன பேர் உளரோ?' என்ன, 'ஸ்ரீ ஜனகராஜன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர்.

2. பிராட்டி அப்படிச் சொன்னதற்குப் பிரமாணம் காட்டுகிறுர், 'என்னுடைய' என்று தொடங்கி.

'மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்ஶய:'

என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 48.

3. 'நீ செய்த கர்மத்தின் பலத்தை நீயே அனுபவிக்க வேண்டாவோ? 'என் செய்கின்றுய்?' என்று என்னைக் கேட்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'நான் செய்த பாவம்' என்று தொடங்கி.

4. 'வினை' என்றதனைக் கடாட்சித்து, 'வண்ணம்' என்பதற்கு, 'வடிவு' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறுர், 'ஒரு வினைக்கு' என்று தொடங்கி.

5. 'இந்த ஆற்றுமைக்கு அடி பத்தி அன்றே? அதனைப் பாவம் என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'இது பத்தியின்' என்று தொடங்கி.

6. 'யாதாயினும் பிரேமத்தின் பலமாய் வந்ததனைப் பாவம் என்னலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'விருப்பமில்லாததனை' என்று தொடங்கி.

7. 'தகவிதோ' என்ற பாடத்திற்கு, 'உம்முடைய தகவுக்கு விஷயம் இது என்று அருளிச்செய்யவேண்டும்,' என்பது பொருள். தகவு இது - தகவுக்கு இது விஷயம். ஓகாரம்: அசைநிலை.

செய்த பாவம் நானே அனுபவிக்க வேணுமாகில் உம்முடைய திருவருளுக்கு விஷயம் இன்னது என்று அருளிச்செய்ய வேண்டும்,' என்னும். [1] 'முன் செய்த வினையே முகப்படாய்' என்கிற இடம், 'கிரியை அத்ருஷ்ட ரூபத்தாலே நின்று பலத்தைக் கொடுக்கும்' என்பார் வார்த்தை. 'முகில்வண்ணு' என்கிற இடம், 'ஒரு பரம சேதனனுடைய திருவருளே பலத்தைக் கொடுப்பது' என்றிருக்கும் வேதாந்திகள் வார்த்தை. [2] 'குற்றவாளர் இராம கோஷ்டிக்கு ஆள் அல்லர்' என்கிற மஹாராஜர் தொடக்கமானுர் வார்த்தை போன்றது மேலே சொன்னது : 'அவர்கள் குற்றவாளரே யாகிலும்' என்ற இராம சித்தாந்தம் போலே 'தகவிதோ' என்கிறது. [4] 'என்னை நமஸ்காரம் செய்' என்றுற்போலே மேலே சொன்னது ; [5] 'துக்கப்படாதே' என்றுற்போலே 'தகவிதோ' என்கிறது.

'முகில் வண்ணு' என்கைக்கு, 'நம் ஔதார்யம் எங்கே பலிக்கக் கண்டு சொல்லுகிறது ?' என்ன, 'இவ்வுலகம் முன் செய்து உண்டு உமிழ்ந்து அளந்தாய் - காரணம் ஒன்றும் இல்லாமலே முன்பு உலகத்தைப் படைத்தல் முதலானவைகளைச் செய்து 'தகவிதோ' என்கைக்கு 'உபகரணம் இல்லாத அன்று இதனை உண்டாக்கி

---

1. 'முன் செய்த வினையே முகப்படாய்' என்று, கர்மங்கள் பலத்தைத் தருவனவாகச் சொன்னவிடம் பூர்வபக்ஷமாய், 'முகில்வண்ணு தகவிதோ?' என்று ஈஶ்வரன் பலத்தைக் கொடுக்கிறவனுகச் சொன்ன விடம் சித்தாந்தமாயிருக்கிறது என்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய் கிருர், 'முன் செய்த வினையே' என்று தொடங்கி. 'அத்ருஷ்ட ரூபத் தாலே பலம் தரும்' என்பார், பூர்வமீமாம்ஸகர். வேதாந்திகளாவார், வியாசர் முதலாயினேர்.

2. இந்தப் பூர்வபக்ஷ சித்தாந்தங்களுக்கு முறையே இரண்டு திருஷ்டாந்தங்கள் காட்டுகிருர், 'குற்றவாளர்' என்று தொடங்கி. என்றது, மஹாராஜர் வார்த்தையைப் பூர்வபக்ஷமாக்கிப் பெருமாள், 'அவர்கள் குற்றவாளரேயாகிலும்' என்றதனைச் சித்தாந்தமாக்கினுற்போலேயும், 'என்னை நமஸ்காரம் செய்' என்ற பத்தியைப் பூர்வபக்ஷமாக்கித் 'துக்கப் படாதே' என்ற பிரபத்தியைச் சித்தாந்தமாக்கினுற்போலேயும், இங்கும், 'முன்செய்த வினையே முகப்படாய்' என்றதனைப் பூர்வபக்ஷமாக்கி, 'முகில் வண்ணு தகவிதோ?' என்றதனைச் சித்தாந்தமாக்கினுர் என்றபடி.

3. 'தோஷோயத்யபி தஸ்ய ஸ்யாத்' என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 3. இங்குக் கம்பராமாயணம் விபீடணன் அடைக்கலப்படலம், 107 முதல் 123 முடியவுள்ள செய்யுள்களைக் காணல் தகும்.

4. 'மாம் நமஸ்குரு' என்பது ஸ்ரீகீதை, 9 : 34.

5. 'மாஶுச:' என்பது ஸ்ரீகீதை, 18 : 66.

6. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிருர், 'முகில் வண்ணு' என்று தொடங்கி.

நோக்கினாய் நீ அன்றோ ?' என்றது, 'கரணகளேபரங்கள் இல்லாமல் கிடந்த இதனை வெறும் உன் கிருபையாலே உண்டாக்கினாய் இத்தனை அன்றோ? உண்டாக்கிவிட்ட அளவேயோ? பிரளய ஆபத்திலே வயிற்றிலே வைத்துப் பாதுகாத்து, உள்ளே கிடந்து நோவுபடாதபடி புறப்பட விட்டு, எல்லை நடந்து மீட்டுக்கொண்டு, எல்லாவிதமான பாதுகாத்தலையும் செய்தாய் அல்லையோ!' என்றபடி. என்கொலோ முடிகின்றது இவட்கே - [1] 'இவள் அளவில் தர்மி லோபமேயோ பலிக்கப் புகுகிறது? [2] நீர் பாதுகாக்கும் பூமிக்கும் இவளுக்கும் ஒரு வாசி உண்டாக நினைத்திருக்கின்றிலீரோ! இவளுடைய பாபமோ, உம்முடைய திருவருளோ பலிக்கப் புகுகிறது? இவள் இடையாட்டத்தில நீர் செய்யப் பார்த்தபடி எங்ஙனே ?' என்னுதல். [3] 'இவளுடைய நிலை என்னாய் விளையக்கடவது?' என்னுதல். (2)

676

*வட்கிலள் இறையும் 'மணிவண்ணா!' என்னும் ;*
*வானமே நோக்குமை யாக்கும் ;*
*'உட்குடை அசுரர் உயிரெலாம் உண்ட*
*ஒருவனே!' என்னும்உள் ளுருகும் ;*
*'கட்கிலீ! உன்னைக் காணுமாறு அருளாய்*
*காகுத்தா! கண்ணனே!' என்னும் ;*
*திட்கொடி மதிள்சூழ் திருவரங் கத்தாய்'*
*இவள்திறத் தென்செய்திட் டாயே?*

பொ - ரை :—'சிறிதும் நாணம் இல்லாதவளாய் இருக்கின்றாள் ; 'மணி வண்ணா!' என்கிறாள் ; ஆகாசத்தையே நோக்குவாள் ; மயங்குவாள் ; 'அச்சத்தை உண்டாக்குகிற அசுரர்களுடைய உயிர்களை உண்ட ஒருவனே!' என்பாள் ; மனம் உருகுவாள் ; 'கண்களால் காண்பதற்கு அரிய நீ, நான் பார்ப்பதற்குத் திருவருள் புரியவேண்டும்,'

1. 'உருகும்' என்றதனைக் கடாட்சித்து, 'கொலோ' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'இவள் அளவில்' என்று தொடங்கி.

2. 'இவட்கு' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'நீர் பாதுகாக்கும்' என்று தொடங்கி.

3. 'முன் செய்த வினை' என்றதனையும் 'முகில்வண்ணா' என்றதனையும் கடாட்சித்து, 'கோலோ' என்றதற்கு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'இவளுடைய' என்று தொடங்கி.

என்பாள் ; 'ஸ்ரீராமபிரானே ! கண்ணபிரானே !' என்பாள் ; 'திண்ணிய கொடிகள் கட்டிய மதில்கள் சூழ்ந்த திருவரங்கத்தாய்! இவள் விஷயத்தில் என்ன செய்தாய் ?' என்கிருள்.

வி - கு : வட்கு - நாணம். இறை - சிறிது. உட்கு - அச்சம் ; 'உருவுட் காகும் புரையுயர் பாகும்,' என்பது தொல்காப்பியம். 'திண்' என்பதனை, மதிட்கு அடைமொழியாக்கலுமாம்.

ஈடு : மூன்ரும் பாட்டு. [1] 'இவள் இந்த நிலையை அடைந்த வளாதற்கு இவள் விஷயத்தில் நீர் செய்தது என் ?' என்கிருள்.

வட்கு இலள் இறையும் - இதற்குச் சீயர் அருளிச்செய்வது, 'இவள் முடிந்தாள்' என்று. [2] நாணத்தைக்கொண்டே அன்ரே பெண்மையை அறிவது? சொரூபத்தைப் பற்றி வரும் குணம் போனல் சொரூபமும் போயிற்ருமத்தனை அன்ரே ? [3] நிரூபகத்தை ஒழிய நிரூபிக்கப்படும் பொருளின் சித்தி இல்லையே ! இவள் நாணம் நீங்கினமைக்கு அறிகுறி என் ?' என்னில், மணிவண்ணு என்னும் - [4] கணவனுடைய திருப்பெயரைச் சொல்லாநின்ருள். [5] பெற்ற தாய் முன்னே வடிவழகினைச் சொல்லாநின்ருள். [6] நான் கேட்டாலும் மறைக்குமதனைத்தான் வெளியிடாநின்ருள். [7] காதலி ஆசைப் படுவது வடிவழகினை அன்ரே? தான் அகப்பட்ட துறையினைச்

---

1. திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிருர்.

2. 'முடிந்தாள்' என்கிறது, என்கொண்டு ?' என்ன, 'நாணத்தை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். அதனை விவரணம் செய்கிருர், 'சொரூபத்தை' என்று தொடங்கி.

3. 'குணம் போனல் சொரூபமும் போயிற்ரும் என்பது யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'நிரூபகத்தை' என்று தொடங்கி.

4. 'மணிவண்ணு' என்றதனை இடுகுறிப்பெயராகக் கொண்டு பாவம் அருளிச்செய்கிருர், 'கணவனுடைய' என்று தொடங்கி.

5. அதனைக் காரணப் பெயராகக் கொண்டு பாவம் அருளிச்செய் கிருர், 'பெற்ற தாய்' என்று தொடங்கி.

6. 'பெற்ற தாய் முன்னே சொல்ல ஒண்ணுதோ ?' என்ன, 'நான் கேட்டாலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

7. 'சொரூப ரூப குணங்கள் இருக்க, வடிவழகினைச் சொல்லுவான் என் ?' என்ன, 'காதலி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிருர். அதனை விவரணம் செய்கிருர், 'தான் அகப்பட்ட' என்று தொடங்கி.

சொல்லாநின்ருள். [1] மெய்யே நினைத்து, மெய்யே சொல்லி, மெய்யே அனுபவிக்கை இவர்க்குத் தன்மையாய்விட்டதே! 'உன் சின்னமும் திருமூர்த்தியும் சிந்தித்து ஏத்திக் கைதொழவே அருள் எனக்கு,' என்று அவன்பாடு இவள் வேண்டிக்கொள்வதும் இதுவே அன்ரே? மணிவண்ணா என்னும் - [2] வடிவழகினைச் சொல்லுதல், சௌலப்பியத்தினைச் சொல்லுதலாகாநின்ருள். [3] 'இதற்கு முன் அறியாத துக்கத்தையுடையவளும் மென்மைக்குணமுடையவளும் ஆழ்ந்த மனமுடையவளுமான பிராட்டி, அந்தத் துக்கத்தாலே அழுது கொண்டு என்னைப்பார்த்து ஒரு வார்த்தையும் சொல்லவில்லை,' என்கிறபடியே, எல்லா நிலைகளிலும் வாய்விடக்கூடியதன்றிக்கே இருப்பது ஒன்றே அன்ரே இது? வானமே நோக்கும் - [4] 'மணிவண்ணா' என்னும் துயர ஒலி கேட்டிருப்பதற்குச் சத்தன் அல்லன, ஒலி வழியே ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்கு வந்து தோன்றினாற் போலே தோன்றியருள்வான் என்று ஆகாயத்தையே பாரா

---

1. 'தான் அகப்பட்ட துறை இதுதான் என்பதற்குக் காரணம் யாது?' என்ன, அதற்குப் பிரமாணங்காட்டுவாராகத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிருர், 'மெய்யே' என்று தொடங்கி. மெய் - உண்மையும், சரீரமும். 'உன் சின்னமும்' என்பது, திருவாய். 7. 1 : 8.

2. 'மணிவண்ணா' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'வடிவழகினை' என்று தொடங்கி. 'வண்ணம்' என்பதற்கு அழகு என்றும், சௌலப்யம் என்றும் பொருள்கொண்டு, இரண்டனையும் அருளிச்செய்த படி. மணிவண்ணன் - மணியினது தன்மையையுடையவன்.

3. 'தான் கேட்டாலும் மறைக்கும்படி வடிவழகு வாய்விடக் கூவுவது அன்ரே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'இதற்கு முன்' என்று தொடங்கி.

'அத்ருஷ்ட பூர்வவ்யஸநா ம்ருதுஶீலா மநஸ்விநீ
தேந துக்கேந ருததீ நைவம் ஆகிஞ்சித் அப்ரவீத்'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 58 : 35. இது, தசரத சக்கரவர்த்தியைப் பார்த்துச் சுமந்திரன் கூறியது. 'இது' என்றது, வடிவழகினை; அன்றி, நாணத்தையுமாம்.

4. ''மணிவண்ணா' என்றதும் வாராதிருக்கவும், வானத்தை நோக்குவது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'மணி வண்ணா' என்று தொடங்கி.

நிற்கும். [1] ‘மிகப் பெரிய ஆபத்தையடைந்தவன்’ என்கிற அதற்கும் அவ்வருகே அன்றோ இவளுடைய நிலை? அங்கு வந்து தோன்றக் காணாமையாலே, மையாக்கும் - மயங்காநின்றாள்; அறிவு கெடாநின்றாள்.

[2] ‘மயங்கத் தீருமோ? விரோதி கனத்திருக்கில்?’ என்ன, உட்குடை அசுரர் உயிர் எல்லாம் உண்ட ஒருவனே என்னும் - [3] ‘நான் வரப்பார்த்தால் அதற்குத் தடை உண்டு அத்தனையல்லது, நீயே வரப் பார்த்தால் தடை செய்வார் உளரோ? [4] எதிரிகள் மிடுக்கருமாய்ப் பலருமாமத்தனை அன்றோ வேண்டுவது அழியச் செய்கைக்கு?’ உட்கு - மிடுக்கு. ‘பிறகு அவனுடைய உள்ளத்தில் இருந்துகொண்டிருக்கிற [5] பகவான், கோபமுடையவராய், அதி சோஷணம் என்ற அந்தக் காற்றினை விழுங்கிவிட்டார்; அந்தக் காற்று நாசமடைந்தது’ என்னுமாறுபோன்று, ‘உண்ட’ என்கிறது. [6] வடிவழகிற்கு ஒப்பு உண்டாகிலும் வீரத்துக்கு ஒப்புச் சொல்ல

---

1. ‘ஆயின், ஸ்ரீ கஜேந்திராழ்வானைப் போலே இவளுக்கு ஆபத்து உண்டோ?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘மிகப்பெரிய’ என்று தொடங்கி.

‘பரமாபத்தம் ஆபந்ந:’ என்பது, விஷ்ணு தர்மம், 68.

2. ‘மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், ‘மயங்க’ என்று தொடங்கி.

3. ‘அசுரர் உயிர் எல்லாம்’ என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘நான் வர’ என்று தொடங்கி.

4. ‘உட்குடை’ என்றும், ‘அசுரர்’ என்றும் சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘எதிரிகள்’ என்று தொடங்கி.

5. ‘போக்கினான்’ என்னாமல், ‘உண்ட’ என்றதற்குப் பிரமாணம் ‘பகவான்’ என்று தொடங்குவது.

‘ஹ்ருதயஸ்த: தத: தஸ்ய தம் வாயும் அதிசோஷணம்
பபௌ ஜநார்த்தந: க்ருத்த: ஸ யயௌ பவந: க்ஷயம்’

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 1. 19 : 24.

‘உண்டற் குரிய வல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே’

என்ற விதி இங்கு நினைத்தல் தகும். (தொல். பொ.)

6. ‘மணிவண்ணா’ என்றதனைக் கடாட்சித்து, பாவம் அருளிச்செய்கிறார், ‘வடிவழகிற்கு’ என்று தொடங்கி.

லாவதில்லையாதலின் 'ஒருவனே' என்கிறது. [1] தான் வீரபத்நி என்னுமிடம் தோன்றச் சொல்லுகிறாள் 'உட்குடை அசுரர் உயிர் எலாம் உண்ட' என்று. [2] 'பெருமாள் யானைபோல எண்ணப்படுகிறார்; நீ அற்ப முயலைப்போல எண்ணப்படுகிறாய்' என்னுமவள் அன்றோ? உள் உருகும், - 'இப்படித் தடைகளையெல்லாம் போக்குமவன் வரக் காணுமையாலே, என்ன குறை உண்டாய் இழக்கிறேன்?' என்று மனம் உருகுவாள். என்றது, 'காலம் நீட்டித்தலுக்குக் காரணம் இன்றிக்கே இருக்க, பலியாது ஒழிந்தவாறே நீர்ப் பண்டம் போலே உருகுவாள்' என்றபடி. [3] 'உருகின மாத்திரத்தில் கண்களால் காண முடியாத பொருள் கண்களுக்கு இலக்கு ஆமோ?' என்பர்களே; [4] 'அருளாலே பெறுவார்க்கு அங்ஙன் ஒரு நியதி உண்டோ?' என்னுமாயிற்று இவள். [5] 'கண்ணால் காண்கிறான் இல்லை' என்கிறது, தாம் தாமே காண இழிவார்க்கு; [6] 'தனது அருளுக்கு இலக்கானவனுக்கு இந்தப் பரமாத்துமா தனது வடிவை நன்கு காட்டுகிறான்,' என்கிறபடியே அவன்தானே காட்டுமன்று அருமை இல்லை. [7] அருச்சுனன் முதலோர்க்கு ஞானக் கண்ணைக்

---

1. 'உட்குடை அசுரர்' என்று, அவர்களுடைய வீரத்தைச் சொல்லி, 'உயிரெலாம் உண்ட' என்று சொன்னதற்கு பாவம், 'தான் வீரபத்நி' என்று தொடங்கும் வாக்கியம்.

2. அப்படி, தன் நாயகனுடைய வீரம் தோன்றச் சொன்னதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பெருமாள்' என்று தொடங்கி.

'த்வம் நீசஶஶவத்'

என்பது, ஸ்ரீராமா. சுந். 22 : 16. இது பிராட்டி கூற்று.

3. 'கட்கிலீ' என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'உருகின மாத்திரத்தில்' என்று தொடங்கி.

4. 'கட்கிலீ' என்றதனால் போதருகின்ற கண்களால் காண முடியாமையைப் பற்றித் தாய்மார் சங்கித்ததனைப் பரிஹரித்துக்கொண்டு, 'உன்னைக்காணுமாறு அருளாய்' என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'அருளாலே' என்று தொடங்கி.

5. 'பரம்பொருளைக் 'கண்ணால் காண்கிறான் இல்லை' என்று இருக்கிறதே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கண்ணால்' என்று தொடங்கி. 'ந சக்ஷுஷா பஶ்யதி' என்பது, தைத். நாரா.

6. 'தஸ்ய ஏஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்' என்பது, உபநிடதம்.

7. 'அப்படி நாம் யாருக்குக் காட்டினோம்?' என்ன, 'அருச்சுனன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

கொடுத்துக் காட்டிற்றிலேயோ? கட்கிலீ - 'கண்ணுக்கு இலீ!' என்றபடி. உன்னைக் காணுமாறு அருளாய் - [1]'உன்னைக் காண அரிது தம் முயற்சியாலே பெற இருப்பாற்கே அன்றோ? உன் அருள் அடியாகக் காண்பார்க்கும் அரிதோ?' 'நன்று; அருளாலே நாம் யார்க்குக் காட்டினோம்?' என்ன, காகுத்தா- [2]'வடிவு உதாரத்தன்மை சீலம் ஆகியவற்றால் அனைவருடைய கண்களையும் மனத்தையுங் கவரக்கூடியவனை' என்கிறபடியே, நகரத்தி லுள்ளவர்களுக்கும், [3]'பெருமாளுடைய உருவத்தின் அமைப்பையும் அழகினையும் சுகுமாரத் தன்மையையும் அழகிய அலங்காரத்தையும் வனத்தில் வசிக்கின்ற முனிவர்கள் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்,' என்கிறபடியே காட்டில் வசிப்பவர்களுக்கும் காட்டிக்கொடு திரிந்திலேயோ?

'ஒருகால் செய்தது கொண்டோ?' என்ன, கண்ணனே-ஆய்ப் பாடிச் செல்வச் சிறுமியர்களுக்கு உன்னைக் காட்டிற்றிலேயோ? [4]'தாஸாம்ஆவிரபூத்-ஒரு நீர்ச்சாவியிலே ஒரு பாட்டம் மழை விழுந் தாற்போலே இருக்கை. ஸ்மயமாநமுகாம்புஜ:- அவர்கள் முன்னே தோன்றின பின்பு வடிவில் பிறந்த செவ்வி. பீதாம்பரதர: ஸ்ரக்வீ- பெண்கள் மனத்தில் மறத்தை மாற்றுவது, பரிவட்ட வாய்ப்பையும் தோள்களில் மாலையையும் காட்டியாயிற்று. ஸாக்ஷாத் மந்மத மந்மத:- [5]காமன் கையிலே உலகம் படுமதனைக் காமன் தான் படும்படி

---

1. மேலே கூறிய இரண்டு வகையான பொருள்களையும் நாயகியின் பாவத்தாலே அருளிச்செய்கிறார், 'உன்னைக் காண' என்று தொடங்கி.

2. 'சந்த்ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியதர்ஸநம்
ரூப ஔதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 3 : 29.

3. 'ரூபம் ஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்
தத்ருஸு: விஸ்மித ஆகாரா ராமஸ்ய வநவாஸிந:

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 1 : 13.

4. பெண்களுக்குக் காட்டியதற்குப் பிரமாணமும், பிரமாண சுலோகத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'தாஸாம்' என்று தொடங்கி.

'தாஸாம் ஆவிரபூத் சௌரி: ஸ்மயமாந முகாம்புஜ:
பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாத் மந்மத மந்மத:'

என்பது, பாகவதம், 10. 32 : 2.

5. 'வாராக வாமன னேயரங் காவட்ட நேமிவல
வாராக வாஉன் வடிவுகண் டால்மன் மதனும்மட
வாராக ஆதரம் செய்வன்என் றால்உய்யும் வண்ணமெங்கே
வாராக வாச முலையேனைப் போலுள்ள மாதருக்கே?'

என்பது, திருவரங்கத்தந்தாதி.

இருக்கை. திண்கொடி மதிள்சூழ் திருவரங்கத்தாய்-'அவதார காலத்தில் உதவிற்றிலீரே!' என்ன, [1] அவதார காலத்தில் உதவப் பெருதார் இழவு தீர்க்க அன்ரே இங்கு வந்து சாய்ந்தருளிற்று? [2] உகந்தார்க்குக் காட்சி கொடுக்கக் கொடி கட்டிக் கொண்டன்ரே கிடக்கிறது? திண்ணிய மதிள் என்னுதல்- திண்ணிய கொடி என்னுதல்: அவிழ்த்துக் கட்டாத கொடி என்கை. 'வருவார் எல்லாரும் வாருங்கோள்' என்று கட்டின கொடி. இவள் திறத்து என் செய்திட்டாயே-[3]இவள் இப்படிப் பிச்சு ஏற என்ன மருந்திட்டாய்? [4]அவன் இவள் அறியாதபடி ஒரு முகத்தாலே மருந்து இடுமே?' [5]'மையல் ஏற்றி மயக்க உன் முகம் மாய மந்திரந் தான்கொலோ!' என்கிறபடியே, தன் முகத்தைக் காட்டுகை அன்ரே அவன் மருந்து இடுகையாவது? இவள் கேட்கிறது என்?' என்னில், அதுவாகில் அதற்கு மாற்றுச் செயலாக, [6]மூன்று உலக இராஜ்யமும் உலக சப்தத்திற்குப் பொருளாகவுள்ள எம்பெருமானும் சீதாபிராட்டியினுடைய ஒரு அமிசத்திற்கும் ஒப்பாகமாட்டார்கள்,' என்று சொல்லப்படுகிற இவளை அவன் முன்னே நிறுத்தி, இவள் பட்டன எல்லாம் அவனைப் படுத்துவாளாக நினைக்கிருள். (3)

---

1. 'திருவரங்கத்தாய்' என்றதனைக் கடாட்சித்து அருளிச்செய்கிருர், 'அவதார காலத்தில்' என்று தொடங்கி.

2. கொடியைச் சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'உகந்தார்க்கு' என்று தொடங்கி.

3. 'இட்டாய்' என்றதற்கு, ஸ்வாரஸ்யமாகப் பொருள் அருளிச்செய்கிருர், 'இவள் இப்படி' என்று தொடங்கி.

4. அவன் செய்தபடியை அருளிச்செய்கிருர், 'அவன் இவள்' என்று தொடங்கி. 'ஒரு முகத்தாலே' என்றது, சிலேடை.

5. அவன் முகம் மருந்து என்பதற்குப் பிரமாணம் காட்டுகிருர், 'மையல் ஏற்றி' என்று. இது, நாய்ச்சியார் திருமொழி, 2 : 4.

6. 'த்ரைலோக்ய ராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத் கலாம்' என்பது, ஸ்ரீராமா. சுந். 16 : 14.

677

இட்டகால் இட்ட [1]கையளாய் இருக்கும்;
எழுந்துலாய் மயங்குங்கை கூப்பும்;
'கட்டமே காதல்' என்றுமூர்ச் சிக்கும்;
'கடல்வண்ணா! கடியைகாண்' என்னும்;
'வட்டவாய் நேமி வலங்கையா!' என்னும்
'வந்திடாய்' என்றென்றே மயங்கும்;
சிட்டனே! செழுநீர்த் திருவரங் கத்தாய்!
இவள் திறத் தென்சிந்தித் தாயே?

பொ-ரை: 'இட்டு வைத்த இடத்தே கிடக்கும்படியான கைகளையும் கால்களையுமுடையவளாய் இருப்பாள்; எழுந்து உலாவுவாள்; மயங்குவாள்; கைகூப்பித் தொழுவாள்; 'அன்பு துன்பத்தையே உண்டாக்குகின்றது,' என்று மூர்ச்சிப்பாள்; 'கடல்வண்ணா! நீ கொடியவன்காண்,' என்பாள்; 'வட்டமான கூர்மை பொருந்திய சக்கரத்தை வலக்கையிலுடையவனே!' என்பாள்; 'வந்திடாய்' என்று என்றே மயங்குவாள்; 'சிஷ்டனே! செழுநீர்த் திருவரங்கத்தாய்! இவள் விஷயமாக நீ சிந்தித்தது யாது?' என்கிறாள்.

வி-கு: கட்டம்-கஷ்டம். உலாய் மயங்கும்-உலாவி மயங்குவாள் எனலுமாம். சிட்டன்-சிஷ்டன்

ஈடு: நான்காம் பாட்டு. [2]'உம்மை ஒழியப் பிழைக்க மாட்டாத இவள் திறத்துச் செய்தருள நினைத்திருக்கிறது என்?' என்கிறாள்.

இட்ட கால் இட்ட கையளாய் இருக்கும்-[3]இவளுக்கு நீர் உடம்பு கொடுக்க வேண்டா; இவள் அவயவங்கள் இவள் அதீனமாகச் செய்ய அமையும். [4]'தோழிகளால் போகடப்பட்டுப் பரந்து

1. 'இட்ட கைகளாய்' என்பதும், 'எழுந்துலா மயங்கும்' என்பதும் பாடம்.

2. 'இவள் திறத்து என் சிந்தித்தாய்?' என்பதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. 'இட்ட கால் இட்ட கையளாயிருக்கும்' என்கிற தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இவளுக்கு' என்று தொடங்கி.

4. யாராலே இட்ட கால், இட்ட கை என்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார், 'தோழிகளால்' என்று தொடங்கி.

'ஸகீபி: ந்யஸ்த ப்ரகீர்ண பரதந்த்ர விபாண்டுர அங்கீ' என்பது.

இருப்பனவும் சுவாதீனம் அற்றனவும் மிக வெளுத்தனவுமான அவயவங்களையுடையவள்' என்கிறபடியே, தோழிமார் போகட்ட இடத்தே கிடக்குமித்தனை. சுவாதீனம் இல்லாமையாலே தோழிமார் இட்டு வைத்த காலும் கையுமாய் இருக்கும். எழுந்து உலாய் மயங்கும்-[1]அவியும் விளக்குக் கிளர்ந்து எரியுமாறு போலே அடி அற்ற எழுச்சியும் அடி அற்ற உலாவுகையுமாய் இராநின்றது; [2]அது கிளர்ந்து எழுந்தவுடனே அவியுமாறு போலே மயங்காநின்றாள். கை கூப்பும்-[3] உணர்த்தியில் தொழுமவள் அல்லள்; மயங்கினால் தொழா திருக்க வல்லள் அல்லள்; [4]சாதனபுத்தியால் தொழுமது இல்லை; ஆற்றாமையாலே வருமது தவிரமாட்டாள். கட்டமே காதல் என்று மூர்ச்சிக்கும்-[5]சாதனபுத்தியால் தொழுதாளாகில் 'கட்டமே காதல்' என்னக் கூடாதன்றோ? பிரிவு நிலையில் நலிவுக்குக் காரணமாகை யாலே அன்பு தண்ணிது என்கிறாள். கடல் வண்ணா கடியைகாண் என்னும்-[6]'கடல் எல்லாப் பொருள்களையும் தன்னுள்ளே அடக்கி, ஒன்றை ஒன்று நலியாதபடி நோக்குமாறு போலே, எல்லாப்பொருள் களையும் காப்பாற்றுகின்ற நீ அருள் இல்லாதவன் ஆனாய்' என்னும். அன்றிக்கே, 'பிரிந்தார்க்குத் தரிக்க ஒண்ணாதபடியான வடிவு படைத்த நீ கொலைஞன் ஆகாநின்றாய்' என்னும் என்னுதல்.

---

1. 'இட்ட கால் இட்ட கையளானால் எழுந்து உலாவக் கூடுமோ?' என்ன, 'அவியும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'மயங்கும்' என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'அது கிளர்ந்து' என்று தொடங்கி.

3. 'மயங்கும் கை கூப்பும்' என்று கூட்டி, மறைமுகத்தானும் விதி முகத்தானும் பாவம் அருளிச்செய்கிறார், 'உணர்த்தியில்' என்று தொடங்கி.

4. சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார், 'சாதன புத்தியால்' என்று தொடங்கி.

5. 'சாதன புத்தியால் தொழுகிறாள் என்றாலோ?' எனின், 'சாதன புத்தியால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. 'வண்ணம்' என்பதற்குப் பாதுகாக்குந் தன்மை என்றும், வடிவழகு என்றும் இரண்டு பொருள் கொண்டு, இரண்டு பொருளிலும் பாவம் அருளிச்செய்கிறார், 'கடல்' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும். 'கொலைஞன்' என்றது, வடிவினை அனுபவிப்பியா திருத்தலை நோக்கி.

வட்டம் வாய் நேமி வலக்கையா என்னும் - [1] ‘சங்கு சக்கரங்கள்’ என்று சொல்லும் நிலையும் போயிற்று, [2] இப்போது கண்களுக்கு விஷயம் அன்றிக்கே இருக்கச்செய்தேயும், அவற்றினுடைய அமைப்பு, புத்தியிற்படிந்ததாய் இருக்கிறபடி. பிடித்த இடம் எங்கும் வாயாக இருத்தலின், ‘வட்டவாய்’ என்கிறது. இதனால், ‘விரோதியைப் போக்கப் பரிகரம் இன்றிக்கே இருக்கிறாய் அன்றோ?’ என்கிறாள் என்றபடி.

வந்திடாய் என்று என்றே மயங்கும் - [3] ஒருகால் ‘வந்திடாய்’ என்றால் ஆறி இருக்க வல்லள் அல்லளே. விடாய்த்தவன் தாகம் தீருந்தனையும் ‘தண்ணீர்’ என்னும் இத்தனையன்றோ? அப்படியே, ‘வந்திடாய், வந்திடாய்’ என்று உருவ அதனையே சொல்லும்; மற்று ஒன்று அறியாள். [4] வாசனையே உபாத்தியாயராகச் சொல்லு மதனை. [5] வெண்கலத்தின் ஒலி போலே சொல்லுக்குச் சொல் ஓய்ந்து வருகின்றதாதலின், ‘**என்றென்றே**’ என்கிறது. [6] சிட்டன்-திருமால். என்றது, ‘பிராட்டி விஷயத்தில் வியாமோகத்தையுடையவன’ என்றபடி. அன்றிக்கே, ‘பிராட்டியைத் தன் பக்கலிலே பித்தாக்கித் துடிக்கப்பண்ணுமவன்’ என்னுதல். அன்றிக்கே, [7] ‘உம்முடைய படி சால அழகிதாய் இருந்தது; உம்மைப்போலே சிஷ்டர்கள்

---

1. ‘நேமி’ என்று ஒன்றனை மட்டும் சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘சங்கு’ என்று தொடங்கி.

2. ‘காணாதிருக்க, ‘வட்டவாய்’ என்று அறியும்படி என்?’ என்ன, ‘இப்போது’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. ‘என்றென்றே’ என்ற அடுக்குத் தொடருக்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘ஒருகால்’ என்று தொடங்கி.

4. ‘மயங்கினால் ‘வந்திடாய்’ என்னக் கூடுமோ?’ என்ன, ‘வாசனையே’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. ‘என்றே’ என்ற ஏகாரத்துக்குத் தாளகதியில் பாவம் அருளிச்செய்கிறார், ‘வெண்கலத்தின்’ என்று தொடங்கி. இரண்டாம் பத்து ஈட்டின் தமிழாக்கம், பக். 92 பார்க்க.

6. சிட்டன்: ஸ்ரீக்கு இஷ்டன் சிட்டன் என்று கொண்டு ‘திருமால்’ என்கிறார்.

7. ‘சிஷ்டன்’ என்று கொண்டு, வெறுப்பிலேயாக்கி, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், ‘உம்முடைய படி’ என்று தொடங்கி. ‘அழகிதாய் இருந்தது’ என்றதனை விவரணம் செய்கிறார், ‘உம்மைப் போலே’ என்று தொடங்கி.

சிலர் அமைந்தார்களே அன்றோ அபலைகள் குடி கெடுக்கைக்கு? அழகிதாகத் திருவருளையே மிகுதியாகவுடையவராய் இருந்தீர்' என்னுதல். என்றது, [1]'பிரஹ்ம ஹத்தியைகளைச் செய்து பூணூலை வெளுக்கவிட்டுக் கையிலே பவித்திரத்தையுமிட்டு ஓத்துச் சொல்லித் திரிவாரைப்போலே இருந்ததே உம்முடைய படி' என்றபடி. செழு நீர்த் திருவரங்கத்தாய் - சிரமத்தைப் போக்கும்படியான நீரையுடைய கோயில். [2]தண்ணீர்ப் பந்தலிலே கொலைஞர் தங்கினதைப் போன்றதேயன்றோ நீர் இவ்வூரில் சாய்ந்ததும்? இவள் திறத்து என் சிந்தித்தாயே - [3]முற்றறிவினனுக்கும், இவளுக்கு ஓடுகிற நிலைக்குப் பரிஹாரம் சிந்திக்க வேணும் என்றிருக்கிறாள்; [4]திருத்தாயார் தெளிவு இருக்கிறபடி. 'அவன் நினைவே காரியமாய்த் தலைக் கட்டுவது' என்று அவனைக் காட்டிக் கேட்கிறாள். [5]'கேசவன், அநுகூலர் விஷயத்தில் மேன்மையைச் சிந்திக்கிறான்,' என்கிற படியே, அனுகூல விஷயத்தில் சிந்திப்பானும் அவனே அன்றோ? [6]இங்ஙனே சிந்தித்தலாயே போமித்தனையோ, அறுதியிடல் முடிவாகக் கடவதன்றோ? (4)

---

1. ''திருவருளையுடையவரல்லர்' என்று வெறுக்கிறது என்? 'திருவருள் புரிதலையுடையோம்' என்பது, நம்முடைய வடிவைப் பார்த்தாலே தெரியாதோ?' என்ன, 'பிரஹ்மஹத்தியைகளை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'அருள் இல்லாதவனாயிருப்பின் பரமபதத்தில் இரேனோ? கோயிலிலே வந்து சாய்ந்த போதே 'அருளுடையன்' என்பதனை எல்லாரும் அறியாரோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தண்ணீர்ப் பந்தலிலே' என்று தொடங்கி.

3. 'என் செய்கின்றாய்?' என்னாமல், 'என் சிந்தித்தாய்?' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'முற்றறிவினனுக்கும்' என்று தொடங்கி.

4. அவனை விளித்து, 'என் சிந்தித்தாய்' என்று கேட்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'திருத்தாயார்' என்று தொடங்கி.

5. 'அவன்தான் அப்படிச் சிந்திப்பவனோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கேசவன்' என்று தொடங்கி.

'ஶ்ரேயோ த்யாயதி கேஶவ:' என்பது.

6. 'சிந்தித்தாயே' என்றதிலேயுள்ள ஏகாரத்துக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'இங்ஙனே' என்று தொடங்கி.

678

*சிந்திக்கும் திசைக்கும் தேறும்கை கூப்பும்;*
*'திருவரங் கத்துள்ளாய்!' என்னும்;*
*வந்திக்கும் ஆங்கே மழைக்கணீர் மல்க*
*'வந்திடாய்' என்றென்றே மயங்கும்;*
*'அந்திப்போ தவுணன் உடலிடந் தானே!*
*அலைகடல் கடைந்தஆர் அமுதே!*
*சந்தித்துன் சரணம் சார்வதே வலித்த*
*தையலை மையல்செய் தானே!*

பொ - ரை: 'அந்தி நேரத்தில் இரணியனது சரீரத்தைப் பிளந்தவனே! அலைகளையுடைய கடலைக் கடைந்த அரிய அமுதே! சேர்ந்து உனது திருவடிகளை அடைவதற்கே உறுதிகொண்ட இந்தப் பெண்ணை மயங்கும்படி செய்தவனே! சிந்திப்பாள்; அறிவு கெடுவாள்; தெளிவாள்; கைகூப்பித் தொழுவாள்; 'திருவரங்கத்தில் உள்ளவனே!' என்பாள்; தலையாலே வணங்குவாள்; அவ்விடத்திலேயே மழை போன்று தண்ணீர் பெருகும்படி 'வந்திடாய்' என்று என்று கூவிக் கொண்டே மயங்குவாள்,' என்கிறாள்.

ஈடு: ஐந்தாம் பாட்டு. [1] இவளுக்கு ஒவ்வொரு கணத்திலும் மாறுபட்டு ஒன்றோடு ஒன்று சேராதே வருகிற நிலை வேறுபாடுகளை அறிவித்து, 'இவளை இப்படிப் படுத்துதல் உம்முடைய நீர்மைக்குப் போருமோ?' என்கிறாள்.

சிந்திக்கும் - உம்முடைய அழகு முதலானவற்றையும் உம்முடைய கலவியையும் நினைக்கும். [2] முன்பு இந்த நினைவும் இன்றிக்கேயாயிற்றிருந்தது; மோகத்தைப் போன்று இதுவும் ஒரு வேறுபாடாய் இருக்கிறபடி. திசைக்கும் - அப்போதே காணப்பெறாமையாலே மோஹிக்கும். தேறும் - ஒரு காரணம் இன்றிக்கே இருக்கத் தெளிகின்றாள். [3] இதுதானும் அச்சத்தைத் தருமதாய் இருக்கிறதாயிற்று; மோஹம் செல்லாநிற்க, விரும்பினதைப் பெற்றாரைப்

---

1. *திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

2. *'இந்த நினைவு ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே வருகின்றதோ?' என்ன, 'முன்பு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இப்போது 'சிந்திக்கும்' என்கையாலே, முன்பு மோஹம் சித்தம்.*

3. *'தேறுகை நல்லது அன்றோ?' என்ன, 'இதுதானும்' என்று தொடங்கி இதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

போலே தெளிதல் அச்சங்கொடுக்கும் அன்றோ ? முடிவு காலத்தில் பிறக்கும் தெளிவிற்கும் அஞ்சவேணுமே? [1] **உய்ந்த பிள்ளை** பாடும் போது, 'கெட்டேன், இவள் 'தேறும்' என்பதே' என்று **சீயர்** அருளிச்செய்வராம். கைகூப்பும் - இது இவளுக்கு இயல்பு. [2] மேலே 'மயங்கும் கைகூப்பும்' என்றது: இங்கே 'தேறும் கைகூப்பும்' என்றது: அல்லாதவை திரிதலாய்ச் செல்லாநிற்க, இது ஒன்றும் நிலையாய்ச் செல்லாநிற்கும்; சொரூபத்தோடு சேர்ந்தது ஆகையாலே. [3] 'எப்பொழுதும் கைகூப்பிக்கொண்டே இருப்பவர்கள்' என்னக் கடவதன்றோ? [4] மோஹத்திலும் உணர்த்தியிலும் சத்தை உண்டே; [5] 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' என்பதன்றோ நிலை நின்ற சொரூபம்? [6] தொடர்ந்திருப்பது ஆனதன்றோ உண்மையானது? திருவரங்கத்துள்ளாய் என்னும் - 'பெருமாளே என்னும்' என்று **சீயர்** பணிப்பர். [7] அவ்வூரில் சம்பந்தம் கொண்டு போலேகாணும் அவரையும் விரும்பிற்று. வந்திகும் - 'திருவரங்கததுள்ளாய்' என்றது, நெஞ்சிலே [8] வடிம்பிட்டு, 'ஒருமுகமே, முறுவலே, ஒருவனையமே' என்று துதிக்கின்றாள் என்னுதல்; அன்றிக்கே, அபிமானம் நீங்கினவளாய்த் திருவடிகளிலே விழுந்து கிடக்கும்'

---

1. *தெளிதல் அச்சத்திற்குக் காரணம் என்பதற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார், 'உய்ந்த பிள்ளை' என்று தொடங்கி.*

2. *இது இவளுக்கு இயல்பானபடியை அருளிச்செய்கிறார், 'மேலே' என்று தொடங்கி. 'இது ஒன்றும்' என்றது, அஞ்சலியை.*

3. *சொரூபத்தோடு சேர்ந்ததாகையாலே அஞ்சலி நித்தியம் என்னுமதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'எப்பொழுதும்' என்று தொடங்கி.*

*'நித்யாஞ்ஜலிபுடா:' என்பது, பாரதம், மோக்ஷதர்மம்.*

4. *இதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'மோஹத்திலும்' என்று தொடங்கி.*

5. *'அதனால் பயன் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'வழுவிலா' என்று தொடங்கி. இது, திருவாய். 3. 3 : 1. என்றது, சத்தையுண்டான போது அதன் காரியமான அஞ்சலியும் நித்தியமாய்ச் செல்லும் என்றபடி.*

6. *மோஹமும் உணர்த்தியும் திரிவுபட்டவை; அஞ்சலி நித்தியமாயுள்ளது என்னுமதனை விவரிக்கிறார், 'தொடர்ந்திருப்பதானது' என்று தொடங்கி.*

7. *''பெருமாளே' என்பது பொருளானால், 'திருவரங்கத்துள்ளாய்' என்ன வேண்டுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவ்வூரில்' என்று தொடங்கி.*

8. *வடிம்பிடுதல் - தூண்டுதல்.*

என்னுதல். ஆங்கே - அந்த நிலையிலேயே. மழைக்கண் நீர் மல்க வந்திடாய் என்று என்றே மயங்கும்-குளிர்ந்த கண்ணீர் மல்க, வந்திடாய் என்று என்று சொல்லி, அச்சொல்லோடே அறிவு கெடும்.

'நினைத்த போதாக வரப்போமோ?' என்ன, அந்திப்போது அவுணன் உடல் இடந்தானே - அவன் வரத்துக்கு மாறுபட்டதாய் இருப்பது ஒரு காலத்திலே, அசுரத்தன்மை வாய்ந்த இரணியனுடைய சரீரத்தைப் பிளந்து போகட்டிலையோ? [1] 'எல்லாப் பொருள்களும் என்னிடமிருந்தே உண்டாயின; எல்லாப்பொருள்களும் நானே' என்று தெளிந்திருப்பார்க்கோ உதவலாவது? அறிவு கெடுவார்க்கு உதவலாகாதோ? [2] தமப்பன் பகையானலோ உதவலாவது? நீர் பகையானல் உதவலாகாதோ? [3] இவ்வளவில் உதவாமைக்கு மேற்படப் பகை இல்லை அன்றோ? [4] அது ஒருகால் சிறுக்கனுக்கு உதவினமை உண்டு; அது தப்பியதே அன்றோ?' எனன, பின்போ நீ உதவாதது? அலைகடல் கடைந்த - வேறு பிரயோஜனங்களைக் கருதுகின்றவர்களுக்கும் அகப்படக் கடலைக் கடைந்து கொடுத்திலையோ? [5] உன்னைக்கொண்டு ஒரு பிரயோஜனம் கொள்வார்க்கோ உதவலாவது? உன்னையே 'பிரயோஜனம்' என்றிருப்பார்க்கு உதவலாகாதோ? ஆர்அமுதே - [6] இவருடைய அமுதத்தைக் கொண்டாயிற்று அவர்கள் கடல் கடைந்து. சந்தித்து

---

1. 'அவுணன் உடல் இடந்தானே' என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'எல்லாப் பொருள்களும்' என்று தொடங்கி. 'மத்த: ஸர்வம் அஹம் ஸர்வம்' என்பது, விஷ்ணு புரா. 1. 19:85

2. 'அவுணன் உடல் இடந்தானே' என்கிறவளுடைய மனோபாவத்தை வேறு ஒரு வகையாலும் அருளிச்செய்கிறார், 'தமப்பன்' என்று தொடங்கி.

3. 'ஆயின், சர்வேஸ்வரன் இவளுக்குப் பகையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவ்வளவில்' என்று தொடங்கி.

4. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'அது ஒருகால்' என்று தொடங்கி.

5. 'அலைகடல் கடைந்த' என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'உன்னைக்கொண்டு' என்று தொடங்கி. 'ஆரமுதே' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'உன்னையே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

6. 'ஆரமுதே' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இவருடைய' என்று தொடங்கி.

உன் சரணம் சார்வதே வலித்த தையலை மையல் செய்தானே - [1]'உன்னைக் கிட்டித் திருவடிகளைச் சாரவேணும் என்று அறுதி யிட்டவளாயிருக்கிற இவளை இப்படி அறிவுகெடுப்பதே! அன்றிககே, உன்னைக் கிட்டிச் சந்நிதியிலே முடியுமித்தனை என்று உயிரைத் தரித்திருக்கிறவளை இப்படி அறிவு கெடுப்பதே!' என்னுதல். [2]'என்னை அழைத்துக்கொண்டு போவதற்குரிய முயற்சியை எத்துணைக் காலத்திற்குள் கேட்பேனோ அத்துணைக்காலம் வரை பிழைத்திருப்பேன்' என்றுகாணும் இருக்கிறது. 'உம்மை ஆசைப் பட்டவளுக்கும் மயக்கமேயோ பலித்துவிட்டது?' என்பாள், 'மையல் செய்தானே' என்கிறாள். (5)

679

'மையல்செய்து என்னை மனங்கவர்ந் தானே!'
என்னும்'மா மாயனே!' என்னும்;
'செய்யவாய் மணியே!' என்னும்'தண் புனல்சூழ்
திருவரங் கத்துள்ளாய்!' என்னும்;
'வெய்யவாள் தண்டு சங்குசக் கரம்வில்
ஏந்தும்விண் ணோர்முதல்!' என்னும்;
பைகொள்பாம் பணையாய்! இவள்திறத் தருளாய்
பாவியேன் செயற்பா லதுவே.

பொ - ரை: 'மயக்கத்தைச் செய்து என்னுடைய மனத்தைக் கொள்ளை கொண்டவனே!' என்பாள்; 'மாமாயனே!' என்பாள்; 'சிவந்த திருவதரத்தையுடைய மாணிக்கமே!' என்பாள்; குளிர்ந்த

---

1. 'உன்சரணம் சார்வதே' என்பதற்கு அருளிச்செய்த இருவகைப் பொருள்களில், முதற்பொருளில் கலவியைக் குறித்தது. இரண்டாவது பொருளில் முடிதலைக் குறித்தது.

2. 'தாவத்த்யஹம் தூத ஜிஜீவிஷேயம்
யாவத் ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய'

என்பது, ஸ்ரீராமா. சுந். 36 : 30.

'திங்கள் ஒன்றின்என் செய்தவம் தீர்ந்ததால்
இங்கு வந்தில னேஎனின் யாணர்நீர்க்
கங்கை யாற்றங் கரைஅடி யேற்குந்தன்
செங்கை யாற்கடன் செய்கென்று செப்புவாய்.'

என்பது கம்பராமாயணம்.

தண்ணீர் சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ளவனே !' என்பாள் ; 'வெம்மை பொருந்திய வாள், தண்டு, சங்கு, சக்கரம், வில் என்னும் ஐந்து ஆயுதங் களையும் தரித்திருக்கின்ற விண்ணோர் முதல்வனே !' என்பாள் ; படத்தைக் கொண்டுள்ள ஆதிசேடனைப் படுக்கையாக வுடையவரே ! இவள் விஷயத்தில் திருவருள் புரிகின்றீர் இலீர்; அது பாவியேனுடைய செயலிடத்தது' என்கிறாள். என்றது, 'இவள் பக்கலிலும் குறை இல்லை; உம்முடைய பக்கலிலும் குறை இல்லை. இருவருமான சேர்த்தி பெற இருக்கிற என் பாபமன்றோ இதற்குக் காரணம் ?' என்றபடியாம்.

வி - கு : மூன்றாம் அடியில், பஞ்சாயுதங்கள் கூறப்பட்டிருக் கின்றன.

ஈடு : ஆறாம் பாட்டு. [1] 'இவள் இவ்வளவு ஆபத்தை அடைந் தவளாயிருக்க, இவள் துயரத்தைத் தீர்தது அருளாதொழிகைக்குக் காரணம் என்னுடைய பாபமே' என்கிறாள.

மையல் செய்து என்னை மனம் கவர்ந்தானே என்னும் - [2] உணர்த்தி உண்டாகில் நெஞ்சு இழவாள்காணும். [3] பகைவர்க ளுடைய சமயம் பார்த்திருந்து அவர்கள் கோட்டை கொள்ளு வாரைப் போலே. கடலைத் தரை கண்டான் என்னுமாறு போலே இருத்தலின், 'என்னை' என்கிறது. [4] புழுகூற்றிச் சட்டம் போகடுவாரைப் போலே இருத்தலின், 'மனம் கவர்ந்தான்' என்கிறது. [5] கொன்று கிழிச்சீரை அறுப்பாரைப் போலே இருத்தலின், 'மையல் செய்து மனம் கவர்ந்தான்' என்கிறது. மா மாயனே என்னும் - [6] மையல் செய்த பிரகாரங்கள். என்றது,

---

1. 'பாவியேன் செயற்பாலதுவே' என்றதனைத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மையல் செய்த பின் 'மனம் கவர்ந்தான்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'உணர்த்தி' என்று தொடங்கி.

3. உணர்ச்சியை நீக்கி நெஞ்சினைக் கவர்ந்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'பகைவர்களுடைய' என்று தொடங்கி.

4. சரீரத்தைப் போகட்டுச் சாரமான மனத்தினைக் கவர்ந்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'புழுகூற்றி' என்று தொடங்கி.

5. மயக்கத்தை விளைத்து நெஞ்சினைக் கவர்ந்ததற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'கொன்று' என்று தொடங்கி.

6. மேலுக்கெல்லாம் அவதாரிகை, 'மையல் செய்த பிரகாரங்கள்' என்பது. 'மா மாயன்' என்றது முதல் 'விண்ணோர் முதல்' என்னு மளவும் கடாட்சித்து 'மையல் செய்த பிரகாரங்கள்' என்கிறார்.

[1]'கலக்கிற சமயத்தில் தாழ நின்று கையைக் காலைப் பிடித்த பரிமாற்றங்காணும் இவள் மனத்தில் பட்டுக் கிடக்கிறது' என்றபடி. 'இயல்பாயுள்ள மேன்மை போன்றதன்றே, காதலால் தாழ நின்ற நிலை? கலவிக் காலத்தில் ஆச்சரியமான செயல்களையுடையவனே!' என்னும். செய்ய வாய் - இதுவும் அந்த மாயங்களிலே ஒன்று. தைரியக் குறைவு உண்டாய் 'நான் உன் சரக்கு அன்றோ?' என்று சொல்லுகிற போதை அதரத்தில் பழுப்பு இருக்கிறபடி. [2]'அழகிய முறுவலையுடைய முகத்தாமரையைத் தரித்தவனே' என்னக்கடவ தன்றோ? மணியே - புஷ்பம் மலருகிற போது எங்கும் ஒக்க ஒரு செவ்வி பிறக்குமாறு போலே, புன்முறுவல் செய்யும்போது வடிவிலே எங்கும் ஒக்க ஒரு செவ்வி பிறந்தபடி. தண்புனல் சூழ் திருவரங்கத் துள்ளாய் என்னும் - புன்முறுவலில் உண்டாகும் குளிர்த்தியைப் போலாயிற்று ஊரில் குளிர்த்தியும். அகவாயில் குளிர்த்தி போலே யாயிற்று இவ்வாயில் குளிர்த்தியும்.

வெய்ய வாள் தண்டு சங்கு சக்கரம் வில் ஏந்தும் விண்ணோர் முதல் என்னும் - [3]திவ்ய ஆயுதங்கள் பகைவர்களை அழிப்பதற்கு உடலாக இருக்குமாறு போலே காதலிகளை அழிக்கைக்கும் உடலாக இருக்குமன்றோ உகப்பாரையும் உகவாதாரையும் ஒக்கத் தோற் பிக்குமவை? [4]முன்னே கைகண்டு வைக்கிறவை அன்றோ? காணவே பகைவர்கள் மண்ணுண்ணும்படியான திவ்ய ஆயுதங்களைத் தரித்திருக்கிற நீ என் விரோதிகளைப் போக்கி முகங்காட்டாது

---

1. 'மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய'

என்பது, இலக்கணம். (தொல். பொருள்.)

2. 'புன்முறுவல் செய்யும் போது உண்டாகிற சிவப்பு' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'அழகிய' என்று தொடங்கி. 'ஸவிலாஸ ஸ்மிதாதாரம்' என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 5. 17 : 21

3. காதலி திவ்விய ஆயுதங்களைச் சொல்லுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'திவ்ய ஆயுதங்கள்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'உகப்பாரையும்' என்று தொடங்கி. என்றது, 'மேன்மையாலும் அழகாலும் இருவரையும் அழிக்கும்' என்றபடி.

4. 'இவற்றில் ஈடுபடுகைக்கு இவள் இவற்றை அறிந்தபடி யாங்ஙனம்?' என்ன, 'முன்னே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கைகண்டு வைக்கிறவை, அனுபவித்தவை என்பதும், கையிலே கண்டு வைத்தவை என்பதும் பொருள்.

ஒழிவதே ! [1] திவ்விய ஆயுதங்களினுடைய சேர்த்தியால் வந்த அழகினைக் காட்டி நடத்த, அதுவே ஜீவனம் ஆயிற்று அங்நாடு கிடப்பது. [2] இல்லையாகில், அங்கே வினை உண்டாகத் தரித்திருக்கிறான் அன்றோ ? பை கொள் பாம்பு அணையாய் - [3] புன்சிரிப்போடு, திவ்ய ஆயுதங்களோடு, நித்திய விபூதியையுடையனாயிருக்கிற இருப்போடு, திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்தருளினதோடு வாசி அற எல்லாம் உத்தேசியமாக இருக்கிறபடி. [4] பகவானுடைய திருமேனியின் ஸ்பரிசத்தால் உண்டான உவகையாலே மலர்ந்த படங்களையுடையனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவரே ! தனிப்படுக்கையிலே சாய்வதே நீர், இவள் தரைக்கிடை கிடக்க ? இவள் திறத்து அருளாய் - [5] படுக்கையில் சேர்த்தி பெறுவிட்டால், உலகத்தாருக்குச் செய்யும் அருளும் இன்றிக்கே ஒழியவேணுமோ ? இவள் திறத்து - பாடோடிக் கிடக்கிற இவள் திறத்து. அருளாய் - அருள்கொள்வார் தேட்டமான நீர், அருள் பெறில் ஜீவிக்கும் இவளை இப்படித் தரைக்கிடை கிடக்கவிட்டு வைப்பதே ! பாவியேன் - [6] நீர் அருளாதவர் அல்லீர் ; இவள் அது பெறுவிடில் ஜீவிப்பாள் அல்லள் ;

---

1. *திவ்விய ஆயுதங்களைக் கூறிய பின் ' விண்ணோர்முதல் ' என்றதற்கு* **பாவம்** *அருளிச்செய்கிறார், ' திவ்விய ஆயுதங்களினுடைய ' என்று தொடங்கி.*

2. *' அவர்களுடைய ஜீவனத்துக்காகவோ தரித்திருக்கிறான் ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ' இல்லையாகில் ' என்று தொடங்கி.*

3. *காதலி ' மாயன் ' என்பது போன்றனவற்றைச்* **சொல்லாமல்,** *' விண்ணோர் முதல் ' என்று நித்தியவிபூதியிலே இருக்கிற இருப்பைக் கூறியதற்கு* **பாவம்** *அருளிச்செய்கிறார், ' புன்சிரிப்போடு ' என்று தொடங்கி.*

4. *பதங்கட்குப் பொருள் அருளிச்செய்கிறார், ' பகவானுடைய ' என்று தொடங்கி. ' பாம்பணையாய் ' என்று விளித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார், ' தனிப் படுக்கையிலே ' என்று தொடங்கி.*

5. *' அருளாய் ' என்றதற்கு* **பாவம்** *அருளிச்செய்கிறார், ' படுக்கையில் ' என்று தொடங்கி. அருளாய் – அருளுகின்றிலை ; எதிர்மறை.*

6. *' பாவியேன் ' என்றதற்கு* **பாவம்** *அருளிச்செய்கிறார், ' நீர் அருளாதவர் ' என்று தொடங்கி.*

இதற்கு அடி நான் செய்த பாபம் அன்றோ ? [1]'என் பாபமே இந்த விஷயத்தில் காரணம் ஆயிற்று' என்னுமாறு போலே. செயற்பாலது - என்னுடைய செயலிடத்தது அருளாமைக்கு அடி; என்றது, 'இவள் பக்கலிலும் குறை இல்லை; உம்முடைய பக்கலிலும் குறை இல்லை; இருவருமான சேர்த்தியைக் காண இருக்கிற என் பாபம் அன்றோ இதற்குக் காரணம் ?' என்றபடி. (6)

680

'பாலதுன் பங்கள் இன்பங்கள் படைத்தாய்!
பற்றிலார் பற்றநின் றானே!
காலசக் கரத்தாய்! கடலிடங் கொண்ட
கடல்வண்ணா! கண்ணனே!' என்னும்;
'சேல்கொள் தண் புனல்சூழ் திருவரங் கத்தாய்!'
என்னும் 'என் தீர்த்தனே!' என்னும்;
கோலமா மழைக்கண் பனிமல்க இருக்கும்
என்னுடைக் கோமளக் கொழுந்தே.

பொ - ரை : 'என்னுடைய அழகிய கொழுந்து போன்ற பெண்ணானவள், 'பகுதிப்பட்ட துன்பங்களையும் இன்பங்களையும் படைத்தவனே!' என்பாள்; 'பற்று இல்லாத பரம ஞானிகள் பற்றும்படி நின்றவனே!' என்பாள்; 'கால சக்கரத்தையுடையவனே!' என்பாள்; 'திருப்பாற்கடலை இடமாகக்கொண்ட கடல் வண்ணனே!' என்பாள்; 'கண்ணனே!' என்பாள்; 'சேல் மீன்கள் தங்கியிருக்கின்ற குளிர்ந்த நீர் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே!' என்பாள்; 'என்னுடைய தீர்த்தனே!' என்பாள்; அழகிய பெரிய குளிர்ந்த கண்களில் நீர் மிகும்படி இருப்பாள்,' என்கிறாள்.

வி - கு : பால் - பகுதி; இடமுமாம், தீர்த்தன் - பரிசுத்தன்; பாவத்தைத் தீர்க்கின்றவனுமாம். 'தீர்தலும் தீர்த்தலும் விடற்

---

1. இதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'என் பாபமே' என்று தொடங்கி.

'மத்பாபமேவாத்ர நிமித்தம் ஆஸீத்'

என்பது, ஸ்ரீராமா. அயோத். இது, ஸ்ரீ பரதாழ்வான் கூற்று.

'கொன்றேனன் என் தந்தையை மற்றுள் கொலைவாயால்
ஒன்றோ கானத் தண்ணலை உய்த்தேன் உலகாள்வான்
நின்றேன் என்றால் நின்பிழை யுண்டோ பழிஉண்டோ ?
என்றேனுந்தான் என்புகழ் மாயு மிடமுண்டோ ?'

என்பது, கம்பராமாயணம்.

பொருட்டாகும்' என்பது தொல்காப்பியம். கோமளம் – மிருதுத் தன்மையுமாம்.

ஈடு: ஏழாம் பாட்டு. [1]'அவர் அவர்களுடைய அளவுகளை நினைந்து, பொறுக்கும் அளவுகளிலே அன்றோ சுக துக்கங்களைச் சுமத்துவது? இப்படி என்னைப் படுத்தலாமோ?' என்றுநின்றாள் என்கிறாள். அன்றிக்கே, அடியார்களை வாழ்விக்கையும் அடியார் அல்லாதாரை நலிகையும் அன்றிக்கே, இப்போது விபரீதமாயிற்றே உம்முடைய படி என்கிறாள்' என்று **பிள்ளான்** பணிக்கும். அன்றிக்கே, 'இக்கோமளக் கொழுந்துக்குக் கைம்முதல் ஒன்று மில்லாதார் பற்றினால் பாதுகாக்கக்கடவ நீர்மையையுடையவன் சந்நிதியிலே இவை எல்லாம் படவேண்டுகிறது, என்னுடைய சம்பந்தம் என்று எண்ணுகிறாள்' என்னுதல்.

பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய் - இடம் அறிந்து சுக துக்கங்களைப் படைத்தவனே! 'பால்' என்றது, இடம் என்றபடி அப்பால் இப்பால் என்றால், அவ்விடம் இவ்விடம் என்றபடியன்றோ? பாலவாக - அந்த இடத்தே அந்த இடத்தேயாக. [2]உம்மைப் பிரிந்தார் எல்லாருமனுபவிக்கும் துக்கத்தை இவள் ஒருத்தியுமே அனுபவிக்கப் பார்த்தால் இவளால் பொறுக்கப் போமோ? அன்றிக்கே, அடியார்கள் வாழவும் அடியார் அல்லாதார் கெடும்படியாகவுமன்றோ

---

1. *'பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய்' என்றதற்கு அருளிச்செய்யும் இருவகையான பொருள்களுக்கும் தகுதியாக இரண்டு அவதாரிகையும், 'என்னுடைக் கோமளக் கொழுந்து, கோல மா மழைக் கண் பனி மல்க இருக்கும், பற்றிலார் பற்ற நின்றானே' என்கிற பதங்களிலே நோக்காக ஓர் அவதாரிகையும் ஆக, மூன்று வகையாக அவதாரிகை அருளிச்செய்கிறார். 'அவர் அவர்களுடைய அளவுகளை நினைந்து' என்றது, பொறுக்கக்கூடியவர்களை விசாரித்து என்றபடி. 'இப்போது விபரீதமாயிற்றே, என்றது, அடியாளான இவளைத்துக்கம் அனுபவிப்பிக்கையை நினைத்து.*

2. *'பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய்' என்கிற தலைமகள் வார்த்தையை அனுவதிக்கிற திருத்தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'உம்மைப் பிரிந்தார்' என்று தொடங்கி. ஆக, 'பால' என்று தொடங்கும் தொடருக்கு, 'பொறுக்கத்தக்க இடம் அறிந்து அந்த அந்த இடங்களிலே சுகதுக்கங்களைப் படைத்தவனே' என்பது முதற் பொருள்; 'அடியாரான முறையிலே சுகத்தையும், அடியரல்லாதார் என்ற முறையிலே துக்கத்தையும் அனுபவிக்கப் படைத்தவனே' என்பது இரண்டாவது பொருள்.*

நீ செய்து வைத்தது ? பால் - முறை. [1] பண்டு கட்டின மரியாதையும் இவளுக்கு இல்லையோ ? [2] 'செய்குந் தாவருந் தீமை உன்னடியார்க்குத் தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய் குந்தன் அன்றோ ? [3] 'பால்' என்பதற்கு, பாகம், இயைபு, இடம், நியாயம் என்பன பொருளாம். 'தங்கள் தங்களால் பொறுக்க ஒண்ணாதனவற்றைத் தாங்கள் தாங்களே ஏறிட்டுக்கொள்ளும் போது நம்மால் செய்யலாவது உண்டோ ? நம்பக்கல் குறை இல்லை; பேறு தங்கள் தங்களதானால் தாங்களும் சில செய்யவேணும் என்று அவனுக்குக் கருத்தாக, அதற்கு விடை அருளிச்செய்கிறாள் மேல்: பற்றிலார் பற்ற நின்றானே - [5] 'ஒரு கைம்முதல் இல்லாதார்க்காக அன்றோ இங்கு வந்து சாய்ந்தருளிற்று ? இந்தக் கிடை நித்தியசூரிகளுக்காகவோ ? உம்முடைய பக்கல் பற்று அறுத்துக்கொண்ட ஜயந்தன் போல்வார்க்கும் பற்றாய் இருக்குமவர் அன்றோ நீர் ! 'அந்தப் பெருமாளையே சரணமாக அடைந்தான்' என்றே அன்றோ கூறுகிறது ஸ்ரீராமாயணம் ?

[6] 'அது உண்டானாலும் அதற்கு ஒரு காலம் உண்டே ?' என்ன, காலசக்கரத்தாய் - 'அந்தக் காலசக்கரம் நீ இட்ட வழக்கன்றோ ?

---

1. இரண்டாவது பொருளுக்குச் சேர மனோபாவத்தை அருளிச் செய்கிறார், 'பண்டு கட்டின' என்று தொடங்கி.

2. இரண்டாவது பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'செய் குந்தா' என்று தொடங்கி. இது, திருவாய். 2. 6 : 1.

3. 'பால்' என்பது, பல பொருள் ஒருசொல் என்பதனைக் காட்டு கிறார், 'பால்' என்பதற்கு என்று தொடங்கி.

4. 'பாலதுன்பங்கள் இன்பங்கள் படைத்தாய்' என்பதற்கு அருளிச் செய்த இருவகைப்பொருள்களுக்குத் தகுதியாக, மேலுக்கு இரண்டு வகை யாக அவதாரிகை அருளிச்செய்கிறார், 'தங்கள்' என்று தொடங்கி.

5. மேலே அருளிச்செய்த இரண்டாவது அவதாரிகைக்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒரு கைம்முதல்' என்று தொடங்கி. முதல் அவதாரிகைக்கு உத்தரம் அருளிச்செய்கிறார், 'உம்முடைய பக்கல்' என்று தொடங்கி. ஜயந்தன் சரணாகதி அடைந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அந்தப் பெருமாளையே' என்று தொடங்கி. 'தமேவ ஶரணம் கத:' என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 34. கம்பராமாயணம் சூடாமணிப் படலம் 77 முதல் 82 முடிய உள்ள செய்யுள்களைக் காண்க.

6. 'ஜயந்தன் போல்வார்க்கும்' என்று தொடங்கி, மேலே அருளிச் செய்ததற்குத் தகுதியாகச் சங்கதி அருளிச்செய்கிறார், 'அது உண்டானா லும்' என்று தொடங்கி. அது உண்டானாலும் - குற்றவாளர்க்கும் பற்றா யிருக்குமது உண்டானாலும்.

[1] அடியானுக்காகப் பகலை இரவாக்கினவன் அன்றோ? அன்றிக்கே, [2] தடைகள் உண்டே?' என்ன, 'தடைகளுக்குக் கூற்றுவனை திருவாழி அன்றோ நீ தரித்திருக்கிறது?' என்னுதல். 'பரிகாரம் உண்டானாலும் நான் சேய்மையில் இருப்பவன் அன்றோ?' என்ன, 'அங்ஙனம் சொல்ல ஒண்ணாதே?' என்கிறாள் மேல்: கடல் இடங் கொண்ட கடல் வண்ணா - [3] 'நீ எங்களைக் காலம் பார்த்தன்றோ கிட்டக் கிடக்கிறது? [4] ஒரு கடல் ஒரு கடலிலே சாய்ந்தாற்போலே அணித்தாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்திருக்கிறாய் அன்றோ?' 'ஆயின், அங்கே வரலாகாதோ?' என்ன, [5] அவ்வலையலைக் கேட்க மாட்டாத ஆயர்கட்கும் ஆய்ச்சியர்கட்குமாகக் கிருஷ்ணனாய் வந்து உதவினாய் அன்றோ?' என்கிறாள் மேல்: கண்ணனே என்னும் - [6] 'திருவனந்தாழ்வானாகிற கட்டிலைத் தனக்கு முன்னே சென்று அவதரிக்கும்படி போகவிட்டு மதுரை என்ற நகரத்திற்கு எழுந்

---

1. 'அப்படிக் காலம் நான் இட்ட வழக்காகக் கண்ட இடம் உண்டோ?' என்ன, 'அடியானுக்காக' என்று தொடங்கி, அதற்கு விடை அருளிச்செய்கிறார். வில்லிபாரதம், 14ஆம் போர்ச்சருக்கம், 164 முதல் 173 முடிய உள்ள செய்யுள்களைக் காண்க.

2. 'ஒரு கைம்முதல் இல்லாததற்காக' என்று தொடங்கி மேலே அருளிச்செய்ததற்குத் தகுதியாகச் சங்கதி அருளிச்செய்கிறார், 'தடைகள்' என்று தொடங்கி. 'காலம்' என்ற சொல் காலத்தையும், யமனையும் சொல்லுகிறது. 'காலசக்கர நிர்வாஹகன்' என்பது முதற்பொருள். 'யமனை சக்கரத்தையுடையவன்' என்பது இரண்டாவது பொருள்.

3. 'காலச் சக்கரத்தாய்' என்றதற்கு அருளிச்செய்த இரு வகைப் பொருளில், முதற்பொருளால் பலிதம், அடியார்கள் விரும்புகிற காலமே பாதுகாப்பதற்குக் காலம் என்றாய், 'அப்படி அடியார்கள் விரும்புகிற காலத்தைப் பார்த்திருந்த இடம் உண்டோ?' என்ன, என்னும் சங்கதியைத் திருவுள்ளத்தே கொண்டு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'நீ எங்களை' என்று தொடங்கி.

4. கடல்வண்ணா என்னாமல் 'கடலிடம்கொண்ட' என்று விசேடித்ததற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'ஒரு கடல்' என்று தொடங்கி.

5. 'அலையலை' என்றது, அலை என்று ஒலியாய், அலையலை என்று மிகப் பெரிய ஒலியாய், மிக்க ஒலியையுடைய கடலைக் காட்டுகிறது. 'கேட்க மாட்டாத' என்பது, 'கிட்ட மாட்டாத' என்றிருப்பது நலம்.

6. 'கடலிடம் கொண்டவனே கண்ணனாய் வந்தான்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார்,' 'திருவனந்தாழ்வானாகிற' என்று தொடங்கி.

'ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:
நாக பர்யங்கம் உத்ஸ்ருஜ்யஹ்ரி ஆகதோ மதுராம்புரீம்'

என்பது, பாரதம், ஹரிவம்ஸம். 113 : 62. இடையிலே, நடுவே என்பதும், ஆயர்களிலே என்பதும் பொருள்.

தருளினுர் அன்றே ?' என்கிறபடியே, அந்தக் கிடையை விட்டு இடையிலே வந்து உதவினுய் அன்றே? அது தப்பிற்றே ?' என்ன, 'அந்த அவதாரம் பரத்துவம் என்னும்படி அன்றே கோயிலிலே வந்து சாய்ந்தருளிற்று ?' என்கிருள் மேல் : சேல் கொள் தண் புனல் சூழ் திருவரங்கத்தாய் என்னும் - [1]'தண்ணீரினின்றும் எடுக்கப் பட்ட மீன்கள் போன்றவர் அன்றே?' என்றது, 'தண்ணீரில் சஞ்சரிக் கின்ற மீன் முதலான பொருள்கள் தண்ணீரைப் பிரிந்து தரிக்கில் அன்றே இவள் உம்மைப் பிரிந்து தரிக்கவல்லளாவது ?' என்றபடி. [2]'அந்த ஊரில் வசிக்கிற உமக்குத் தக்கதாமோ இவளுக்கு முகங் காட்டாது ஒழிகிற இடம் ?' என் [3]தீர்த்தனே என்னும் - 'நீ உபேக்ஷித் தாலும் உன்னை ஒழிய எனக்குச் செல்லாதபடி செய்தவனே !' என்கிருள் என்னுதல். அன்றிக்கே, 'நான் இழிந்தாடும் துறை' என்னுதல்.

கோலம் மா மலர்க்கண் பனிமல்க இருக்கும் - காட்சிக்கு இனி யனவாய்ப் பரந்து, சிரமஹரமான கண்கள் நீர் மல்க இராநின்ருள். கண்ணும் கண்ணநீருமான அழகு, காட்டில் எறித்த நிலா ஆவதே ! [4]இக்கண்ண நீருக்குச் சாதனத்தைச் செய்து பல வேளையிலே இழப் பதே ! என்னுடைக் கோமளக்கொழுந்து - கலக்கப் பொருத மிருதுத் தன்மையையுடையவள் பிரியப் பொறுக்குமோ ? [5]'தசை முறுகினுல் வைத்தியர்கள் முகம் பாராதவாறு போலே, மகள் அவஸ்தையைக்

---

1. 'சேல்கொள் தண்புனல் சூழ்' என்றதற்கு பாவம் அருளிச்செய் கிருர், 'தண்ணீரினின்றும்' என்று தொடங்கி. 'ஜலாத் மத்ஸ்யாவிவ உத்த்ருதௌ' என்பது, ஸ்ரீராமா. அயோத். 53 : 31.

2. 'திருவரங்கத்தாய்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'அந்த ஊரில்' என்று தொடங்கி.

3. 'தீர்த்தனே' என்பதற்கு இரு வகைப்பொருள் : முதற்பொருள், பரிசுத்தத்திலே நோக்கு; இரண்டாவது, சௌலப்யத்திலே நோக்கு. 'அவனுக்கே அற்றுத் தீரச் செய்தவன்' என்பது முதற்பொருள். 'இழிந் தாடும் துறை போன்று சுலபனுனவனே' என்பது இரண்டாவது பொருள்.

4. 'தண்புனல் சூழ் திருவரங்கத்தாய்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'இக்கண்ணநீருக்கு' என்று தொடங்கி அருளிச்செய்கிருர்.

5. மேற்பாசுரங்களில் 'திருவரங்கத்தாய்' என்று அவனை விளித்துக் கூறியதுபோன்று கூருமல், 'இருக்கும் என்னுடைக் கோமளக் கொழுந்து' என்று கூறியதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'தசைமுறுகினுல்' என்று தொடங்கி.

கண்டு தளர்ந்து பெரிய பெருமாள் முகம் பாராமலே வார்த்தை சொல்லுகிருள்' என்று அருளிச்செய்வர் சீயர். கொழுந்து - [1] கொள் கொம்பு தேட்டமான அளவிலே தரையிலே படர விடுவதே. 'நாயகனுடைய கலவிக்குத் தகுந்த என்னுடைய வயதை' என்கிற படியே. [2] இப்பாசுரத்தில் ஒரு தலைக்கட்டு இன்றிக்கே இருக்குமிதற்குக் கருத்து, 'பரிஹரிக்கும் எல்லை கழிந்தாள், நாம் இவர்க்குச் சொல்லுவது என்?' என்று தன்னிலே நோவு படுகிருள் என்று வங்கிப்புரத்து நம்பி பணிக்கும். (7)

861

'கொழுந்துவா னவர்கட்கு!' என்னும்'குன் றேந்திக்
கோநிரை காத்தவன்!' என்னும்;
அழும்தொழும் ஆவி அனலவெவ் வுயிர்க்கும்;
[3] 'அஞ்சன வண்ணனே!' என்னும்;
எழுந்துமேல் நோக்கி இமைப்பிலள் இருக்கும்;
'எங்ஙனே நோக்குகேன்?' என்னும்;
செழுந்தடம் புனல்சூழ் திருவரங் கத்தாய்!
என்செய்கேன் என்திரு மகட்கே?

பொ - ரை: 'நித்தியசூரிகளுக்குக் கொழுந்து போன்றவனே!' என்பாள்; 'மலையைத் தூக்கிப் பிடித்துப் பசுக்கூட்டங்களைக் காத்தவனே!' என்பாள்; அழுவாள்; தொழுவாள்; உயிரும் வேகும்படியாக வெப்பத்தோடு மூச்சு விடுவாள்; 'அஞ்சன வண்ணனே!' என்பாள்;

---

1. 'கொழுந்து' என்றதற்கு பாவமும், பாவத்திற்குப் பிரமாணமும் காட்டுகிருர், 'கொள் கொம்பு' என்று தொடங்கியும், 'நாயகனுடைய' என்று தொடங்கியும்.

'பதி ஸம்யோக ஸுலபம் வய:'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 118 : 34.

2. 'தசை முறுகிஞல்' என்று தொடங்கி அருளிச்செய்த வாக்கியத்தின் பொருளை விவரணம் செய்கிருர், 'இப்பாசுரத்தில்' என்று தொடங்கி. அன்றிக்கே, முடிக்கும் வினை இல்லாமைக்குக் காரணம் அருளிச்செய்கிருராகவுமாம்.

3. 'அஞ்சன வண்ணன்என் ஆருயிர் நாயகன் ஆளாமே
வஞ்சனை யால்அர செய்திய மன்னரும் வந்தாரே'

என்பது, கம்பராமா. குகப்படலம்.

எழுந்து நின்று மேல் நோக்கிக் கண்களை இமைக்காதவளாகி இருப்பாள்; 'எந்த வகையால் உன்னைக் காண்பேன்?' என்பாள்; செழுந் தடம் புனல் சூழ்ந்த திருவரங்கத்தாய்! என் திருமகள் விஷயமாக என்செய்வேன் நான்' என்கிருள்.

ஈடு: எட்டாம் பாட்டு. [1] 'இவளுக்கு மேன்மேலென வருகிற நோவுகள் தீர்க்கைக்கு நான் செய்வது என்?' என்கிருள்.

வானவர்கட்குக் கொழுந்து என்னும் - 'நித்தியசூரிகளுக்கும் [2] தலையானவனே!' என்னும். அன்றிக்கே, அவர்கள் வேராகத் தான் கொழுந்தானவன் என்னுதல். குன்று ஏந்திக் குளிர்மழை காத்தவன் என்னும் - [3] 'வேறு உலகத்தில் பரிமாற்றம் தேட வேணுமோ? பசுக்களுக்கும் பசுவின் தன்மையரான ஆயர்கட்கும் உதவினவன் அன்றோ? மேன்மை இல்லாமல் இழக்கிறேனே, நீர்மை இல்லாமை இழக்கிறேனே?' என்னும். அழும் - [4] மலையைத் தரித்து ஒரு மழையைத் தடுத்த நீர், இந்த மழையைத் தடுத்தல் ஆகாதோ?' என்றது, 'பல விதமாக இடைவிடாமல் துக்கங்களாகிய மழையைப் பெய்கிற என்கிற இதனைத் தடுத்தல் ஆகாதோ?' என்றபடி. அழும் - 'பாலர் செய்யுமதனையும் செய்யும்' என்னுதல். சினேகத்தையுடையவர்கள் செய்யுமதனையும் செய்யும் என்னுதல். தொழும் - [5] 'புகல் அற்றார் செய்வதைச் செய்யும்' என்னுதல். 'வேதாந்த ஞான

1. பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிருர்.

2. மரத்துக்குக் கொழுந்து பிரதானமாகையாலே, 'தலையானவனே' என்கிருர். இரண்டாவது பொருளில், 'அவர்கள் துக்கத்துக்குத் தான் வருந்துகிறவன்' என்பது பொருள்.

3. மேலே உள்ள தொடரையும் கூட்டிக்கொண்டு பாவம் அருளிச் செய்கிருர், 'வேறு உலகத்தில்' என்று தொடங்கி.

4. 'குன்றேந்தி' என்றதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிருர், 'மலையைத் தரித்து' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிருர், 'பல விதமாக' என்று தொடங்கி.

> 'பஹுதா ஸந்தத துக்க வர்ஷிணி'

என்பது, ஸ்தோத்திரரத்நம், 49.

> 'இந்திரன், சோனை மாரி விலக்கி விட்டவர்
> சொரிகண் மாரி விலக்கிலார்'

என்பது, திருவரங்கக் கலம்பகம்.

5. புகல் அற்றார்-பிரபத்தி நிஷ்டர். வேதாந்த ஞானமுடையார் - உபாசகர்.

முடையார் செய்வதைச் செய்யும்' என்னுதல். ஆவி அனல வெவ்வுயிர்க்கும் - தொழுதவுடனே வரக்காணுமையாலே, 'பிரஹ்மாஸ்திரம் வாய் மடிந்தது' என்று, எரிக்க முடியாத ஆத்துமாவானது நெருப்பு மயமாம்படி [1] 'நீண்ட வெம்மையான மூச்சை விட்டும்' என்கிறபடியே, நெடுமூச்சு எறியும்.

அஞ்சன வண்ணனே என்னும் - 'நெருப்பிலே நீரைச் சொரிந்தாற்போலே அக்குளிர்ந்த வடிவைக் கொண்டு வந்து தோற்ற வல்லையே!' என்னும். [2] மேகஶ்யாமம் - மேகம்போல் கருநிறத்தனை' என்னும் வடிவே அன்றோ? 'கைகேயி வார்த்தையால் பிறந்த தாபமடைய ஆறுங்கண்டீர் அவ்வடிவழகிலே விழிக்கப் பெற்றோமாகில்' என்றார்களே அன்றோ? எழுந்து மேல் நோக்கி இமைப்பிலள் இருக்கும் - [3] வடிவினை நினைத்தவாறே தரித்து எழுந்திருந்து, வருவதற்குத் தகுதியுள்ள திக்கினைப் பார்த்து, முதலில் புறப்படும் இடமே தொடங்கிக் காணவேணும்' என்று இமை கொட்டாதே பார்த்துக்கொண்டிருக்கும். எங்ஙனே நோக்குகேன் என்னும் - தான் பார்த்த திக்கில் வரக் காணுமையாலே, 'பின்னுக்கி வந்து கட்டிக்கொள்ளும்' என்று [4] புரிந்து பாராநிற்கும். அன்றிக்கே, [5] வடிவினை நினைத்தவாறே தளர்த்தியிலே எழுந்திருந்து, ஆனைக்கு உதவினாற்போலே வரக்கூடும் என்று மேல் நோக்கிப் பார்த்து, 'முதலில் புறப்படும் இடமே தொடங்கிக் காணவேணும்' என்று

---

1. 'தீர்க்கம் உஷ்ணஞ்ச நிஶ்வஸ்ய'
என்பது, ஸ்ரீராமா. யுத். 117 : 6.

2. 'மேக ஶ்யாமம் மஹா பாஹும்' என்பது, ஸ்ரீராமா. அயோத். 83 : 8. இச்சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'கைகேயி' என்று தொடங்கி.

3. 'மோஹித்தவள் எழுந்திருக்கக் கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'வடிவினை நினைத்தவாறே' என்று தொடங்கி.

4. 'புரிந்து பாராநிற்கும்' என்றது, பின்னே கட்டிக்கொள்ளும் என்று புரிந்து பார்த்து, 'பின்னே இருந்தால் நான் நோக்கும்படி எங்ஙனே?' என்னும் என்றபடி. புரிந்து-விரும்பி.

5. 'எழுந்து மேல் நோக்கி இமைப்பிலள் இருக்கும்' என்றதன் பொருளை அநுவதித்துக்கொண்டு, 'எங்ஙனே நோக்குகேன்?' என்றதற்கு வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'வடிவினை நினைத்தவாறே' என்று தொடங்கி.

இமை கொட்டாதே இருக்கும் என்னலுமாம். அன்றிக்கே [1]பின்னையும் தோற்றக் காணாமையாலே, 'நான் உன்னைக் காணும் விரகு ஏது?' என்னும் என்னுதல். செழுந்தடம் புனல் சூழ் திருவரங்கத்தாய் - அழகியதாய்ப் பெருத்த நீர் சூழ்ந்த கோயிலை இடமாகவுடையவனே! இப்படிச் சிரமத்தைப் போக்கக்கூடிய தேசத்திலே நீர் வந்து சாய்ந்தது இவள் வரவு பார்த்தன்றோ? அத்தலை இத்தலை ஆயிற்றோ? [2]என் செய்கேன் - 'செய்யவேண்டுவன அனைத்தையும் தானே செய்தாள், நான் இனிச் செய்வது என்? அன்றிக்கே, வேறு உபாயங்களால் சாதித்துக்கொள்ளத் தக்கதோ உம்முடைய தரிசனம்?' என்னுதல். என் திருமகட்கே - [3]இவளை இழக்கலாமோ உமக்கு? உம்மை ஒரு வரையும் ஆசைப்பட்ட ஏற்றமன்றோ அவளது? உம்மையும் அவளை யும் சேர ஆசைப்பட்ட ஏற்றமுடையவள் அல்லளோ இவள்? [4]சாக்ஷாத் லக்ஷ்மியோடு ஒக்கச் சொல்லலாம் அன்றோ இவளை! (8)

682

'என்திரு மகள்சேர் மார்பனே!' என்னும்;
'என்னுடை ஆவியே!' என்னும்;
'நின்திரு எயிற்றால் இடந்துநீ கொண்ட
நிலமகள் கேள்வனே!' என்னும்;
'அன்றுரு ஏழும் தழுவிநீ கொண்ட
ஆய்மகள் அன்பனே!' என்னும்;
தென்திரு அரங்கம் கோயில்கொண் டானே!
தெளிகிலேன் முடிவுஇவள் தனக்கே

---

1. 'எங்ஙனே நோக்குகேன்?' என்றதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'பின்னையும்' என்று தொடங்கி. என்றது, பின்னையும் தோற்றக் காணாமையாலே, 'சாதனத்தை அநுஷ்டிக்க வேண்டும்' என்று வாராதிருக்கிறான் என்று பார்த்து, 'நான் உன்னைக் காணும் விரகு ஏது?' என்னும் என்றபடி.

2. 'என்செய்கேன்?' என்றதற்கு இரண்டு கருத்து அருளிச்செய்கிறார்: 'சாதனத்தை அநுஷ்டிக்க வேண்டாவோ?' என்கிற சங்கையிலே இரண்டாவது கருத்தினை அருளிச்செய்கிறார், 'வேறு உபாயங்களால்' என்று தொடங்கி.

3. 'என் திருமகள்' என்றதற்குப் பிராட்டியினின்றும் வேறுபடுத்தி, பாவம் அருளிச்செய்கிறார், 'இவளை' என்று தொடங்கி. அந்த வேறு பாட்டினைக் காட்டுகிறார், 'உம்மை' என்று தொடங்கி.

4. 'திருமகள்' என்றதற்கு பாவம், 'சாக்ஷாத்' என்று தொடங்கும் வாக்கியம்.

பொ—ரை: 'என் திருமகள் சேர்ந்திருக்கின்ற மார்பையுடையவனே!' என்பாள்; 'என்னுடைய உயிரே!' என்பாள்; 'உன்னுடைய அழகிய தந்தத்திறுலே இடந்து எடுத்து உன் காதலுக்குரியவளாகக்கொண்ட பூமிப்பிராட்டிக்குக் கணவனே!' என்பாள்; 'கிருஷ்ணவதாரத்தில் அஞ்சத்தக்க இடபங்கள் ஏழனையும் தழுவி உன் காதலுக்கு உரியவளாகக்கொண்ட நப்பின்னை பிராட்டிக்கு அன்பனே!' என்பாள்; அழகிய திருவரங்கத்தைக் கோயிலாகக் கொண்டவனே! இவளுடைய துயரத்திற்கு முடிவு அறிகின்றிலேன்.

வி — கு: எயிறு — கோரப்பல். உரு — அச்சம்; அது இங்கு அச்சத்தை உண்டாக்குகின்ற இடபங்களுக்கு ஆயிற்று. தென்—தெற்குத் திசையுமாம்.

ஈடு: ஒன்பதாம் பாட்டு. [1]'இவள் துக்கத்துக்கு ஒரு முடிவு காண்கிறிலேன்,' என்கிறுள்.

என் திருமகள் சேர் மார்பனே என்னும் - [2]'என் பேற்றுக்குப் புருஷகாரம் இல்லாமல் இழக்கிறேனே?' என்னும். 'என்' என்பது, திருமகளுக்கு அடைமொழி. மார்பனுக்கு அடைமொழி ஆக்கலாகாது. [3]**அனந்தாழ்வான்** தன் பெண்பிள்ளையை '**என் திருமகள்**' என்று திருநாமம் சாத்தினுன். **பட்டர்**, பெருமாளிடத்தில், 'அடியேனை 'ஸ்திரீதனமாகப் பிராட்டிக்கு வந்தவன்' என்று திருவுள்ளம் பற்றவும்; நானும், 'இவர் எங்கள் நாய்ச்சியார்க்கு நல்லர்' என்று, அவ்வழியே 'அழகிய மணவாளப் பெருமாள்' என்று நினைத்திருக்கவுமாகவேணும்,' என்று வேண்டிக்கொண்டார். 'சேர் மார்பன்' என்பது, நிகழ்கால வினைத்தொகையாலே [4]இரஹஸ்யத்தில் நித்திய யோகத்தைச் சொல்லுகிறது: என்றது, 'அவள் ஒரு கணம் பிரிய

---

1. 'தெளிகிலேன் முடிவு இவள்தனக்கே' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறுர்.

2. பிராட்டியினுடைய சம்பந்தம் சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிறுர், 'என் பேற்றுக்கு' என்று தொடங்கி.

3. 'என்' என்பதனைத் திருவுக்கு அடைமொழி ஆக்கினதற்குச் சம்வாதம் காட்டுகிறுர், 'அனந்தாழ்வான்' என்று தொடங்கி. மற்றும் ஒரு சம்வாதம் காட்டுகிறுர், 'பட்டர்' என்று தொடங்கி. வேண்டிக்கொண்டார்' என்றது 'மாதர்லக்ஷ்மி' என்ற சுலோகத்திலே வேண்டிக்கொண்டார் என்பது.

4. 'இரஹஸ்யத்தில்' என்றது, மந்திரரத்நமாகிய துவயத்தில் 'ஸ்ரீமந் நாராயண' என்றதனைத் திருவுள்ளம் பற்றி.

இருக்கில் அன்றோ எனக்குப் பேறு தாழ்க்க வேண்டுவது ?' என்கிருள் என்றபடி. [1]'பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரை அழைத்தருளித் தாம் அமுது செய்யாநிற்கச்செய்தே இத்திருவாய்மொழி இயலைக் கேட்டருளாநிற்க, இப்பாட்டளவிலே வந்தவாறே 'என் திருமகள் சேர் மார்பனே ! என்னும்; என்னுடை ஆவியே என்னும்' என்று இயலைச் சேர்த்து அருளிச்செய்ய, அதனைக் கேட்டுக் கையை உதறி, 'ஸ்ரீரங்கநாத' என்று அணையிலே சாய்ந்தருளினர் பட்டர்' என்று அருளிச்செய்வர். 'அப்போது திருமேனியிலே பிறந்த வேறுபாட்டினைக் கண்டு, 'இவர்க்குப் பகவானை அடைவது அணித்தாகிறதோ ?' என்று அஞ்சியிருந்தேன்,' என்று சீயர் அருளிச்செய்வர். [2]இவர்க்குப் பிராணன் ஒரு காற்று விசேடம் அன்று; ஒரு மிதுநமாயிற்று. 'திருமகள் சேர் மார்பனுய்க்கொண்டு எனக்குத் தாரகனுனவனே !' என்னும்.

நின் திரு எயிற்ருல் இடந்து நீ கொண்ட நிலமகள் கேள்வனே என்னும் - 'காதலிமார்கட்குக் காரியம் செய்யும் போது உன்னை அழிய மாறியன்றோ காரியம் செய்வது ? ஸ்ரீ பூமிப்பிராட்டி பக்கல் முகம் பெறலாவது, [3]அவள் விபூதியைத் தன் முகத்தால் நோக்கினுல் அன்றோ [4]'நின் திரு எயிறு' என்னும் இத்தனை அழகுக்கு ? இடந்து நீ கொண்ட - நீ இடந்துகொண்ட ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு வல்லபனுனவனே ! அன்று உரு ஏழும் தழுவி நீ கொண்ட ஆய்மகள் அன்பனே என்னும் - 'ஒரு நாள் உதவின நீ. இன்று

---

1. இவளுக்கு உயிர் மிதுநம் (இரண்டு): 'பிராட்டியுடன் கூடிய பெருமாள்' என்று சொல்லப்படும் பொருளுக்குச் சம்வாதம் காட்டுகிருர், 'பெருமாளுக்கு' என்று தொடங்கி. 'விண்ணப்பம் செய்யுமவை கேட்கைக்காக' என்றது, சந்நிதியிலே கைசிக புராண சுலோகங்களுக்குப் பொருள் சொல்லுவதற்குத் தகுதியாகத் திருவாய்மொழியின் பாசுரங்களைத் திரட்டி எடுப்பதற்கு மூலம் கேட்கைக்காக என்றபடி.

2. 'இப்படிச் சேர்த்ததனுல் தோற்றின பொருள் யாது?' என்ன, அதற்கு விடை அருளிசசெய்கிருர், 'இவர்க்கு' என்று தொடங்கி. 'என் திருமகள் சேர் மார்பனே' என்று சொல்லப்படுகிற என் பிராணனே என்பது பொருள்.

3. அவள் விபூதியை-பூமியை. தன்முகத்தால்-தன்னுடைய முகத்தால் என்பதும், தான் பிரதாநமாக என்பதும் பொருள்.

4. ஒரு திருஷ்டாந்தம் கூருமல், 'திருஎயிறு' என்று வாளா கூறியதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'நின் திரு எயிறு' என்று தொடங்கி.

உதவினுல் ஆகாதோ?' அன்றிக்கே, நப்பின்னைப் பிராட்டியுடைய நிலையை 'அன்று' என்னுமித்தனை என்னுதல். ஒன்று இரண்டு அன்றிக்கே இருக்கிற இடபங்கள் ஏழனையும் தழுவி. [1] அவள் திருமுலைத் தடத்தை அணைத்தாற்போலே இருக்கிறதாயிற்று, அவளைப் பெறுகைக்கு உபாயமாகையாலே. உருவென்பது - இடி. 'இடிபோலே பயங்கரமான குரலையுடைய ஏறு' என்னுதல். அன்றிக்கே, உருவென்று மிடுக்காய், மிடுக்குத்தான் வடிவு கொண்டாற்போலே என்னுதல். [2] 'உருவுட்கு' என்பது உரிச்சொல். நீ கொன்ற - நீ கைக்கொண்ட. ஆய்மகள் அன்பனே என்னும் - [3] 'என்னைக் கைவிட்டு என் ஸ்வாமிநிகள் பக்கலிலே எங்ஙனே முகம் பெற இருக்கிறாய்?' என்னும். தென் திருவரங்கம் கோயில் கொண்டானே - தெற்குத் திசைக்குச் சிறப்பைத் தருகின்ற திருவரங்கம் என்னும் திருப்பதியை வசிக்குமிடமாக வுடையவனே! [4] 'எருது ஏழ் அடர்த்த அவதாரத்திலே முகங்காட்டப் பெற்றதில்லை' என்னும் குறை உண்டோ? அவதாரங்கள் போல அன்றியே நித்தியவாசம் செய்கிறது பிற்பாடர்க்கு உதவ அன்றோ? [5] 'தன்னுடைய மேலான இடத்தை அடைந்தான்' என்ன வேண்டாதபடி கோயில் கொண்டானாயிற்று. தெளிகிலேன் - [6] அங்குக் குறை அற்ற பின்பு 'தப்பாது' என்று தெளிய அன்றோ அடுப்பது? அது மாட்டுகின்றிலேன். [7] 'மாஶுச: - துக்கப்படாதே' என்றதனை அநுஷ்டான

---

1. அடர்த்து என்னுமல் 'தழுவி' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அவள்' என்று தொடங்கி.

2. 'உருவுட்காகும் புரையுயர் பாகும்' என்பது தொல்காப்பியம், சொல்லதிகாரம்.

3. வெறுப்பாக பாவம் அருளிசசெய்கிறார், 'என்னை' என்று தொடங்கி. 'ஸ்வாமிநிகள்' என்றது, மேலே கூறிய பிராட்டிமார் மூவரையும்.

4. 'கோயில் கொண்டானே' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'எருது ஏழ்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'அவதாரங்கள் போல' என்று தொடங்கி.

5. அவதாரங்கள் ஒரு காலத்தில் உண்டாவது என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'தன்னுடைய' என்று தொடங்கி.

'கத: ஸ்வம் ஸ்த்தாநம் உத்தமம்'

என்பது பாரதம்.

6. 'அங்குக் குறை அற்ற பின்பு' என்றது, 'திருவரங்கம் கோயில் கொண்டானே' என்றதனைத் திருவுள்ளம் பற்றி.

7. அதனை விவரணம் செய்கிறார் 'மாஶுச:' என்று தொடங்கி.

பரியந்தமாக்கிக்கொண்டு நீ கிடந்தால், [1] 'ஐயங்கள் எல்லாம் நீங்கி நிலைபெற்ற எண்ணமுடையவனானேன்' என்று இருக்க அன்றோ அடுப்பது? அது மாட்டுகின்றிலேன். இவள்தனக்கு முடிவு தெளிகிலேன் - [2] இவள் நிலை இதுவாக இருக்க, ஒரு ஞான் லாபத்தாலே ஆறி இருக்கப்போமோ? (9)

683

'முடிவிவள் தனக்குஒன்று அறிகிலேன்' என்னும்;
'மூவுல காளியே!' என்னும்;
'கடிகமழ் கொன்றைச் சடையனே!' என்னும்;
'நான்முகக் கடவுளே!' என்னும்;
'வடிவுடை வானோர் தலைவனே!' என்னும்;
'வண்திரு வரங்கனே!' என்னும்;
அடியடை யாதாள் போல்இவள் அணுகி
அடைந்தனள் முகில்வண்ணன் அடியே.

பொ-ரை: 'இவள், தனக்கு முடிவு ஒன்று அறிகிலேன் என்கிறாள்; 'மூன்று உலகங்களையும் ஆளுகின்ற இந்திரனுக்கு அந்தராத்துமாவாக இருக்கின்றவனே!' என்கிறாள்; 'வாசனை வீசுகின்ற கொன்றைப் பூமாலையைச் சடையிலே தரித்தவனான சிவபெருமானுக்கு அந்தராத்துமாவாக இருக்கின்றவனே!' என்கிறாள்; 'நான்முகனான பிரமனுக்கு அந்தராத்துமாவாக இருக்கின்றவனே!' என்கிறாள்; 'தன்னோடு ஒத்த வடிவையுடைய நித்தியசூரிகளுக்குத் தலைவனே!' என்கிறாள்; 'வளப்பம் பொருந்திய திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கின்றவனே!' என்கிறாள்; அவன் திருவடிகளை அடையாதவளைப் போலே இருந்த இவள் முகில் வண்ணனாகிய அவன் திருவடிகளைக் கிட்டி அடைந்தாள்' என்றவாறு.

ஈடு: பத்தாம் பாட்டு. [3] 'இனிக் கிட்டமாட்டாளோ!' என்னும்படி துக்கத்தை அடைந்திருந்த இவள், பெரிய பெருமாள் திருவடிகளைக் கலக்கப்பெற்றாள் என்கிறாள்.

---

1. 'ஸ்த்திதோஸ்மி கதஸந்தேஹ:' என்பது, ஸ்ரீகீதை, 18 : 73.

2. 'தெளிந்திருக்க மாட்டாமைக்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவள் நிலை' என்று தொடங்கி.

3. 'அடியடையாதாள்போல் இவள் அணுகி யடைந்தனள் முகில் வண்ணன் அடியே' என்பதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

**இவள்தனக்கு முடிவு ஒன்று அறிகிலேன் என்னும்** - பெண் பிள்ளை வார்த்தையைத் திருத்தாயார் அநுபாஷிக்கையாலே, '**இவள் தனக்கு முடிவு ஒன்று அறிகிலேன்**' என்னுநின்றாள் என்கிறாள். [1]'இந்தத் துக்கக்கடலைக் கரை காணும் விரகு அறிகிலேன்' என்னுதல். அன்றிக்கே, 'முடிந்து பிழைக்கும் விரகு அறிகிலேன்' என்னுதல். **மூவுலகாளியே என்னும் கடி கமழ் கொன்றைச் சடையனே என்னும் நான்முகக் கடவுளே என்னும் வடிவுடை வானோர் தலைவனே என்னும்** - இதனை 'மூவுலகாளியே! கடிகமழ் கொன்றைச் சடையனே! நான்முகக் கடவுளே' என்று சொல்லப் படுகிற, வடிவுடை வானோர்க்குத் தலைவனே!' என்னும் என்று, [2]**திருமலையாண்டான்** வையதிகரண்யமாக்கிப் பொருள் நிர்வ ஹிப்பர். 'என்னும்' என்பதற்கு 'என்னுமவளாய்' என்பது பொருள். இதனை **எம்பெருமானார்** கேட்டருளி, ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்தருளினார்: 'மூன்று உலகத்திற்கும் உரியனான இந்திரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய அதிகாரத்தை நிர்வஹிக்கிறவனே!' என்னும்; 'வாசனையையுடைத்தான கொன்றை யைச் சடையிலேயுடைய சிவபிரானுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய பதத்தை நிர்வஹிக்கிறவனே!' என்னும்; 'அவர்களோடு இவ்வருகுள்ளாரோடு வாசி அற எல்லார்க்கும் நிர்வாஹகனாயிருக்கிற நான்முகனாகிய தெய்வத்துக்கு அந்தர்யாமியானவனே!' என்னும் என்று.

**வடிவுடை வானோர் தலைவனே என்னும்** - பகவானுடைய அநு பவத்தால் வந்த உவகை வடிவிலே தோற்றும்படி இருக்கிற நித்திய

---

1. *'முடிவு அறிகிலேன்' என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார், 'இந்தத் துக்கக்கடலை' என்று தொடங்கி.*

2. *திருமாலையாண்டான் நிர்வாஹத்திற்கு, 'என்று சொல்லப் படுகின்ற வடிவோடு கூடிய வானோர்களுக்குத் தலைவனே!' என்பாள் என்பது பொருள். ஏகாரங்கள்: எண்ணுப் பொருளன. ஈற்றிலேயுள்ள 'என்னும்' என்பது மாத்திரம் முற்று. வையதிகரண்யம்-வெவ்வேறான பொருள்களைக் கூறுகின்ற சொற்கள். சாமாநாதிகரண்யம் - ஒரே பொருளைக் கூறுகின்ற வெவ்வேறான பல சொற்கள். திருமாலையாண்டான் அருளிச்செய்த பொருள், அத்துணைச் சிறப்புடைத்தன்று என்பது எம் பெருமானார் திருவுள்ளம். 'என்னும், என்னும்' என்பதற்குத் திருமாலை யாண்டான் அருளிச்செய்த பொருளில், மகள் வார்த்தையைத் திருத் தாயார் அநுபாஷிக்கிற தன்மை தோன்றாமை காண்க. மேலும், இவ் விடத்தில், ஏகாரங்களை விளியாகக் கோடலே ஏற்புடைத்தாம். மேலும், திருமாலையாண்டான் நிர்வாஹத்தில், லீலாவிபூதிக்கு மாத்திரம் நாதன் என்பது போதரும்; எம்பெருமானார் நிர்வாஹத்தில் இரண்டு உலகங்கட்கும் நாதன் என்பது போதரும்.*

சூரிகளுக்கு நாதனானவனே' என்னும். [1] 'வடிவுடை வானோர் தலைவனே!' என்றதனோடு, 'மூவுலகாளியே!' என்றதனோடு, 'கடி கமழ் கொன்றைச் சடையனே!' என்றதனோடு, 'நான்முகன் கடவுளே!' என்றதனோடு வாசியற்று இருக்கிறதாயிற்று இவர்க்கு: மயர்வற மதிநலம் பெறுகையாலே; [2] விசேஷணம்சத்தில் நிற்கின்ற வரல்லரே; சர்வ நிர்வாஹகன் என்று உணர்ந்திருக்குமவராயிற்று இவர். வண்திருவரங்கனே என்னும்-நித்தியசூரிகள் மாத்திரம் அனுப வித்துப் போகை அன்றிக்கே, நித்திய சம்சாரிகளும் இழவாமைக்கு அன்றோ இங்கு வந்து திருக்கண்வளர்ந்தருளுகிறது? 'இங்குச் சாய்ந்தருளின தன் பலம் நான் பெற வேண்டாவோ?' என்னும். வண்மையாவது, ஆசைப்பட்டார்க்குத் தன்னைக் கொடுக்கும் ஔதார்யம்.

அடி அடையாதாள் போல இவள் அணுகி அடைந்தனள் முகில் வண்ணன் அடியே - 'ஜீவிப்பாரைப் போலே இருந்து, கடுக முடிந்துகொடு நின்றாள்' என்று நிர்வஹிப்பாருமுளர்; 'அப்போது மேலே பிரபந்தம் நடவாதாகையாலே. திருவடிகளைக் கிட்டாதாரைப் போலே இருந்து கிரமத்திலே கிட்டிக்கொண்டு நின்றாள்' என்று அருளிச்செய்யும்படி. [3] இதுதான், மானச அனுபவத்தில் ஒரு தெளிவினைச் சொன்னபடி. அடி அடையாதாள் போல - இவள் இப்போதே திருவடிகளைச் சேரமாட்டாள்: இன்னம் சில காலம் இருக்கும் என்று போலே இருந்தது, முடிந்துகொடு நின்றாள் என்னுதல். இனி, 'கலக்கப் பெறுளோ?' என்று தோற்றும்படி துக்கத்தையடைந்தவளான இவள், கிட்டிக் கலந்து அனுபவிக்கப் பெற்றாள் காளமேகம் போன்ற நிறத்தையுடைய பெரிய பெருமாள் திருவடிகளையே என்னுதல். (10)

---

1. 'நன்று; 'வானோர் தலைவனே' என்று, அசாதாரண விக்கிரஹ விசிஷ்டனையும், 'மூவுலகாளியே' என்பது முதலாகச் சாதாரண விக்கிரஹ விசிஷ்டனையும் ஒருசேர அனுபவிப்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'வடிவுடை' என்று தொடங்கி. விசிஷ்டன்-கூடினவன்.

2. அதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'விசேஷணம்சத்தில்' என்று தொடங்கி.

3. 'ஆனால், பிரத்யக்ஷமாகக் கிட்டினளோ?' எனின், 'இதுதான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

684

முகில்வண்ணன் அடியை அடைந்துஅருள் சூடி
உய்ந்தவன் மொய்புனல் பொருநல்
துகில்வண்ணத் தூநீர்ச் சேர்ப்பன்வண் பொழில்சூழ்
வண்குரு கூர்ச்சட கோபன்
முகில்வண்ணன் அடிமேல் சொன்னசொல் மாலை
ஆயிரத்து இப்பத்தும் வல்லார்
முகில்வண்ண வானத்து இமையவர் சூழ
இருப்பர்பே ரின்பவெள் ளத்தே.

**பொ—ரை :** 'முகில் வண்ணரான பெரிய பெருமாள் திருவடிகளை அடைந்து திருவருளைப்பெற்று உய்ந்தவரும், துகிலின் வண்ணத்தைப்போன்ற பரிசுத்தமான தெளிந்த தன்மையையுடைய மிகுந்த நீர் நிறைந்த தாமிரபரணித் துறைவரும், வளப்பம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த வண்மையையுடைய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபருமான நம்மாழ்வார், முகில் வண்ணன் திருவடிகளின்மேலே அருளிச்செய்த சொல்மாலை ஆயிரத்தில் இந்தப் பத்தையும் வல்லவர்கள், முகில் போன்ற நிறத்தையுடைய பரமபதத்திலே நித்தியசூரிகள் சூழும்படி பேரின்ப வெள்ளத்தில் இருப்பர்,' என்க.

**வி—கு :** 'துகில் வண்ணத் தூநீர் மொய்புனல் பொருநல் சேர்ப்பன்' எனக் கூட்டுக. அன்றிக்கே, ஆற்றொழுக்காகப் பொருள் கோடலுமாம். சேர்ப்பன் - இடத்தையுடையவன்.

**ஈடு :** முடிவில், [1] 'இத்திருவாய்மொழியைக் கற்க வல்லவர்கள், இவர் பட்ட கிலேசம் படாமல் திருநாட்டிலே பேரின்ப வெள்ளத்தினையுடையவராய், நித்தியசூரிகள் சூழ இருக்கப் பெறுவர்,' என்கிறார்.

முகில்வண்ணன் அடியை அடைந்து அருள் சூடி உய்ந்தவன் - பெரிய பெருமாள் திருவடிகளைக் கிட்டி அங்குத்தைத் திருவருளைப் பெற்றுத் தரித்தவர். [2] முன்னைய நிலையில் சத்தையும் அழியும்படி

1. 'இப்பத்தும் வல்லார் முகில் வண்ண வானத்து இமையவர் சூழ இருப்பர் பேரின்ப வெள்ளத்தே' என்பதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மேல் திருப்பாசுரம் கிலேசமாக இருக்க, 'உய்ந்தவன்' என்று தரிப்பு உண்டாகச் சொல்லலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'முன்னைய நிலையில்' என்று தொடங்கி.

யாய் இருக்கையாலே உய்ந்தவன் என்கிறது. மொய் புனல் பொருநல் துகில் வண்ணம் தூநீர்ச் சேர்ப்பன் - வலியையுடைத்தான தண்ணீரோடு கூடின தாமிரபரணியில் துகிலினுடைய வண்ணத்தையுடைத்தான தூநீர்த் துறைவன். 'மொய்' என்பதற்கு; 'மிகுதி' என்பதும், 'வலி' என்பதும் பொருளாம். இங்கே, நீரோட்டத்தால் வந்த வலியை நினைக்கிறது. சேர்ப்பன் - துறைவன் : நெய்தல் நிலத்தின் தலைமகன். 'மொய்புனல்' என்னுநிற்கவும், 'தூநீர்' என்கிறது, பெரு வெள்ளமாய் இருக்கச்செய்தே தெளிந்திருக்கும் படியைப்பற்ற. [1]'அழுக்கு அற்ற, தெளிந்த நீரையுடைய, அழகிய, பெரியோர்களுடைய மனம் போன்ற இந்தத் தீர்த்தத்தைப் பாரும்,' என்கிற படியே.

வண் பொழில் சூழ் வண் குருகூர் சடகோபன் - காண்பதற்கு இனியதான பொழிலையுடைத்தாய் வண்மையையுடைய திருநகரிக்கு நாதன். முகில் வண்ணன் அடிமேல் சொன்ன சொல் மாலை ஆயிரத்து இப்பத்தும் வல்லார் - காளமேகம் போன்று மிக்க பேரெழிலையுடையரான பெரிய பெருமாள் விஷயமாக அருளிச்செய்த சொற்களையுடைய மாலை ஆயிரத்து இப்பத்தையும் கருத்தோடு கற்க வல்லவர்கள். 'பெரிய பெருமாள் திருவடிகளிலே, திருவாய்மொழி ஆயிரமும் சொல்லிற்று ; [2]'திருமோகூர்க்கு ஈத்த பத்து', 'திருவேங்கடத்துக்கு இவை பத்து' என்று பிரித்துக்கொடுத்த இத்தனை ; **பெருமாள் திருப்பலகையில் அமுதுபடியிலே மற்றைத் திருப்பதிகள் நாயன்மார்கட்கும் அளந்து கொடுக்குமாறு போலே'**

---

1. *தெளிந்திருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அழுக்கு அற்ற' என்று தொடங்கி.*

> *'ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்ய மநோ யதா'*

*என்பது, ஸ்ரீராமா. பால.* 2 : 5.

> *'சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்*
> *கவியெனக் கிடந்த கோதா விரியினை வீரர் கண்டார்'*

*என்பது, கம்பராமாயணம், சூர்ப்பணகைப் படலம்,* 1.

2. *'ஆயிரமும் பெரிய பெருமாள் விஷயமானால், திருவேங்கடமுடையான் முதலாயினோர்க்கு இன்றிக்கே போமே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'திருமோகூர்க்கு' என்று தொடங்கி. 'திருமோகூர்க்கு' என்பது, திருவாய்.* 10. 1 : 11. *'திருவேங்கடத்துக்கு' என்பது திருவாய்.* 6. 10 : 11.

என்று **பிள்ளை** அருளிச்செய்வர். முகில் வண்ணம் வானத்து - அங்கு இருக்கிறவனுடைய நிழலீட்டாலே அவன்படியாய் இருக்கிற வானம் என்னுதல்; முகில் வண்ணனுடைய வானம் என்னுதல். இமையவர் சூழ இருப்பர் பேரின்ப வெள்ளத்தே - இவள் மோகித்துக் கிடக்கத் திருத்தாயார் தனியே இருந்து கூப்பிட்ட எளிவரவு தீர, நித்தியசூரிகள் திரள இருக்க, அவர்கள் நடுவே ஆனந்தத்தையுடையவர்களாய் இருந்து அனுபவிக்கப் பெறுவர்கள். (11)

திருவாய்மொழி நூற்றந்தாதி

*கங்குல் பகலாதி கைவிஞ்சி மோகமுற*
*அங்கதனைக் கண்டோர் அரங்கரைப்பார்த் – திங்கிவள்பால்*
*என்செயநீர் எண்ணுகின்ற தென்னுநிலை சேர்மாறன்*
*அஞ்சொலுற நெஞ்சுவெள்ளை யாம்.* *(62)*

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

# மூன்றாந்திருவாய்மொழி
## 'வெள்ளைச் சுரிசங்கு'

### முன்னுரை

ஈடு: [1]மேல் திருவாய்மொழியில், 'இட்டகால் இட்டகை' என்கிறபடியே, இவள் மோகித்துக் கிடக்க, இவளுக்கு முன்னே தோழிமாரும் தரைப்பட, திருத்தாயார் ஒருத்தியும் இவள் நிலையை நினைந்து அருகே இருந்து கூப்பிட்டுப் போருமதும் தவிர இப்பெண் பிள்ளை தானே எழுந்திருந்து கால் நடை தந்து போமளவாய் விழுந்தது. [2]அதற்கு அடி: 'பற்றிலார் பற்ற நின்றானே' என்று பெரிய பெருமாளுடைய பற்றிலார் பற்ற நிற்கும் தன்மை தொடக்க மான, இவளுக்குப் பற்றாசான குணங்களையும் அழகு முதலான விக்கிரஹ குணங்களையும் இவள் தான் வாய் வெருவியும் திருத்தாயார் சொல்லவும் கேட்டு அதனாலே தரித்தாள். [3]போன உயிரை மீட்கவற்றாயன்றோ குணங்களின் தன்மை இருப்பது? [4]மேல் திருவாய்மொழியில் பிறந்த மோகமுந்தெளிந்து, பிரிவின் வியசனமும் நினைக்க வல்லளாய், பின்பு, 'அவனைக் கிட்டியல்லது நில்லேன்' என்னும்படியான ஆற்றாமையும் பிறந்து, அது பெருமையாலே துக்க முடையவளாக, இவள் விடாய்க்கு ஈடாகும்படி அணித்தாகத் தென்

---

1. மேல் திருவாய்மொழிக்கும் இதற்கும் சுருக்கமாக இயைபு அருளிச்செய்கிறார், 'மேல் திருவாய்மொழியில்' என்று தொடங்கி.

2. 'மேல் திருவாய்மொழியில் மோகித்துக் கிடந்தவளுக்குத் தெளிவு பிறக்கைக்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார், 'அதற்கு அடி' என்று தொடங்கி.

3. 'குணங்கள் தரிப்பிக்குமோ?' என்ன, 'போன உயிரை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செயகிறார். இவ்விடத்திலே,

'இத: பரம் மிருதஸஞ்ஜீவநீம் ராம வ்ருத்தாந்த கதாம்ஆஹ'

என்ற ஸஹஸ்ரநாம பாஷ்ய வாக்கியத்தை நினைப்பது.

'அவித்தஜம் புலத்தவ ராதி யாயுள
புவித்தலை யுயிரெலாம் இராமன் பொன்முடி
கவிக்கும்என் றுரைக்கவே களித்த தாலது
செவிப்புலம் நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம்!'

என்பது, கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், ஆற்றுப்படலம், 23.

4. மேலே சுருங்கக் கூறின இயைபினை விரித்து அருளிச்செய்கிறார் மேல் திருவாய்மொழியில்' என்று தொடங்கி.

திருப்பேரெயில் வீற்றிருந்த மகர நெடுங்குழைக்காதனுடைய புன்சிரிப்பு, கடைக்கண் நோக்கம் முதலியவைகளாலே கவரப்பட்ட மனத்தையுடையவளாய், 'அவன் இருந்த இடத்து ஏறப்போக வேணும்,' என்று ஒருப்பட, பழையபடியே தோழிமாரும் தாய்மாரும் அவளைச் சூழப்போந்து, 'உனக்கு இத்துணை அளவு கடந்த ஈடுபாடு ஆகாது : நமக்கு இது பழியாய் விளையும்,' என்ன, 'நீங்கள் சொல்லு கிறவற்றால் பிரயோஜனம் உண்டாகமாட்டாது. நான் [1] அவன் பக்கலிலே சென்ற மனத்தையுடையவள் ஆனேன் ; ஆன பின்பு, நானே போனேன் ஆகாமே நீங்கள் என்னோடு உடன்பட்டு அங்கே கொடுபோய்ச் சேர்க்கப் பாருங்கோள்,' என்று தனக்குப் பிறந்த துணிவை அவர்களுக்கு அறிவித்துச் சொல்லுகிறாளாய் இருக்கிறது.

அங்ஙன் அன்றிக்கே, 'முகில் வண்ணன் அடியே இவள் அணுகி அடைந்தனள்,' என்றது ஆகையாலே, [2] 'நான் அங்கும் இராகவனுடைய வீட்டில் பன்னிரண்டு வருடங்கள் முடிய மனிதர் களுக்குரிய போகத்தை அனுபவித்தேன்,' என்கிறபடியே, பெரிய பெருமாளோடே நெடுங்காலம் பூர்ண ரசமான கலவி உண்டாக, [3] பிரிந்து கூடாவிடில் இரண்டு தலைக்கும் அழிவு வருமளவு ஆயிற்றது. [4] இனி, எல்லா அளவிலும் ஒரு நீராகக் கலக்கிறது தர்மிகள் இரண்டும் கூடி அன்றோ? ஆகையாலே, பிரியாவிடில் தர்மியே அழியும் அளவாகப் புக, இவ்வளவில், நாயகனான இவன் இரண்டு தலையும் ஜீவிக்கப் பார்ப்பான் ஒருவன் ஆகையாலே

---

1. 'அவன் பக்கலிலே சென்ற மனத்தையுடையவளானேன்' என்றது, இத்திருப்பதிகத்தில் வருகின்ற 'என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி. 'என்னைக்காட்டுமினே' என்ற தனைத் திருவுள்ளம் பற்றி, 'நீங்கள்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. 'ஸமா த்வாதஸ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஸநே
புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாம ஸம்ருத்திநீ'

என்பது, ஸ்ரீராமா. சுந். 33 . 17.

3. 'பூர்ண ரசமான கலவி உண்டானால் பிரிய வேண்டுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பிரிந்து கூடாவிடில்' என்று தொடங்கி.

4. 'ஒரே பொருள் என்னலாம்படி கலந்தால், பின்பு பிரியக் கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இனி, எல்லாவள விலும்' என்று தொடங்கி.

பிரிவைப் பற்றிப் பேசினன்; பேச, [1] இவளும் பிரிவில் வாசனை இல்லாதாள் ஒருத்தி ஆகையாலே, 'கலவியிலே ஒரு வகையோ' என்று கொண்டு, இவளும் அதற்கு இசைந்தாள்; இசைய, அவனும் வேட்டை நிமித்தமாகப் புறப்பட, இவளும் திரு அணுக்கன் திருவாசல் அளவும் ஒருப்படுத்தி மீண்டாள்: [2] எல்லா அளவிலும் பிரிவு தன் காரியம் செய்தன்றி நில்லாதே அன்றே? பின் இவள் நோவுபடப்புக, இதனைக் கண்ட தோழிமாரும் தாய்மாரும், 'உனக்கு ஓடுகிறது என்?' என்று கேட்க, 'ஸ்ரீஜனகராஜன் திருமகள் காட்டிலே கூடப் போய் அவர் இருந்த இடம் நின்ற இடம் உலாவின இடந்தோறும் கூட இருந்து அனுபவித்தாற்போலே, நானும் அவன் இருந்த இடத்தே போய்ப் புக்கு அல்லது நில்லேன்,' என்றாள்; அதனைக் கேட்ட அவர்கள், 'உன் தலைமைக்கு இது போராது: நீ சொல்லுகிறது வார்த்தை அன்று,' என்ன, அவர்கள், 'அதற்கு நாங்கள் வழிப் படோம்' என்ன, 'ஆகில், [3] நானேயாகிலும் போகை தவிரேன்,' என்கிறாள் என்று [4] **பிள்ளான்** பணிப்பர்.

[5] ஸமா த்வாதச தத்ர அஹம்-இப்போது ஒருவேளை தரிசனமுங் கூட அரிதாம்படி இருக்கிற நான், முன்பு பல காலம் அவரோடே அனுபவிக்கப் பெற்றேன்காண்! ராகவஸ்ய நிவேசநே - எங்கள் மாமனாருடைய மாளிகையிலே அவர் தண்ணீர்த் துரும்பு அறுத்துத் தர, நெடுங்காலம் அனுபவித்தேன். புஞ்ஜாநா மாநுஷாந் போகாந்

---

1. *பிரிவைப் பற்றிப் பேசும் போது, 'பிரிதல் கூடாது என்ன ஒண்ணுதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவளும்' என்று தொடங்கி.*

2. *'இப்படி வழி விட்டு மீண்டாளாகில் துக்கப்படுவான் என்?' என்ன, 'எல்லாவளவிலும்' என்று தொடங்கி விடை அருளிச்செய்கிறார்.*

3. *'தென்திருப்பேரையில் சேர்வன் சென்றே' என்ற பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றி, 'நானேயாகிலும் போகை தவிரேன்' என்று அருளிச்செய்கிறார்.*

4. *'அணுகியடைந்தனள்' என்றதனால், கலவி நிகழ்ந்தது என்பது பிள்ளான் திருவுள்ளம். கலவி உண்டானால் தனியே ஒரு திருவாய்மொழி அருளிச்செய்வர்; அது செய்யாமையாலே பிள்ளான் நிர்வாஹம் அத்துணைச் சிறப்புடைத்து அன்று என்பர்.*

5. *முன்பு எடுத்த சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'ஸமாத்வாதச' என்று தொடங்கி. தண்ணீர்த்துரும்பு-தடை.*

ஸர்வகாம ஸம்ருத்திநீ - [1] ‘எல்லாக் காமங்களையும்’ என்கிறபடியே, எல்லாம் அனுபவிக்கப் பெற்றேன். [2] அப்படியும் அன்றே இங்கு: [3] ‘அரசனே! கல்யாண குணங்கள் பல’ என்கிறபடியே, குணங்கள் இரட்டித்த இடம் அன்றோ இது? [4] ‘ஆக, இதனால் என் சொல்லிய வாறோ?’ எனின், ‘நமக்கு ஐம்புல இன்பங்களினின்றும் இந்திரி யங்களை மீட்க ஒண்ணாதவாறு போலே அன்றோ இவரைப் பகவத் விஷயத்தினின்றும் மீட்க ஒண்ணாதபடி?’ என்பதனைக் கூறியவாறு. [5] அது கருமம் அடியாக வருகிறது: இது பகவானுடைய திருவருள் அடியாக வருகிறது. [6] ‘திருத்தாயார் பேச்சாக வருமவை, ஆழ்வாருக்குப் பிறந்த நிலை விசேடம்: தலைமகளாய்ப் பேசுகிறதும், இவர்க்குப் பிறந்தது ஓர் அவஸ்தா விசேடம்; அங்ஙனம் இருக்க, விலக்குவதும் போவதாகக் கூறுவதும் ஒருவர்க்கே கூடுமோ?’ எனின், அவற்றுள், விலக்குகிற திருத்தாயார் முகத்தாற்சொல்லு கிறது, ‘சொரூபமான பிராவண்யம் உபாயத்திற்சேர்ந்தால் செய்வது என்?’ என்னுமதற்குச் சொல்லுகிறது; பெண்பிள்ளை கருத்தாற்சொல்லுகிறது, ‘உபாயம் அவனேயாகில் பிராவண்யம் சொரூபமாமத்தனை அன்றோ?’ என்று சொல்லுகிறது. ஆக, இவ் விரண்டு அர்த்தத்தையும் இரண்டு முகத்தாலே ஆழ்வார் தாம் அநுசந்தித்தபடியைச் சொல்லுகிறது. [7] மோகமும் தெளிந்து தானே கூப்பிட வல்லளான இதுவே, இத்திருவாய்மொழிக்கு ஏற்றம்.

---

1. ‘ஸர்வாந் காமாந்’ என்றது, தைத்.

2. ‘ஸர்வாந் காமாந்’ என்றது, பரத்துவத்திலே அன்றோ? இங்கே உண்டோ?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘அப்படியும்’ என்று தொடங்கி. ‘இங்கு’ என்றது, ஸ்ரீராமாவதாரத்தில் என்றபடி.

3. ‘பஹவோ ந்ருப கல்யாண குணா:’
என்பது, ஸ்ரீராமா. அயோத். 2 : 26.

4. இத்திருவாய்மொழிக்குச் சுவாபதேசப்பொருள் அருளிச்செய் கிறார், ‘ஆக, இதனால்’ என்று தொடங்கி.

5. ‘இத்த இரண்டு வகைகட்கும் காரணம் என்?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘அது கருமம் அடியாக’ என்று தொடங்கி.

6. திருத்தாயாரான நிலைக்கும், தலைமகளான நிலைக்கும் வேறுபாடு அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி அதனை அநுவதிக்கிறார், ‘திருத் தாயார்’ என்று தொடங்கி.

7. முதலிலே அருளிச்செய்த யோஜனையில், ‘மேல் திருவாய் மொழியை நோக்க இதற்கு வாசி யாது?’ என்ன, ‘மோகமும்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

685

வெள்ளைச் சுரிசங்கொடு ஆழிஏந்தித்
தாமரைக் கண்ணன்என் நெஞ்சினூடே
புள்ளைக் கடாகின்ற ஆற்றைக்காணீர் !
என்சொல்லிச் சொல்லுகேன் அன்னைமீர்காள் !
வெள்ளச் சுகமவன் வீற்றிருந்த
வேத ஒலியும் விழாவொலியும்
பிள்ளைக் குழாவிளை யாட்டொலியும்
அருத்[1]திருப் பேரெயிற் சேர்வன்நானே.

பொ-ரை: தாய்மார்களே ! வெண்ணிறத்தையும் உள் சுரிந்திருத்தலையுமுடைய ஸ்ரீபாஞ்சசன்யம் என்னும் சங்கோடு சுதரிசனம் என்னும் சக்கரத்தையும் ஏந்திக்கொண்டு தாமரைக்கண்ணனான எம்பெருமான் என் மனத்திற்குள்ளே கருடப் பறவையைச் செலுத்துகின்ற விதத்தைக காணுங்கோள் ; அவன் தன்மையை என்ன வார்த்தைகளைக்கொண்டு உங்களுக்குச் சொல்லுவேன் ! பேரின்ப வெள்ளத்தையுடைய எம்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற, வேதங்களின் ஒலியும் திருவிழாக்களின் ஒலியும் குழந்தைக் கூட்டங்கள் விளையாடுகிற விளையாட்டின் ஒலியும் நீங்காமல் இருக்கின்ற திருப்பேரெயில் என்ற திவ்விய தேசத்தை நான் அடைவேன் என்கிறாள்.

வி - கு: சுரிதல் - உள்ளே சுழிந்திருத்தல், கடாவுதல் - ஏறிச் செலுத்தல். காணீர் - காண்கின்றிலீர் என்னலுமாம். வீற்றிருந்த திருப் பேரெயில் என்க. 'ஒலியும் ஒலியும் விளையாட்டுஒலியும் அருத்திருப் பேரெயில்' என்க.

இத்திருவாய்மொழி அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

ஈடு: முதற்பாட்டு. [2] இந்தப் பிராட்டி, சொற்களால் சொல்ல முடியாதபடி தனக்கு உண்டான வியசனத்தாலே, தென்திருப் பேரெயிலே போகவேணும் என்று தனக்குப் பிறந்த நிலையை வினவுகிற திருத்தாய்மார்க்குச் சொல்லுகிறாள்.

---

1. 'திருப்பேரையில்' என்பதும் பாடம். 'திருப்பேரெயில்' என்பதே கொள்ளத்தக்கது (பாசுரம் 691 பார்க்க).

2. 'என் சொல்லிச் சொல்லுகேன், திருப்பேரெயில் சேர்வன் நான், அன்னைமீர்காள்!' என்பதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

வெள்ளைச் சுரிசங்கொடு ஆழி ஏந்தி - [1] 'தவள ஒண்சங்கு சக்கரம்' என்றும், [2] 'கூரார் ஆழி வெண்சங்கு' என்றும், [3] 'சங்கு சக்கரங்கள் என்று கைகூப்பும்' என்றும் கையும் திருவாழியுமான அழகு கைவிடாதே இவரைத் தொடருகிறபடி. முகில் வண்ணன் அன்றோ? அந்த நிறத்துக்குப் [4] பரபாகமான வெளுப்பையும் சுரியையு முடைத்தான ஸ்ரீபாஞ்சஜன்யத்தையும், [5] அங்ஙனம் ஒரு விசேடணம் இட்டுச் சொல்ல வேண்டாதபடியான அழகையுடைத்தான திருவாழி யையும் ஏந்தி, தாமரைக் கண்ணன் - [6] 'தாமரைக் கண் என்றே தளரும்' என்றது, பின் நாட்டுகிறபடி. [7] திருமேனிக்குத் திவ்விய ஆயுதங்கள் பிரகாசகமாய் இருக்குமாறு போலே, ஆத்துமகுணங் களுக்குத் திருக்கண்கள் பிரகாசகமாய் இருக்கிறபடி. என்றது, 'அகவாயில் தண்ணளி எல்லாம் கண்வழியே அன்றோ தோற்று வது?' என்றபடி. பகைவர்களுக்குத் திவ்விய ஆயுதங்களோடு ஒக்கத் திருக்கண்களும் விரோதியாய்த் தோற்றுமாறு போலே அன்றோ, அனுகூலர்க்குத் திருக்கண்களைப் போன்று திவ்விய ஆயுதங்களும் அழகுக்கு உடலாகத் தோற்றுகிறபடி? [8] திருக்கண் களோடே திவ்விய ஆயுதங்களையும் திவ்விய ஆயுதங்களோடே திருக்கண்களையும் சேர்த்து அனுபவிப்பர்கள். [9] ஆயுதங்களோடே

---

1. திவ்விய ஆயுதங்களை முன்னே கூறுவதற்கு பாவம் அருளிச்செய் கிறார், 'தவள ஒண்சங்கு' என்று தொடங்கி. இது, திருவாய். 6. 5 : 1.

2. இது, திருவாய். 6. 9 : 1.

3. இது, திருவாய். 7. 2 : 1.

4. பரபாகம்-பல நிறங்கள் கலத்தலால் உண்டாகும் அழகு.

5. விசேஷணம் கொடாது வாளா 'ஆழி' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'அங்ஙனம்' என்று தொடங்கி.

6. 'தாமரைக்கண்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தாமரைக்கண்' என்று தொடங்கி.

7. திவ்விய ஆயுதங்களோடே திருக்கண்களைச் சேர்த்துக் கூறிய தற்கு இரண்டு வகையில் பாவம் அருளிச்செய்கிறார், 'திருமேனிக்கு என்று தொடங்கியும், 'பகைவர்களுக்கு' என்று தொடகியும். என்றது, 'பிரகாசிக் கின்ற தன்மையும், மனத்தைக் கவர்கின்ற தன்மையும் இரண்டற்கும் ஒத்திருக்கையாலே சேர்த்துச் சொன்னார்' என்றபடி.

8. திவ்விய ஆயுதங்களோடே அவயவங்களைச் சேர்த்தும், திவ்விய அவயவங்களோடே திவ்விய ஆயுதங்களைச் சேர்த்தும் ஆழ்வார்கள் அனுபவிப்பார்கள் என்கிறார், 'திருக்கண்களோடே' என்று தொடங்கி.

9. 'இப்படிச் சேர்த்து அனுபவிப்பதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஆயுதங்களோடே' என்று தொடங்கி.

திருக்கண்களைக் கூட்டுகிறது, தோற்பித்தபடிக்கு; [1] 'உனக்குத் தோற்றோம்' என்னப் பண்ணுமன்றோ? கண்களோடு திவ்விய ஆயுதங்களைக் கூட்டுகிறது அழகுக்கு. [2] இவ்விடத்தே நிலாத்துக் குறிப்பகவர் வார்த்தையை அருளிச்செய்வர் சீயர். [3] கைக்கு ஆழ்வார்கள் ஆபரணமாய் இருக்குமாறு போலே ஆயிற்று, முகத் திருக்கண்கள் ஆபரணமாய் இருக்கும்படியும்.

> [4] 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
> அருக்கன் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்
> பொன்ஆழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்,
> என்ஆழி வண்ணன்பால் இன்று'

என்று வடிவழகைப் போன்று திவ்விய ஆயுதங்களும் ஆபரணமாய் அழகியனவாயன்றோ இருப்பன? [5] ஆழ்வார்கள் தாம் அவனைக் கைசெய்திருக்கையாலே ஆபரணகோடியிலே இருப்பர்கள். கை செய்தல் - அலங்கரித்தல்.

என் நெஞ்சினூடே - தங்கள் நெஞ்சில் இல்லாமையாலே இது கூடாது என்று இருப்பர்கள் அன்றோ? ஆதலின், 'என் நெஞ்சினூடே' என்கிறாள். என் நெஞ்சினூடே புள்ளைக் கடாகின்ற ஆற்றைக் காணீர் - [6] 'இவர்க்கு மயர்வு அற மதிநலம் அருளி 'நெஞ்சமே நீள்நகர்' என்னும்படியன்றோ திருத்திற்று?' ஒரு

---

1. ஆயுதம் போன்று திருக்கண்களும் தோற்பிக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'உனக்கு' என்று தொடங்கி. 'ஜிதந்தே' என்பது.

2. திவ்விய ஆயுதங்களைப் பற்றிய பிரசங்கத்திலே, 'சர்வேஸ்வரன் இருதோளனே, நாற்றோளனே?' என்ற சங்கைக்கு விடை அருளிச்செய்கிறார், 'இவ்விடத்தே' என்று தொடங்கி. என்றது, 'நிலாத்துக் குறிப்பகவர் கேட்ட வினாவிற்குப் பட்டர் அருளிச்செய்த திருவார்த்தையை அருளிச்செய்வர் நஞ்சீயர்' என்றபடி. இதனை, மூன்றாம் பத்து ஈட்டின் தமிழாக்கம், பக். 248ல் காண்க.

3. திவ்விய ஆயுதங்களுக்கும் திருக்கண்களுக்கும் ஒப்பனை அழகாலும் சேர்த்தி உண்டு என்று மூன்றாவதாக வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'கைக்கு' என்று தொடங்கி.

4. திவ்விய ஆயுதங்கள் ஆபரணம் என்னுமதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'திருக்கண்டேன்' என்று தொடங்கி. இது, மூன்றாந்திருவந். 1.

5 ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'ஆழ்வார்கள்' என்று தொடங்கி. 'ஆழ்வார்கள்' என்றது, திவ்விய ஆயுதங்களை. கை செய்தல்-அலங்கரித்தலும், துணை செய்தலும், போர் செய்தலுமாம்.

6 'அணுவான நெஞ்சிற்கு உள் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவர்க்கு' என்று தொடங்கி. 'நீள்நகர்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'ஒரு திரிபாத் விபூதியிலும்' என்று தொடங்கி. 'நெஞ்சமே' என்பது, திருவாய்மொழி 3. 8 : 2. திரிபாத் விபூதி-பரமபதம்.

திரிபாத்விபூதியிலும் இடம் உடைத்தாயிருக்கை. [1] திருவடி திருத்தோளிலே ஏறி அங்கு உள்ளார்க்கு உஜ்ஜீவனமாகச் சாரிகை வந்து காட்டுமாறு போலே, இவர் நெஞ்சினுள்ளே தடை இல்லாமல் அழகு செண்டு ஏறுகிறபடி. நெஞ்சினூடே - [2] 'அகவாயில் உள்ளது கண்களுக்குத் தெரியாதோ?' என்று இருக்கிறார்கள் ஆயிற்று இவர்கள். [3] 'குற்றம் அற்றவனை அந்தப் பரமாத்துமாவானவன் உன்னுடைய உடலில் நிறைந்து நிற்கின்றான்,' என்னுமாறு போலே. 'நெஞ்சில் இல்லையாகில் நானும் இல்லை என்று நினைத்து இருக்கலாயிற்றுக்காண்' என்று இருக்கிறாள் இவள். [4] ஒரு வாசத்தடத்தில் அன்னங்கள் சக்கரவாகங்கள் போன்ற ஆழ்வார்களும், காடுபட அலர்ந்த தாமரை போலே இருக்கிற திவ்விய அவயவங்களும், அத்தடாகத்தில் நீரும் இலையும்போலே இருக்கிற திருமேனியுமாய், அதனைக் கினிய ஒரு மேரு தாங்கினாற்போலே

---

1. 'கடாகின்ற' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'திருவடி' என்று தொடங்கி. சாரிகை-வையாளி. அழகு செண்டு ஏறுகை-விளையாட்டுச் சாரிகை வருதல்; அழகு காட்டிக்கொண்டு புறப்படுகையுமாம்.

2. 'நெஞ்சினூடே' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அகவாயில்' என்று தொடங்கி.

'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.'

என்பது, திருக்குறள்.

3. 'அகவாயில் உள்ளது மேலே தோற்றும்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'குற்றம் அற்றவனை' என்று தொடங்கி.

'நிர்க்குண: பரமாத்மாஸௌ தேஹம் தே வ்யாப்ய திஷ்ட்டதி'

என்பது, பாரதம். ஆரண்.

4. மேலே போந்தவற்றையெல்லாம் சேர்த்து, பாவம் அருளிச்செய்கிறார், 'ஒருவாசத் தடத்தில்' என்று தொடங்கி. கினிய-கபளீகரிக்க.

'மாயக் கூத்தா! வாமனா! வினையேன் கண்ணா! கண்கைகால்
தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதாச்
சாயல் சாமத் திருமேனித் தண்பா சடையா தாமரைநீள்
வாசத் தடம்போல் வருவானே! ஒருநாள் காண வாராயே.'

என்பது, திருவாய். 8. 5 : 1.

'கருமுகில் தாமரைக் காடு பூத்துநீடு
இருசுடர் இருபுறத் தேந்தி ஏடலர்த்
திருவொடும் பொலியவொர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கழலுன்மேல் வந்து தோன்றினான்.

என்பது, கம்பராமா. திருவவதாரப். 13.

இருக்கிற பெரிய திருவடியோடே கூட இவர் திருவுள்ளத்தே உலாவுகிறபடி. [1] இப்படியே அன்றோ அநுகூலரோடு பரிமாறும்படி ?

[2] **நஞ்சீயர்** கோயிலுக்கு எழுந்தருளாநிற்க, வழியிலே **திருக்குருகைப்பிரான்பிள்ளானைக்** கண்டு ''ஈஸ்வரனுக்குச் சொரூப வியாப்தியேயோ, விக்கிரஹ வியாப்தியும் உண்டோ ?' என்று கேட்க, பாஷ்யகாரர் தோற்ற அருளிச்செய்துகொண்டு போந்தது, சொரூப வியாப்தியாய் இருக்கும் ; ஆகிலும், **எம்பார்** ஒரு நாள் **'உபாசகர்கட்கு அநுக்கிரஹம் செய்தற்பொருட்டு அடியார்களுடைய நெஞ்சிலே விக்கிரஹத்தோடே வியாபித்திருக்கும்'** என்று அருளிச்செய்யக் கேட்டேன்' என்று பணித்தான் ; [3] 'மனமாகிய குகையில் வசிப்பவர்' என்றும், 'மனத்தில் இருப்பவரும் புராண புருஷரும்' என்றும், 'அரவத்து அமளியினோடும் அழகிய பாற்கடலோடும் அரவிந்தப்பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து' என்றும், 'எவர்களுடைய மனத்தில் கருநெய்தல் போன்ற நிறத்தையுடைய பகவான் நன்கு எழுந்தருளி இருக்கிறாரோ' என்றும், 'என் நெஞ்சினூடே புள்ளைக் கடாகின்ற' என்றும் வருவனவற்றைக் காண்க.

[4] தியானத்திற்குப் பற்றுக்கோடு தெரிவிக்கும் இடங்களிலும் 'தன்னால் விரும்பப்படுகிறவனுக்கு இந்தப் பரமாத்துமா தன் சொரூபத்தைக் காட்டுகிறான்' என்கிறபடியே அவ்வடிவே ஆயிற்றுத்

---

1. *'எல்லாரும் இருக்க, இவருடைய மனத்திலே இப்படிச் செய்வான் என் ?' என்ன, 'இப்படியே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

2. *அநுகூலருடைய மனத்தில் விக்கிரஹரூபமாக வீற்றிருப்பதற்கு ஆப்த சம்வாதம் காட்டுகிறார், 'நஞ்சீயர்' என்று தொடங்கி. தோற்ற அருளிச்செய்து-வியாக்கியானம் செய்து.*

3. *விக்கிரஹ ரூபமாகப் பரந்து இருத்தற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மனமாகிய குகையில்' என்று தொடங்கி. 'குஹாயம்' தைத். ஆரண். 'கஹ்வரேஷ்டம் புராணம்', கடோபநிஷத். 'அரவத்தமளி' என்பது, பெரியாழ்வார் திருமொழி,* 5. 2 : 10.

*'ஏஷாம் இந்தீவர ஸ்யாம: ஹ்ருதயே ஸுப்ரதிஷ்டித:'*

*என்பது, ஸ்ரீராமா.*

4. *'விக்கிரஹம் கற்பிக்கப்பட்டது என்கிறார்களே ?' என்ன, பரமார்த்தம் என்கைக்குப் பிரமாணங்கள் காட்டுகிறார், 'தியானத்திற்கு' என்று தொடங்கி.*

*'தஸ்யஏஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்'*

*என்பது, முண்டகோபநிடதம்.* 3. 2 : 3.

தியானிக்கத் தக்கதாகச் சொல்லுகிறது; பின்பு [1]'இந்த ஆலிங்கன மானது எல்லாப் பொருளுக்கும் சமானமாகக் கடவது,' என்று கொடுப்பதும் அவ்வடிவேயாயிற்று. [2]புறம்புள்ளார் சொன்னபடி சொல்லுகிறார்கள்; நம் ஆழ்வார்கள் போனவழி இதற்கு மேற்பட இல்லை: [3]'இதற்கும் உள்ளே ஒன்று உண்டு' என்று சொல்லு கிறவர்கள், சொரூபத்தின் உண்மை சொல்லுகிறார்களித்தனை; விக்கிரஹம் இல்லை என்று அன்று. புள்ளைக் கடாகின்ற-[4]'அக வாயில் நின்று சுழிக்கு மத்தனையோ?' என்று அவன் விரைந்து வடிம்பு இட்டுத் தாக்க 'ஓம்காண்! நீ அறிந்தாயோ?' என்று தூண்டி மீளாநிற்கும்; [5]'அறிவுள்ளவனுடைய' என்கிறபடியே, பக்ஷபாதத்தோடே சேர்க்கையிலே அன்றோ அவனுக்கும் பணி? கடா கின்ற - [6]நடந்துபோனதாய் மறக்கிறீர்கள் அன்று; இனி வருவதனை உபதேசிக்கிறது அன்று; இப்பொழுது நடப்பதற்கு உபதேசம்

---

1. 'ஏஷ ஸர்வஸ்வ பூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத:' என்பது, ஸ்ரீராமா. யுத். 1 : 13.

ஆக, இதனால், 'உபாசனவேளையில் விக்கிரஹத்தைத் தியானிக்கப்பட வேண்டியதாகச் சொல்லுகையாலும், பல வேளையிலும் கொடுப்பதும் எப்பொழுதும் பார்த்துக்கொண்டே இருப்பதற்கு விஷயமும் விக்கிரஹமே யாகையாலும் விக்கிரஹம் கல்பிக்கப்பட்டது அன்று' என்றபடி.

2. 'ஆனால் ஒரு சிலர் இதற்கு இசையவில்லையே?' என்ன, 'நமக்கு அவர்களைக்கொண்டு காரியம் என்? நம் ஆழ்வார்கள் அருளிச்செய்ததுவே நாம் நம்பத் தகுந்தது' என்கிறார், 'புறம்புள்ளார்' என்று தொடங்கி.

3. ''தத்ஏகாவயவம் தேவம்' என்பது போன்றவைகளால் விக்கிரஹத்தை விட்டு அப்பால் போவான் என்று சொல்லப்படுகின்றதே?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இதற்கு' என்று தொடங்கி. இதற்கும்-விக்கிரஹத்திற்கும்.

4. 'திருவடியை, 'கடாகின்ற' என்று அஃறிணைப் பொருளாகச் சொல்லுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அகவாயில்' என்று தொடங்கி.

5. 'அப்படி ஈஸ்வரனைக்காட்டிலும் திருவடிக்குக் காப்பாற்றுவதில் பாரிப்பு உண்டோ?' என்ன, 'அறிவுள்ளவனுடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'தீமத:' என்பது, ஸ்ரீராமா. சுந். 16 : 4. இங்கு, 'தீமத:' என்பது, திருஷ்டாந்தத்திற்காக வந்ததித்தனை.

6. 'கடாகின்ற' என்றதனை, 'காணீர்' என்றதனோடே கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார் 'நடந்து போனதாய்' என்று தொடங்கி.

வேணுமோ? காணீர் - [1] காண்கின்றிலீர். இப்பொழுது நடக்கிறதும் காணுமலே ஒழிகிறது தடுக்கின்ற நிர்ப்பந்தத்தாலே அன்றே? உங்களுக்குக் குரகோஷம் கேட்கிறது இல்லையோ? பிரசித்தமான பொருளை உபதேசிக்கவேண்டுவதே. காணீர் - உங்களுக்குக் கண்களும் செவிகளும் இன்றிக்கே இருந்தோ தடுக்கிறது? என்னைப் போலே உட்கண்ணுலே காணீர்கோள்! 'நாங்கள் கண்டிலோம்; கண்ட நீ சொல்லிக்காணுய்!' என்றார்கள்; என்ன, சொல்லுகிருள் மேல்:

என் சொல்லிச் சொல்லுகேன் - எனக்குச் சொல்லலாவது இல்லை! என்ன பாசுரமிட்டு எதனைச் சொல்லுவது? [2] உங்கள் கண்களுக்கு விஷயம் ஆகாதவாறு போலே என் வாக்கிற்கும் விஷயம் ஆகிறது இல்லை. [3] இவர்க்கு நெஞ்சு நிறைந்தது வாய் கொள்ளுகிறது இல்லைகாணும்! என் சொல்லிச் சொல்லுகேன் - [4] நான் வலிமை குன்றியவளாக இருப்பதனுலே சொல்லமாட்டேன்; விஷயம் இவ்வளவு என்று சொல்ல முடியாமையாலே சொல்லி முடிக்கப் போகாது; எண்ணிப் பார்த்தற்கு உங்களுக்குப் பரிகரம் இல்லாமையாலே சொல்லத்தான் வேண்டா. அன்னைமீர்காள் - [5] அறிந்த விஷயங்கொண்டு ஒருவருக்கு ஒருவர் அறிவித்துக்கொள்ளல் செய்யலாம் அன்றே எனக்கு ஒத்தவர்கள் ஆனீர்கோளாகில்? என்

---

1. 'இப்படியானுல் உபதேசிப்பது என்?' என்ன, 'காணீர்' என்ற பதத்திற்குப் பொருளை அருளிச்செய்யுமுகத்தால் அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிருர், 'காண்கின்றீலீர்' என்று தொடங்கி. 'காணீர்' என்பதற்குக் 'காண்கின்றீலீர்' என்பதும், 'காணுங்கோள்' என்பதும் பொருள். அவற்றுள், 'காணுங்கோள்' என்ற இரண்டாவது பொருளை, காதுகளாலும் புறக்கண்களாலும் உட்கண்ணுலும் காணவேண்டும் என்று மூவகைப்படுத்தி அம்மூவகைப் பொருள்களையும் முறையே அருளிச்செய்கிருர், 'உங்களுக்கு' என்று தொடங்கி. குர கோஷம் – குளம்பின் ஒலி.

2. 'பாசுரமிட்டுச் சொல்ல ஒண்ணுதோ?' என்ன, 'உங்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

3. 'என்நெஞ்சினூடே' என்பதனையும், 'என் சொல்லிச் சொல்லுகேன்?' என்பதனையும் கூட்டி ரசோக்தியாக அருளிச்செய்கிருர், 'இவர்க்கு' என்று தொடங்கி.

4. சொல்லப் போகாமைக்கு மூன்று காரணங்கள் அருளிச்செய்கிருர், 'நான் வலிமை' என்று தொடங்கி.

5. 'எல்லாம் சொல்லப்போகாவிட்டாலும், அறிந்த அளவு சொல்ல ஒண்ணுதோ?' என்ன, 'அறிந்த' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். 'எனக்கு ஒத்தவர்கள்' என்றது, தோழிமார்களை.

சொல்லிச் சொல்லுகேன் அன்னைமீர்காள் - [1] எனக்கு ஓடுகிற வியசனத்துக்குப் பாசுரம் இல்லை; நிலையை அறியும் ஞானம் இன்றிக்கே பழமை கொண்டாடுகின்றீர்கோள் இத்தனையன்றோ? விலக்குவதற்கு என்னைப் பின்பற்றி வருகின்றவர்களாமத்தனையோ வேண்டுவது? [2] 'எங்களுக்குக் காணவும் கேட்கவும் கண்ணும் செவியும் இல்லையாகில், நீதான் செய்யப் பார்த்தது என்?' என்ன, 'ஹிதம் சொல்லி மீட்க நினைப்பார் இல்லாத ஊரிலே போய்ப் புகுமித்தனை அன்றோ?' என்கிறாள். [3] 'முத்தன் சனங்களின் மத்தியில் உள்ள இந்தச் சரீரத்தை நினைப்பது இல்லை,' என்கிறபடியே, பிரிந்தவர்களை நினைக்க ஒட்டாத தேசம் அன்றோ?

வெள்ளம் சுகமவன் - இன்பவெள்ளத்தையுடையவன். என்றது, 'பிரிந்திருக்கும் நிலையிலும் கலந்திருக்கும் காலத்தில் உண்டாகிற பேரின்பம் மாறாதவன்' என்றபடி. 'என்றது, என்சொல்லியவாறோ?' எனின், 'பிரிவிலும் அரையாறு படாதபடிகாணும் கலவியில் அவன் தேக்கின பேரின்பம் இருந்தபடி' என்பதனைச் சொல்லியபடி. 'வெள்ளை' என்பது பாடமானபோது, மறுவற்ற இன்பம் என்று பொருள் கொள்க. அவன் வீற்றிருந்த - [4] 'இட்ட கால் இட்ட கையளாய் இருக்கிற இருப்புக்கு எதிர்த்தட்டாயிருக்கிற இருப்பு அன்றோ அது?' என்றது, இத்தலையைத் துடிக்கவிட்டுத் தன் ஐஸ்வரியம் தோற்ற மேலான சுகத்தோடு இருக்கிறபடியைத் தெரிவித்தபடி. அன்றிக்கே, [5] இத்தலையைத் தோற்பித்த தன் வெற்றி

1. 'அன்னைமீர்' என்பதற்கு வயது முதிர்ந்தவர்கள் என்று மேலே பொருள் அருளிச்செய்தார்; நியமிக்கின்றவர்கள் என்று கொண்டு வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார், 'எனக்கு' என்று தொடங்கி. 'பழமை கொண்டாடுகின்றீர்கோள்' என்று மேலே கூறியதனை விவரணம் செய்கிறார் 'விலக்குவதற்கு' என்று தொடங்கி.

2. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'எங்களுக்கு' என்று தொடங்கி.

3. 'அவனே வாரானோ?' என்ன, 'முத்தன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

'நோபஜனம் ஸ்மரந் இதம் சரீரம்'

சாந்தோக்யம். 8. 12 : 3.

4. 'வீற்றிருந்த' என்பதற்கு எதிர்த்தட்டான பொருள் அருளிச்செய்கிறார், 'இட்டகால்' என்று தொடங்கி.

5. 'வீற்றிருந்த' என்பதற்கு, 'அரசனாய் இருந்த' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'இத்தலையை' என்று தொடங்கி.

எல்லாம் அவ்விருப்பிலே தோற்றும்படி இருக்கிறபடி என்னுதல். [1] அவன் மெய்ம்மறந்து அப்படி இருந்தால் நாமும் மெய்ம்மறந் திருக்கவோ? நிறைவாளனாய் அவன் செருக்காலே இருந்தால், குறை வாளராய் நோவுபடுகிற நாமும் இருக்கவோ? [2] அவன் முறை தப்ப நின்றால் நாமும் முறை தப்புமித்தனை அன்றோ? [3] பிரிந்தால் முறை பார்த்திருக்கலாம்; விஷயத்துடனே கலந்தோமாகில் அன்றோ நாம் ஆறி இருக்கலாவது? முறையை அழித்தாகிலும் மடலை எடுத்துக் கொண்டு போமித்தனை அன்றோ? [4] 'நமக்கே நலம் ஆதலின்' என்னக் கடவதன்றோ?

வேத ஒலியும் - அவன் நெஞ்சு ஒழிந்து [5] பழம்புணர்ப்புக் கேளாநின்றான்காணும். என்றது, பண்டு தான் வென்ற வெற்றி மாலைகள் கேட்கையைத் தெரிவித்தபடி. அதாவது, 'புண்டரீ காக்ஷனே! உனக்கு வெற்றி' என்கிற வெற்றி மாலைகளைத் தெரி வித்தபடி. விழா ஒலியும் - இவளைத் தோற்பித்ததற்கு [6] நெய்யாடல் போற்றுகிறபடி. அரு-தீர்த்தம் கொடுத்த பிற்றை நாளே திருமுளைச் சாத்தாநிற்குமத்தனை. [7] சமந்தகமணி கைப்பட்ட பின்பு அக்குரூரன் அடுத்து அடுத்து அஸ்வமேதம் செய்தாற்போலே, அவர்க்கும் அடுத்து அடுத்துத் திருவிழாவாகச் செல்லுகிறதித்தனை; பெண்மணி அன்றோ இவள்? இவள் இருக்கிற இடம் அன்றோ மங்கள ஒலிகள் மாறிக்கிடக்கிறது? பிள்ளைக்குழா விளையாட்டு ஒலியும் அரு-[8] பருவம்

1. 'அவன் அப்படி இருந்தால் நீ அவனை வெறுக்காமல், 'அவன் இருக்கும் இடத்தைச் 'சேர்வன்' என்பது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன் மெய்ம்மறந்து' என்று தொடங்கி. மெய்ம் மறந்து - நம்முடைய வைலக்ஷண்யத்தை மறந்து. அப்படி இருந்தால் - விருப்பில்லாமல் இருந்தால். மெய்ம்மறந்து - அவனுடைய வைலக்ஷண் யத்தை மறந்து.

2. 'அவன் வாராதிருந்தால் நாம் விரையலாமோ?' எனின், 'அவன் முறை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'அவன் முறை தப்பினானேயாகில், நாம் முறை தப்புவது முறையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பிரிந்தால்' என்று தொடங்கி.

4. 'அப்படிச் செய்தார் உளரோ?' என்ன, 'நமக்கே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, பெரிய திருமொழி. 9. 3: 9.

5. பழம்புணர்ப்பு – பழைய வெற்றி மாலைகள்.
'ஜிதந்தே புண்டரீகாக்ஷ' என்பது போன்றவைகள்.

6. நெய்யாடல் போற்றுகை – நெய் இறைத்து விளையாடுதல்.

7. விழா அறாமல் இருத்தலைத் திருஷ்டாந்தமூலமாக விளக்குகிறார் 'சமந்தகமணி' என்று தொடங்கி.

8. 'பிள்ளைக்குமாம் விளையாட்டு' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'பருவம் நிரம்பி' என்று தொடங்கி.

நிரம்பி இருக்கச்செய்தே விலக்குகிறவர்கள் இருக்கிற ஊரை விட்டு, பருவம் நிரம்புவதற்கு முன்னே பகவானுடைய அனுபவமே யாத்திரையாகச் செல்லுவார் இருக்கிற ஊரில் போய்ப் புகுமித்தனை என்கிறாள். [1] அவ்வூரில் பருவம் நிரம்பாத பிள்ளைகளும் அகப்பட மகரநெடுங் குழைக்காதனுடைய வடிவழகிலே தோற்று, வாய் வெருவாநிற்பர்கள். [2] 'விளையாடும் இளம்பிள்ளைகளும் வீடுகளின் வாசல்களில் கூட்டங்கூடி ஒருவர்க்கு ஒருவர் இராமதோத்திர விஷயமான கதைகளையே செய்தார்கள்' என்கிறபடியே.

[3] 'ராமோ ராமோ ராம இதி - சோறு சோறு சோறு என்பாரைப் போலே. ப்ரஜாநாம பவந் கதா: - பிறந்தவர்களுக்கு எல்லாம் பாசுரம் இதுவே. ராமபூதம் ஜகத் அபூத் - நாடு அடங்க இராமன் ஒருவன் ஆனபடி. 'நித்தியவிபூதியில் பரிமாறக்கடவது இங்கே பரிமாறுகைக்குக் காரணம் என் ?' என்னில், ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி - நாடு அடங்கலும் தந்தாமுடைய கர்மங்களின் பலன்களை அனுபவிக்கப் பெற்றார்கள் இல்லை; இராமபாக்யமே அனுபவித்து விட்டது.' [4] 'நசாக்நிஜம் பயம் கிஞ்சித் - நெருப்பும் சோறு வேக வேண்டிய உஷ்ணத்துக்கு மேற்பட உடைத்தாவது இல்லை. நாப்ஸு

1. 'இளமைப்பருவத்திலும் பகவானை அனுபவிக்கின்றவர்களாய் இருப்பார்களோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவ்வூரில்' என்று தொடங்கி.

2. அவ்வாறு இருப்பார்கள் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'விளையாடும்' என்று தொடங்கி.

'பாலா அபி க்ரீடமாநா க்ருஹ த்வாரேஷு ஸங்கஶ:
ராமாபிஷ்டவ ஸம்யுக்தா: சக்ருரேவ மித: கதா:

என்பது, ஸ்ரீராமா. அயோத். 6 : 16.

3. 'சிறுவர்களே அன்றி அங்குள்ளவர் எல்லாரும் இப்படியே' என்று கூறுதற்குத் திருவுள்ளங்கொண்டு, அதற்குப் பிரமாணமும் பிரமாண சுலோகத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'ராமோ ராமோ' என்று தொடங்கி.

'ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா:
ராமபூதம் ஜகத்அபூத் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி'

என்பது, உத்தரராமாயணம்.

4. 'அப்படி அவர்கள் தங்களுடைய கர்மங்களின் பலன்களை அனுபவிக்கவில்லையோ?' என்ன, இல்லை என்பதற்குப் பிரமாணமும், பிரமாண சுலோகத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'நசாக்நிஜம்' என்று தொடங்கி.

'நசாக்நிஜம் பயம் கிஞ்சித் நாப்ஸு மஜ்ஜந்தி ஜந்தவ:

என்பது, சங்க்ஷேப ராமாயணம், 1 : 92.

மஜ்ஜந்தி ஜந்தவ: - கொண்டு ஆழக்கடவ தண்ணீர் தானே கொண்டு மிதக்கப் புக்கது இராமசரத்துக்கு அஞ்சி. [1] பண்டே கைகண்டு இருப்பது ஒன்றே தண்ணீர்தான். [2] வேலை வேவ வில் வளைத்தவன் அன்றோ? திருப்பேரெயில் சேர்வன் நானே - [3] வென்றார் இருந்த இடத்தே தோற்றார் சென்று விழுமத்தனை அன்றோ? [4] தாமரைக்கண்ணன் என் நெஞ்சினூடே அன்றோ? ஆகையாலே 'உனக்கு வெற்றி' என்று சென்று விழுமத்தனையேயாம். (1)

686

நானக் கருங்குழல் தோழிமீர்காள்!
அன்னையர் காள்!அயற் சேரியீர்காள்!
நான்இத் தனிநெஞ்சம் காக்கமாட்டேன்
என்வசம் அன்றுஇது இராப்பகல்போய்த்
தேன்மொய்த்த பூம்பொழில் தண்பணைசூழ்
தென்திருப் பேரெயில் வீற்றிருந்த
வானப் பிரான்மணி வண்ணன்கண்ணன்
செங்கனி வாயின் திறத்ததுவே.

பொ-ரை: 'நறுநாற்றத்தையுடைய கரிய கூந்தலையுடைய தோழிமீர்காள்! தாய்மார்காள்! அருகில் உள்ள சேரியில் உள்ளவர்காள்! இந்தத் தனித்த நெஞ்சத்தினைக் காக்கமாட்டேன்; என் வசத்தில் இருப்பது அன்று; இந்நெஞ்சமானது, இரவும் பகலும் சென்று, வண்டுகள் மொய்த்திருக்கின்ற பூக்கள் நிறைந்த சோலைகளும் குளிர்ந்த வயல்களும் சூழ்ந்திருக்கின்ற தெற்குத்திசையிலேயுள்ள திருப்பேரெயில்

---

1. 'இராமசரத்துக்கு அஞ்சி இருக்குமோ?' என்ன, 'பண்டே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. கடலை எரித்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'வேலை வேவ' என்று தொடங்கி. இது, திருச்சந்த விருத்தம், 31.

3. 'தான் சேருகிறது என்? அவன் வரப் பார்த்திருந்தாலோ?' என்ற சங்கைக்குத் திருப்பாசுரத்தின் முன் இரண்டு அடிகளிலே நோக்காக, வேறும் ஒரு விடை அருளிச்செய்கிறார், 'வென்றார்' என்று தொடங்கி. முன்னே கூறிய விடை, 'முத்தன்' என்று தொடங்கி. மேலே அருளிச்செய்த வாக்கியம். பக். 111.

4. 'அப்படித் தான் தோற்றாளோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தாமரைக்கண்ணன்' என்று தொடங்கி. 'ஜிதந்தே புண்டரீகாக்ஷ' என்பது, ஜிதந்தா.

என்ற திவ்வியதேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற வானப்பிரானும் மணிவண்ணனும் கண்ணனுமான எம்பெருமானது சிவந்த கொவ்வைக் கனி போன்ற திருவதரத்தினிடத்தது' என்கிறாள்.

வி - கு: நானம் – கத்தூரியுமாம். சேரி – தெரு; அல்லது, ஊர். வானப்பிரான் - நித்தியசூரிகளுக்குத் தலைவன்; வானம் - இடவாகு பெயர். வாயின் திறத்தது - வாயினிடத்தது.

ஈடு: இரண்டாம் பாட்டு. [1]தாய்மார் முகம் பார்த்துச் சொன்னாளாய் அன்றோ மேற்பாசுரத்தில் நின்றது? 'இவள் இவ்வளவிலே மீளுமவள் அன்றிக்கே இருந்தாள்' என்று தாய்மாரோடு தோழிமாரோடு அயற்சேரியுள்ளாரோடு வாசி அற வந்து திரண்டு ஹிதம் சொல்லப் புக்கார்கள். 'உங்களுடைய நல்வார்த்தையைக் கேளாதபடி நிரவதிகமான பரத்துவ ஸௌலப்பியங்களையுடையவன் பக்கலிலே சென்று சேர்ந்த என் நெஞ்சினைத் தகைய மாட்டுகின்றிலேன்; என் நெஞ்சினைக் கடல் கொண்டது காணுங்கோள்!' என்கிறாள்.

நானம் கருங்குழல் தோழிமீர்காள் - [2]அவர்களுக்கு ஒரு பழி சொல்லுமாறு போலே சொல்லுகிறாள், அவர்கள் தலையான நறு நாற்றத்தையுடையவர்களாய் வந்து நிற்கையாலே. நானம் - நறு நாற்றம். [3]மயிர்பட மாந்தும்படி அன்றோ இவள்படி? [4]உங்கள் சந்நிதி இல்லையாகில் நான் இங்கே இரேனோ? மை வண்ண நறுங்

1. திருப்பாசுரமுழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'வானப்பிரான் மணிவண்ணன்' என்பனவற்றைத் திருவுள்ளம் பற்றிப் 'பரத்துவ சௌலப்பியங்களையுடையவன்' என்கிறார்.

2. நானக் கருங்குழல் தோழிமீர்காள்' என்று விளிக்கின்றவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'அவர்களுக்கு' என்று தொடங்கி. 'தலையான' என்பதற்குத் 'தலையிலே உண்டான' என்பதும், 'சிறந்ததான' என்பதும் பொருள்.

3. 'கருங்குழல்' என்றதனைக் கடாட்சித்து ரசோக்தியாக, பாவம் அருளிச்செய்கிறார், மயிர்பட' என்று தொடங்கி. மயிர்பட மாந்துகையாவது, இவர்களுடைய கருங்குழல், அவனுடைய கருங்குழலை நினைப்பூட்டுவதாயிருத்தலின், அதனால் உண்டாகும் துன்பத்தைத் தெரிவித்தபடி. கவரிமான் மயிர் நீப்பின் உடனே இறக்கும் என்பது தொனிப்பொருள்.

'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்'

என்பது, திருக்குறள்.

4. 'நானக் கருங்குழல்' என்று விளிக்கின்றவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'உங்கள்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'மைவண்ணம்' என்று தொடங்கி. இது, திருநெடுந்தாண்டகம். 21.

குஞ்சியினை நினைப்பு ஊட்டுகிறதாய் இராநின்றதே இவர்கள் குழல். [1] 'நம் இருவர்க்கும் இன்பமும் துன்பமும் ஒன்றே' என்று இவளுடைய இன்ப துன்பங்களையே தங்களுக்கும் இன்ப துன்பங்களாக இருக்கை அன்றோ தோழிமாராவது? இவள் மயிர்முடி பேணாதே நறுநாற்றங் காணில் முடியும்படியாக இருக்க, இவர்கள் கூந்தலைப் பேணி நறு நாற்றங்கொண்டு காரியங்கொள்ளப் போருமோ?' என்னில், [2] கலவியில் இவளோடு அவன் நெருங்க நெருங்கச் சாத்திக் கழித்தபடியே எல்லாவற்றையும் கொடுப்பது இவர்களுக்கே; அப்போது அவன் செய்த மிகுந்த திருவருளாலே, அது சருகு ஆனாலும் அவர்கள் மாறாதே வைத்துக்கொண்டு இருப்பர்களே! அது இவளுக்கு நினைப்பு ஊட்டுவதாய் நலிகிறபடி. அன்றிக்கே, 'இவர்கள் தாம் நறுநாற்றங் கொண்டு காரியங்கொள்ளவும் வல்லவர்கள்' என்னுதல். என்றது, 'தாங்கள் தளர்ந்து காட்டில் இவள் மிகவும் தளரும் என்று ஒப்பித்துக் கொண்டு இருப்பர்கள்,' என்றபடி. [3] தங்கள் தங்களுடைய பொருமையும் பாரார்களாயிற்று, இவளைப் பிழைப்பிக்கைக்காக.

[4] அகாரத்தின் பொருளான அவனும் ஜீவித்து மகாரத்தின் பொருளான இவனும் ஜீவித்துப் பலகாலம் போகச்செய்தேயும், உஜ்ஜீவிக்கப் பெறாதே நடுவே கிடந்து போயிற்றே. இனி, சேர்க்கின்றவர்களுடைய காரியம் அன்றோ உஜ்ஜீவிப்பிக்கை? அப்படியே இவளை இசைவித்து உஜ்ஜீவிப்பிக்க வேணுமே. [5] 'சேஷிக்கு அதிசயம் வேணும்' என்றிருப்பார், தங்கள் தங்களுடைய துக்கத்தைப்

---

1. 'ஏகம் துக்கம் ஸுகஞ்ச நௌ'
என்பது, ஸ்ரீராமா. கிஷ். 5 : 18.

2. மேலே ஒத்திருக்கையாலே நினைப்பூட்டுகிறது என்று அருளிச் செய்தார். இங்கு, ஸம்பந்தி தரிசனத்தாலேயும் நினைப்பூட்டுகிறது என்று அருளிச்செய்கிறார், 'கலவியில்' என்று தொடங்கி.

3. 'தங்களுக்குத் தளர்த்தி உண்டாயிருக்க, ஒப்பனை பொறுக்குமோ?' என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தங்கள்' என்று தொடங்கி.

4. 'இவர்களாலே உஜ்ஜீவிக்க வேண்டுமோ? தானே உஜ்ஜீவிக்க ஒண்ணாதோ?' என்ன, 'ஆசாரியன் இல்லாவிட்டால் உஜ்ஜீவனம் உண்டோ?' என்று அதற்குச் சுவாபதேசத்தாலே விடை அருளிச் செய்கிறார், 'அகாரத்தின்' என்று தொடங்கி.

5. 'தங்கள் தங்களுடைய பொருமையும் பாரார்களாயிற்று' என்று மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'சேஷிக்கு' என்று தொடங்கி.

பாரார்களே அன்ருே? [1] பெருமாளிலும் துக்கம் விஞ்சி இருக்கச் செய்தே பெருமாளுடைய இரட்சணத்துக்காக இளைய பெருமாள் தம்மைப் பேணிக்கொண்டு தரித்து இருக்குமாறு போலே. [2] இளைய பெருமாள் தாம் பரமபோகி அன்ருே? [3] 'ஸௌமித்ரே பஶ்ய பம்பாயா:- அங்குத்தை இனிமை நெஞ்சிலே படச்செய்தேயும், பெருமாளுக்கு வேறு ஒன்றிலே நோக்கை விளைக்கைக்காக முகத்தை மாற வைத்துக் கொண்டு நின்ருர்; 'பிள்ளாய், பாராய் இது இருந்தபடி !' என்கிருர். நானம் கருங்குழல் - [4] ஒரு புலவன் 'நானம் என்பது குழலுக்கு விசேஷணம் ஆகையாலே, நாவி போன்ற குழல்' என்ருன். அதனுல் நினைக்கிறதும் நறுநாற்றத்தை.

தோழிமீர்காள் - [5] பிரியம் சொல்லுவாரும் ஹிதம் சொல்லுவார் கோடியிலே புகுவதே ! தோழிமீர்காள் ! அன்னையர்காள் ! அயற்சேரி யீர்காள் ! - [6] தான் அறிந்து தோழிமார்க்குச் சொல்லாதே இருப்பது ஒரு நிலையும், தோழிமாரும் தானும் அறிந்து தாய் அறியாதே இருப்பது ஒரு நிலையும், தானும் தோழியும் தாயும் அறிந்து பிறர் அறியாதே

---

1. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிருர், 'பெருமாளிலும்' என்று தொடங்கி.

2. 'பெருமாளுடைய இரட்சணத்துக்காக' என்பதற்கு, 'இவர் தாம் பிரிவின் துன்பத்தைப் பொறுக்கமாட்டாதவரோ?' என்ன, 'இளைய பெருமாள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். 'போகி' என்பதற்கு, 'இன்பத்தை அனுபவிக்கிறவன்' என்பதும், 'பாம்பு' என்பதும் பொருள்.

3. அப்படித் தரித்திருந்தமைக்குப் பிரமாணம் காட்டுகிருர், 'ஸௌமித்ரே' என்று தொடங்கி.

'ஸௌமித்ரே பஶ்ய பம்பாயா: சித்ராஸு வநராஜிஷு
கிந்நரா நரஶார்த்தூல விசரந்தி ததஸ்தத:'

இது, ஸ்ரீராமா. கிஷ்கிந். 1 : 60. 'ஸௌமித்ரே பஶ்ய பம்பாயா:' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'அங்குத்தை' என்று தொடங்கி. இங்கே, கம்பராமாயணம் பம்பாநதிப்படலம் 10 முதல் 35 முடியவுள்ள செய்யுள்களைப் படித்தறிதல் தகும்.

4. 'நானம்' என்பதற்கு, கஸ்தூரி என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிருர், 'ஒரு புலவன்' என்று தொடங்கி.

5. 'தோழிமீர்காள்' என்று விளிக்கின்றவளுடைய மனேபாவத்தை அருளிச்செய்கிருர், 'பிரியம்' என்று தொடங்கி.

6. 'தோழிமீர்காள்! அன்னையர்காள் ! அயற்சேரியீர்காள் !' என்று விளித்ததற்கு, முன்னுரையில் அருளிச்செய்த கருத்தைத் தவிர, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிருர், 'தான் அறிந்து' என்று தொடங்கி.

இருப்பது ஒரு நிலையுமாயிற்று இருப்பது; அந்நிலை குலைந்து எல்லாரையும் ஒக்க விளிக்கும்படி ஆயிற்று உலகப் பிரசித்தமானபடி. [1] பிறர்க்குச் சொல்ல வேண்டுவது இல்லை அன்றோ? ஆயிருக்க, பிரதி கூலர்க்குங்கூட அருள் பண்ணவேண்டும்படிகாணும் இவளுடைய துன்ப நிலை. [2] 'மாம் ஸமாநய துக்கிதாம் - துக்கத்தை அடைந்திருக்கிற என்னை ஸ்ரீராகவனோடு சேர்ப்பாயாக' என்கிற படியே, 'என்னை நீ பெருமாளுடனே கூட்ட வல்லையே' என்றாளன்றோ இராவணனை? [3] 'அப்படியே என் விஷயத்தில் அருள்செய்' என்றும், 'வாக்கினால் தருமத்தை அடையக்கடவாய்' என்றும், ஒரு திருவடி போல்வார்க்குச் சொல்லக்கடவ வார்த்தையை அன்றோ, பிரித்தவனைப் பார்த்துச் சொல்லிற்று?

[4] 'எங்ஙனே நான் உகந்தது உகந்தீர்கோள்!' என்பாள், '**தோழிமீர்காள்!**' என்கிறாள். 'எங்ஙனே எனக்குப் பிரியமான ஹிதத்தைப் பார்த்தீர்கோள்!' என்பாள், '**அன்னையர்காள்!**' என்கிறாள். 'எங்ஙனே நொதுமலாளர்களாய் இருந்தீர்கோள்!' என்பாள், '**அயற்சேரியீர்காள்!**' என்கிறாள். 'எங்கள் பக்கல் குறை உண்டோ? நீ மரியாதை தப்பினவாறே நாங்களும் முறை தப்பினோமித்தனை அன்றோ?' என்ன, 'நான் இத்தனி நெஞ்சம் காக்க மாட்டேன் - [5] 'உங்களுக்கும் இங்ஙனே ஏதேனும் இருப்பது ஒரு காரணம்

---

1. 'அயற்சேரியில் உள்ளார்க்குத் தன் நிலையைச் சொல்லுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பிறர்க்கு' என்று தொடங்கி.

2. 'இப்படிச் சொன்ன பேர் உளரோ?' என்ன, 'மாம் ஸமாநய துக்கிதாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

'ஸாது ராவண ராமேண மாம் ஸமாநய துக்கிதாம்
வநே வாஸிதயா ஸார்த்தம் கரேண்வேவ கஜாதிபம்'

என்பது, ஸ்ரீராமா. சுந். 21 : 18.

3. 'இதனால் பிரதிகூலர்க்கும் அருள் செய்ய வேண்டும்படி இருக்கும் என்று தோற்றிற்றோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அப்படியே' என்று தொடங்கி.

'ததா குரு தயாம் மயி' என்பது, ஸ்ரீராமா. சுந்.
'வாசா தர்ம மவாப்நுஹி' என்பது, ஸ்ரீராமா. சுந். 39 : 10.

4. மூவரையும் விளிப்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'எங்ஙனே' என்று தொடங்கி.

5. கருத்து அருளிச்செய்கிறார், 'உங்களுக்கும்' என்று தொடங்கி. இது, 'கண்ணன் செங்கனிவாயின் திறத்தது' என்றதிலே நோக்கு. இதனை விவரணம் செய்கிறார், 'நீங்களும்' என்று தொடங்கி. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'உங்கள் அளவு அன்று என்றபடி' என்று.

உண்டோ முறை தப்புகைக்கு நான்? நீங்களும் ஏதேனும் நெஞ்சு இழந்தீர்களோ? உங்கள் அளவு அன்று' என்றபடி. இத்தனி நெஞ்சம் - உங்களில் நான் வேறுபட்டவள் ஆனாற்போலேயாயிற்று, என்னிலும் என் நெஞ்சு வேறுபட்டபடி. என்றது, 'சொல்லிற்றுக் கேளாத ஸ்வதந்திரமான நெஞ்சம்' என்றபடி. [1]'அச்செயல் அவருக்குத் தக்கதாம்' என்று இருப்பார் நெஞ்சமும் இதற்கு ஒப்பு அன்று. காக்கமாட்டேன் - [2]'முந்துற்ற நெஞ்சே, இயற்றுவாய் எம்மோடு நீ கூடி' என்று இருக்குமித்தனை ஒழிய, இவளால் தடுத்து வைக்கப் போகாதே. [3]'தாய் தந்தையர்கள் என்ன செய்வார்கள்?' என்கிறபடியே, ஒருவரையும் பாராதே போகாநின்றது; ஒன்று கேட்டு மீளும் அளவு அன்று: [4]மீட்கலாம் அளவும் காற்கட்டிப் பார்த்து, முடியாமையாலே கைவாங்கினமை தோற்றுகிறதுகாணும், '**மாட்டேன்**' என்ற உறைப்பாலே. [5]சம்சாரிகள் ஐம்புல இன்பங் களினின்றும் மீளமாட்டாதவாறு போலே அன்றோ, இவர் பகவத் விஷயத்தினின்றும் மீளமாட்டாதபடி?

[6]'**மாட்டேன்**' என்று சொல்லுகிற இதுவார்த்தையோ? எல்லா அளவிலும் தங்கள் தங்கள் மனம் தங்கள் தங்களுக்கு அடங்கியதாக

---

1. *'இத்தனி' என்றதிலேயுள்ள 'இ' என்ற சுட்டுக்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'அச்செயல்' என்று தொடங்கி. 'தத் தஸ்ய ஸத்ருஸம் பவேத்' என்பது, ஸ்ரீராமா. சுந்,* 39 : 30. *'என்றிருப்பர்' என்றது, பிராட்டியினை.*

2. *'முந்துற்ற' என்பது, பெரிய திருவந்.* 1.

3. *''போகாதே' என்கிறது என்? தடுத்தால் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தாய் தந்தையர்கள்' என்று தொடங்கி.*

*'குரவ: கிம் கரிஷ்யந்தி தக்தாநாம் விரஹாக்நிநா'*

*என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா.* 5. 18 : 22. *மேற்கூறியதனை விவரணம் செய்கிறார், 'ஒன்று கேட்டு' என்று தொடங்கி.*

4. *காவேன் என்னுமல், 'காக்கமாட்டேன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'மீட்கலாம் அளவும்' என்று தொடங்கி.*

5. *மேலதற்குச் சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார் 'சம்சாரிகள்' என்று தொடங்கி*

6. *மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'மாட்டேன்' என்று தொடங்கி.*

இருக்க வேண்டாவோ?' என்ன, என் வசம் அன்று இது - என் செய்வோம், [1] தாய் வேறு கன்று வேறு ஆக்கும் விஷயமானல்? கைகேயி சொற்கேட்டு ஸ்ரீபரதாழ்வான் அரசினைச் செலுத்தும் அன்று ஆயிற்று, இவளும் இத்தாயார் வார்த்தை கேட்டு மீளுவது. [2] 'இப்போது நான் உங்கள் மகள் அன்றோ? என்னைப் போலும் அன்றே என் நெஞ்சு?' என்றது, [3] எனக்குத் தான் என்று இருக்கும் நிலை குலைந்தது, தன் வழியே நான் ஒழுகும்படியாயிற்று என்றபடி. [4] 'தங்கள் தங்களுடைய மனம் அடங்கியிராது போயினும், அடங்கியிருப்பது ஒரு போது பார்த்து ஹிதம் சொல்ல வேண்டாவோ?' என்ன, இராப்பகல் போய் - [5] படைக்கப்பட்ட காலத்திலே இதற்கு ஹிதம் சொல்லலாவது, [6] ஒரு போது காண்கின்றிலேன்; ஒருபோது பகவத்விஷயத்திலும் கைவைத்து, ஒருபோது சம்சார யாத்திரையிலும் கை வைக்கும் அளவு அன்றே, இவளுடைய ஈடுபாடு. [7] இங்கே இருப்பது ஒரு போது உண்டாகில் அன்றோ ஒன்று சொலலி மீட்கலாவது?

தேன் மொய்த்த பூம்பொழில் தண்பணை சூழ் திருப்பேரெயில் - [8] இது மீட்கலாம் விஷயத்திலோ அகப்பட்டது? அவ்வூரில் இனிமையிலே படிந்தாரையும் மீட்கப்போமோ? தேன் - வண்டு.

---

1. தாயின் தானத்திலே, தலைமகள்; கன்றின் தானத்திலே, மனம். 'தாயாகிய கைகேசியையும், கன்றாகிய ஸ்ரீபரதாழ்வானையும் பிரிக்கக் கூடிய விஷயம்' என்பதும் பொருள். மேற்கூறியவதனைத் திருஷ்டாந்த மூலமாக விவரணம் செய்கிறார். 'கைகேயி' என்று தொடங்கி.

2. 'இது' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'இப்போது' என்று தொடங்கி.

3. 'என்னைப் போலும் அன்றே' என்றதனை விவரணம் செய்கிறார் 'எனக்கு' என்று தொடங்கி.

4. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'தங்கள் தங்களுடைய' என்று தொடங்கி.

5. இராப்பகல் அங்கே ஈடுபட்டது என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'படைக்கப்பட்ட' என்று தொடங்கி.

6. 'ஒரு காலம் காணுமைக்குக் காரணம் யாது?' என்ன. 'ஒரு போது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

7. 'போய்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார். 'இங்கே' என்று தொடங்கி.

8. 'தேன்மொய்த்த' என்றது முதல், 'செங்கனி வாயின் திறத்ததுவே' என்றது முடிய, பாவம் அருளிச்செய்கிறார், 'இது மீட்கலாம்' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார், 'அவ்வூரில்' என்று தொடங்கி.

பூத்த பொழிலையும் குளிர்ந்த நீர் நிலங்களையுமுடைய தென்திருப் பேரெயில். வீற்றிருந்த - [1] பரமபதத்தில் இருப்பு அடங்கலும் தோற்றும்படி இருக்கை. [2] அவ்விடம் போன்றது அன்றே இவ்விடம்? ஒருவர் கூறை எழுவர் உடுக்கிற இடம் அன்றோ? அவ்விடத்தைப் போன்று இவ்விடத்தையும் திருத்திக்கொண்டிருக்கிற இடம் அன்றோ? வானப்பிரான் - இதனால் கண்ணழிவற்ற மேன்மையைச் சொல்லுகிறது. தென்திருப்பேரெயில் வீற்றிருந்த வானப்பிரான் - [3] ஸ்ரீவைகுண்டத்தில் இருப்பை நமக்காக இங்கே இருக்கிற உபகாரகன். மணி வண்ணன் - மேன்மை இல்லையாகிலும் விட ஒண்ணாத வடிவில் பசை இருக்கிறபடி. கண்ணன் - [4] அங்குள்ளார்க்குப் படி விடும் உடம்பை இங்குள்ளார்க்கு வரையாதே கொடுத்துக்கொண்டு இருக்கிறவன். ஆக, 'மேன்மை அளவிடவோ? வடிவழகு அளவிடவோ? நீர்மை அளவிடவோ?' என்பதனைத் தெரிவித்தபடி. செங்கனி வாயின் திறத்ததுவே - [5] கிண்ணகத்தில் ஒரு சுழியிலே அகப்படுவாரைப்போலே, வாய்க்கரையிலே அகப்பட்டது; [6] ஆசைப் பட்ட விஷயத்தைக் கரை கண்டது ஆகில் அன்றோ மீளுவது? [7] சிவந்து கனிந்த திருப்பவளத்தின் இடையாட்டத்தது: [8] இது மீள நினைக்கில் அன்றோ உங்கள் வார்த்தை கேட்கைக்கு அவகாசம் உள்ளது? (2)

---

1. 'வீற்றிருந்த' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'பரம பதத்தில்' என்று தொடங்கி.

2. பரமபதத்தில் இருப்பதைக்காட்டிலும் இங்கு இருப்பதற்கு ஆதிக்கியத்தையும், அதற்குக் காரணத்தையும் அருளிச்செய்கிறார், 'அவ் விடம்' என்று தொடங்கி.

3. 'பிரான்' என்றதற்கு, வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'ஸ்ரீவைகுண்டத்தில்' என்று தொடங்கி.

4. 'வானப்பிரான், மணிவண்ணன்' என்ற இரண்டனையும் கூட்டிக் 'கண்ணன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அங்குள்ளார்க்கு' என்று தொடங்கி.

5. மற்றைய உறுப்புகள் இருக்க, 'செங்கனிவாய்' என்று விசேடித்ததற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'கிண்ணகத்தில்' என்று தொடங்கி. கிண்ணகம் - ஆற்றுப் பெருக்கு. வாய்க்கரை - அதரம். 'மேல்' என்பது, தொனிப்பொருள்.

6. 'திறத்ததுவே' என்ற ஏகாரத்திற்குப் பொருள், 'ஆசைப்பட்ட' என்று தொடங்கும் வாக்கியம்.

7. 'திறம்' என்பதற்குக் கூட்டம் என்று மேலே பொருள் அருளிச் செய்தார். 'இடையாட்டம்' என்று வேறும் ஒரு பொருள் அருளிச் செய்கிறார், 'சிவந்து' என்று தொடங்கி.

8. 'திறத்ததுவே' என்ற ஏகாரத்தின் பொருள், 'இது மீள' என்று தொடங்கும் வாக்கியம்.

687

செங்கனி வாயின் திறத்ததாயும்
செஞ்சுடர் நீள்முடி தாழ்ந்ததாயும்
சங்கொடு சக்கரம் கண்டுஉகந்தும்
தாமரைக் கண்களுக்கு அற்றுத்தீர்ந்தும்
திங்களும் நாளும் விழாவறாத
தென்திருப் பேரெயில் வீற்றிருந்த
நங்கள் பிரானுக்குஎன் நெஞ்சம் தோழீ !
நாணும் நிறையும் இழந்ததுவே.

பொ - ரை: 'தோழீ! எனது நெஞ்சம், சிவந்த கொவ்வைக்கனி போன்ற திருவதரத்திலே ஈடுபட்டதாயும், சிவந்த பிரகாசம் பொருந்திய நீண்ட திருமுடியிலே தங்கினதாயும், சங்கையும் சக்கரத்தையும் பார்த்து மகிழ்ந்ததாயும், தாமரை போன்ற திருக்கண்களுக்கு அற்றுத் தீர்ந்ததாயும், மாதந்தோறும் நாள்தோறும் திருவிழாக்கள் நடந்து கொண்டேயிருக்கின்ற தென்திருப்பேரெயில் எழுந்தருளியிருக்கின்ற நங்கள் பிரானுக்கு, நாணத்தையும் நிறையையும் இழந்துவிட்டது,' என்கிறாள் தலைவி.

வி - கு: 'தோழீ! என் நெஞ்சம், திறத்ததாயும் தாழ்ந்ததாயும், உகந்தும் தீர்ந்தும் நாணும் நிறையும் இழந்தது' என்க. அற்றுத் தீர்தல்- அவனுக்கேயாதல், நிறை - காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம். 'நிறைஎனப் படுவது மறைபிறர் அறியாமை' என்பது, கலித்தொகை.

ஈடு: மூன்றாம் பாட்டு. [1]சேர்க்குமவள் ஒருத்தியுமேயாக, அல்லாத பங்களம் அடங்கலும் 'நமக்கு நிலம் அன்று' என்று கை வாங்கின; தோழியானவள், 'இது நமக்குப் போராதுகாண்; நெஞ்சை ஒருங்கப் பிடித்துத் தரித்து இருக்க வேண்டாவோ?' என்ன, 'அந்நெஞ்சுதான் இனிச்செய்வது என்? அவயவம் முதலிய வற்றின் சோபைகளிலே அகப்பட்டு அதுவும் தனக்குள்ளது அடங்கலும் இழந்ததுகாண்!' என்கிறாள்.

---

1. மேல் திருப்பாசுரத்தில் எல்லாரையும் விளித்தவள், இத்திருப்பாசுரத்திலே ஒருத்தியை விளிப்பதற்குக் கருத்து அருளிச்செய்யாநின்று கொண்டு, 'தோழி, என் நெஞ்சம் நாணும் நிறையும் இழந்தது' என்றதனைத் திருவுள்ளம்பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார். பங்களம்- கூட்டுப்படை.

'செங்கனி வாயின் திறத்ததாயும், செஞ்சுடர் நீண்முடி தாழ்ந்த தாயும், சங்கொடு சக்கரம் கண்டு உகந்தும், தாமரைக்கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும், நெஞ்சும் நாணும் நிறையும் இழந்ததுகாண்!' என்கிறாள். [1] சௌபரி என்பான் ஒருவன் ஒரு நல்வினை அடியாக ஐம்பது வடிவு கொண்டான் அன்றோ? அவ்வளவு அன்றே, இவள் கலந்த விஷயம் செய்ய வல்லது? அன்றிக்கே, [2] ''ஒரு பிரகாரமாக ஆகிறான், மூன்று பிரகாரமாக ஆகிறான்' என்கிறபடியே, அனுபவியாநின்றால் பிறக்கும் நாநா பாவம், பிரிவிலே நெஞ்சுக்கு உண்டாகாநின்றது,' என்னுதல். [3] 'திருப்பாற்கடல் கடைகிற காலத்தில் தான் எட்டு வடிவு கொண்டாற்போலேகாணும், இதுவும் விஷயத்திற்குத் தகுதியாகப் பல வடிவு கொள்ளுகிறபடி,' என்னுதல். [4] அவனுடைய ஐஶ்வர்யமடைய இதற்கு உண்டாகக்கடவதன்றோ? அன்றிக்கே, [5] 'அவன் உருவந்தோறும் நிறைந்து வசிக்குமாறு போலேயாயிற்று, இதுவும் அவயவந்தோறும் தனித்தனி அகப்பட வல்ல படி'

---

1. 'நெஞ்சம் ஒன்றே பல அவயவங்களை அனுபவிக்கக் கூடுமோ?' என்ன, 'பல வடிவு கொள்ளுகையாலே கூடும்' என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார், 'சௌபரி' என்று தொடங்கி. முதற்பத்து ஈட்டின் தமிழாக்கம் அவதாரிகை, பக். 32. காண்க.

2. பல வடிவுகள் கொண்டதற்கு வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'ஒரு பிரகாரமாக' என்று தொடங்கி. 'ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி' என்பது, சாந்தோக்யம், 7 : 26. நாநா பாவம்-பல சரீரங்களை மேற்கோடல்.

3. பல வடிவுகள் கொள்ளுவதற்கு வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'திருப்பாற்கடல்' என்று தொடங்கி. வடிவு எட்டு :

'ஓருரு வெற்பைத் தரித்தது தானவர் உம்பர்உள்ளாய்
ஈருரு நின்று கடைந்தது வேலை யிதனிடையோர்
பேருரு இன்னமு தோடே பிறந்தது பெண்மை கொண்டோர்
நாருரு நின்ற தரங்கா! இதுஎன்ன நற்றவமே?'

என்பது, திருவரங்கத்து மாலை. இப்பாசுரத்திற்கூறப்பட்ட ஐந்து வடிவோடு, வாசுகி மந்தரம் இவற்றுக்கு அந்தரியாமியாய் நின்ற வடிவு இரண்டு; உபேந்திரனாய் நின்ற வடிவு ஒன்று; ஆக, மூன்றனையும் கூட்டிக் காண்க.

4. 'அவன் சத்தி இந்த நெஞ்சுக்கு உண்டாகக் கூடுமோ?' என்ன, 'அவனுடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. 'பல வடிவுகள் கொள்ளாவிடினும், பல அவயவங்களிலே அகப்படக்கூடும்' என்னுமதற்குத் திருஷ்டாந்தத்தோடு வேறும் ஒரு பரிஹாரத்தை அருளிச்செய்கிறார், 'அவன்' என்று தொடங்கி.

**என்னுதல்.** செங்கனி வாயின் திறத்ததாயும் - [1]'பிரிந்து கடக்க இருக்கில் என் ? உன் கண் வட்டத்திலே கிடக்கில் என் ? இது உன் சரக்கு அன்றே ?' என்று சொல்லத் தொடங்கி, தழுதழுத்து வருகிற திருவதரத்திலே அகப்பட்டபடி. [2] அதிலும், அதரத்தில் பழுப்புக்குள் இழிய மாட்டுகிறது இல்லை. வாயின் திறத்ததாயும் - [3] அதுதான் ஒரு மஹாபாரதத்துக்குப் போரும் ஆகாதே ? செஞ்சுடர் நீள்முடி தாழ்ந்ததாயும் - [4]பிரிவினைப் பற்றிப் பேசிப் பேர நின்ற போது, ஆதி ராஜ்ய சூசகமாய் '**உபய விபூதி நாதன்**' என்று தோற்றும்படி இருக்கிற திருமுடியைக் கண்டு தரைப்பட்டுக் காலைப் பிடித்தது. சங்கொடு சக்கரம் கண்டு உகந்தும் - [5]பிரிந்தால் விரோதியைப் போக்குகைக்குக் கருவியாய், வைத்த கண் மாற ஒண்ணுத அழகை யுடைய ஆழ்வார்களைக் கண்டு உகந்தது. தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும் - [6]'உனக்கு ஆகிறேன்' என்று சொல்லப்புக்கு மாட்டாது ஒழிந்தால், குறையும் தலைக்கட்டின திருக்கண்களுக்கு ஆயிற்று அநந்யார்ஹமாக எழுதிக்கொடுத்தது. என்றது, 'பிரிகிற போது நோக்கின நோக்கிலே பிறர்க்கு ஆகாதபடி உஜ்ஜீவிக்கச் செய் தான்' என்றபடி.

திங்களும் நாளும் விழா அறுத - [7]உத்தேசியமான பூமியிலே நித்தியோத்ஸவம் செல்லாநிற்க, அது இங்கே நம் கண் வட்டத்தே துக்கத்துக்கு இலக்காய் இருக்குமோ ! மாதத் திருநாளும் நாள்

1. *செந்நிறம் தோன்றுவது வார்த்தை பேசும் போது ஆகையாலே, அங்ஙனம் பேசின வார்த்தைகளை அருளிச்செய்கிறார், 'பிரிந்து' என்று தொடங்கி. கண் வட்டம் - கண் முன்.*

2. *'திறத்ததாயும்' என்றதற்கு* பாவம் *அருளிச்செய்கிறார், 'அதிலும்' என்று தொடங்கி.*

3. *'திறம்' என்றதற்குக் 'கூட்டம்' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'அதுதான்' என்று தொடங்கி. 'திறம்' என்றதற்கு முன்னே கூறிய பொருள், 'செயல்' என்பது.*

4. *செங்கனிவாயில் ஈடுபட்டிருந்த மனம், அதனை நீக்கித் திரு முடியில் ஈடுபடுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'பிரிவினை' என்று தொடங்கி.*

5. *சங்கொடு சக்கரம் கண்டு உகக்கைக்குக் காரணம் அருளிச் செய்கிறார், 'பிரிந்தால்' என்று தொடங்கி.*

6. *'தாமரைக்கண்கள்' என்றதற்கு* பாவம் *அருளிச்செய்கிறார், 'உனக்கு' என்று தொடங்கி. 'தவாஸ்மி' என்பது.*

*அநந்யார்ஹமாக -வேறு ஒருவர்க்கு உரியளாகாதவளாக ; என்றது, அவனுக்கே உரிமைப்பட்டவளாக என்றபடி. அதனை விவரணம் செய்கிறார் 'பிரிகிற போது' என்று தொடங்கி.*

7. *'திங்களும் நாளும் விழா அறுத' என்ற விசேடணத்திற்கு* பாவம் *அருளிச்செய்கிறார், 'உத்தேசியமான' என்று தொடங்கி, அது - மனம்.*

திருநாளும் ஓவாத. தென்திருப்பேரெயில் வீற்றிருந்த நங்கள் பிரானுக்கு - இவ்விருப்பு நமக்கு ஆக்கிக்கொண்டிருக்கிற உபகாரகனுக்கு. என்றது, [1] 'பரத்துவம், நித்திய முத்தர்கட்கு; வியூகம், முத்தரைப் போன்றவர்கட்கு; விபவம், புண்ணியம் செய்தார்க்கு; இவ்விருப்பு, பாபம் செய்த சம்சாரிகளுக்காக அன்றோ?' என்றபடி. என் நெஞ்சம் - [2] அவனுடைய உபகாரமும் அழகு முதலானவைகளும் வயிர உருக்கு ஆகை. [3] நெஞ்சினுடைய வன்மை அறிதி அன்றோ? [4] நெஞ்சம் அவனும் ஒரு கோவையிலே அடைப்பு உண்டபடி. நங்கள் பிரானுக்கு என் நெஞ்சம் - [5] 'ஸ்ரீராகவனுக்குத் தகுந்தவள் ஸ்ரீஜனகராஜன் திருமகள்' என்னுமாறு போலே. தோழீ - [6] நெஞ்சினைத் திருத்திக் கலப்பிக்கப்பட்ட வருத்தம் அறிதி அன்றோ? [7] இப்போது நீயுங்கூட எதிர்த்தலையாம்படியன்றோ வாய்த்தது? நாணும் நிறையும்

---

1. 'இங்கே இருக்கிற இருப்பு நமக்காக இருக்குமோ?' என்ன ஆம் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பரத்துவம்' என்று தொடங்கி.

2. 'செங்கனிவாயின் திறத்ததாயும்' என்பது போன்றவைகளைக் கடாட்சித்து, 'என் நெஞ்சம்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அவனுடைய' என்று தொடங்கி. வயிர உருக்கு வச்சிரத்தை உருக்கக் கூடியது. என்றது, 'பெண்மையாலே, ஒருவர்க்கும் ஈடுபடோம்' என்றிருந்த நெஞ்சையும் உருக்கியது' என்றபடி.

3. 'என் நெஞ்சம்' என்றதனோடே 'தோழி' என்பதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார், 'நெஞ்சினுடைய' என்று தொடங்கி.

4. 'நங்கள் பிரான்' என்றும், 'என் நெஞ்சு' என்றும், தன்னோடு உரிமைப்படுத்திக் கூறியதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'நெஞ்சம்' என்று தொடங்கி. 'ஒரு கோவையிலே' என்றது, 'தன்னுடைய சம்பந்தம் ஒத்திருக்கையாலே' என்றபடி. என்றது, 'அவனைப்போன்று எனக்குப் பரதந்திரமான மனம்' என்பதனைத் தெரிவித்தபடி.

5. 'என் நெஞ்சு' என்றதற்கு, 'பகவானிடத்தில் ஈடுபட்ட என் மனம்' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'ஸ்ரீராகவனுக்கு' என்று தொடங்கி. 'ராகவோர்ஹதி வைதேஹீம்' என்பது, ஸ்ரீராமா. சுந். 16 : 5. என்றது, அடியார்கள் விஷயத்தில், அவன் மிகவும் அன்புடையனாயிருப்பான்; இது, முந்துற்ற நெஞ்சாய், பகவத் விஷயத்தில் ஈடுபட்டதாயிருக்கும்; ஆகையாலே, பரஸ்பரம் ஒப்புமை தெரிவித்தபடி.

6. மேலே 'நெஞ்சினுடைய வன்மை அறிதி அன்றோ?' என்றதற்குச் சேர, பாவம் அருளிச்செய்கிறார், 'நெஞ்சினை' என்று தொடங்கி.

7. மனத்தின் வன்மையைத் தோழிக்குக் கூறுகிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இப்போது' என்று தொடங்கி.

இழந்ததுவே. [1] இது இழவாதது உண்டோ! [2] அரைக்கணம் அவன் பேர நின்று படுத்தின பாடு எல்லாம் என்தான்! நான், தன்னை இழந்தேன் : தாய்மார் தோழிமார்கள், என்னை இழந்தார்கள் : நெஞ்சு, நாணும் நிறையும் இழந்தது. (3)

688

இழந்தஎம் மாமைத் திறத்துப்போன
என்நெஞ்சி னாருமங் கேஒழிந்தார்
உழந்தினி யாரைக்கொண் டென்உசாகோ!
ஓதக் கடல்ஒலி போலஎங்கும்
எழுந்தநல் வேதத்து ஒலிநின்றுஓங்கு
தென்திருப் பேரெயில் வீற்றிருந்த
முழங்குசங் கக்கையன் மாயத்துஆழ்ந்தேன்
அன்னையர் காள்!என்னை என்முனிந்தே.

**பொ-ரை:** 'முன்னரே இழந்த என்னுடைய மாமை நிறத்தை மீட்டு வருவதற்காகச் சென்ற என்னுடைய நெஞ்சினாரும் அங்கேயே தங்கிவிட்டார்; இனி வருந்தி யாரைக்கொண்டு எதனை உசாவுவேன்? அலைகளையுடைய கடல் ஒலிபோன்று, எல்லா இடங்களிலும் உண்டான சிறந்த வேதங்களின் ஒலியானது நின்று உயர்கின்ற தென்திருப்பேரெயில் எழுந்தருளியிருக்கின்ற, ஒலிக்கின்ற ஸ்ரீபாஞ்சஜன்யம் என்ற சங்கைக் கையிலே தரித்த எம்பெருமானது மாயத்திலே ஆழ்ந்தேன்; அன்னையர்காள்! என்னைக் கோபிப்பதனால் பயன் யாது?' என்கிறாள்.

**வி-கு:** நெஞ்சினார்—உயர்வுப் பொருளது. உசாவுதல்-ஆராய்தல். 'என்னை முனிந்து என்?' என்க. மாயம்—ஆச்சரியமான குணங்களும் செயல்களும்.

**ஈடு:** நான்காம் பாட்டு. [3] 'ஏதேனும் ஒன்றைக் கொண்டு வருந்தியாகிலும் போது போக்காதே இங்ஙனே செய்யலாமோ?' என்று பொடிகிற தாய்மாரைக் குறித்து, 'என் நெஞ்சம் அவனாலே கொள்ளை கொள்ளப்பட்டது; நான் எதனைக்கொண்டு போது போக்குவது?' என்கிறாள்.

---

1. 'நாணும் நிறையும்' என்னும் இரண்டனைக் கூறியது, நிறம் முதலானவற்றிற்கும் உபலக்ஷணம் என்றுகொண்டு, பாவம் அருளிச்செய்கிறார், 'இது இழவாதது' என்று தொடங்கி.

2. கணநேரம் அவன் பிரிந்திருந்த பிரிவால் தான் பட்டபடிகளைச் சொல்லி ஈடுபடுகிறாள், 'அரைக்கணம் என்று தொடங்கி.

3. 'என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்; உழந்து இனி யாரைக் கொண்டு என் உசாகோ?' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

இழந்த எம் மாமைத் திறத்துப் போன என் நெஞ்சிஞரும் அங்கே ஒழிந்தார் - [1] 'நாணும் நிறையும் இழந்தது என்ற இடம், நிறத்திற்கும் உபலக்ஷணமன்ரே? ஆதலால், அநுபாஷணத்திலே நிறம் இழந்ததையும் தோற்றச் சொல்லாநின்ருள். 'அத்தலையில் உள்ளனவற்றை முழுதையும் நாம் நமக்கு உரித்தாகச் செய்கை போய், நமக்கு உள்ளனவற்றிலே ஒன்றினைச் சிலர் கொடுபோகை யாவது என்?' என்று செருக்குக் கொண்டு 'இப்போதே மீட்டுக் கொடு வருகிறேன்' என்று விரைந்து சென்ற மனமும் அங்கே படையற்றது. என் நெஞ்சிஞரும் அங்கே ஒழிந்தார் - அங்கே [2] புக்காரையும் தம்படியாக்கிக்கொண்டார். 'பிரியேன்' என்று சொன்னவர் அன்ரே இத்தலையைப் பிரிந்து நினையாது இருக்கிருர்? 'நெஞ்சிஞர்' [3] அலைந்த பரிவட்டமும் தாமுமாய் அணுக்கடித்துத் திரியாநின்ருராயிற்று. [4] 'தூசித்தலையில் வியாபரிப்பேன் நான்' என்ருன் அன்ரே ஸ்ரீவிபீஷணுழ்வான்? இழந்த எம் மாமைத் திறத்துப் போன என் நெஞ்சிஞரும் அங்கே ஒழிந்தார் - [5] நிறம் தொடக்கமாக இழந்தவை அடைய மீட்பதாகச் சொல்லிப் போன நெஞ்சிஞரும் அங்கே கால் தாழ்ந்தார். [6] வினைத்தலையிலே படை

---

1. 'மேல் திருப்பாசுரத்தில் நிறம் இழந்தமை சொல்லிற்ரே இப்போது அநுபாஷிகைக்கு?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'நாணும் நிறையும்' என்று தொடங்கி. மாமைத்திறம் - மாமை நிமித்தமாக. அநுபாஷணம் - பின் மொழிதல். படையற்றது - கிட்டிற்று.

2. புக்காரையும் - புக்க மனத்தினையும். 'தம் படி' எது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'பிரியேன்' என்று தொடங்கி.

3. 'நெஞ்சிஞர்' என்ற உயர்வுப் பன்மைக்கு பாவம் அருளிச்செய்கிருர்; அலைந்த' என்று தொடங்கி. அணுக்கடித்தல் - அந்தரங்கமாதல்.

4. இது அணுக்கடித்துத் திரிந்தமைக்குத் திருஷ்டாந்தம் காட்டுகிருர், 'தூசித்தலையில்' என்று தொடங்கி. 'ப்ரவேக்ஷ்யாமி ச வாஹிநீம்' என்பது, ஸ்ரீ ராமா. யுத். 19 : 23. தூசித்தலை - படையின் முன்னிடம்.

5. 'நிறம்' என்பதற்குக் கூட்டம் என்று பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றிப் பதப்பொருள் அருளிச்செய்கிருர், 'நிறம் தொடக்கமாக' என்று தொடங்கி.

6. 'அங்கே புக்காரையும் தம்மடியாக்கிக்கொண்டார்' என்கைக்கு, 'உன் காரியத்துக்காகப் போன மனம் அவன் வார்த்தை கேட்கைக்குக் காரணம் என்?' என்ன, 'வினைத்தலையிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். வினைத்தலை - போர்த்தலை. படையறுத்தல் - எதிர்த்தலையில் சேனையைத் தன் வசமாக்கிக்கொள்ளுதல்.

அறுக்குமாறு போலே, வரிசையும் கொடுத்துத் தம்மோடு ஒப்புமையையும் கொடுத்தார். [1]'இந்த விபீஷணன் இராஜாவன்றோ?' என்னுமாறு போலே, வரிசை பெற்றுத் திரியாநின்றார்.

[2]'இராவணன் முன்னே, அவன் சோற்றை உண்ட சுக சாரணர்கள் ஸ்ரீவிபீஷ்ணாழ்வானை 'ராஜா' என்பான் என்?' என்னில், எழுத்து உரு அழியாதே கிடந்தாலும், புள்ளி குத்தினால் அத்தைக் கழித்து மேலே போமாறு போலே, முடி கொடுக்குமவர் கையாலே வைக்கையாலே 'ராஜா' என்றார்கள். [3]'ஒன்றாலும் இராவணனுடைய கொடுமையை அறிந்து வைத்துக் கூசாதே இங்ஙன் சொல்லுவான் என்?' என்னில், 'சித்திரம் குத்துமோ' என்று இருந்தார்கள். [4]'நிலவரைக் கொண்டு வினை செய்யலாம்' என்று தரம் கொடுப்பர் அன்றோ? என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார் -

---

1. இலங்கையை அழிப்பதற்கு, ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு முடி சூட்டியதை இதற்குத் திருஷ்டாந்தமாகக் காட்டுகிறார், 'இந்த விபீஷணன்' என்று தொடங்கி. 'ராஜாஹ்யேஷ விபீஷண:' என்பது ஸ்ரீ ராமா. யுத். 28 : 27. இது, இராவணனைப் பார்த்துச் சாரன் கூறியது.

'தாரு லாமணி மார்ப!நின் தம்பியே
தேரு லாவு கதிருந் திரிந்துதன்
பேரு லாவு மளவினும் பெற்றனன்
நீரு லாவு மிலங்கை நெடுந்திரு.'

என்பது, கம்பராமாயணம், ஒற்றுக்கேள்விப்படலம், 60.

2. 'இராவணன் முன்னே விபீஷணனை அரசன் என்னலாமோ?' எனச் சங்கித்துப் பரிஹரிக்கிறார், 'இராவணன்' என்று தொடங்கி. புள்ளி குத்துதல் - எழுத்துகளின் மேலே புள்ளி வைத்தல். மெய்யெழுத்துகள் எண்ணப்படாமை ஈண்டு உளங்கோடல் தகும். 'உயிரல் எழுத்தும் எண்ணப் படாஅ' என்பது, விதி. (தொல்காப். பொருள்) 'முடி கொடுக்குமவர் கையாலே' என்றது, 'கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன் கையாலே' என்றபடி.

3. 'இப்படிச்சொன்னால் அவன் நலியானோ?' என்று சங்கித்துப் பரிஹரிக்கிறார், 'என்றாலும்' என்று தொடங்கி.

4. 'இவர்க்கும் வரிசை கொடுப்பதற்குக் காரணம் யாது?' என்ன, 'நிலவரை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, 'இலங்கையை அழிப்பதற்கு 'நிலவர்' என்று ஸ்ரீ விபீஷ்ணாழ்வானுக்குப் பெருமாள் வரிசை கொடுத்தார்; இவளுடைய பெண் தன்மைக்குரிய அபிமானத்தை அழிப்பதற்கு நெஞ்சுக்கு 'நிலவர்' என்று இவன் வரிசை கொடுத்தான்' என்றபடி.

[1] நிறம் மீட்கப்போனரும் நிறம் கொடுபோனரோடு ஒத்தார். இத் தலையில் வெறுமை கண்டு போனதுவும் நிறைவினைக் கண்டு போன வனோடு ஒத்தது. [2] போவார் போவார் எல்லாரும் இத்தலைக்குக் காரியமாகக்காணும் போம் போது சொல்லிப் போவது! [3] அவன் தானே 'இத்தலை ஊற்று இருக்க வேணும்' என்று போனன் ஆனன்; இது இத்தலையில் வெறுமை கண்டு, நோக்குகைக்காகப் போயிற்று. [4] நாம்தாம் அவர்களை வெறுக்கிறது என்? 'முத்தன் இந்தச் சரீரத்தை நினைப்பது இல்லை,' என்கிறபடியே, புக்கார் மீளாத தேசமான பின்பு. அங்கே ஒழிந்தார் - [5] 'கடலுக்குக் குறை நிரப்ப வேணும்' என்று திரியாநின்ருர். [6] 'பண்டு நெஞ்சு இழந்தவர்களும் வருந்தித் தரித்துச் சிலரோடே அவனுடைய செயல்களைச் சொல்லிக் கொண்டு இருந்திலர்களோ? நீயும் அப்படியே வருந்தியாகிலும் சில ரோடே காலம் கழிக்க வேண்டாவோ?' என்ன, இனி உழந்து ஆரைக்கொண்டு என் உசாகோ - என் நெஞ்சினை இழந்த பின்பு இனி, துக்கப்பட்டு ஆரோடே கூட எதனைச்சொல்லி நான் காலம்

1. *'அங்கே புக்காரையும்' என்று தொடங்கி, மேலே அருளிச் செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிருர், 'நிறம் மீட்கப் போனரும்' என்று தொடங்கி. இதனை விவரணம் சேய்கிருர், 'இத்தலையில்' என்று தொடங்கி.*

2. *'இப்போது வாராதிருந்தவர்களை, இவளுக்காகப் போனர்கள் என்னக் கூடுமோ?' என்ன, 'போவார்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.*

3. *'ஆயின், அவன் எதற்காகப் போனன்? மனம் எதற்காகப் போயிற்று?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'அவன் தானே' என்று தொடங்கி. ஊற்றிருக்க வேணும் - காதல் மிகவிருக்க வேண்டும்.*

4. *'அங்கே' என்பதற்கு, தேசம் என்று பொருள்கூறத் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிருர், 'நாம்தாம்' என்று தொடங்கி. 'நோபஜநம்' என்னும் இவ்வாக்கியத்தை முன்னே காண்க.*

5. *'அங்கே' என்பதற்கு, இறைவனிடத்திலே என்று பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிருர், 'கடலுக்கு' என்று தொடங்கி.*

6. *மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிருர், 'பண்டு' என்று தொடங்கி. 'நெஞ்சு இழந்தவர்கள்' என்றது, ஸ்ரீஜநகராஜன் திருமகளை, 'சிலரோடே' என்றது, திரிசடையை.*

போக்குவது? உழந்து - வருந்தி. [1] இலங்கையிலே இருந்தவளுக்கு ஒருவனுதல் ஒருவன் குடியாதல் உண்டு; அதுவும் இல்லையே எனக்கு !

[2] ஜ்யேஷ்டா கந்யாநலா நாம விபீஷண ஸுதா - இங்கே இருந்தே அங்குத்தைக்கு ஆவாள் ஒருத்திகாண்! கபே - ஒரோ நிலைகளிலே நீ உதவுமாறு போலேகாண் இவளும் ஒரோ நிலைகளிலே உதவ வல்லபடி. பல சொல்லி என்? உன்னோடு ஒப்பாள் ஒருத்தி. ஆரைக் கொண்டு என் உசாகோ - [3] சரீரத்தையே ஆத்துமாவாக அபிமானித்து இருக்கிற சம்சாரிகளைக்கொண்டு போது போக்கவோ? ஈஸ்வரோஹம் என்று இருக்கிற பிரமன் சிவன் முதலாயினோர்களைக் கொண்டு போதுபோக்கவோ? பகவானுடைய அனுபவத்திலே நோக்காக இருக்கிற நித்தியசூரிகளைக் கொண்டு போது போக்கவோ? இத்தலையை உரிசூறை கொண்டு போனவனைக் கொண்டு போது போக்கவோ? யாரைக்கொண்டு எதனை உசாவுவது? என் உசாகோ- [4] 'நான் அங்கே பன்னிரண்டு வருடங்கள்' என்று சொல்லலா

---

1. 'ஆரைக்கொண்டு' என்றதற்குப் பிராட்டியினின்றும் வேறுபடுத்திப் பொருள் அருளிச்செய்கிறார், 'இலங்கையிலே' என்று தொடங்கி. 'ஒருவன்' என்றது, ஸ்ரீ விபீஷணாழ்வானை; திருவடியையுமாம். 'ஒரு குடி' என்றது, திரிசடையை.

2. அப்படி இருந்தமைக்குப் பிரமாணமும், பிரமாணத்துக்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'ஜ்யேஷ்டா' என்று தொடங்கி.

'ஜ்யேஷ்டா கந்யா அநலாநாம விபீஷணஸுதா கபே
தயா மமஇதம் ஆக்யாதம் மாத்ரா ப்ரேஷிதயா ஸ்வயம்'

என்பது, ஸ்ரீராமா. சுந். 37 : 11. இது, திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது. அங்குத்தைக்கு - பெருமாளுக்கு.

'அன்ன சாவ முளதென ஆண்மையான்
மின்னு மௌலியன் வீடணன் மெய்ம்மையான்
கன்னி என்வயின் வைத்த கருணையாள்
சொன்ன துண்டு துணுக்கம் அகற்றுவாள்.'

என்பது, கம்பராமாயணம். சூடாமணிப்பட. 22.

3. சுவாபதேசப் பொருள் அருளிச்செய்கிறார், 'சரீரத்தையே' என்று தொடங்கி. உரி சூறைகொண்டு-வஸ்திரத்தைக் கொள்ளையடித்துக் கொண்டு. உரி - புடைவை. 'உரி சூறைகொண்டு' என்ற பாடம் இருந்திருக்க வேண்டும் என நினைக்கிறேன். கூறை - புடைவை.

4. பிராட்டியினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறார், 'நான்' என்று தொடங்கி. 'ஸமா த்வாதஸ' என்னும் இச்சுலோகத்தை இத்திருவாய்மொழியின் முன்னுரையிற்காண்க.

மன்றோ பிராட்டிக்கு ? அப்படியே நமக்கும் ஏதேனும் உண்டோ? [1] கலவியில் நிறைவு பெறுமை இருக்கிறபடி. ஆரைக்கொண்டு - [2] நெஞ்சு போலே நமக்குப் பாங்காய் இருப்பார் உளரோ ? 'ஆனால், செய்ய அடுப்பது என் ?' என்னில்,

ஓதம் கடல் ஒலி போல எங்கும் எழுந்த நல் வேதத்து ஒலி நின்று ஓங்கு தென்திருப்பேரெயில் வீற்றிருந்த - [3] அங்குத்தையது இங்கே நடையாடாநின்ற பின்பு, நாமும் அங்கே போய்ப்புகுமத்தனை. ஓதம் கிளர்ந்த கடல்போலே இருந்துள்ள வேத ஒலியானது எங்கும் பரம்பாநின்ற தென்திருப்பேரெயில் வீற்றிருந்த. நல்வேதம் - [4] 'வேதங்களுக்குள்ளே சாமவேதம் நானாகிறேன்' என்கிற சாமத்தின் ஒலியாய்க் கிடக்குமத்தனை, பார்த்த பார்த்த இடம் எங்கும், [5] அவ் விருப்பைக் கண்டு முத்தர் சாமகானம் பண்ணிப் பிரீதிக்குப் போக்கு விடுமாறு போலே. முழங்கு சங்கக் கையன் - [6] வேத ஒலியானது ஸ்ரீ பாஞ்சஜன்யத்தைக் கிட்டி எதிர் ஒலி எழாநிற்கும். மாயத்து ஆழ்ந்தேன் - அவனுடைய புன்முறுவல் கடைக்கண் நோக்கம் முதலியவைகளிலே மீள ஒண்ணாதபடி அகப்பட்டேன். அன்னையர் காள் என்னை என் முனிந்தே - [7] சம்பந்தம் உண்டு என்னாச் சீறுமத் தனையோ ? [8] சீற்றத்துக்கு எதிர்த்தலையும் வேண்டாவோ ? தார்மி

---

1. 'அப்படி இவளுக்கு முன்பு ஒருகாலும் கலவி இல்லையோ ?' என்ன, 'கலவியில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. அந்யாபதேசத்திலே பொருள் அருளிச்செய்கிறார், 'நெஞ்சு போலே' என்று தொடங்கி.

3. 'ஓங்கு' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அங்குத்தை யது' என்று தொடங்கி. என்றது, 'பரமபதத்தில் உண்டான சாமகானம் இங்கே நடையாடாநின்ற பின்பு' என்றபடி. அங்குத்தையது - பரமபதத் திலே உள்ளது.

4. 'வேதாநாம் ஸாமவேதோஸ்மி' என்பது, ஸ்ரீ கீதை, 10 : 22.

5. தென்திருப்பேரெயிலுள்ளார் சாமகானம் செய்வதற்குத் திருஷ் டாந்தம் காட்டுகிறார், 'அவ்விருப்பை' என்று தொடங்கி. அவ்விருப்பை - பரமபதத்தில் இருப்பை.

6. முழங்குவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'வேத ஒலி யானது' என்று தொடங்கி.

7. 'அன்னையர்காள் முனிந்து என் ?' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'சம்பந்தம்' என்று தொடங்கி.

8. 'என்னை' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'சீற்றத் துக்கு' என்று தொடங்கி.

உண்டாய் முனிய வேணுமே! மாயத்து ஆழ்ந்தேன் என்னை என் முனிந்தே - [1] சுவாதீனமுள்ளவரை அன்றோ முனிந்தால் பிரயோஜன முள்ளது! (4)

689

முனிந்து சகடம் உதைத்துமாயப்
பேய்முலை உண்டு மருதிடைபோய்க்
கனிந்த விளவுக்குக் கன்றுஎறிந்த
கண்ண பிரானுக்குஎன் பெண்மைதோற்றேன்
முனிந்துஇனி என்செய்தீர் அன்னைமீர்காள்!
முன்னி அவன்வந்து வீற்றிருந்த
கனிந்த பொழில்திருப் பேரெயிற்கே
காலம் பெறஎன்னைக் காட்டுமினே.

பொ - ரை: 'சீறிச் சகடாசுரனை உதைத்து, வஞ்சனை பொருந்திய பேயின் முலையை உண்டு, மருத மரங்களின் நடுவே சென்று, பழுத்திருந்த விளாமரத்தினை நோக்கிக் கன்றினை வீசி அடித்த கண்ண பிரானுக்கு என்னுடைய பெண்மையைத் தோற்றேன்; அன்னை மீர்காள்! இப்பொழுது என்னைக் கோபித்து என்ன காரியத்தைச் செய்யாநின்றீர்கள்? அவன் முற்பட்டு வந்து எழுந்தருளியிருக்கின்ற, பழங்கள் நிறைந்திருக்கின்ற சோலைகள் சூழ்ந்த திருப்பேரெயில் என்னும் திவ்விய தேசத்தைக் காலம் நீட்டிக்காமல் என்னை அழைத்துக் கொண்டு சென்று காட்டுங்கோள்' என்கிறாள்.

வி - கு: 'முனிந்து உதைத்து உண்டு எறிந்த கண்ணபிரான் என்க. 'விற்றிருந்த திருப்பேரெயிற்கே காட்டுமின்' என்க. பேரெயிற்கு - வேற்றுமை மயக்கம்.

ஈடு: ஐந்தாம் பாட்டு. [2] 'இங்ஙனம் விரைதல் பெண் தன்மைக்குப் போராதுகாண்,' என்று தாய்மார் அலைக்க, 'அதுவும் பண்டே போயிற்று; பிரயோஜனம் இல்லாத நிலையிலே கொடுபோக நில்லாதே, என்னை முன்னரே கொடுசென்று தென்திருப்பேரெயிலிலே

1. 'ஆழ்ந்தேன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'சுவாதீன முள்ளவரை' என்று தொடங்கி.

2. 'கண்ணபிரானுக்கு என் பெண்மை தோற்றேன் காலம் பெற என்னைக் காட்டுமின்கள்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார். 'தோற்றேன்' என்றதனை நோக்கிப் 'பண்டே போயிற்று' என்கிறார்.

விடுங்கோள்,' என்கிருள். [1]'முனிகிறதுதான் என்னுடைய நலத்தைப் பார்த்தேயானுல் என் நலத்திலே செல்லப்பாருங்கோள் என்கிருள்.'

முனிந்து சகடம்.........தோற்றேன் - [2]என்னுடைய நினைவு தன்னைப் புத்தி பண்ணுங்கோள்; அவன் முனிவிலே அகப்பட்ட நான் இனி உங்கள் முனிவிற்கு மீளுவேனே? [3]ஹிதமுமாய்ப் பிரிய முமான முனிவிலே அகப்பட்ட நான், ஹிதம் இல்லாததுமாய்ப் பிரியம் இல்லாததுமான உங்கள் முனிவிற்கு மீளுவேனே? முனிந்து சகடம் உதைத்து - முலை வரவு தாழ்த்தது என்று சீறி நீட்டின திருவடிகளுக்கு இலக்காய்ப் பொடிபட்டதாயிற்றுச் சகடம். [4]'முலைப் பாலை விரும்பினவராய்த் திருவடிகளை மேலே நிமிர்த்தார் அழுதார்' என்கிறதன்றே? மாயப்பேய் முலை உண்டு - 'முலையை நினைத்துச் சீறினன்' என்று முலை கொடுக்கத் தாய் வடிவு கொண்டு வந்த வஞ்சனையுடையவளான பேய்ச்சியை முடித்து. மருதிடை போய் - 'முலை உண்டால் தவழுமத்தனை அன்றே? புறம்புநின்றும் வந்து

---

1. 'முனிகிற எங்களைக் 'காட்டுமின்' என்கிறது என்?' என்ன, 'முனிகிறது தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

2. முன் இரண்டு அடிகளுக்குக் கருத்து அருளிச்செய்கிருர், 'என்னுடைய' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிருர், 'அவன் முனிவிலே' என்று தொடங்கி.

3. 'அதற்குக் காரணம் என்?' என்கிற சங்கையிலே அருளிச் செய்கிருர் 'ஹிதமுமாய்' என்று தொடங்கி. என்றது, 'அவன் முனிவு, அடியார்களுடைய விரோதி நீங்குதற்குக் காரணமாகையாலும், அதுதான் அடியார்களிடத்தில் வைத்த வாத்சல்யமாகையாலும், ஹிதமுமாய் பிரியமுமாயிருக்கும்; உங்கள் முனிவு, சேஷி இருந்த இடத்திற்குச் செல்லுதல் சொரூபமாயிருக்க அதனைச் சொரூபவிருத்தம் என்று விலக்குகையாலும், அதுதான் எனக்கு விருப்பம் இல்லாததாய் இருக்கையாலும், ஹிதம் இல்லாததாயும் பிரியமில்லாததாயும் இருக்கும்' என்றபடி.

4. தாம் சொன்ன பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிருர், 'முலைப் பாலை' என்று தொடங்கி.

'சிக்ஷேப பரணு ஊர்த்வம் ஸ்தந்யார்த்தீ ப்ரருரோத ஹ'

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 5. 6 : 1.

5. முன்பின் உள்ள பதங்கட்கு பாவம் அருளிச்செய்கிருர், 'முலையுண்டாய்' என்று தொடங்கி.

நலிகை அன்றிக்கே, நின்ற இடத்தே நின்று தப்பாமல் கொல்ல நினைத்த மருதமரங்கள் இரண்டனையும் பொடிபடுத்தி. கனிந்த விளவுக்குக் கன்று எறிந்த - அசுர ஆவேசத்தாலே ஒன்று கனிந்த விளவாய், ஒன்று கன்றாய் நின்றது; அதிலே ஒன்றை இட்டு ஒன்றை எறிந்து இரண்டையும் முடித்த. கண்ணபிரானுக்கு என் பெண்மை தோற்றேன் - [1] அழியுமவற்றையும் அழித்தான்: அழியாததனையும் அழித்தான். வன்மையாலே அழித்தான் அவற்றை; மென்மையாலே அழித்தான் இவளை. [2] அவற்றின் கையிலே தான் அகப்படாமல் தப்பித் தன்னைத் தந்த உபகாரத்துக்கு எழுதிக்கொடுக்கிறாள் காணும் 'பிரானுக்கு' என்று. [3] சேஷியான தன்னை உண்டாக்கி, என்னைச் சேஷத்துவத்தினுடைய எல்லையிலே நிறுத்தினான். [4] 'என்னுடைய பல பிறவிகள் கடந்தன' என்கிற அவதாரங்களைப்போன்று பரப்புப்போருங்காணும் இவ்வவதாரத்தில் இவளைப் பெறுகைக்குச் செய்த செயல்களும் அவனுக்கு. [5] அடியார்களிடத்துள்ள வாத்சல்யத்தின் காரியமான முனிவே அன்றோ?

கண்ணபிரானுக்கு என் பெண்மை தோற்றேன் - [6] 'ஆகையால் வேதத்திலும் ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமன் என்று சொல்லப்

---

1. 'பெண்மை தோற்றேன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அழியுமவற்றையும்' என்று தொடங்கி. 'அழியுமவற்றை' என்றது, விரோதிகள் ஆகையாலே அழிக்கைக்குத் தகுந்தவைகளான சகடம் முதலானவைகளை. அழியாதது - பெண்மை. 'மென்மை' என்றது, சௌலப்பியத்தை.

2. 'செய்த உபகாரம் எது?' என்ன, 'அவற்றின்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. இவ்வுபகாரத்தைக் கூறிய பின் 'பெண்மை தோற்றேன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'சேஷியான' என்று தொடங்கி.

4. 'முனிந்து சகடம்' என்று தொடங்கி, துஷ்டநிக்ரஹம் செய்த செயல்கள் பலவற்றைக் கூறியதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'என்னுடைய' என்று தொடங்கி.

'பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி'

என்பது, ஸ்ரீகீதை, 4: 5.

5. 'அவனுடைய சீற்றத்துக்கு இவள் ஈடுபடக் கூடுமோ?' என்ன, 'அடியார்களிடத்துள்ள' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. மேலே கூறியனவற்றையெல்லாம் கூட்டிக்கொண்டு, 'பெண்மை தோற்றேன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'ஆகையால்' என்று தொடங்கி.

'அதோஸ்மி லோகே வேதேச ப்ரதித: புருஷோத்தம:' என்பது, ஸ்ரீகீதை, 15: 18.

'ஜாநாதி புருஷோத்தமம்' என்பது, ஸ்ரீகீதை, 15: 19.

படுகிறேன்' என்றும், 'என்னைப் புருஷோத்தமன் என்று எவன் தெரிந்துகொள்ளுகின்றனே' என்றும் சொல்லுகிற தன்னுடைய ஆண் தன்மையைக் காட்டிக்காணும் இவளுடைய பெண்மையைக் கொள்ளை கொண்டது. பெண்மை தோற்றேன் - [1] தோலாதது தோற்றேன். முனிந்து இனி - [2] இனி மீட்கலாம் என்றோ நினைக்கிறது? மீட்க நினைக்கிற நீங்கள் அவனுடைய வெற்றிச்செயல்கட்கு முன்னே அன்றோ மீட்கப்பார்ப்பது? என் செய்தீர் - எனக்கு அநுகூலர்கள் ஆனீர் அல்லீர்; மீட்கத் தொடங்கினது தலைக்கட்டிற்று அன்று. அன்னைமீர்காள் - [3] பிறந்தது முதற்கொண்டு என் இயல்பினை அறிந்து போருகிற நீங்கள் மீட்கப் பார்ப்பதே! [4] அவன் செய்த உபகாரங்களை அறியாமல் அன்றோ நீங்கள் பொடிகிறது? 'அவன் செய்த உபகாரங்கள் மறக்க ஒண்ணுதாகில் நினைக்கிறாய்; பெற்று வளர்த்த எங்களுடைய உபகாரமும் நினைக்க வேணுங்காண்!' என்ன, முன்னி அவன் வந்து வீற்றிருந்த - உபகாரத்தில் முற்பாடன் அவன் காணுங்கோள். முன்னி - முற்பாடனாய் நின்று; [5] 'பூர்வஜ-முன்னே உண்டானவனே' என்னும்படியே, என்னைப் பெறுகைக்குக் காலத்தை எதிர் நோக்கினவனாய்க்கொண்டு தன் வேறுபாடு தோற்ற இருக்கிற. கனிந்த பொழில் திருப்பேரெயிற்கே - கொண்டு புக்குக் காட்டுவார் தாழ்வே; [6] அங்குள்ளன எல்லாம் பக்குவ பலமாக இருக்கும். [7] கனிந்த மரம் கணடால், 'அசுர ஆவேசம் உண்டு' என்று அஞ்ச

---

1. இழந்த நிறம் முதலானவைகளும் இருக்க, 'பெண்மை தோற்றேன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தோலாதது' என்று தொடங்கி.

2. 'இனி' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இனி மீட்கலாம்' என்று தொடங்கி.

3. 'அன்னைமீர்காள்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'பிறந்தது' என்று தொடங்கி.

4. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'அவன் செய்த' என்று தொடங்கி.

5. அவன் அப்படி முற்பாடனாய் இருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பூர்வஜ' என்று தொடங்கி. இது, ஜிதந்தா.

6. 'அங்குள்ள எல்லாம் பக்குவபலமாக இருக்கும்,' என்றதன் கருத்து, 'என்னை அங்கீகரிப்பதற்குக் காலத்தை எதிர் நோக்கினவனாயிருக்கிறான்' என்றபடி.

7. 'கனிந்த பொழில்' என்கையாலே, கனிந்த விளவினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறார், 'கனிந்த மரம்' என்று தொடங்கி. என்றது, 'உகந்தருளின நிலம் ஆகையாலே பகைவர்கள் இல்லை' என்றபடி.

வேண்டாத சோலை. காலம் பெற என்னைக் காட்டுமினே - [1] இக் குடிக்கும் எனக்கும் பரிஹாரம் ஒன்றே அன்றோ? [2] பின்னையும் என்னை அங்கே கொண்டுபோய் விடுதலைத் தவிரீர்கோள்; நான் உளேனானபோதே அதனைச் செய்யப் பாருங்கோள். பின்பு தண்ணீர் சென்ற பிறகு அணை கட்டப் பாராமல், நான் ஜீவிக்கும் எல்லையிலே காட்டுங்கோள். (5)

690

*காலம் பெறஎன்னைக் காட்டுமின்கள்*
*காதல் கடலின் மிகப்பெரிதால்*
*நீல முகில்வண்ணத்து எம்பெருமான்*
*நிற்குமுன் னேவந்தென் கைக்கும்எய்தான்*
*ஞாலத் தவன்வந்து வீற்றிருந்த*
*நான்மறை யாளரும் வேள்விஓவாக்*
*கோலச் செந்நெற்கள் கவரிவீசும்*
*கூடு புனல்திருப் பேரெயிற்கே.*

**பொ - ரை:** 'நீலமுகில் போன்ற நிறத்தையுடைய எம்பெருமான் என் முன்னே வந்து நிற்பான்; ஆனால், கையால் அணைப்பதற்கு அகப்படான்; ஆதலால், காதலானது கடலைக்காட்டிலும் மிகவும் பெரியதாய் இருக்கிறது; பூலோகத்திலே வந்து அவன் வீற்றிருந்த, நான்கு வேதங்களிலே வல்லவர்களான பிராஹ்மணர்களும் அவர்களால் செய்யப்படுகின்ற யாகங்களும் நீங்காமல் இருக்கின்ற, அழகிய செந்நெற்பயிர்கள் சாமரையைப் போன்று வீசுகின்ற சேர்ந்த தண்ணீர் நிறைந்திருக்கின்ற திருப்பேரெயில் என்ற திவ்விய தேசத்திற்குக் காலம் நீட்டிக்காமல் என்னைக் கொண்டுபோய் விடுங்கோள்,' என்கிறாள்.

**வி - கு:** 'வீற்றிருந்த திருப்பேரெயில்' என்றும், ஓவாத் திருப்பேரையில்' என்றும், 'கவரி வீசும் கூடு புனல் திருப்பேரெயில்' என்றும் தனித்தனியே கூட்டுக.

---

1. 'காட்டுதல் நிச்சயமானால் அன்றோ 'காலம் பெற என்னைக் காட்டுமின்' என்ன வேண்டுவது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இக்குடிக்கும்' என்று தொடங்கி. என்றது, 'இவள் ஜீவனத்தின் வழியே இக்குடிக்கும் ஜீவனம்' என்றபடி.

2. 'காலம் பெற' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'பின்னையும்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'பின்பு' என்று தொடங்கி.

ஈடு: ஆறும் பாட்டு. [1] ‘நீங்கள் ‘கொடுபோவோமோ அல்லோமோ?’ என்று விசாரிக்கும் நிலை அன்றிக்கே, எனக்குக் காதலானது அறமிக்கது; எனக்கு இங்குத் தரிப்பு அரிது; ஈண்டென என்னைத் தென்திருப்பேரெயில் கொடுபுக்கு மகர நெடுங்குழைக் காதனைக் காட்டுங்கோள்’ என்கிறாள்.

காலம் பெற என்னைக் காட்டுமின்கள் - [2] குடிக்குப் பரிஹாரம் இல்லையாகிலும் எனக்குப் பரிஹாரம் இது அல்லது இல்லை. இனி என்மேல் குற்றம் இல்லை. ‘என்? இப்படிக் கடுகவேண்டுவான் என்?’ என்னில், காதல் கடலின் மிகப் பெரிதால் - இந்தக் காதல் அளவுபட்டோ இருக்கிறது? முதலில் சொன்ன வார்த்தையைக் காணுங்கோள் நீங்கள் நினைக்கிறது. [3] ‘கடல் புரைய’ என்றாளே. [4] ஒரு காரியப்பாட்டாலே விளைந்தது போல அன்றே உகப்பாலே விளைந்திருப்பது? [5] ‘ஆனாலும், காதலை அளவுபடுத்தி, நாங்கள் சொல்லுகிற வார்த்தையைக் கேட்டு எங்களோடே ஒழுகவேண்டாவோ?’ என்ன, நீலம் முகில் வண்ணத்து எம்பெருமான் - [6] நான் உங்கள் வழியே போகவோ, இவன் வழியே போகவோ? என்னை

---

1. ‘காதல் கடலின் மிகப் பெரிதால், திருப்பேரெயிற்கே, காலம் பெற என்னைக் காட்டுமின்கள்’ என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். ஈண்டென - இப்போதே.

2. இத்திருப்பாசுரத்திலுள்ள ‘காலம் பெற’ என்றதற்கு இரண்டு வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார், ‘குடிக்கு’ என்று தொடங்கி.

3. ‘முதலில் சொன்ன வார்த்தை யாது?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘கடல் புரைய’ என்று தொடங்கி. இது திருவாய். 5. 3 : 4.

4. ‘சாதன பத்தி போல அன்றிக்கே இவர் பத்தி கரை புரண்டு இருக்கைக்குக் காரணம் யாது?’ என்ன, ‘ஒரு காரியப்பாட்டாலே’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ‘ஒரு காரியப்பாட்டாலே விளைந்ததுபோல’ என்றது, ‘காரியத்தின்பொருட்டு விளைந்த சாதனபத்தி போல’ என்றபடி. சாதனபத்தி- சாதனமாய் இருக்கும் பத்தி.

5. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், ‘ஆனாலும்’ என்று தொடங்கி.

6. ‘நீலமுகில் வண்ணத்து எம்பெருமான்’ என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘நான்’ என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், ‘என்னை அப்படி’ என்று தொடங்கி. ‘அப்படிச் சேர்த்துவிட’ என்பதற்கு, ‘அந்தத் திருமேனியாலே சேர்த்துவிடுகைக்காக’ என்பது நேர்ப்பொருள்; ‘அந்தப் பிரகாரம் சேர்த்துவிட’ என்பது வேறும் ஒரு பொருள்.

அப்படிச் சேர்த்துவிட வந்து முன்னே நிற்க, நான் மீளும்படி என்? [1] அப்படியாலே அவன் துவக்காநிற்க, உங்கள் வார்த்தையைக் கேட்கவோ? [2] சிரமத்தைப் போக்கும்படியான வடிவினைக்கொண்டு முன்னே நின்று காதலை வளர்க்கின்றவனுகாநின்ருன். [3] இக்காதலை ஒருபடியே வளர்க்கிறது அன்ரே? [4] கடல் புரைய விளைவித்ததும் காரமர் மேனி அன்ரே? நிற்கும் முன்னே வந்து - இவன் கிட்ட நின்றிலனுகில் நான் உங்கள் வார்த்தையைக் கேட்டு மீளேனே? [5] 'ஆனல் உனக்குப் பொல்லாதோ?' என்ன, என் கைக்கும் எய்தான் - அழகிது அன்ரே, எனக்கு இப்படித் தரப்பெறில்! வார்த்தை சொல்லுதல், அணைத்தல் செய்யாமையே அன்று; என் கைக்கும் எட்டுகின்றிலன். 'இனி நீ செய்யப் பார்த்தது என்?' என்ன, 'உருவெளிப்பாடு அன்றியிலே கண்ணாலே கண்டு அனுபவிக்கலாம் தேசத்திற்குப் போகப்பார்த்தேன்,' என்கிருள் மேல்:

ஞாலத்து அவன் வந்து வீற்றிருந்த - [6] தூரத்தே சென்று காண வேண்டாதபடி பரமபதத்தில் ஐஸ்வரியம் எல்லாம் இங்கே தோற்றும்படி இருந்த. நான்மறையாளரும் வேள்வி ஓவா - வேதார்த்த வித்துகளும் சமாராதனத்திலே எப்பொழுதும் ஈடுபட்டவர்களானுர்கள். [7] என்னேடு ஒத்தவர்களும், தங்கள் தங்களுக்கு வகுத்த கைங்கரியம் பெற்று வாழாநிற்பர்கள். கோலம் செங்நெல் கவரி வீசும் கூடு

---

1. மேல் வாக்கியத்தால் சொல்லப்பட்ட பொருளை வெளிப்படையாக அருளிச்செய்கிருர், 'அப்படியாலே' என்று தொடங்கி. அப்படி- 'அந்தத் திருமேனி' என்பது நேர்ப்பொருள்.

2. 'நீலமுகில் வண்ணத்து எம்பெருமான்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'சிரமத்தைப் போக்கும்படியான' என்று தொடங்கி.

3. 'காதல்' என்றதன் பின், 'நீலமுகில் வண்ணத்து' என்று சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'இக்காதலை' என்று தொடங்கி.

4. திருமேனி காதலை விளைப்பதற்குப் பிரமாணம் காட்டுகிருர், 'கடல் புரைய' என்று தொடங்கி. இது, திருவாய். 5. 3 : 4.

5. 'என் கைக்கும் எய்தான்' என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிருர், 'ஆனல்' என்று தொடங்கி. 'கைக்கும்' என்ற உம்மையின் பொருளை விரிக்கிருர், 'வார்த்தை சொல்லுதல்' என்று தொடங்கி.

6. 'ஞாலத்து வீற்றிருந்த என்றதற்கு பாவம் அருளிச்செய்கிருர் 'தூரத்தே' என்று தொடங்கி.

7. 'வேள்வி ஓவா' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'என்னேடு' என்று தொடங்கி. 'ஒத்தவர்களும்' என்றது, 'வேறு பிரயோஜனத்தைக் கருதாதவர்களாகையாலே' என்றபடி.

புனல் திருப்பேரெயில் - [1] மழை சோறு முதலியவைகள் விஷயமாக அங்குள்ளார்க்கு முயற்சி செய்ய வேண்டாமலே இருக்கை. [2] அவை ஆநுஷங்கிக பலமாய் வருமத்தனை; 'நீள்செல்வம் வேண்டாதான் தன்னையே தான் வேண்டும்' என்றும், 'அங்கங்கே அவை போதரும்' என்றும் சொல்லக்கடவதன்றோ? காட்சிக்கு இனிய செந்நெல்களானவை அங்குத்தைக்குக் கவரி வீசினாற்போலே அசையாநிற்கும். ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் என்னும் இவை மூன்றும் கூடி இருக்கையாலே தண்ணீர் நிறைந்திருத்தலின் '**கூடுபுனல் திருப்பேரெயில்**' என்கிறது. திருப்பேரெயிற்கே காலம் பெற என்னைக் காட்டுமின்கள் - [3] என் விடாய் தீரச் சிரமத்தைப் போக்கும்படியான தேசத்திலே கொடுபோய்ப் போகடப் பாருங்கோள். அன்றிக்கே, 'அங்குள்ள செந்நெலுக்குத் தண்ணீர் தாரகமாய் இருக்குமாறு போலே, இவளுக்கும் அவ்வூரில் காட்சியே தாரகமாய் இருக்கிறபடி' என்னுதல். (6)

691

*பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை*
*செற்ற பிரான்வந்து வீற்றிருந்த*
*பேரெயிற் கேபுக்குஎன் நெஞ்சம்நாடிப்*
*பேர்த்து வரஎங்கும் காணமாட்டேன்;*
*ஆரை இனிஇங் குடையம்தோழீ!*
*என்நெஞ்சம் கூவவல் லாருமில்லை;*
*ஆரை இனிக்கொண்டுஎன் சாதிக்கின்றது?*
*என்நெஞ்சம் கண்டதுவே கண்டேனே.*

பொ - ரை: 'பெரிய மதில்கள் சூழ்ந்த கடலுக்கு நடுவேயுள்ள அழகிய இலங்கா நகரத்தை அழித்த பிரான் வந்து வீற்றிருந்த திருப்

---

1. 'ஓவா' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'மழை' என்று தொடங்கி.

2. 'பலத்தின்பொருட்டு அன்றிக்கே, கைங்கரியமாக அநுஷ்டித்தார்களாகில் பலம் உண்டாகிறபடி யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவை' என்று தொடங்கி. ஆநுஷங்கிகம்-தானாகவே வருவது. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நீள்செல்வம்' என்றும், 'அங்கங்கே' என்றும் தொடங்கி. 'நீள்செல்வம்' என்பது, பெருமாள் திருமொழி, 5 : 9. 'அங்கங்கே' என்பது, பெரியாழ்வார் திருமொழி, 5. 1 : 4.

3. 'கூடுபுனல் திருப்பேரெயில்' என்று அடை கொடுத்து ஓதியதற்கு இரண்டு வகையாக பாவம் அருளிச்செய்கிறார், 'என் விடாய்' என்று தொடங்கியும், 'அங்குள்ள' என்று தொடங்கியும்.

பேரெயில் என்ற திவ்விய தேசத்திலே புக்கு எனது நெஞ்சமானது தேடி மீண்டு வருதலை எங்கும் காண்கிறேன் இல்லை; தோழீ! இனி, இங்கு யாரை உடையோம்? சென்ற என் நெஞ்சினைக் கூவ வல்லாரும் இல்லை; இனி, யாரைக்கொண்டு என்ன பிரயோஜனத்தைச் சாதிப்பது? என் நெஞ்சம் கண்ட விஷயத்தையே நானும் கண்டேன்,' என்கிருள்.

ஈடு: ஏழாம் பாட்டு. [1]'இலக்குமணன் சென்ற வழியை நானும் பின்பற்றுகிறேன்' என்ற பெருமாளைப்போலே இந்தப் பிராட்டியும் 'என் நெஞ்சு, தரிக்கைக்கு விரகு பார்த்துத் திருப்பேரெயில் புக்காற்போலே நானும் அங்கே புகுமத்தனை,' என்கிருள். மேல் பாசுரங்களில் கூறியவாறே முடிந்த பின்பு, 'இனி நான் செய்யப் பார்த்தது இது என்கிருள்,' என்னுதல்.

பேர் எயில் சூழ் கடல் தென் இலங்கை செற்ற பிரான் - மதிளுக்கு அழகாம்படி அம்மதிளைச் சூழ்ந்த கடலையுடைத்தாய், கேட்க அஞ்சும்படியான ஊரை மூலை அடியே நடக்கச்செய்த உபகாரகன். பேர் எயில் - பெரிய மதிள். வந்து வீற்றிருந்த - [2]அப்போது முகம் மாற வைத்த இழவுதீர அணைக்கலாம்படி கிட்ட வந்திருக்கிற. [3]'விமல சசாங்க நிபாநநா' என்கிறபடியே, எப்போது பெருமாள் முகம் வைக்க ஒண்ணுதபடி கொடியராய் இருந்தார்,

---

1. 'என் நெஞ்சம் கண்டதுவே கண்டேன்' என்றதனைத் திருவுள்ளம் பற்றித் திருஷ்டாந்தத்தோடு அவதாரிகை அருளிச்செய்கிருர், 'இலக்குமணன்' என்று தொடங்கி.

'அஹஞ்ச அநுகமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்'

என்பது, ஸ்ரீராமா. உத்தரகா.

மேல் திருப்பாசுரத்தோடு இயைபு அருளிச்செய்கிருர், 'மேல் பாசுரங்களில்' என்று தொடங்கி. கூறியவாறே முடிந்த பின்பு' என்றது 'நிறம் தொடக்கமானவற்றையும் இழந்து, உசாத்துணையான நெஞ்சையும் இழந்து, தாய்மார் காட்ட ஒருப்படுகை இல்லாமல் தடைசெய்யுமளவான பின்பு' என்றபடி.

2. 'தென்னிலங்கை செற்றபிரான்' என்றதனையும் கூட்டி, 'வந்து வீற்றிருந்த' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'அப்போது' என்று தொடங்கி, அப்போது-இராவணனைக் கொன்ற பின்பு. 'முகமாற வைத்த' என்றது, 'இவளுக்கு முகம் கொடாதிருந்த' என்றபடி. கம்பராமாயணம், யுத்தகாண்டம், மீட்சிப் படலம், 61 முதல் 68 முடிய உள்ள செய்யுள்களை இங்கு நோக்கத்தகும்.

3. 'அவர்' முகம் மாறவைத்த போது இவள் இருந்த பிரகாரம் எது?' என்ன, இருந்ததற்குப் பிரமாணமும் அதற்குப் பொருளும் அருளிச்செய்கிருர், 'விமல' என்று தொடங்கி.

'வதநம் உதித பூர்ண' சந்த்ரகாந்தம் விமல ஸஸாங்க நிபாநநா ததாஸீத்' என்பது, ஸ்ரீராமா. யுத். 117 : 36. எப்போது-யாதொரு போதிலே.

அவ்வளவிலும் இவள் மறுவற்ற சந்திர மண்டலம் போலே [1] முகத்தில் குளிர்ச்சி மாருதே இருந்தாள். [2] 'கண் நோய் கொண்டவனுக்கு விளக்குப்போன்று எனக்குப் பிரதிகூலமாய் இருக்கிருய்; நிச்சயம்' என்பது பெருமாள் திருவார்த்தை. [3] 'கண்களின் தோஷத்தால் வந்தது போக்கி, விளக்கின் தோஷத்தால் வந்தது அன்று,' என்று இதற்கு ஆளவந்தார் அருளிச்செய்வர். [4] பகைவர்களைக் கொன்று அதனாலே விடாய்த்து வந்திருப்பார், [5] 'கணவனைத் தழுவிக்கொண்டாள்' என்கிறபடியே, குளிர்ந்த உபசாரங்களைச் செய்தற்குப் போக வேணும். பேரெயிற்கே புக்கு என் நெஞ்சம் நாடிப் பேர்த்து வர எங்கும் காணமாட்டேன் - அவன் இருந்த திருப்பேரெயிலே புக்குத் தேடி என் நெஞ்சமானது ஓரிடத்திலும் மீண்டு வரக் காண்கின்றிலேன். [6] மீள ஒண்ணுத இலங்கையிலே புக்க திருவடியும் மீண்டு வந்தான்; அணித்தான இவ்வூரிலே புக்க என் நெஞ்சமானது மீண்டு வரக் காண்கின்றிலேன்! [7] நெஞ்சுங்கூட வாராத பின்பு அவன்

---

1. *முகத்தில் குளிர்ச்சி மாருமைக்குக் காரணம், பல காலம் பிரிந்திருந்து சேவிக்கப் பெற்றதாலுண்டாய பிரீதியும், வேறு ஸ்பர்சதோஷம் இல்லாமையும், 'சேஷியின் விநியோக பிரகாரம் கொண்டு காரியம் என்?' என்கிற நினைவும் என்க.*

2. *அவர் முகம் மாறவைத்ததற்குப் பிரமாணம் காட்டுகிருர், 'கண் நோய்' என்று தொடங்கி.*

*'தீபோ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருடம்'* *என்பது, ஸ்ரீராமா. யுத்.* 118 : 17.

3. *திருஷ்டாந்த பலத்தாலே, பிராட்டிக்குத் தோஷம் இன்மை தோற்றுகிறது என்கைக்கும் பரமாசாரியருடைய சம்வாதம் காட்டுகிருர், 'கண்களின்' என்று தொடங்கி.*

4. *'இலங்கை செற்ற பிரான் வந்து வீற்றிருந்த திருப்பேரெயில் போக வேண்டும்' என்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிருர். 'பகைவர்களை' என்று தொடங்கி.*

5. *'பர்த்தாரம் பரிஷஸ்வஜே' என்பது, ஸ்ரீராமா. ஆரண்ய.* 30 : 40.

6. *'பேரெயிற்கே' என்றதிலேயுள்ள ஏகாரத்துக்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'மீள ஒண்ணுத' என்று தொடங்கி.*

7. *'தூதான நெஞ்சு வாராமையாலே, அவன் வாராமை சொல்ல வேண்டா,' என்கிருள் 'நெஞ்சுங்கூட' என்று தொடங்கி.*

வாராமை சொல்லவேண்டா அன்றோ? [1] நெஞ்சினது வரவு பார்த்துக் கண் மறைந்துகாணும் இவள் நிற்கிறது. அன்றிக்கே, ‘கண்டு ஜீவியாமல் நான் இங்ஙனே முடிந்து போமித்தனையன்றோ?’ என்னுதல்.

[2] ‘நாதன் வருந்துணையும், அவனுக்காக அவன் செயல்களைப் பாடிக்கொண்டு தரித்திருக்க வேண்டாவோ?’ என்னில், ஆரை இனி இங்கு உடையம் தோழீ! - [3] நெஞ்சும் இல்லாத அன்று இனி யார் உளர்? தோழீ - ‘நெஞ்சில் அண்ணியன் நானே?’ என்றாயாகில், [4] நீ நீ ஆனாயே. [5] ‘இப்போது நான் இங்கு இல்லையோ? உன் நெஞ்சினை அழைத்துக்கொள்ளுவதற்கு என்?’ என்ன, என் நெஞ்சம் கூவ வல்லாரும் இல்லை - நெஞ்சினை மீட்கைக்கு நீ வேணுமே? [6] நெஞ்சினை அவனுக்கு ஆக்கின நீ வேணுமே எனக்கு ஆக்கும்போதும்: [7] உன் நிலை இது; உனக்குக் கால்கள் நடை தாரா: [8] அல்லாதார்க்குக் ‘கூட்டவேணும்’ என்னும் விரைவு இல்லை: யார் நெஞ்சினை அழைப்பார்? ஆரை இனிக்கொண்டு என்சாதிக்கின்றது-யாரைக்கொண்டுதான் சாதிப்பது? இனிச் சாதிக்க வேண்டுவது தான் ஏது? [9] நெஞ்சும் அவனும் வந்தால் இனி நான்தான் உண்டாக வேணுமே? இங்கு வெறுந்தரையாய் அன்றோ கிடக்கிறது?

---

1. ‘மாட்டேன்’ என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘நெஞ்சினது’ என்று தொடங்கி. கண் மறைந்து - கண் பூத்து.

2. ‘ஆரை இனி’ என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், ‘நாதன்’ என்று தொடங்கி.

3. ‘இனி’ என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், ‘நெஞ்சும்’ என்று தொடங்கி.

4. ‘நீ நீ ஆனாயே’ என்றது, ‘நீ தோழியாம்படியாயே இருந்தாய்,’ என்றபடி. அதாவது, ‘என் துக்கத்தைக் கண்டு எனக்கு முன்னே தளர்ந்து கிடந்தாய்’ என்றபடி.

5. ‘இப்போது நான் இங்கு இல்லையோ?’ என்றது, தோழி வார்த்தை.

6. ‘நெஞ்சினை மீட்கைக்கு நான் வேண்டுமோ?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘நெஞ்சினை’ என்று தொடங்கி.

7. ‘நான் மாட்டேனோ?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘உன் நிலை’ என்று தொடங்கி.

8. ‘வேறு சிலரைக்கொண்டு அழைத்துக்கொண்டாலோ?’ என்ன, ‘அல்லாதார்க்கு’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

9. ‘ ‘ஆரை இனியிங்கு உடையம்?’ என்றதற்கும், ‘யாரை இனிக்கொண்டு’ என்றதற்கும் வேற்றுமை யாது?’ என்ன, ‘நெஞ்சும் அவனும்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, ‘மேலே தோழியும் இல்லை என்றாள்; இங்கே தானும் இல்லை என்கிறாள்,’ என்றபடி.

'ஆனுல், செய்யப் பார்த்தது என்?' என்னில், என் நெஞ்சம் கண்டதுவே கண்டேனே - மீளாதே நெஞ்சு போன வழியே போகப் பார்த்தேன். [1]'நான் இப்பொழுதே இலக்குமணன் சென்ற வழியிலேயே செல்லப் போகிறேன்' என்கிறபடியே, 'நெஞ்சு சென்ற வழியே செல்லப் பார்த்தேன்' என்கிருள். (7)

692

கண்டது வேகொண்டுஎல் லாரும்கூடிக்
 கார்க்கடல் வண்ணனேடு என்திறத்துக்
கொண்டலர் தூற்றிற் றதுமுதலாக்
 கொண்டஎன் காதல் உரைக்கில்தோழீ !
மண்திணி ஞாலமும் ஏழ்கடலும்
 நீள்விசும் புங்கழி யப்பெரிதால் ;
தெண்திரை சூழ்ந்தவன் வீற்றிருந்த
 தென்திருப் பேரெயில் சேர்வன்சென்றே.

பொ - ரை : 'என் சரீரத்தில் கண்ட வேறுபாடு முதலியவற்றைக் கொண்டு, எல்லாரும் கூட்டம் கூடிக் கரிய கடல் வண்ணனேடு கூடியதால் என்னிடத்திலுண்டான வேறுபாட்டினைக் காரணமாகக்கொண்டு பழிச்சொற்கள் கூறிய அதனையே காரணமாகக் கொண்டு வளர்ந்த என்னுடைய காதலை உரைக்குமிடத்து, தோழியே! அணுக்கள் செறிந்திருக்கின்ற இந்த உலகத்தையும், இதனைச் சூழ்ந்துள்ள ஏழு கடல்களையும், இவற்றை எல்லாம் தனக்குள் அடக்கிக்கொண்டிருக்கின்ற ஆகாசத்தையும்விட மிகமிகப் பெரியதாகும்; தெளிந்த அலைகளையுடைய தண்ணீரானது சூழ, அவன் எழுந்தருளியிருக்கின்ற தென்திருப்பேரெயில் என்ற திவ்விய தேசத்திற்குச் சென்று சேர்வேன்,' என்கிருன்.

வி - கு : 'கொண்டு கூடி என் திறத்துக்கொண்டு அலர் தூற்றிற்றது முதலாக் கொண்ட காதல்' என்க. தூற்றிற்றது - தூற்றியது. முதல் - காரணம். சூழ்ந்து - சூழ – எச்சத்திரிபு. 'சூழ இருந்த திருப்பேரெயில்' என்க.

---

1. இச்சுலோகத்தை இத்திருப்பாசுரத்தின் முன்னுரையில் காண்க. பக். 140.

ஈடு: எட்டாம் பாட்டு. [1] 'எனக்கு 'அவனைக் காணவேணும்' என்னும் காதல் கடலின் மிகப் பெரிது' என்னுமளவு அன்றிக்கே, அற மிக்கது. ஆன பின்பு, நீங்களாக அசையீர்கோளாகில், தன் வேண்டற்பாடு தோன்ற எழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரெயிலை நான் சென்று சேர்வேன்' என்கிறாள்.

கண்டதுவே கொண்டு - [2] அவன் பேர் சொல்லுதல், 'தலையில் வணங்கவுமாங்கொலோ?' என்று ஒரு வணக்கஞ்செய்தல் செய்யுமன்றோ? அவ்வளவினையே கொண்டு; [3] புற இதழ் கண்டு படுகிறபடி இதுவானால், அகவாயில் ஓடுகிறது அறியில் என்படுவார்கள்? எல்லாரும் கூடி - [4] பரிவரோடு, நலத்தை விரும்புமவரோடு, 'இவை இரண்டுந்தான் என்?' என்று இருப்பாரோடு வாசி அறக்கூடி. [5] பிறரைப் பழி சொல்ல என்னில், தம்மில் தாம் சேராதவர்களும் சேர்வர்கள் அன்றோ? கார்க்கடல் வண்ணனோடு என் திறத்துக் கொண்டு - [6] இவள் நிறம் பசலை நிறமாம் போது, அவன் திறத்தே இழந்ததாக வேண்டாவோ? கடல் ஏறி வடிந்த இடம் என்று தோற்றுகிறது இல்லையோ? [7] என் செயலைச் சிரமத்தைப் போக்குகிற நிறத்தையுடையவனோடே கூட்டி. அலர் தூற்றிற்றது முதலாக் கொண்ட என்காதல் உரைக்கில் - இவர்கள் பேசாமலே இருந்தார்களாகில் நானும் சுகமே இரேனோ? நான் பழிக்கு அஞ்சி மீளுவேன் என்றுகாணும் இவர்கள் பழி சொல்லப் புக்கது. அலர் தூற்றிற்று - அலர் தூற்றினார்கள். அது முதலாக் கொண்ட என் காதல் -

---

1. 'மண் திணி ஞாலமும்' என்றது முதல் 'சேர்வன் சென்றே' என்னுமளவும் கடாட்சித்து, அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'கண்டதாவது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன் பேர்' என்று தொடங்கி. 'தலையில்' என்பது, திருவாய். 5. 3 : 7.

3. 'கண்டதுவே' என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'புற இதழ்' என்று தொடங்கி.

4. 'எல்லாரும்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'பரிவரோடு' என்று தொடங்கி.

5. 'அயற்சேரியார் கூடுவர்களோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பிறரை' என்று தொடங்கி.

6. 'கார்க்கடல் வண்ணனிடத்தில் இவள் அன்பு கொண்டவளானாள் என்பதனை அறிந்தபடி என்?' என்ன, அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'இவள் நிறம்' என்று தொடங்கி. அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'கடலேறி' என்று தொடங்கி.

7. பதப்பொருள் அருளிச்செய்கிறார், 'என் செயலை' என்று தொடங்கி.

[1] அதுதானே அடியாகக் கொண்ட என் காதலானது நூறு கிளைகளாகப் பணைக்கப் புக்கது. தன் காதலைத் தன்னாலும் சொல்ல ஒண்ணாது ஆதலின், 'காதல் உரைக்கில்' என்கிறாள். [2] 'எதனினின்று வேதங்கள் மீள்கின்றனவோ என்கிற விஷயத்தைச் சொல்லிலும் இவள் காதல் பேச்சுக்கு நிலம் அன்று,' என்றபடி. [3] இந்தக் காதலுக்கு விஷயமாக இருக்கிறவனையும் விளாக்குலை கொள்ளவற்றான காதல் அன்றோ? [4] 'சுடர் ஞான இன்பம்' என்று பகவானுடைய ஆனந்தத்தைச் சொல்லி வைத்து, 'அதனிற்பெரிய என்னவா' என்றார் அன்றோ?

தோழீ - [5] 'இந்தக் காதலை விளைக்கைக்கு நீ செய்யும் கிருஷி அறிதி அன்றோ? இது [6] இருந்தபடி பாராய். மண் திணி ஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரிது - [7] 'காதல், கடலின் மிகப் பெரிதால்' என்ற இடம் ஓராதே சொன்னோம்; 'ஆனால், எங்ஙனே சொல்லும்படி?' என்னில், பெரியவற்றில் பெரியது என்னுமித்தனை யல்லது, ஒரு பாசுரமிட்டுச் சொல்லலாவது இல்லை. மண்ணாலே

---

1. 'அதுதானே அடியாகக்கொண்ட என் காதல்' என்ற இடத்தில் 'ஊரவர் கவ்வை' என்ற திருவாய்மொழிப் பாசுரம் 5. 3 : 4 நினைவு கூர்க.

'ஊரவர் கவ்வை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்.'

என்பது திருக்குறள்.

2. சொல்லி முடிக்க ஒண்ணாமையின் எல்லையை அருளிச்செய்கிறார், 'எதனினின்று' என்று தொடங்கி. 'யதோவாசோ நிவர்த்தந்தே' என்பது, தைத்திரீயம்.

3. 'பேச்சுக்கு நிலம் அல்லாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இந்தக் காதலுக்கு' என்று தொடங்கி. விளாக்குலை கொள்ளுதல்-கபளீகரித்தல்.

4. 'அதனையும் விளாக்குலை கொள்ளவற்றோ?' என்ன, 'சுடர் ஞான இன்பம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது திருவாய். 10. 10 : 10.

5. 'தோழீ' என்று விளிக்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இந்தக் காதலை' என்று தொடங்கி.

6. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'இது இருந்தபடி பாராய்' என்று.

7. 'முன்பு 'காதல் கடலின் மிகப் பெரிதால்' என்று சொன்ன நீ, இப்பொழுது இப்படிச் சொல்லுவது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'காதல் கடலின்' என்று தொடங்கி.

நெருங்கின பூமியும், அதனைச் சூழ்ந்த கடல் ஏழும், அவற்றுக்கெல்லாம் இடம் தருகின்ற ஆகாசமும் என்னுமிவை இத்தனைக்கும் அவ்வருகுபட்டிருக்கை. 'இப்படிக் காதல் கரைபுரண்டால் செய்யப் பார்த்தது என் ?' என்ன, தெண் திரை சூழ்ந்து அவன் வீற்றிருந்த தென் திருப்பேரெயில் சென்று சேர்வன் - [1] இந்தக் காதல் மறுநனையும்படியான விஷயம் இருந்த இடத்தே போய்ப்புகுமத்தனை. தெளிந்த திரைகளாலே சூழப்பட்டு அவன் வீற்றிருந்த தென் திருப்பேரெயிலே போய்ப்புகுமத்தனை. [2] 'பலவித மலர்களினுடைய சிறந்த வாசனை நிறைந்த அந்தச் சித்திரகூடமலையில் பல உத்தியானங்களில் விளையாடி அதனுல் வியர்வையடைந்து வாட்டமுடையவளாய்த் தேவரீருடைய மடியில் படுத்துக்கொண்டேன்' என்கிறபடியே, அனுபவத்திற்குத் தகுதியான தேசத்திலே போய்ப் புகக்கடவோம். சேர்வன் சென்றே - [3] இனிப்பகட்டால் தீராது, புக்கு அல்லது விடேன். [4] ஆள் விடுதல், அவன் வரவு பார்த்திருத்தல் செய்யேன். சென்று சேர்வன் - இனி எதிரே அவன் வரிலும் மீளேன். அவனைச் சேர்தல் அன்று உத்தேசியம், அங்கே சென்று கிட்டுகை. (8)

693

சேர்வன்சென்று என்னுடைத் தோழிமீர்காள் !
அன்னையர் காள்!என்னைத் தேற்றவேண்டா ;
நீர்கள் உரைக்கின்றது என்னிதற்கு ?
நெஞ்சும் நிறைவும் எனக்குஇங்குஇல்லை ;
கார்வண்ணன் கார்க்கடல் ஞாலம்உண்ட
கண்ண பிரான்வந்து வீற்றிருந்த
ஏர்வள ஒண்கழ னிப்பழனத்
தென்திருப் பேரெயில் மாநகரே.

---

1. 'அவன் வீற்றிருந்த தென் திருப்பேரெயில்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறுர், 'இந்தக் காதல்' என்று தொடங்கி.

2. 'தெண்திரை சூழ்ந்தவன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறுர், 'பலவித மலர்' என்று தொடங்கி.

'தஸ்ய உபவந ஷண்டேஷு நாநாபுஷ்ப ஸுகந்திஷு
விஹ்ருத்ய ஸலிலக்லிந்நா தவாங்கே ஸமுபாவிஶம்'

என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 14.

3. 'சென்றே' என்ற ஏகாரத்தின் பொருளை அருளிச்செய்கிறுர், 'இனிப் பகட்டால்' என்று தொடங்கி.

4. 'சென்று சேர்வன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறுர், 'ஆள் விடுதல்' என்று தொடங்கி.

**பொ-ரை:** 'என்னுடைய தோழிமீர்காள்! அன்னையர்காள்! என்னைத் தேற்றவேண்டா; இந்த நிலைக்கும் நீங்கள் சொல்லுகிற வார்த்தைக்கும் என்ன சம்பந்தம் உண்டு? நெஞ்சம் நிறையும் எனக்கு இங்கு இல்லை; மேகம் போன்ற நிறத்தையுடையவனும் கரிய கடல் சூழ்ந்த உலகத்தைப் புசித்த கண்ணபிரானுமான எம்பெருமான் வந்து எழுந்தருளியிருக்கின்ற அழகிய வளப்பம் பொருந்திய பார்ப்பதற்கு இனிய வயல்கள் சூழ்ந்த மருதநிலங்களையுடைய தென்திருப்பேரெயில் என்னும் மாநகரைச் சென்று சேர்வேன்,' என்கிறாள்.

**வி-கு:** 'வீற்றிருந்த திருப்பேரெயில்' என்க. 'நீர்கள்' என்பதில் 'கள்' அசை நிலை.

ஈடு: ஒன்பதாம் பாட்டு. [1] 'நீங்கள் இனி என்னைத் தேற்றிப் பிரயோஜனம் இல்லை; தென் திருப்பேரெயிலைப் போய்ப் புகக்கடவேன்,' என்கிறாள்.

சேர்வன் சென்று - [2] 'உன் ஆற்றாமையாலே சில சொல்லுகிறாயாகில் இது கடைப்படவற்றோ?' என்ன, 'அவசியம் அங்கே புக்கு அல்லது விடேன்!' என்கிறாள். என்னுடைத் தோழிமீர்காள் அன்னையர்காள் - [3] எனக்காக இருப்பாரும், என்னைத் தங்களுக்காக நினைத்திருப்பாரும் ஒன்றும் சொல்ல வேண்டா. [4] தோழிமாரோடு தாய்மாரோடு வாசி இல்லைகாணும் இவளைத் தேற்றப் போகாமைக்கு. அறிவில்லாத மாக்களோ ஞானிகளை உபதேசத்தால் மீட்கப் பார்ப்பார்? [5] விஷயம் காரணமாக வருகின்றதனைச் சாதனத்தில் செலவு எழுதுகின்றவர்களோ எனக்கு வார்த்தை சொல்லுவார்? இவள்,

---

1. 'அன்னையர்காள்! என்னைத் தேற்ற வேண்டா. தென் திருப்பேரெயில் மாநகர் சேர்வன் சென்று' என்பதனைக் கடாட்சித்து, அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. இத்திருப்பாசுரத்திலும், 'சேர்வன் சென்று' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'உன் ஆற்றாமையாலே' என்று தொடங்கி. கடைப்படவற்றோ - நிறைவேற வல்லதோ?

3. 'என்னுடைத் தோழிமீர்காள்' என்று விசேடிப்பதற்கும் 'அன்னையர்காள்' என்று மரியாதையோடு விளிப்பதற்கும் பாவம் அருளிச்செய்கிறார், 'எனக்காக' என்று தொடங்கி.

4. 'தோழிமார்க்கும் தேற்றப் போகாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தோழிமாரோடு' என்று தொடங்கி.

5. 'விஷயம் காரணமாக' என்னும் இவ்விடத்தில் 5-ஆம் பத்து 5-ஆம் திருவாய்மொழி, வியாக்கியானம் பார்க்க.

தன்னை மறந்து, அவனையே பார்த்துப் பேசுகிறுள்; அவர்கள் அவனை மறந்து, தங்கள் தங்களையே பார்த்து மீட்கத் தேடுகிறார்கள். நீர்கள் உரைக்கின்றது என் இதற்கு - [1] கலங்கினரோ தெளிந்தாரைத் தேற்றுவார்? நீங்கள் நிற்கிற நிலை எது? என் நிலை எது? போகையிலே துணிந்திருக்கிற என்னை, 'புறப்படுகை பழி' என்று இருக்கின்ற நீங்கள் சொல்லுவது என்? இதற்கு - எனக்கு ஓடுகிற நிலைக்கு.

'ஆனாலும், நெஞ்சும் அடக்கமுமுடையார்க்கு இது வார்த்தையோ? நாங்கள் சொன்னபடி செய்து எங்கள் வழியே ஒழுக வேண்டாவோ?' என்ன, 'நெஞ்சும் நிறைவும் எனக்கு இங்கு இல்லை; [2] அது வேணுமாகில் அங்கே போய்ச் சொல்லுங்கோள். [3] மனமும் அடக்கமும் அவன் பக்கலின், நிறைவு - அடக்கம். நெஞ்சு - அது இட்டுவைக்கும் கலம். நெஞ்சும் நிறைவும் எனக்கு ஆம்படியோ அவன் படி இருக்கிறது? கார் வண்ணன் - [4] தாய்மார் தோழிமாரான வர்கள் வார்த்தை கேளாதபடியாக வடிவைப் படைத்தவன். 'வெறு வடிவழகேயோ உள்ளது?' என்னில், கார்க்கடல் ஞாலம் உண்ட - [5] 'தளர்ந்தார் தாவளம், ஆபத்து வந்தால் காப்பாற்றிவிடும் அத்தனையோ?' என்னில், கண்ணபிரான் - தன்னைப் பிறர்க்கு ஆக்கி வைக்கும் உபகாரகன். வந்து வீற்றிருந்த - தன் செல்வம் எல்லாம் தோற்றும்படி இருந்த. ஏர்வளம் ஒண் கழனிப் பழனம் தென்திருப்பேரெயில் மாநகரே - ஏரினுடைய நிறைவினையுடையனவாய், அழகியன வான கழனிகளையும் நீர்நிலங்களையுமுடைய திருப்பேரெயிலாகிற மாநகரிலே சென்று சேர்வேன். [6] உங்கள் தடைக்கு மீளுதல், அவ் வழியில் நிற்றல் செய்யேன். என்னைத் தேற்ற வேண்டா.' வளம் - மிகுதி. (9)

1. நீர்கள்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'கலங்கினரோ' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார், 'நீங்கள்' என்று தொடங்கி.

2. 'இங்கு இல்லை' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அது வேணுமாகில்' என்று தொடங்கி.

3. 'கார்வண்ணன்' என்றதனை 'நெஞ்சும் நிறைவும் எனக்கு இங்கு இல்லை' என்றதனோடே கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார், 'மனமும்' என்று தொடங்கி.

4. 'தோழிமீர்காள், அன்னையர்காள்' என்றதனோடே கூட்டி வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'தாய்மார்' என்று தொடங்கி.

5. தளர்ந்தார் தாவளம்-தளர்த்தவர்கட்கு ஆதாரம்.

6. 'சென்று சேர்வன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'உங்கள்' என்று தொடங்கி.

694

நகரமும் நாடும் பிறவும்தேர்வேன்
நாண்எனக்கு இல்லைஎன் தோழிமீர்காள்!
சிகர மணிநெடு மாட நீடு
தென்திருப் பேரெயில் வீற்றிருந்த
மகர நெடுங்குழைக் காதன்மாயன்
நூற்று வரையன்று மங்கநூற்ற
நிகரில் முகில்வண்ணன் நேமியான்என்
நெஞ்சங் கவர்ந்துஎனை ஊழியானே.

**பொ—ரை:** என்னுடைய தோழிமீர்காள்! நகரங்களிலும் நாடுகளிலும் பிற இடங்களிலும் தேடுவேன்; எனக்கு நாணம் இல்லை; 'என்னை?' எனின், சிகரங்களையுடைய அழகிய நீண்ட மாடங்கள் நிலைத்திருக்கின்ற தென்திருப்பேரெயிலில் எழுந்தருளியிருக்கின்ற மகர நெடுங்குழைக்காதனும் மாயனும் துரியோதனாதியர்கள் அன்று அவியும்படியாக மந்திரித்த ஒப்பில்லாத முகில் வண்ணனும் நேமியானுமான எம்பெருமான் என் மனத்தினைக் கொள்ளைகொண்டு எத்தனை ஊழிக்காலத்தையுடையான்?

**வி—கு:** 'மகர நெடுங்குழைக்காதன்' என்பது, அந்தத் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன் திருப்பெயர். 'எனை ஊழியான்' என்பது, 'அவன் என் மனத்தினைக் கவர்ந்து எத்தனை ஊழிக்காலமாயிற்று?' என்றபடி.

**ஈடு:** பத்தாம் பாட்டு. [1]'இருந்ததே குடியாக உலகத்தார் உன்னைப் பழி சொல்லார்களோ?' என்று தோழிமார்கள் சொல்ல, 'அவர்கள் அன்றோ எனக்குத் தேட்டம்?' என்கிறாள்.

நகரமும் நாடும் பிறவும் தேர்வேன் - 'உன் துணிவு துணிவாக, நாட்டார் நகரத்தார் மற்றுமுள்ளாரும் எல்லாரும் அறிந்து பழி சொல்லுகிறார்களே!' என்ன, 'எனக்குதான் தேட்டம் அவனேயோ? நகரம், நாடு பத்தநம் முதலானவைகள், இவற்றிலுள்ளாருடைய

1. 'நகரமும் நாடும் பிறவும் தேர்வேன்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். இருந்ததே குடியாக-குடி இருக்கிற பேரெல்லாரும்.

பழியேயன்றோ எனக்குத் தேட்டம்? 'தேர்வேன்' 'தேடுகிறேன்' என்ற படி. [1] நீங்கள் சேர்க்கிலீர்கோளாகில், அவன் தானாக வாரானாகில், அவனுடனே கூட்டிப் பழி சொல்லுகிற இவர்கள் அன்றோ என் ஆத்மாவை நோக்குகிறார்கள்? [2] 'அலர் எழ ஆருயிர் நிற்கும்' என்றான் அன்றோ? பிறவும் - மற்றுமுள்ளனவும். நாண் எனக்கு இல்லை - [3] நாணம் இங்கு இல்லாமையே அன்று; அங்குப் போனாலும் இல்லை. இந்தச் சரீரத்தில் முதலிலே இல்லாமை. என் தோழி மீர்காள் - [4] இது நான் உங்களுக்குச் சொல்லி அறிய வேண்டும்படி ஆவதே! சிகரம் மணி நெடு மாடம் நீடு தென்திருப்பேரெயில் வீற்றிருந்த - மலைகளின் சிகரங்களைக் கொடுவந்து வைத்தாற்போலே ஒக்கமுடைத்தாய், இரத்தின மயமான மாடங்களையுடைய பெரிதான தென்திருப்பேரெயில் வீற்றிருந்த. மகர நெடுங்குழைக்காதன் - மகரத்தின் வடிவமான பெரிய ஆபரணத்தையுடைய கர்ணபாசங் களையுடையவன். [5] அவனுடைய ஒரோ அவயவங்களிலே படிந்

---

1. 'தேட்டமாகைக்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நீங்கள்' என்று தொடங்கி.

2. 'பழிச்சொல் ஆத்துமாவைப் பாதுகாக்கும்,' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அலர் எழ' என்று தொடங்கி.

'அலரெழ ஆருயிர் நிற்கும்; அதனைப்
பலர்அறியார் பாக்கியத் தால்.'

என்பது திருக்குறள்.

3. 'இங்கு இல்லை' என்னாமல், 'எனக்கு இல்லை' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'நாணம்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'இந்தச் சரீரத்தில்' என்று தொடங்கி.

4. 'தோழிமீர்காள்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இது நான்' என்று தொடங்கி.

5. 'மகரநெடுங்குழைக்காதன்' என்றதனோடே 'என் நெஞ்சங் கவர்ந்து' என்றதனைக் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார், 'அவனுடைய' என்று தொடங்கி.

இங்கே,

'தோள்கண்டார் தோளே கண்டார்; தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்; தடக்கைகண் டாரும் அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கொண்ட சமயத் தன்னான் உருவுகண் டாரை ஒத்தார்.'

என்ற கம்பராமாயணச்செய்யுளை ஒப்பு நோக்குக.

தாரை மீட்கலாயோ இருப்பது? [1] மாயன் - சொல்லிச் சொல்லாத தேக காந்தியையும் ஆத்தும குணங்களையும் நினைக்கிறது. அன்றிக்கே, மாயன் - [2] 'அடியார்களிடத்தில் பக்ஷபாதத்தையுடையவன்' என்னுதல்.

நூற்றுவரை அன்று மங்க நூற்ற - சிலரை அழிக்க நினைத்தால் ஒருவரும் தப்பாதபடி அழிக்குமவன். துரியோதனன் முதலாயினோர்களைப் பாரதப்போர் உண்டான அன்று நசிக்கும்படி மந்திரித்த. நிகர் இல் முகில்வண்ணன் - ஒப்பில்லாத காளமேகம்போலே இருக்கிற வடிவழகு. இதனால், 'விரோதியை வளர்த்தாலும் விட ஒண்ணாத வடிவழகு' என்கை. நேமியான் - [3] அடியார்களுடைய விரோதிகளைப் போக்கும் போது பகலை இரவு ஆக்கும் பரிகரத்தையுடையவன். [4] திருவாழியைக் கொண்டு வீடுமன் முதலாயினோர்களையும் தொடரா நிற்பன் அன்றோ? நிகர் இல் முகில் வண்ணன் நேமியான்-[5] துரியோதனன் முதலாயினோர்கட்கு மின்னும் இடியுமாய், பாண்டவர்கள் துன்பம் தீர மழைபெய்து நின்றபடி. [6] 'அவன் உன் விரோதிகளைப் போக்கிக்கூட நினையாத பின்பு, அவன் தானே வந்து உன் காலிலே விழும்படி மந்திரித்தாலோ?' என்ன, என் நெஞ்சம் கவர்ந்து எனை ஊழியானே - அதற்கு ஈடான பரிகரத்தை நான் இழந்து எத்தனை காலம் உண்டு? வடிவழகையும் ஆயுதச் சேர்த்தியையும் காட்டி என் நெஞ்சினைக் கவர்ந்து போய் எத்தனை காலத்தான்? எனை

---

1. *மாயன்-ஆச்சரியத்தையுடையவன். இன்ன காரணத்தால் என்று விசேடியாமல் பொதுவிலே 'மாயன்' என்றதற்கு* **பாவம்** *அருளிச்செய்கிறார், 'சொல்லி' என்று தொடங்கி.*

2. *'நூற்றுவரை' என்றதனைக் கூட்டி, 'மாயன்' என்றதற்கு* **பாவம்** *அருளிச்செய்கிறார், 'அடியார்களிடத்தில்' என்று தொடங்கி.*

3. *'நேமியான்' என்பதனை 'நூற்றுவரை' என்றதனோடு கூட்டி,* **பாவம்** *அருளிச்செய்கிறார், 'அடியார்களுடைய' என்று தொடங்கி.*

4. *அடியார்களானாலும் அடியார்களுக்கு விரோதிகளாகில் நேமியைக்கொண்டே வெல்வது' என்கிறார் 'திருவாழியை' என்று தொடங்கி.*

5. *'நிகர் இல் முகில் வண்ணன்' என்றதனை, 'நூற்றுவர்' என்றதனோடு கூட்டி,* **பாவம்** *அருளிச்செய்கிறார், 'துரியோதனன்' என்று தொடங்கி.*

6. *'என் நெஞ்சம் கவர்ந்து' என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'அவன் உன்' என்று தொடங்கி.*

ஊழியானே - பல கல்பங்கள் உண்டு. [1] துரியோதனன் முதலாயினோரை வெல்ல எண்ணினாற்போலே, என் நெஞ்சினைக் கவர்வதற்கு எத்தனை காலம் எண்ணினானோ ! (10)

695

ஊழிதோறு ஊழி உருவும்பேரும்
செய்கையும் வேறவன் வையம்காக்கும்
ஆழிநீர் வண்ணனை அச்சுதனை
அணிகுரு கூர்ச்சட கோபன்சொன்ன
கேழில்அந் தாதிஓர் ஆயிரத்துள்
இவைதிருப் பேரெயில் மேய பத்தும்
ஆழிஅம் கையனை ஏத்த வல்லார்
அவர்அடி மைத்திறத்து ஆழியாரே.

பொ—ரை: கல்பந்தோறும் வடிவும் பேரும் செயலும் வேறுபடக் கொள்ளுமவனும், பூலோகத்தைப் பாதுகாக்கின்ற கடல் வண்ணனும் அச்சுதனுமான எம்பெருமானை, அழகிய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர் அருளிச்செய்த ஒப்பில்லாத அந்தாதி ஓராயிரத்துள், திருப்பேரெயில் என்னும் திவ்விய தேசத்தைச் சேர்ந்த இவை பத்தும் கொண்டு, திருவாழியை அழகிய கையிலேயுடைய மகரநெடுங்குழைக் காதனைத் துதிக்க வல்லாராகிய அவர்கள் அடிமை விஷயத்திலே திருவாழியின் தன்மையையுடையவர்களாவார்கள்.

வி—கு: அச்சுதன் - அழிவில்லாதவன்; 'அடியார்களை நழுவ விடாதவன்' என்னலுமாம். திருப்பேரெயில் மேய இவை பத்தும் என்று கூட்டுக. ஆழியார் - மூழ்கினவர்கள் என்னலுமாம்.

ஈடு: முடிவில், [2] 'இத்திருவாய்மொழி கற்றார், பகவானுடைய கைங்கரியத்திலே மிகவும் மூழ்கினாரேயாவர்,' என்கிறார்.

ஊழிதோறு ஊழி உருவும் பேரும் செய்கையும் வேறவன் - அடியார்களைக் காப்பாற்றும்பொருட்டுக் கல்பந்தோறும் கல்பந்தோறும் திருமேனியும் திருப்பெயரும் செயல்களும் வேறுபடக்

---

1. 'நூற்றுவரை' என்றதனோடு 'என் நெஞ்சம் கவர்ந்து' என்றதனைக் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறார், 'துரியோதனன்' என்று தொடங்கி.

2. 'ஏத்த வல்லார் அடிமைத்திறத்து ஆழியார்' என்றதனைக் கடாட்சித்து, அவதாரிகை அருளிச்செய்கிறார்.

கொள்ளுமவன். [1] 'இதற்குப் பயன் என்?' என்னில், **வையம் காக்கும்** - உலகத்தைக் காப்பாற்றுதல். [2] அப்படியே காத்திலனாகில், இப்படி நம்புவார் இல்லையே, இவனை 'இரட்சகன்' என்று. **ஆழி நீர் வண்ணனை** - [3] நோக்காதே படுகொலை அடிக்கிலும் விட ஒண்ணாத வடிவு. [4] வேறுபடாதே அங்குள்ளார்க்குக் காட்சி கொடுக்கும் அசாதாரண விக்கிரகத்தைச் சொல்லுகிறது. **அச்சுதனை** - [5] அவ் வடிவு தனக்கு ஒருநாளும் அழிவு இல்லை என்னுதல்; பற்றினாரை ஒரு நாளும் விடான் என்னுதல். **அணி குருகூர்** - ஆபரணமான திருநகரி. **கேழ் இல் அந்தாதி** - ஒப்பு இல்லாத அந்தாதி. [6] தம் மாலும் பிறராலும் மீட்க ஒண்ணாதபடி பகவத் விஷயத்தில் உண்டான உறுதியைச் சொன்ன பத்து ஆகையாலே, ஒப்பு இன்றிக்கே இருக்கிறபடி. **ஓர் ஆயிரத்துள் திருப்பேரெயில் மேய இவை பத்தும்** - ஒப்பு இல்லாத ஆயிரத்துள் திருப்பேரெயிலிலே சேர்ந்த இப்பத்தைக் கொண்டு. **ஆழி அம் கையனை ஏத்த வல்லார்** - [7] 'இவை எல்லா வற்றாலும் என் சொல்லியவாறோ?' எனின், கையும் திருவாழியுமான

---

1. இதற்கு - வேறுபடக் கொள்ளுவதற்கு.

2. 'ஊழிதோறு ஊழி' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'அப்படியே' என்று தொடங்கி. அப்படியே - அந்தப்படியாலே. இப்படி - இந்தப் பூமியிலே. படி - பிரகாரமும், விக்கிரகமும், பூமியும்.

3. 'வையங் காக்கும்' என்றதன் பின் 'ஆழிநீர் வண்ணனை' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'நோக்காதே' என்று தொடங்கி.

4. 'வேறவன்' என்றதனைக் கடாட்சித்து, 'ஆழிநீர் வண்ணனை' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'வேறுபடாதே' என்று தொடங்கி.

5. மேலே கூறிய பொருளுக்கு ஏற்ப, 'அச்சுதன்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'அவ்வடிவு தனக்கு' என்று தொடங்கி. 'வையங் காக்கும்' என்றதனைக் கடாட்சித்து வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார், 'பற்றினாரை' என்று தொடங்கி.

6. ஒப்பு இல்லாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'தம்மாலும்' என்று தொடங்கி.

7. இவை எல்லாவற்றாலும் - இத்திருவாய்மொழி பத்துத் திருப் பாசுரங்களாலும்.

20

அழகிலே இவர் அகப்பட்ட படியைத் தெரிவித்தபடி. [1] அல்லாத அழகுகள் ஒருபடியும் இது ஒரு படியுமாய் இருக்கை; [2] இது கைமேலே அனுபவித்துக் காணலாமே. [3] அவர் அடிமைத் திறத்து ஆழியாரே - அடிமைக் கூட்டத்தில் திருவாழியின் தன்மையையுடையவர் என்னுதல்; அடிமை இடையாட்டத்தில் ஒருவரால் மீட்க ஒண்ணுதபடி உட்புகுவர் என்னுதல். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*வெள்ளியநா மங்கேட்டு விட்டகன்ற பின்மோகம்*
*தெள்ளியமால் தென்திருப்பேர் சென்றுபுக—உள்ளமங்கே*
*பற்றிநின்ற தன்மை பகருஞ் சடகோபற்கு*
*அற்றவர்கள் தாமாழி யார்.* (63)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. *'தாமரைக் கண்ணன்'* என்றும், *'செங்கனிவாய்'* என்றும், *'செஞ்சுடர் நீண்முடி'* என்றும் சொல்லப்பட்டனவே?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், *'அல்லாத'* என்று தொடங்கி. ஒரு படியும் - ஒரு தட்டும்.

2. *'அது எப்படி?'* என்ன, *'இது கைமேலே'* என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. *'அடிமைத் திறத்து ஆழியாரே'* என்பதற்கு, இரு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருளில், திறம் - கூட்டம்; ஆழியார்-திருவாழியின் தன்மையையுடையவர். இரண்டாவது பொருளில், திறம் — செயல்; ஆழியார் — ஆழ்ந்தவர்கள்.

# நான்காந்திருவாய்மொழி—' ஆழி எழ '

## முன்னுரை

ஈடு: [1]மேல் திருவாய்மொழியிலே, பகவத் விஷயத்திலே இவர் கவரப்பட்ட மனத்தினையுடையரானபடி சொல்லிற்று: [2]மேல் திருவாய்மொழியில் இவர்க்குப் பிறந்த துக்கம், ஒன்றைக் கொடுத்து மாற்றுதல், ஒருவராலே நீக்குதல் செய்யுமது ஒன்று அன்றே அன்றோ? [3]'இனி இவர்க்குச் செய்யலாவது என்?' என்று பார்த்தருளி, 'ஒன்று கொடுக்கலாவது இதற்குமேல் இல்லை அன்றோ?' என்று பார்த்துத் தன்னுடைய விஜய பரம்பரைகளைப் பத்தும் பத்தாகக் காட்டிக் கொடுக்கக் கண்டு அனுபவித்து உவகை அடைகிறார். [4]அவனுக்கு உறுப்பாம் அன்று தம்மையும் வேண்டி, அவனுக்கு உறுப்பு ஆகாத அன்று தம்மையும் வேண்டாத 'வளவேழ் உலகின்' என்ற திருவாய்மொழியைப் பாடிய ஆழ்வார் அன்றோ இவர்தாம்! தம்மை அழிய மாறியும் அத்தலைக்கு நன்மை தேடுமவர் அன்றோ? இப்படி இவர் தன்மையினை அறியுமவனாகையாலே, தன்னுடைய வெற்றிச் செயல்களைக் காட்டி இவருடைய இழவு எல்லாம் தீரும்படி சமாதானம் செய்ய அனுபவித்துத் தலைக்கட்டுகிறார். [5]இறந்த காலத்தில் உள்ளவை அடங்கலும் சம காலத்திற்

---

1. *மேல் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்கும் இயையு அருளிச்செய்கிறார், 'மேல் திருவாய்மொழியிலே' என்றது முதல் 'உவகையடைகிறார்' என்றது முடிய.*

2. *விஜய பரம்பரைகளைக் காட்டிக் கொடுத்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'மேல் திருவாய்மொழில்' என்று தொடங்கி.*

3. *மாற்றும் பிரகாரத்தை அருளிச்செய்கிறார், 'இனி இவர்க்கு' என்று தொடங்கி. விஜய பரம்பரை – வெற்றியின் தொடர்ச்சி! ஒன்றன் பின் ஒன்றாகச் செய்த வெற்றிச் செயல்கள். பத்தும் பத்தாக - பத்துத் திருப்பாசுரங்களிலும், என்பது நேர்ப்பொருள். 'நன்றாக' என்பது, தொனிப்பொருள்.*

4. *'கலவி நிமித்தமாகத் துக்கப்படுகிற இவர்க்கு விஜய பரம்பரைகளைக் காட்டிக் கொடுத்தால் தீருமோ?' என்ன, 'அவனுக்கு உறுப்பாமன்று' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதனை விவரணம் செய்கிறார், 'தம்மை' என்று தொடங்கி.*

5. *'முற்காலத்தில் நடந்த காரியங்களை இப்போது கண்கூடாகக் காணுமாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இறந்த காலத்தில்' என்று தொடங்கி.*

போலே கண்கூடாகக் காணலாம்படி செய்து கொடுத்தான். [1] அடியிலே இவர்தாம் எல்லாவற்றையும் கண்கூடாகக் காண வல்லராம்படி செய்து கொடுத்தான் அன்றோ? [2] மயர்வற மதிநலம் அருளின பின்பும் இவ்வளவும் வர வாசனை பண்ணுவித்தானே! ஆகையாலே, இவர்க்கு ஒரு குறையும் இல்லையே!

[3] அன்றிக்கே, மேலே, 'பேரெயில் சூழ்கடல் தென் இலங்கை செற்றபிரான்' என்று இராமாவதாரத்திற்செய்த வெற்றிச்செயல் சொல்லப்பட்டமையாலே, அவ்வழியாலும் எல்லா அவதாரங்களிலும் உண்டான வெற்றிச் செயல்களை நினைந்து, இராமாவதாரத்தில் நடத்திய வெற்றிச் செயல்களைக் கண்டு உகக்கும் சக்கரவர்த்தியைப் போலவும், கிருஷ்ணாவதாரத்தில் நடத்திய வெற்றிச் செயல்களைக் கண்டு உகக்கும் ஸ்ரீவசுதேவரைப் போலவும் இவரும் உகந்து பேசுகிறார் என்னுதல். [4] 'அஹம் புந:-என் தன்மையை அறிந்து என் வழியே போந்த நீ, 'பெருமாள் காடு ஏறப்போக' என்றால் நான் உயிர் வாழ்வேன் என்று சொன்னாயே! தேவ குமார ரூபம் - [5] அது கிடக்க; இவரையே நீ தான் 'காடு ஏறப்போக' என்கிறது? 'இவர்க்கும் அவ்வளவேயோ?' என்று சிறியாத்தான் கேட்க, 'கண்

---

1. 'அப்படிக் கொடுத்தானோ?' என்னில், 'அடியிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'ஆனாலும், எல்லா அவதாரங்களிலும் செய்த வெற்றிச் செயல்களை ஒருகாலே அனுபவிக்கச் சத்தி உண்டோ?' என்ன, 'மயர்வற' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். வாசனை பண்ணுவிக்கையாவது, அந்த ஞானத்தை இவ்வளவாகத் தெளிவு ஆக்குதல்.

3. மேல் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்கும் வேறும் ஒரு வகையிலே இயைபு அருளிச்செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி.

4. ஸ்ரீ ராமாவதாரத்தில் செய்த வெற்றிச் செயலைக் கண்டு சக்கரவர்த்தி உகந்ததற்குப் பிரமாணமும், அந்தப் பிரமாணச் சுலோகத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'அஹம் புந:' என்று தொடங்கி.

'அஹம்புந: தேவகுமார ரூபம் அலங்க்ருதம் தம் ஸுதம் ஆவ்ரஜந்தம்
நந்தாமி பஸ்யந்நபி தர்ஸநேந பவாமி த்ருஷ்ட்வா ச புநர்யுவேவ'

என்பது. ஸ்ரீராமா. அயோத். 12 : 105. இது, கைகேசியைப் பார்த்துத் தசரத சக்கரவர்த்தி புலம்பிக் கூறுவது.

5. 'அது கிடக்க' என்றது, 'எனக்கு ஹிதத்தைக் செய்து போந்தவளாயிருக்கிற தன்மை கிடக்க' என்றபடி. தேவகுமாரன் – சுப்பிரமணியன். இவர்க்கும் – பெருமாளுக்கும். 'அவ்வளவேயோ' என்றது, 'சுப்பிரமணியன் அளவேயோ அழகு?' என்றபடி. கேட்க – நம்பிள்ளையைக் கேட்க,

ணெச்சில்ஆம்' என்று தரம் போராதாரை ஒப்பாகச் சொல்லி இருடி கரிபூசுகிறான் என்றார். அலங்க்ருதம் - [1] அதனாலும் வெறும் புறங்காண் ஒரு போலிச் சொல்லலாவது! ஒப்பித்தால் ஒக்கச் சொல்லலாவார் இல்லை. தம் ஸுதம் - [2] இவனுக்கு இரண்டு படியும் உத்தேசியமாய் இருக்கிறபடி. ஆ வ்ரஜந்தம் - [3] மலர் மலரும்போது எங்கும் ஒக்கப் பிறக்கும் மலர்ச்சி போலே. [4] அதுவும் வண்டினை நோக்கி அன்றோ மலர்வது? இவரும் அனுபவிக்கின்றவர்களைக் குறித்தே அன்றோ? நந்தாமி பஸ்யந்நபி - [5] கண்டபடியே இருக்கச் செய்தே, காணாது கண்டாரைப் போலேயாயிற்று, நாடோறும் நாடோறும் கணந்தோறும் கணந்தோறும் உகக்கும்படி. [6] தர்ஸநேந - அணைத்தல், வார்த்தை சொல்லுதல் செய்ய வேண்டா; காட்சியே அமையும். [7] கரை புரண்ட அனுபவம் உள்ள இடத்திற்போலே

---

1. 'தேவ குமார' என்றதன் பின், 'அலங்க்ருதம்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அதனாலும்' என்று தொடங்கி. அதனாலும் - கரி பூசுகிற தன்மையாலும். கரிபூசுதல்-கண்ணெச்சில் வாராமைக்காகக் கரி பூசுதல்.

2. 'இவனுக்கு' என்றது, சக்கரவர்த்தியை; அன்றிக்கே, வால்மீகி முனிவரையுமாம். இரண்டு படி-அழகும் புத்திரனாகும் தன்மையும்.

3. 'ஆஸமந்தாத் விரஜந்தம்' என்று திருவுள்ளம் பற்றி, பாவம் அருளிச்செய்கிறார், 'மலர் மலரும்போது' என்று தொடங்கி. ஆஸமந்தாத்-சுற்றிலும், விரஜந்தம்-வந்துகொண்டிருக்கிற, 'மலர் மலரும்போது' என்று தொடங்கும் வாக்கியத்துக்குக் கருத்து, 'மலர் மலரும்போது' ஓடை எங்கும் ஓர் அழகு பிறக்குமாறு போலே, இவர் நடக்கும்போது திருமேனி எங்கும் ஒரு சேர ஒரு செவ்வி பிறக்கும்' என்பது. எங்கும் ஒக்க-ஓடை முதலான இடங்கள் எங்கும் ஒக்க.

4. 'ஆபிமுக்யேந விரஜந்தம்' என்று திருவுள்ளம்பற்றி, அதற்கே வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார், 'அதுவும்' என்று தொடங்கி. ஆபிமுக்யோ-நேர் முகமாக.

5. 'பஸ்யந்நபி, நந்தாமி' என்கிற நிகழ்காலச்சொல் இரண்டற்கும் பாவம் அருளிச்செய்கிறார், 'கண்டபடியே' என்று தொடங்கி. பஸ்யந்நபி. நாள்தோறும் பார்க்கிறேன். நந்தாமி-கணந்தோறும் மகிழ்கிறேன்.

6. 'இப்படிக் கணந்தோறும் உகக்கிறது பேசுதல், கலவி இவைகளாலேயோ?' என்ன, 'தர்ஸநேந' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

7. 'காட்சி மாத்திரம் போதியதாமோ?' என்ன, 'கரை புரண்ட' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கரை புரண்ட அனுபவமுள்ள இடம்-பரமபதம்.

காணும் பிரயோஜனம், [1] 'ஸதாபஶ்யந்தி' அன்றோ? பவாமி த்ருஷ்ட்வாச புந: யுவேவ - அறுபதினாயிரம் ஆண்டு வயது நிறைந்து கிழவனான சக்கரவர்த்தி, பெருமாளைக் கண்ட பின்பு, பெருமாளுக்கும் தனக்கும் வாசி தெரியாதபடியானான்.' [2] 'காமனைப் பயந்த காளை' என்னுமாறு போலே [3] தன்னை அனுபவிப்பாரையும் தன்னைப் போலே ஆக்கி உஜ்ஜீவிப்பிக்கும் விஷயம் போலேகாணும். [4] 'ஸ்ரீவசுதேவர்' பெரிய திருவிழாவை அடைந்தாற்போலே பிள்ளைகளின் திருமுகங்களைப் பார்ப்பதை அடைந்து, தமக்கு உண்டாய் இருந்த முதுமை நீங்கி யௌவனம் உடையவரானார்' என்னும்படி ஆனாரே அன்றோ ஸ்ரீவசுதேவரும்?

[5] அன்றிக்கே, 'மேலே, 'கண்ணபிரானுக்கு என் பெண்மை தோற்றேன்' என்று கொண்டு இத்தலையில் தோல்விக்கு எதிர்த்தலையான அத்தலையில் வெற்றிச் செயல்களை அநுசந்திக்கிறார்' என்று **பிள்ளை திருநறையூர்** அறையர் பணிக்கும்படி.

---

1. '*அங்கும் காட்சியேயோ பிரயோஜனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஸதாபஶ்யந்தி' என்று. ஸதாபஶ்யந்தி-எப்பொழுதும் எல்லா நிலைகளிலும் பார்த்துக்கொண்டே இருத்தல். இது, வேதவாக்கியம்.*

2. *'வயது முதிர்ந்த கிழவராகிய சக்கரவர்த்தி மகனைப் போன்று ஆகக்கூடுமோ?' என்ன, 'காமனைப் பயந்த' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செயகிறார்.*

3. *'சக்கரவர்த்தி அங்ஙனமாதல் கூடுமோ?' எனின், 'தன்னை அனுபவிப்பாரையும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

4. *கிருஷ்ணாவதாரத்தில் செய்த வெற்றிச் செயல்களைக் கண்டு ஸ்ரீவசுதேவர் உகந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'ஸ்ரீ வசுதேவர்' என்று தொடங்கி.*

> *'மஹோத்ஸவமிவ ஆஸாத்ய புத்ராநந விலோகநம்*
> *யுவேவ வஸுதேவ: அபூத் விஹாய அப்யாகதாம் ஜராம்'*

*என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா.* 5. 20 : 52.

5. *இரண்டு திருவாய்மொழிகட்கும் வேறு ஒரு வகையாகவும் இயைபு அருளிச்செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி.*

696

ஆழி எழச்சங்கும் வில்லும் எழத்திசை
வாழி எழத்தண்டும் வாளும் எழஅண்டம்
மோழை எழமுடி பாதம் எழஅப்பன்
ஊழி எழஉல கங்கொண்ட வாறே.

பொ-ரை: திரு உலகு அளந்தருள வளருகிற போது, திருவாழி யாழ்வான் முன்னே தோன்றவும், பின் ஸ்ரீபாஞ்சஜன்யம் ஸ்ரீகோதண்டம் ஆகிய இவைகள் தோன்றவும், எல்லாத் திசைகளினின்றும் மங்களா சாசனம் செய்கின்ற ஒலி தோன்றவும், கதை என்ன, வாள் என்ன, ஆகிய இவைகள் தோன்றவும், அண்ட முகடு பிளந்து நீர்க்குமிழி தோன்றவும், திருமுடியும் திருவடியும் ஒருசேர எழும்படியாகவும், நல்ல காலம் தோன்றும்படி ஆயின; ஆதலால், என்னப்பன் உலகத்தை அளந்துகொண்ட விதம் என்னே!

வி-கு: 'தண்டும் வாளும் எழத் திசை வாழி எழ' என மாற்றுக. ஏகாரம், ஆச்சரியப்பொருளில் வந்தது.

இத்திருவாய்மொழி, கலி விருத்தம்.

ஈடு: முதற்பாட்டு. [1] அவை எல்லாவற்றுக்கும் அடியாக, திருவுலகு அளந்தருளின பெரிய வெற்றிச்செயலை அருளிச் செய்கிறார்.

[2] 'தேவர்கள் தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குச் செல்லு கிறார்கள்; அசுரர்கள் கொல்லப்பட்டார்கள்; அச்சம் என்பது சிறிதும் இல்லை; பகவானால் இவ்வுலகமானது வெல்லப்பட்டது,' என்கிறபடியே, தனக்கு ஆக்கிக்கொண்ட செயல் அன்றோ?

---

1. 'உலகம் கொண்டவாறே' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'அவை எல்லாவற்றுக்கும்' என்றது, 'பத்துத்திருப்பாசுரங்களிலும் சொல்லப்படுகிற வெற்றிச் செயல்கள் எல்லாவற்றுக்கும்' என்றபடி.

2. 'இது, பெரிய வெற்றிச் செயலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தேவர்கள்' என்று தொடங்கி.

'தேவா: ஸ்வஸ்தாநம் ஆயாந்தி நிஹதா தைத்யதாநவா:
நபயம் வித்யதே கிஞ்சித் ஜிதம் பகவதா ஜகத்'

இது, திருவுலகு அளந்தருளின போது ஜாம்பவான் மஹாராஜர் பறையறைந்தபடியாம்.

[1]இராவணனைப்போலே எதிரி ஆக்கிக் கொல்லாதே குணங்கள் சில உண்டாகையாலே நின்ற நிலையிலே தோற்பித்துக்கொண்டபடி. [2]நாயகனுக்கு அடியார் அன்றோ வென்று கொடுப்பார்? ஆழி எழ - [3]'மூன்று உலகங்களையும் காற்கீழே இட்டுக்கொள்ள வேணும்' என்னும் கறுவுதல் உள்ளது சர்வேஸ்வரனுக்கே அன்றோ? அந்த எண்ணம் இன்றிக்கே இருக்கச்செய்தேயும் அவனுக்கு முன்பே பரிகரம் முற்பட்டபடி. [4]'காட்டுக்குப் போம்' என்று நியமித்தது பெருமாளையேயாயிருக்க, இளையபெருமாள் முற்பட்டாற்போலே. 'புண்ணியசீலரும் சிநேகிதர்களுக்குச் சந்தோஷத்தைச் செய்கிற வரும் சுமித்திரையின் புத்திரருமான இளையபெருமாள், தமைய னுக்குப் பின்னே செல்லும்பொருட்டு முன்னரே மரவுரியினால் தம்மை அலங்கரித்துக்கொண்டார்' என்கிறபடியே, போக்குக்குத் தகுதியாக முற்கோலி அலங்கரித்துக்கொண்டு நின்றார் அன்றோ?

---

1. 'அவனைக்கொன்றுவிடலாகாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இராவணனைப்போலே' என்று தொடங்கி.

2. முதல் முன்னம் திவ்விய ஆயுதங்களைச் சொல்லுவதற்கு ரசோக்தியாகக் கருத்து அருளிச்செய்கிறார், 'நாயகனுக்கு' என்று தொடங்கி. 'அடியார்' என்றது, திருவடிகளையும் தொண்டர்களையும்.

3. 'இறைவன் இருக்க, ஆழி எழுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'மூன்று உலகங்களையும்' என்று தொடங்கி. என்றது, பிரிவினாலே என்றபடி.

4. 'பரிகரம் முற்பட்ட இடம் உண்டோ?' என்ன, 'காட்டுக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அங்ஙனம் முற்பட்ட தற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'புண்ணிய சீலரும்' என்று தொடங்கி.

'ப்ராகேவ து மஹாபாக: ஸௌமித்ரி: மித்ராநந்த:
பூர்வஜஸ்ய அநுயாத்ரார்த்தே த்ருமசீரை: அலங்க்ருத:'

என்பது, ஸ்ரீராமா. சுந். 33 : 28. இது, திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது. இச்சுலோகத்தில் 'ப்ராகேவ' என்றதனைக் கடாட்சித்து, 'முற் கோலி' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

5. 'மற்றை ஆயுதங்கள் இருக்க, திருவாழி முற்படுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தோற்றத்திலே' என்று தொடங்கி. தோற்றத்திலே-தொடக்கத்திலே. அரசு போர்-அரசர் செய்கின்ற போர்.

ஆழி எழ - [5] தோற்றத்திலே அரசு போராயிற்று; [1] ஹேதி ராஜன் அன்றோ? திவ்விய ஆயுதங்களுக்கெல்லாம் பிரதானம் அன்றோ திருவாழி? [2] பரிகரம் நிற்க மஹாராஜர் இராவணன் மேலே பாய்ந்தாற் போலே; [3] 'பையல் முடியுந்தானுமாய்ப் பெருமாள் திருமுன்பே நிற்பதே! ஈர் அரசு ஆயிற்றோ?' என்று பொறுமையாலே மேல் விழுந்தார் அன்றோ?

[4] 'அத ஹரிவர நாத: - [5] தம்மோடு ஒக்க வினை செய்ய வல்ல பேர் தனித்தனியே பலர் அன்றோ? ப்ராப்ய ஸங்க்ராம கீர்த்திம் - [6] 'இவர்களோடு கூடிநின்று ஒத்த போர் ஆக ஒண்ணாது, தூசித் தலையில் ஓர் ஏற்றம்செய்து தரம் பெற வேணும்,' என்று இருந்தார். பூசல் தலையிலே பெருமாளுக்கு உண்டான கீர்த்தியையும் தம்

---

1. 'ஆயின், இவன் அரசனோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஹேதி ராஜன் அன்றோ?' என்று. அதனை விவரணம் செய்கிறார், 'திவ்விய' என்று தொடங்கி. 'ஹேதி' என்பது, ஆயுதங்களுக்குப் பொதுப்பெயர்.

2. தோற்றத்திலே அரசு போர் என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'பரிகரம்' என்று தொடங்கி. மஹாராஜர்-சுக்கிரீவன். சுக்கிரீவனை மஹாராஜர் என்பது வைணவப் பெருமக்கள் மரபு.

3. மஹாராஜர் மேல் விழுகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'பையல்' என்று தொடங்கி.

4. அப்படி மேல் விழுந்ததற்குப் பிரமாணமும், பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'அத ஹரிவர நாத:' என்று தொடங்கி.

'அத ஹரிவரநாத: ப்ராப்ய ஸங்க்ராம கீர்த்திம்
நிஸிசரபதிம் ஆஜௌ யோஜயித்வா ஶ்ரமேண,
ககநமதிவிஸாலம் லங்கயித்வா அர்க்கஸூநு:
ஹரிவரகணமத்யே ராமபார்ஶ்வம் ஜகாம.'

என்பது, ஸ்ரீராமா. யுத். 40 : 29. இதனைக் கம்பராமாயணம், இராவணன் தானை காண் படலத்து, 37 முதல் 41 முடியவுள்ள செய்யுள்களிலும், அதற்கு அடுத்த மகுடபங்கப்படலத்தும் காண்க.

5. சுலோகத்திலுள்ள 'ஹரிவரநாத:' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தம்மோடு' என்று தொடங்கி.

6. 'ஆனால், தாம் முற்பட விழுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவர்களோடு' என்று தொடங்கி. 'அபியாதாப்ரஹர் தாச-எதிர்த்துப் போர்செய்கிறவர், அடிக்கிறவர்' (இது, அயோத். 1 : 29.) என்ற சுலோகத்தைக் கடாட்சித்து, பாவம் அருளிச்செய்கிறார் 'பூசல் தலையிலே' என்று தொடங்கி.

தலையிலே ஏறிட்டுக்கொண்டார். நிசிசர பதிம் - [1] அத்தலையிலும் அவனோடு ஒக்க வினை செய்ய வல்லார் பலர் அன்றோ? [2] 'அவன் கீழ்த் திரியுமவர்கள் தரம் போரார்' என்று அவனோடே பொருதபடி. ஆஜௌ - அவர்களைப் போலே வழி அல்லா வழியே இளைப்பிக்கை அன்றிக்கே, செவ்வைப் பூசல் செய்து இளைப்பித்தபடி. யோஜயித் வாஂஸ்ர மேண - இதற்கு முன்பு கூடாதது ஒன்றோடே கூட்டினார். ககந மதிவிசாலம் லங்கயித்வா-பரப்பையுடைத்தான ஆகாயத்தைத் திறலாலே வருத்தம் அறக் கடந்தார். அர்க்கஸூநு: - மீட்சியில் தம் வரவு தெரியாதபடி மீண்டார். [3] பிறப்புக்கு ஈடாகச்செய்தார். [4] தன்நிலம் அன்றோ? [5] சூரியன் ஓரிடத்தினின்றும் ஓரிடத்து ஏறப்போம் போது தெரியாது அன்றோ? ஹரிவர கணமத்யே - 'இவர்களில் ஒரு வேறுபாடு தோற்ற ஒண்ணாது' என்று இவர்கள் நடுவே நின்றார். ராம பார்ஶ்வம் ஜகாம - [6] 'தூசித்தலையிலே மதிக்க ஒரு வினை செய்தாரன்றோ முன்னிற்கப்பெறுவர்?' என்று பெருமாள் பக்கத்திலே வந்து நின்றார்.'

ஆழி எழ - [7] 'ஆயிரக்காதம் பறப்பதன் குட்டி ஐந்நூற்றுக் காதம் சிறகு அடிக்கொள்ளும்' என்னுமாறு போலே முற்கோலி வளர்ந்தபடி. சிறகடிக்கொள்ளுகையாவது, பின்பு தூரப்பரப்பதற்குத் தகுதியாம்படி இளமையிலே பயிலுதல். [8] அச்சங்கொள்ளுதற்கு இடம் அல்லாத இடத்திலும் பயப்படக்கூடியவர்கள், அஞ்சத்தக்க

---

1. 'நிசிசரபதிம்' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'அத்தலையிலும்' என்று தொடங்கி. 'அத்தலையிலும்' என்ற உம்மை, தம்மோடு ஒக்க வினை செய்ய வல்ல பேர்' என்று மேலே கூறியதனைத் தழுவுகிறது. அத்தலையிலும்-இராவணனிடத்தும்.

2. 'ஆனால், அவர்களோடு போர் செய்தால் என்?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன்கீழ்' என்று தொடங்கி.

3. 'இப்படி மீளுகைக்குக் காரணம் யாது?' என்ன, 'சூரியனுடைய புத்திரன் ஆகையாலே' என்கிறார், 'பிறப்புக்கு' என்று தொடங்கி.

4. அப்படிச் செய்கைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'தன் நிலமன்றோ?' என்று.

5. 'தன் வரவு தெரியாதபடி மீளும் தன்மை சூரியனுக்கு உண்டோ?' என்ன, 'சூரியன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'மத்யே' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இவர்களில்' என்று தொடங்கி.

6. 'பார்ஶ்வம் ஜகாம' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தூசித்தலையிலே' என்று தொடங்கி.

7. 'அவனுக்கு முன்பே பரிகரம் முற்பட்டபடி' என்றதனை ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'ஆயிரக்காதம்' என்று தொடங்கி.

8. முற்படுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், அச்சங் கொள்ளுதற்கு' என்று தொடங்கி.

இடத்தைக் கண்டால் வாளா இரார்களே அன்றோ? [1] பயசங்கை இல்லாத இடத்திலும் அஞ்சும்படி செய்கிறது விஷய வைலக்ஷண்யம் அன்றோ? [2] துரியோதனன் கோட்டியிலே கிருஷ்ணன் எழுந்தருளின போது அவர்கள் செய்த வஞ்சனத்தைக் கண்டு, அச்சங்கொண்டு, தம்முடைய திருமாளிகையில் படுக்கையையும் தடவிப் பார்த்தாரே அன்றோ ஸ்ரீவிதுராழ்வான்? 'மஹாபுத்திமானான அந்த விதுரர் கண்ணனுடைய படுக்கையைத் தடவிப் பார்த்தார்,' என்கிறபடியே, கடல் கலங்குவது தன்னளவிலே அன்றோ? [3] **பிள்ளையுறங்காவில்லிதாசர்** '**மஹாமதி** என்றது, மதிகேடர் என்றபடியோ?' என்றார். [4] **பிள்ளைதாம்**, 'பெருமாள் எழுந்தருளும் போது எங்கேனும் ஒரு சலனம் பிறக்கில் நம் பிராணனை விடுமத்தனை' என்று சொட்டையை உருவிப் பிடித்துக்கொண்டு சேவிப்பாராம். **நம்முதலிகள்** அதனைக் கண்டு, இவரை '**மஹாமதிகள்**' என்று அழைப்பர்கள். [5] அறிவு உண்டாகையாவது, பகவத் விஷயத்தில் அறிவு கெடுகை அன்றோ?

---

1. *'அச்சத்திற்கு இடம் அல்லாத இடத்திலும் அச்சங்கொள்ளுதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பயசங்கை' என்று தொடங்கி.*

2. *அவனுடைய வைலக்ஷண்யத்தைக் கண்டு இடமல்லாத இடத்திலும் அஞ்சினதற்கு உதாரணம் காட்டுகிறார், 'துரியோதனன்' என்று தொடங்கி. தடவிப் பார்த்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மஹாபுத்திமானான' என்று தொடங்கி.*

*'ஸம்ஸ்ப்ருசந் ஆஸநம் ஸௌரே: விதுரஸ்ஸ மஹாமதி:'*

*என்பது, பாரதம், உத்யோக. 'மஹாமதி:' என்றதற்கு* **பாவம்** *அருளிச்செய்கிறார், 'கடல் கலங்குவது' என்று தொடங்கி.*

3. *'பேரன்பாலே கலங்குவதற்குக் காரணம் தெளிந்த ஞானமே,' என்னுமதனை ஆப்த சம்வாதத்தாலே தெரிவிக்கிறார், 'பிள்ளையுறங்காவில்லி தாசர்' என்று தொடங்கி. பிள்ளையுறங்காவில்லிதாசர் என்பவர், எம்பெருமானாருடைய மாணாக்கர்.*

4. *'இந்தத் தன்மை அவர்க்கும் உண்டு' என்கிறார், 'பிள்ளை தாம்' என்று தொடங்கி. பிள்ளை தாம்-பிள்ளையுறங்கா வில்லிதாசர் தாம். சொட்டை-வாள்.*

5. *''மஹாமதி:' என்பது, அறிவுகேடர் என்பதனைக் காட்டுமோ?' என்ன, 'அறிவுண்டாகையாவது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

ஆழி எழ - [1] இவன் வளர்ந்தருளுகைக்குக் கணிசித்தபடியைக் கண்டு, 'தனியாக ஒண்ணாது' என்று அஞ்சித் திருவாழியாழ்வான் ஒரு கையிலே ஏறினார்.

சங்கும் வில்லும் எழ - தூசி ஏறினவர்கள் பொரப் புக்கவாறே நின்ற [2] இளவணி கலங்கி மேலே நடக்குமாறு போலே, மற்றை ஆழ்வார்களும் மற்றைக் கைகளிலே ஏறினார்கள். அன்றிக்கே, [3] 'இரை பெறாத இடத்தே இருந்து சீறுபாறு என்னக்கூடியவர்கள், இரையுள்ள இடத்தில் ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடார்கள் அன்றோ?' என்னுதல்; இனத்திலே ஒருவன் வாழ்வதனைக் கண்டவாறே உறவினர்கள் கூட்டம் வந்து மேல் விழுமாறு போலே, மற்றைத் திவ்விய ஆயுதங்களும் மேல் விழுந்தபடி என்னுதல். [4] 'இடங்கை வலம்புரி நின்று ஆர்ப்ப - இவனுடைய வடிவழகினை நினைந்து ஸ்ரீ பாஞ்சஜன்யமானது நின்று ஆர்ப்ப. எரி கான்று அடங்கார் ஒடுங்குவித்தது ஆழி - அவனைப்போல் ஆர்த்துக் கொள்ளுதற்குக் காலம் அற்று நெருப்பினை உமிழ்ந்துகொண்டு நமுசி முதலானவர்களை வாய்வாய் என்றது திருவாழி. விடம் காலும் தீவாய் அரவுகிடந்த இடத்தே கிடந்து பகைவர்கள் மேலே விஷமாகிய நெருப்பினை உமிழுமத்தனை அன்றோ திருவனந்தாழ்வானலாவது? அரவணைமேல் தோன்றல் - திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய பிரதானன். திசை அளப்பான் பூவார் அடி நிமிர்த்தபோது - ஒரு பூவினைக்கொண்டே அன்றோ காடும் ஓடையும் அளந்து

---

1. மேலே 'மூன்று உலகங்களையும்' என்று தொடங்கி அருளிச்செய்ததனை விவரணம் செய்கிறார், 'இவன்' என்று தொடங்கி.

2. இளவணி-காலாள்.

3. மற்றை ஆயுதங்கள், திருவாழியாழ்வானிடத்திலேயுள்ள பரிவினாலே புறப்பட்டன என்று பொருள் அருளிச்செய்தார்மேல்; இங்கு, சர்வேச்வரனிடத்துள்ள பரிவினாலே புறப்பட்டன என்று பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி, அதனை இரண்டு வகையாக அருளிச்செய்கிறார், 'இரை பெறாத' என்று தொடங்கியும், 'இனத்திலே' என்று தொடங்கியும். 'கேவலம் பரிவினாலே புறப்பட்டன' என்பது முதற் கருத்து. 'பொறாமையால் வந்த பரிவினாலே புறப்பட்டன' என்பது இரண்டாவதற்குக் கருத்து.

4. 'திருவுலகு அளந்த போது திவ்வியஆயுதங்கள் பரிவாலே புறப்பட்டன' என்பதற்குப் பிரமாணமும் பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'இடங்கை' என்று தொடங்கி. இது, இரண்டாந்திருவந். 71.

கொண்டது? [1] பூவை இட்டுப் பூவை கொண்டான்காணும். [2] அப் படுக்கையிலே பொருந்தும் சௌகுமார்யத்தையுடையவன் இக்காடும் ஓடையுமான உலகத்தினை அளக்கப்புக்கால், இவர்களுக்கு இப்படிப் படவேண்டாவோ? அவன் இப்படி அளவாநின்றால் இவர்கள் பேசாது இரார்கள் அன்றோ?' [3] 'மூன்று அடிகளால் முறையே மூன்று உலகங்களையும் ஒரு கணநேரத்திற்குள் ஆக்கிரமித்தவராய் விளங்கு கிற திவ்விய ஆயுதங்களையுடையவராய் எந்தத் திரிவிக்கிரமனாக ஆனானோ அந்த வாமனன் உன்னை எப்போதும் காக்கக் கடவன்' என்கிறபடியே.

திசை வாழி எழ - [4] 'அவனுக்கு என் வருகிறதோ?' என்று ஆயிற்றுத் திவ்விய ஆயுதங்கள் கிளர்கின்றன! 'அவைதமக்கு என் வருகிறதோ?' என்று 'வடிவார் சோதி வலத்து உறையும் சுடராழியும் பல்லாண்டு, படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்சசன் னியமும் பல்லாண்டே' என்னாநிற்பார்கள் அன்றோ? 'நின் கையில் வேல் போற்றி!' என்று வேல் தனக்கும் பரியவேண்டி இருக்கு மன்றோ? அன்றிக்கே, [5] திக்குகள்தோறும் அநுகூலருடைய 'வாழி

---

1. 'பூவை இட்டு' என்று தொடங்கும் வாக்கியம் சிலேடை; பூவை இட்டு-மலர் போன்ற திருவடிகளைக்கொண்டு. பூவை-பூமியை என்றபடி.

2. 'அவன் அளந்தால் இவர்கள் இப்படிப் படவேண்டுமோ?' என்ன, 'அப்படுக்கையிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். 'அவன் இப்படி' என்றது, சிலேடை; படி-பிரகாரமும், பூமியும், ஜீவனமும்.

3. திவ்விய ஆயுதங்கள் புறப்பட்டமைக்கு, வேறும் ஒரு பிரமாணம் காட்டுகிறார், 'மூன்று அடிகளால்' என்று தொடங்கி.

'வாமனோ ரக்ஷது ஸதா பவந்தம் ய: க்ஷணாத் அபூத்
த்ரிவிக்ரம: க்ரமாக்ராந்த த்ரைலோக்ய: ஸ்புரதாயுத:'

என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 5 : 17. இதிலே 'ஸ்புரதாயுத:' என்பதுவே இங்கே வேண்டுவது.

4. 'ஆழி எழச் சங்கும் வில்லும் எழ' என்றதன் பின் 'திசை வாழி எழ' என்கையாலே, 'திவ்விய ஆயுதங்களுக்கு மங்களாசாசனம் செய் கிறார்கள்' என்கிறார், 'அவனுக்கு' என்று தொடங்கி. 'வடிவார்' என்பது திருப்பல்லாண்டு. 'நின்கையில்' என்பது, திருப்பாவை.

5. 'சர்வேஸ்வரன் விஷயமாக மங்களாசாசனம் செய்கிறார்கள்' என்று வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'திக்குகள்தோறும்' என்று தொடங்கி.

வாழி' என்கிற மங்களாசாசன ஒலிகள் கிளர என்னுதல். [1] திவ்விய ஆயுதங்களிலும் அவனுக்குப் பாதுகாவல் இவர்களுடைய மங்களா சாசனம் என்று இருக்கிறார், திவ்விய ஆயுதங்களின் நடுவே இவற்றைச் சொல்லுகையாலே. ஏத்த ஏழ் உலகும் கொண்ட கோலக் கூத்தன் அல்லனோ? தண்டும் வாளும் எழ - 'தூசித்தலையில் அவர்களே [2] கை தொடராய்த் தரம் பெற்றுப் போக ஒண்ணாது' என்று நின்ற பேரணியும் குலைந்து மேல் விழுமாறுபோலே; 'பிற்பட்டோம், கெட்டோம்' என்று ஒருவருக்கு ஒருவர் படுகிறபடி; ஒருவர்க்கு இட்ட சோற்றைப் பலர் ஆசைப்படுமாறு போலேகாணும் இவர்கள் படுகிற பாடு. [3] அநுகூலன் வந்து புகுர, 'கொல்லத் தக்கவன்' என்கிறவர்கள் பிரதிகூலர் உள்ள இடத்தில் பேசாது இரார்கள் அன்றோ? [4] 'என்இது மாயம் என்னப்பன் அறிந்திலன் முன்னைய வண்ணமே கொண்டு அளவாய்' என்று நமுசி வந்து, 'என் தந்தை உன் வஞ்சநம் அறிந்திலன்; நீ முன்பு போலே நின்று அளக்கவேணும்' என்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்தான் அன்றோ? [5] அன்றே பிறந்து அன்றே வளர்ந்தான் ஒருவனுடைய செயல் அன்றோ இவை அடைய? ஆகையாலே, பரிகைக்குக் காரணம் உண்டு என்றபடி. [6] 'சீராற்பிறந்து' என்கிறபடியே, 'உன்

---

1. *அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'திவ்விய ஆயுதங்களிலும்' என்று தொடங்கி. மங்களாசாசனம் செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'ஏத்த' என்று தொடங்கி. இது, திருவாய். 2. 2, 11.*

2. *கை தொடராய்-கை விடாதவராய். பேரணி-சேனையின் வியூகம். இதற்கு ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'ஒருவர்க்கு' என்று தொடங்கி.*

3. *இடம் அல்லாத இடத்திலும் அஞ்சினதற்கு உதாரணமாக விதுராழ்வானைக் காட்டினார் மேல். இங்குச் சுக்கிரீவனைக் காட்டுகிறார், 'அநுகூலன்' என்று தொடங்கி. அநுகூலன்-ஸ்ரீ விபீஷணாழ்வான். 'கொல்லத் தக்கவன் என்கிறவர்கள்' என்றது, சுக்கிரீவன் முதலாயினோரை.*

4. *'ஆயின், இங்குப் பிரதிகூலர் உளரோ?' என்ன, 'உளர்' என்கிறார், 'என்னிது' என்று தொடங்கி. 'என்னிது' என்பது, பெரியாழ்வார் திருமொழி. 1. 9 : 8.*

5. *'பரிவதற்குக் காரணம் ஈஸ்வரனுடைய சௌகுமார்யம் முதலான வைலக்ஷண்யங்கள்,' என்று அருளிச்செய்தார் இதுகாறும். இனி, பரிவதற்கு வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார், 'அன்றே' என்று தொடங்கி.*

6. *அன்றே பிறந்து அன்றே வளர்ந்த செயலுக்குப் பரிந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'சீராற்பிறந்து' என்று தொடங்கி. இது பெரிய*

கையிலே பருத்தி பட்ட பன்னிரண்டும் படுகிற பூமியை நீர் ஏற்கும் போது இப்படிப் படவேணுமோ ?' என்கிறார்.

அண்டம் மோழை எழ - [1] இந்திரனுக்காக மூன்று உலக மித்தனையும் அளந்து கொடுப்பதாக அன்றோ தொடங்கியது? கணிசம் அவ்வளவு அல்லாமையாலே அண்டத்தின் இடமுள்ள அளவும் சென்று அளந்து, அண்டகடாஹத்திலே திருவடி சென்று, 'ஒண்மிதியிற் புனல் உருவி ஒருகால் நிற்ப' என்கிறபடியே கீழேயுள்ள அண்டகடாஹத்தை உருவி நிற்க, கீழேயுள்ள ஆவரண ஜலம் மேலே எழ. [2] ஆவரண ஜலத்துக்கு நடுவே ஒரு கழல்போலே மிதக்குமித்தனை அன்றோ அண்டம்? [3] 'இரட்சகமான செயலே பாதகமாகிறதோ ?' என்று அஞ்ச வேண்டும்படி அன்றோ அப்போதைக் கறுவுதல் ? மோழை-குமிழி. முடி பாதம் எழ-திருமுடியளவும் திருவடிகள் கிளர. 'முடிமேலே பாதம் எழ' என்றும் சொல்லுவர்கள் நிருத்த லக்ஷணத்துக்காக. அப்பன் ஊழி எழ - [4] மஹாபலி தகுதி இல்லாமல் அரசு நடத்துகையால் வந்த பொல்லாக் காலமானது போய், நல்லடிக் காலமாயிற்று; நல்லடிக்காலம் கிளரும்படி

---

*திருவந். 16. 'மார்பாரப் புல்கி நீ உண்டு உமிழ்ந்த' என்றதனைக் கடாட்சித்துப் 'பருத்தி பட்ட பன்னிரண்டும் படுகிற பூமியை' என்கிறார். 'சீராற் பிறந்து சிறப்பால் வளராது பேர்வாமன் ஆகாக்கால்' என்றதனைக் கடாட்சித்து, 'இப்படிப் படவேணுமோ?' என்கிறார். பருத்தி பட்ட பன்னிரண்டும் படுகையாவது, தான் விரும்பிச் செய்கிற எல்லாச் செயல்களுக்கும் உரியதாயிருத்தல்.*

1. *அண்டம் குமிழி எழுவதற்கு வகை அருளிச்செய்கிறார், 'இந்திரனுக்காக' என்று தொடங்கி. கணிசம்-எண்ணம். 'ஒண்மிதியில்' என்ற திருப்பாசுரம், திருநெடுந்தாண்டகம், 5.*

2. *'அண்டத்துக்குக் கீழே தண்ணீர் உண்டோ?' என்ன, 'ஆவரண ஜலத்துக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கழல்-கழல் கோடி.*

3. *'அவன் செயல் பாதுகாத்தலுக்குக் காரணமாக இருக்க, இப்படிக் கலங்க வேண்டுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இரட்சகமான' என்று தொடங்கி.*

4. *'ஊழி எழ' என்பதற்கு, 'பொல்லாக்காலம் கழிய' என்று கொண்டு பொருள் அருளிச்செய்கிறார், 'மஹாபலி' என்று தொடங்கி. நல்லடிக்காலம்-நன்மைக்கு மூலமான காலம்.*

யாகவும். அப்பன் உலகம் [1] கொண்டவாறே - ' மஹோபகாரகனை சர்வேஸ்வரன் உலகத்தைக் கொண்ட ஆச்சரியம் இருந்தபடி என் ?' என்னுதல் ; அன்றியே, ' உலகத்தைக் கொண்ட பிரகாரம் இருந்தபடி என் ?' என்னுதல். அப்பன் அப்பன் என்று உவகை அடைகிறு ராகவுமாம். அப்பன் - ' இந்திரனுக்கு இராயச்சித்தைக் கொடுத்த செயலாலே எனக்கு [2] ஆத்துமாவைத் தந்தான் ' என்கிறு ராகவுமாம். (1)

697

ஆறு மலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலிஅர
வூறு சுலாய்மலை தேய்க்கும் ஒலிகடல்
மாறு சுழன்றுஅழைக் கின்ற ஒலிஅப்பன்
சாறு படஅமு தம்கொண்ட நான்றே.

பொ - ரை : 'தேவர்களுக்குத் திருவிழா உண்டாகும்படி எம்பெருமான் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் கொண்ட காலத்தில், ஆறுகள் எல்லாம் தாம் பிறந்து வந்த மலைகளை நோக்கி எதிர்த்து ஓடுகின்ற ஒலியும், வாசுகி என்னும் பாம்பினது உடலைச் சுற்றி மந்தரம் என்னும் மலையானது தேய்கின்ற ஒலியும், திருப்பாற்கடலானது இடம் வலமாக மாறிச் சுழன்று அழைக்கின்ற ஒலியும் உண்டாயின,' என்றவாறு.

வி - கு : ' கொண்ட நான்று ஒலி ஒலி ஒலி உண்டாயின ' என்க. ' உண்டாயின ' என்னும் வினைச்சொல் ஒன்றைக் கொணர்ந்து முடிக்க. நான்று-காலம். அரவு - ஈண்டு வாசுகி. ஊறு - உடல். சுலாய் - சுற்றி.

ஈடு : இரண்டாம் பாட்டு. [3] திருப்பாற்கடலைக் கடைந்த ஆச்சரியமான காரியத்தைச் சொல்லுகிறுர்,

---

1. ' கொண்டவாறே ' என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறுர். முதற்பொருளில் ஏகாரம் ஆச்சரியத்தின்கண் வந்தது. இரண்டாவது பொருளில் ஏகாரம் அசைநிலை.

2. ' ஆத்துமாவைத் தந்தான் ' என்றது, ' தந்தையானுன் ' என்றபடி.

3. ' சாறுபட அமுதம் கொண்ட நான்று ' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறுர்.

ஆறு மலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலி - [1] கடலிலே மந்தர மலையை நட்டவாறே கடல் கொந்தளித்து, மலை போய்த் தாழ்ந்து கொடுத்தது; [2] நீரானது தாழ்ந்தவிடத்தே ஓடக் கடவதன்றே? ஆறுகளானவை மலையைக் குறித்து எதிரிட்டு ஓடுகிற போதை ஒலியானது இவர்க்குச் செவியிலே படுகிறபடி. [3] இவர்க்கு முக் காலத்திலும் உள்ளன எல்லாம் தெரியும்படி அன்றோ அவன் வெளிச்சிறப்பித்தது? அரவு ஊறு சுலாய் மலை தேய்க்கும் ஒலி - வாசுகியினுடைய உடலைச் சுற்றிக் கடைகிற போதைச் சரசர வென்கிற ஒலியும். ஊறு - உடம்பு. சுலாய் - சுற்றி. கடல் மாறு சுழன்று அழைக்கின்ற ஒலி - மந்தர மலையைக் கொடுபுக்கு நட்டுத் திரித்த போது, [4] கீழ்க்கடல் மேற்கடலாய்க் கிடாய்ப் பாய்ச்சல் போலே திரையோடு திரை தாக்கிக் கிளருகிற ஒலியும். அப்பன் - உபகாரகன். [5] சாறு பட - கடலிலே நீர் கோதாம்படி பிரயோஜன மான அமிருதம் உண்டாக. என்றது, 'நீரிலே ரசமான பசை பட'

---

1. 'ஆறுகள் மலைக்கு எதிரே ஓடுகைக்குக் காரணம் யாது?' என்ன, 'கடலிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். போய் - மிகவும்.

2. 'மலை தாழ்ந்தால் அங்கே நீர் ஓட வேண்டுமோ?' என்ன, 'நீரானது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'முன்னே நடந்த செயலின் ஒலி இப்போது இவர்க்குச் செவிப் படக் கூடுமோ?' என்ன, 'இவர்க்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். வெளிச் சிறப்பித்தது-தெளிந்த ஞானத்தைக் கொடுத்தது.

4. 'கீழ்க்கடல் மேற்கடலாய்' என்றது, 'கீழைக்கடலின் நீர் மேற்கே செல்ல, மேலைக்கடலின் நீர் கிழக்கே வர' என்றபடி. கிடாய்ப் பாய்ச்சல்-ஆட்டுக்கிடாயின் போர்.

'அருகோடி நீங்கா தணைதலு மின்றித்
திரிகோட்ட மாஇரியச் சீறிப்—பொருகளம்
புக்கு மயங்கப் பொருது புறவாயை
நக்குமால் நல்ல தகர்.

என்பது, புறப்பொருள் வெண்பா மாலை.

'கருவொடும் ஒன்றோடு ஒன்று காரணம் இன்றிச சீறிப்
பொறியுடைக் குறும்பூழ் தம்மிற் போர்செயத் தாக்கு மோதை
செறிமயிர்த் தகர்கள் தம்மில் தீஎழத் தாக்கல் நோக்கி
அறைகழல் வீரர் ஆர்க்கும் அமலையை அவிக்கும் அன்றே.'

என்பது, நைடதம்.

5. சாறு-சாரம்; அமிருதம். 'சாறு' என்பதற்கு இரண்டாவது பொருள், 'திருவிழா' என்பது.

என்றபடி. அன்றிக்கே, சாறு என்று திருவிழாவாய், 'தேவ சாதிக்குத் திருவிழா உண்டாம்படியாக' என்னுதல்; சாறு பட - என்றபடி. அமுதம் கொண்ட நான்றே - திருப்பாற்கடல் கடைந்து அமுதம் கொண்ட காலத்தில் இவை எல்லாம் உண்டாயின. (2)

698

*நான்றில ஏழ்மண்ணுந் தானத்த வேபின்னும்*
*நான்றில ஏழ்மலை தானத்த வேபின்னும்*
*நான்றில ஏழ்கடல் தானத்த வேஅப்பன்*
*ஊன்றி இடந்துஎயிற் றில்கொண்ட நாளே.*

**பொ-ரை :** 'என் அப்பன் வராக அவதாரத்தைச் செய்து பூமியைக் குத்தி இடந்து தன் கொம்பிலே கொண்ட காலத்தில் ஏழு தீவுகளும் நழுவாமல் அந்த அந்த இடங்களிலே உள்ளவாயின ; அதற்கு மேல், ஏழு மலை சலித்தல் இல்லாதனவாய்க்கொண்டு அந்த அந்த இடங்களிலே இருப்பனவாயின ; அதற்குமேல், ஏழு கடல்களும் உடைந்து ஓடாமல் அந்த அந்த இடங்களிலே இருப்பனவாயின,' என்றபடி.

**வி-கு :** 'ஏழ் மண்ணும்' என்றது, ஏழு தீவுகளைக் குறித்தபடி. நாலுதல் - தொங்குதல். 'நான்றில' என்றது, 'ஒவ்வொன்றும் தனது தனது நிலையினின்றும் மாறிற்று இல்லை' என்றபடி.

**ஈடு :** மூன்றும் பாட்டு. [1] மஹாவராஹ அவதாரத்தின் செயலை அருளிச்செய்கிறார்.

நான்றில ஏழ் மண்ணும் தானத்தவே - ஏழு பூமியும் நாலாதபடி எடுக்கை. என்றது, 'ஏழு தீவுகளாய் இருக்கின்ற பூமியை எடுக்கச் செய்தே, ஒன்றும் நாலாதே முன்பு போலே தன்தன் இடத்திலே கிடக்கும்படி. இவன் பெரிய [2] யானைத் தொழிலைச் செய்யாநிற்கச் செய்தேயும், முன்பு போலே ஒரு குறை அற, உண்பார் உடுப்பாராய்ச் செல்லுகிறபடி. [3] ஆதாரமானவன் கூட நிற்கையாலே இவற்றுக்கு

---

1. 'அப்பன் ஊன்றி இடந்து எயிற்றில் கொண்ட நாள்' என்பதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. யானைத்தொழில் - மனிதச் செயலுக்கு அப்பாற்பட்ட செயல். முன்பு போலே - படைப்புக்காலம் போலே.

3. 'அவ்வாறு செல்லுவதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஆதாரமானவன்' என்று தொடங்கி.

ஒரு குறை வாராதே. ஏழு தீவுகளும் சலித்தன இல்லை: தனது தனது இடத்தில் இருந்தன ஆயின. பின்னும் - அதற்கு மேலே, நான்றில ஏழ்மலை தானத்தவே - [1] பூமிக்கு ஆணி அடித்தாற்போலே இருக்கிற ஏழு குல மலைகளும் ஒன்றும் குலையாமல் தன்தன் இடத்தில் நிற்கும்படி. என்றது, [2] 'ஒரு கோத்ர ஸ்கலனம் பிறந்தது இல்லை' என்றபடி. 'பின்னும் பின்னும்' என்று வருவதற்குக் கருத்து, 'இவற்றிலே ஒரு செயலே அமையுங்கண்டீர்! அதற்கு மேலே இவையும் செய்தான்' என்கைக்காக. நான்றில ஏழ்கடல் தானத்தவே-[3] அவைதாம் கடினத்தன்மையாலே குலையாதே ஒழிந்தன என்னவுமாம் அன்றோ? அதுவும் இல்லை அன்றோ இதற்கு? நீர்ப் பண்டம் அன்றோ தண்ணீர்? அதுவும் தன் இடத்திலே கிடக்கும் படியாக. [4] அவற்றின் கடினத்தன்மையும் இதனுடைய நெகிழ்ச்சித் தன்மையும் பயன் அற்றவை; 'அவன் திருவுள்ளக் கருத்து யாது ஒன்று? அதுவே காரியமாக முடிவது,' என்கை.

'இவை இப்படிக் கிடத்தல் அவன் குறிக்கோளுடையவனுய்க் கொண்டு காப்பாற்றும் போதோ?' என்னில், ஊன்றி இடந்து எயிற்றில் கொண்ட நாளே-மறுபாடுருவத்தைக்கும்படியாகக் குத்தி, அண்டபித்தியினின்றும் ஒட்டு விடுவித்து எடுத்து ஏறட்டு, எயிற்றிலே எற்றிக்கொண்டு செயல் செய்தபோது; [5] 'மண்ணெலாம் இடந்து எடுத்து மதங்கள் செய்து' என்கிறபடியே. [6] அவன் இப்படி முக்கியமாகக் காக்கப் புக்கால் அவை சலிக்குமோ?

---

1. பூமியைச் சொன்ன பின் மலையைச் சொல்லுவதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'பூமிக்கு' என்று தொடங்கி.

2. ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'ஒரு' என்று தொடங்கி. கோத்ரம்-மலை. 'பெயரும், கோத்ரமும்' என்பது வேறும் ஒரு பொருள். ஸ்கலனம் - நழுவுதல்.

3. மேற்கூறியவை போல அன்றிக்கே, நாலாமைக்கும் அசம்பாவிதமானவையும் நாலாதே தம் இடத்தே கிடக்கும்படி செய்த ஆற்றலை அருளிச்செய்கிறார், 'அவைதாம்' என்று தொடங்கி.

4. மேலே கூறிய வாக்கியத்தால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'அவற்றின்' என்று தொடங்கி.

5. அப்படி ஊன்றி இடந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மண்ணெலாம்' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி, 3. 4 : 3.

6. ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'அவன்' என்று தொடங்கி. 'முக்கியமாக' என்றதற்கு, 'முகத்தின் சம்பந்தத்தையுடையனவாக' என்பதும், 'சிறப்பாக' என்பதும் பொருள்.

[1] அசையாத பொருள்களோடு அசையும் பொருள்களோடு வாசியறத் தத்தம் இடத்திலே நின்றன. (3)

699

நாளும் எழநிலம் நீரும் எழவிண்ணும்
கோளும் எழஎரி காலும் எழமலை
தாளும் எழச்சுடர் தானும் எழஅப்பன்
ஊளி எழஉல கம்உண்ட ஊணே.

**பொ–ரை :** நாள்களின் கூறுபாடு குலையவும், நிலம் தண்ணீர் இவற்றின் கூறுபாடு குலையவும், ஆகாயம் கிரகங்கள் இவற்றின் கூறுபாடு குலையவும், நெருப்புக் காற்று இவற்றின் கூறுபாடு குலையவும், மலைகள் வேரோடு பறிந்து விழவும், சூரிய சந்திரர்களுடைய கூறுபாடு குலையவும், என் அப்பன் ஒலி உண்டாகும்படியாக உலகத்தை உண்ட ஊண் இருந்தது.

**வி–கு :** 'எழ' என்றது, தத்தம் நிலையினின்றும் நீங்குதலைக் குறித்தது. ஊளி – ஒலி. எழ – கிளர.

**ஈடு :** நான்காம் பாட்டு. மஹா பிரளயத்தில் காத்த பிரகாரத்தை அருளிச்செய்கிறார். அன்றிக்கே, ''இப்போது இருப்பது போன்று மார்க்கண்டேயன் திருவயிற்றுள் ஒன்றும் அழியாது இருக்கக கண்டான்' என்கிற புராணத்துக்குத் தகுதியாக அவாந்தர பிரளயத்தை இவ்விடத்தே அருளிச்செய்கிறாராகவுமாம்,' என்று அருளிச்செய்வர்.

நாளும் எழ - [3] கால நியதி போக. [4] 'அக்காலத்தில் பகல் இல்லை; இரவு இல்லை; ஆகாயம் இல்லை; பூமி இல்லை; இருள்

---

1. மேல் கூறியவற்றையெல்லாம் கூட்டி முடிக்கிறார், 'அசையாத' என்று தொடங்கி.

2. 'உண்ட' என்பது பொதுச்சொல் ஆகையாலே, அதற்கு 'அவாந்தரபிரளயம்' என்றும், 'மஹாபிரளயம்' என்றும், இரண்டு வகையாகவும் பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார். 'ததபர்ச்யம் அஹம் ஸர்வம் குக்ஷௌ தஸ்ய மஹாத்மா:' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'திருவயிற்றினுள்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. 'நாளும் எழ' என்றது பொருந்துமோ? காலம் நித்தியம் அன்றோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கால நியதி போக' என்று.

4. காலநியதிதான் இன்னது என்னுமதனையும், அந்நியதிக்குக் காரணம் இன்னது என்னுமதனையும், காரணமாக இருப்பவன் உள்ளே புகுருகையாலே காரியமான இந்நியதியும் போம் என்னுமதனையும் முறையே அருளிச்செய்கிறார், 'அக்காலத்தில்' என்று தொடங்கி.

இல்லை: சூரிய சந்திரர்கள் இல்லை; வேறு ஒன்றும் இல்லை; பிரஹ்மம் ஒன்றே சமஷ்டி புருஷரூபமாய் இருந்தது,' என்கிறபடியே. எழ - பேர. ஆண்டு என்றும், மாதம் என்றும், நாள் என்றும், கலை என்றும், காஷ்டை என்றும் சொல்லுகிறவை எல்லாம் சூரியனுடைய செல்லுதல் வருதலாலே வருகின்றவை அன்றோ? பாகுபாட்டைச் செய்கிற சூரியன் உள்ளே புக்கால் பாகுபடுத்தப்படுகின்ற இவையும் போமித்தனை அன்றோ? நிலம் நீரும் எழ - [1] காரணங்களோடு காரியங்களோடு வாசி அற உள்ளே புக. [2] காரியம் உள்ள இடத்தே காரணம் தொடர்ந்து நிற்றலைக் காணாநின்றோம்; [3] 'மாமாயை........மங்க ஒட்டு' என்று பிரகிருதி தத்துவத்தைச் சொல்லா நிற்கச்செய்தே, 'இங்கு இவ்வுயிர் ஏய் பிரகிருதி' என்று சொல்லா நின்றாரே அன்றோ? [4] இதுதான் காரணத்திலே போகாமைக்காக.

---

'நஅஹ: நராத்ரி: நநப: நபூமி: நஆஸீத்தம: ஜோதி: அபூத்நச அந்யத் ஸ்ரோத்ராதிபுத்யா அநுப லப்தம்ஏகம் ப்ராதாநிகம் பிரஹ்ம புமாந்ததா ஆஸீத்'

என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 1. 2 : 25. இது, மஹாபிரளயத்துக்குப் பிரமாணம். 'நஅஹ: நராத்ரி:' என்பது மாத்திரமே அவாந்தர பிரளயத்துக்குப் பிரமாணம்.

1. ஐம்பெரும்பூதங்களும் அண்டத்துக்குப் புறம்பான போது காரணங்களாய், அண்டத்துக்கு உள்ளான போது காரியங்களாய் இருக்குமாகையாலே, 'காரணங்களோடு வாசி அற' என்கிறார்.

2. 'நிலம் நீரும் எழ' என்றது, காரியமான பூதங்களை அன்றோ சொல்லுகிறது? காரணங்களையும் இதற்குப் பொருள் ஆக்கும்போது காரியத்திலே காரணம் உண்டோ?' என்ன, 'காரியம் உள்ளவிடத்தே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. இங்ஙனம் கூறுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'மாமாயை' என்று தொடங்கி. 'என்றது, என் சொல்லியவாறோ?' எனின், 'மங்கஒட்டு உன் மாமாயை' என்று மூலப்பகுதியைச் சொல்லச்செய்தேயும், 'இங்கு இவ்வுயிர் ஏய் பிரகிருதி' என்று தூல சரீரத்தோடு கூடியிருக்கின்ற சேதநர்களுடைய பிரகிருதி என்று காரண அமிசத்தைப் பிரித்துச் சொன்னாரேயன்றோ? இந்தக் காரண அமிசமானது மூலப்பகுதியாய்ப் போகாமைக்காக என்பதனைத் தெரிவித்தபடி. இது, திருவாய். 10. 10 : 3.

4. 'இதுதான்' என்றது, 'தூல சரீரத்தோடு கூடியிருக்கின்ற சேதநர்களையுடைய காரண அமிசமான இந்தப் பிரகிருதிதான்' என்றபடி. 'காரணத்திலே போகாமைக்காக' என்றது, 'மூலப்பகுதியாய்ப் போகாமைக்காக' என்றபடி.

[1] 'உயிர் ஏய் பிரகிருதி' என்கிறார், ஆத்துமாக்களோடு கூடியுள்ள பிரகிருதி என்று தோற்றுகைக்காக. விண்ணும் கோளும் எழ - ஆகாயமும் அங்குள்ள கிரகங்களும் எழ. எரி காலும் எழ - நெருப்பும் காற்றும் போக. மலை தாளும் எழ - மலைகள் அடியோடே பறிந்து உள்ளே புக. என்றது, 'வேர்க்குருத்தோடே பறிய' என்றபடி. சுடர்தானும் எழ - சொல்லப்படாத ஒளிப்பொருள்களும் உள்ளேபுக. அப்பன் ஊளி எழ - ஒலி உண்டாக. என்றது, 'ஒவ்வொரு காலத்தில் கலகங்கள் உண்டானால் நம்முடைய [2] அடைய வளைந்தானுக்குள்ளே புகும் போது திருவாசலில் பிறக்கும் ஆரவாரம் போலே, திருவயிற்றிற்புகுகிற போது பிராணிகளுக்கு உண்டான பரபரப்பான ஒலிகள் கிளர' என்றபடி. அன்றிக்கே, ''இவற்றை உரிஞ்சுகிற போதை ஒலிகாண்!' என்று அம்மாள் பணிக்கும்படி' என்று அருளிச்செய்வர்; அதனால் நினைக்கிறது, [3] ஈஸ்வரத்வப் பிடரால் அன்றியே பத்தும் பத்தாக அடியார்களைக் காப்பாற்றுதலேயாய் இருக்கிறபடி. (4)

700

ஊனுடை மல்லர் ததர்த்த ஒலிமன்னர்
ஆனுடைச் சேனை நடுங்கும் ஒலிவிண்ணுள்
ஏனுடைத் தேவர் வெளிப்பட்ட ஒலிஅப்பன்
காணுடைப் பாரதம் கையறை போழ்தே.

பொ-ரை: 'என் அப்பன், காட்சிக்கு இனியதான மஹாபாரதப் போரை அணி வகுத்துப் போர் செய்த காலத்தில், சிறந்த உணவுகளை உண்டு வளர்ந்த மல்லர்கள் நெரிந்து விழுகிற ஒலியும், அசுரர்களுடைய ஆண்மை மிகுந்த சேனைகள் நடுங்குகின்ற ஒலியும், ஆகாயத்திலே பெருமை மிகுந்த தேவர்கள் வெளிப்படையாய் நின்று காண்கிற காலத்தில் செய்கின்ற ஒலியும் தோன்றின,' என்றபடி.

---

1. 'இதுதான் காரணத்திலே போகாமைக்காக' என்றதனை விவரணம் செய்கிறார், 'உயிரேய்' என்று தொடங்கி. என்றது, 'மாமாயை' என்று மூலப்பகுதியைச் சொல்லச்செய்தே, 'உயிர் ஏய் பிரகிருதி' என்று மீண்டும் பிரகிருதியைச் சொன்னது, 'இந்தக் காரியமான சரீரத்திலே காரணமான மூலப்பகுதி சேர்ந்திருக்கிறது என்று தோன்றுகைக்காக,' என்றபடி. ஆக, இதனால்; 'காரியங்களிலும் காரணமிசம் சேர்ந்திருக்கும்' என்றபடி.

2. 'அடைய வளைந்தான்' என்பது, திருவரங்கம் பெரிய கோயிலிலுள்ள ஒரு திருவீதியின் பெயர்.

3. ஈஸ்வரத்வப் பிடர்-இறைவனாதலால் உளதாய செருக்கு.

வி-கு: ஆண் - ஆண் தன்மை. ஏண் - வலியுமாம். கையறை - அணி வகுத்தல்.

ஈடு: ஐந்தாம் பாட்டு. [1] பாரதப் போர்ச் செயலை அருளிச் செய்கிறார்.

ஊணுடை மல்லர் ததர்ந்த ஒலி - [2] ஏற்றிலக்கை பெற்று உண்கிற மிடுக்கையுடையரான துரியோதனன் சேனை தேர்க்காலிலே நெரிந்த ஓசை. மல் என்பது மிடுக்கு; 'மிடுக்கையுடைய சேனை' என்றபடி. அன்றிக்கே, 'மல்லர்க்கு மிடுக்கு உண்டாகைக்காக மது மாமிசங்களை உண்பித்து ஆட்டத்து வெளியிலே நிறுத்தினான் ஆயிற்று நலிகைக்காக: அதனை அறிந்து பையல்களைத் தேர்க்காற் கீழே இட்டு நெரித்த ஓசை' என்னுதல். வலியைப் போரப் பொலியச் சொல்லி வைத்து, 'ததர்ந்த' என்கிறார்காணும், [3] பசளைக்கலம் நெரித்தாற்போலே வருத்தம் இன்றியே நெரித்தபடியைப் பற்ற. மன்னர் ஆணுடைச் சேனை நடுங்கும் ஒலி - அரசர்களுடைய ஆண் பிள்ளைத்தனத்தையுடைத்தான சேனை 'கிருஷ்ணன் சாரதியாக ஏறினான்' என்று கேட்ட வாறே 'நாம் முடிந்தோம் அன்றோ?' என்று அவ்வளவில் குடல் குழம்பிக் கூப்பிட்ட ஒலி. [4] ஆண் பிள்ளைகளான வீடுமன் துரோணன் முதலாயினோர்கள் அன்றோ தூசி ஏறின பேர்?

விண்ணுள் ஏணுடைத்தேவர் வெளிப்பட்ட ஒலி - [5] சர்வேஸ்வரனோடு ஒக்க இன்னார் இன்னார் என்னும்படி தங்கள் தங்களைச் சமையவிட்டுக்கொண்டு செருக்கினையுடையவர்களாய் ஓரோ இருப் பிடங்களையுடையவர்களாய் இருக்கிற தேவர்களின் கூட்டம்

---

1. ஈற்றடியைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'மல்லர்' என்பதற்கு 'மிடுக்கையுடையவர்கள்' என்பதும், 'வீரர்கள்' என்பதும் இரண்டு பொருள். இவ்விரண்டு பொருளையும் முறையே அருளிச்செய்கிறார், 'ஏற்றிலக்கை' என்று தொடங்கியும், 'மல்லர்க்கு' என்று தொடங்கியும். ஏற்றிலக்கை-உயர்ந்த சம்பளம். ஆட்டத்து வெளி-வையாளி விடுகிற வெளி.

3. பசளைக்கலம்-பச்சைப்பானை.

4. ''ஆணுடை' என்றது யாரை?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார், 'ஆண் பிள்ளைகளான' என்று தொடங்கி. தூசி-முன்னணி.

5. 'ஏண்' என்றதற்கு, 'உயர்வு' என்பதும், 'எண்ணுதல்' என்பதும் இரண்டு பொருள். அவ்விரண்டு பொருளையும் அருளிச்செய் கிறார், 'சர்வேஸ்வரனோடு' என்று தொடங்கியும், 'அவன் பிரமன்' என்று தொடங்கியும். சமையவிட்டுக்கொண்டு-புண்ணிய விசேடத்தாலே ஆக்கிக் கொண்டு. என்றது, 'உயர்ந்தவராகச் செய்துகொண்டு' என்றபடி.

கண்ணுக்குத் தோற்றும்படி நின்று துதிக்கிற ஒலி. [1] இந்த அந்தர சாதிகளைத் தன்னுடனே ஒருசேர எண்ணலாம்படி தன்னைத் தாழ விட்டு வைக்குமே தன் சௌலப்பியத்தாலே! [2] 'அவன் பிரமன்; அவன் சிவன், அவன் இந்திரன்,' என்று ஒரு கோவையிலே எண்ணலாம்படி இருக்கிறவர்கள். அப்பன் - பூபாரத்தை நீக்கிய உபகாரகன். காணுடைப் பாரதம் கைஅறை போழ்தே - கண் முதலான கரணங்களைப் படைத்ததற்குப் பிரயோஜனம் அற்றை நிலையைக் காண்கை அன்றோ? [3] சேனையின் தூளியும், கையும் உழவுகோலும் சிறு வாய்க்கயிறும், நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற நிலை அன்றோ அது? காணுதற்கு இனிய பாரதம். கை அறை போழ்து - [5] கையும் அணியும் வகுத்து அங்கோடு இங்கோடு உலாவிப் படை பொருத்தி, 'நீங்கள் இன்னபடி செய்யக் கடவீர்கோள்! நாங்கள் இன்னபடி செய்யக்கடவோம்' என்று கைதட்டி விட்ட போது இந்த ஒலி எல்லாம் உண்டாயின. (5)

701

போழ்து மெலிந்தபுன் செக்கரில் வான்திசை
சூழும் எழுந்துஉதி ரப்புன லாமலை
கீழ்து பிளந்தசிங் கம்ஒத்த தால்அப்பன்
ஆழ்துயர் செய்துஅசு ரரைக்கொல்லு மாறே.

---

1. 'ஈஶ்வர அபிமானிகளாய் இருக்கிற மற்றைத் தேவர்களைச் சர்வேஶ்வரனோடு ஒக்க எண்ணலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார், 'இந்த அந்தர சாதிகளை' என்று தொடங்கி. 'அந்தரசாதி' என்பதற்கு, 'ஆகாசத்திலே பிறந்தவர்கள்' என்பது நேர்ப்பொருள்; 'தாழ்ந்த ஜாதி' என்பது தொனிப்பொருள்.

2. 'எண்' என்பதற்கு, எண்ணுதல் என்ற இரண்டாவது பொருளை அருளிச்செய்கிறார், 'அவன் பிரமன்' என்று தொடங்கி.

'ஸப்ரஹ்மா ஸஶிவ: ஸேந்த்ர:' என்பது நாராயண சூக்தம்.

3. 'அற்றை நிலையை' என்றதனை விவரணம் செய்கிறார், 'சேனையின் தூளியும்' என்று தொடங்கி.

4. இந்நிலைக்கு உபேயத்துவமாத்திரமன்றிக்கே, உபாயத்துவமும் உண்டு என்கிறார், 'மாம்' என்று தொடங்கி. 'கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூளி தூசரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற சாரத்ய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்' என்பது, முமுக்ஷுப்படி சரமஶ்லோகப்ரகரணம், சூ. 33.

5. 'கை அறை போழ்து' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'கையும் அணியும்' என்று தொடங்கி. கையறைகை-கை தட்டுதல். கையும் அணியும் வகுத்து-சேனையை வியூகம் வியூகங்களாகப் பிரித்து.

பொ—ரை : 'பகற்காலம் நீங்கிய புல்லிய செவ்வானம் போலே, ஆகாயமும் திக்குகளும் சூழ எழுந்து இந்தப்பெருக்கு ஆகும்படியாக, மலை கீழேயாகும்படி மேலே இருந்துகொண்டு பிளந்த சிங்கத்தின் செயலை ஒத்திருந்தது, என்னப்பன் மிக்க துயரைச் செய்து அசுரனை இரணியனைக் கொன்ற தன்மையானது' என்க.

வி—கு : செக்கர்-அந்தி வானம்; அந்தி நேரமுமாம். 'புன்' என்பது, காலத்தின் சிறுமையைக் காட்ட வந்தது. சூழ எழுந்து உதிரப் புனலாக அசுரரைக் கொல்லுமாறு ஒத்தது என்க.

ஈடு : ஆறும் பாட்டு. [1] இரணியனைக் கொன்ற செயலை அருளிச்செய்கிறார்.

போழ்து மெலிந்த - [2] 'பெரும்பாலும் பகற்பொழுது போயிற்று' என்னுமாறு போலே, பொழுது போகாநிற்கச்செய்தே. புன் செக்கரில்- செக்கர்வானம் இடுகிற அளவிலே. என்றது, 'அவன் வரத்தில் அகப்படாத சந்தியா காலத்திலே' என்றபடி [3] 'இரவிலும் படகில்லேன்; பகலிலும் படகில்லேன்' என்று வரங்கொண்டானே. வான் திசை சூழும் எழுந்து உதிரப் புனலா - பரப்பையுடைத்தான ஆகாசம் திக்குகள் அடங்கலும், பள்ளங்கண்ட இடம் எங்கும் வெள்ளம் பரக்குமாறு போலே குருதியானது கொழித்துப் பரக்கும்படி. மலை கீழ்து பிளந்த சிங்கம் ஒத்ததால்-'ஒரு மலையைக் கீழே இட்டுக் கொண்டு மேலே இருந்து அதனைப் பிளந்த சிங்கத்தை ஒத்தது' என்னுதல். அன்றிக்கே, 'கிழித்துப் பிளந்த சிங்கத்தை ஒத்தது' என்னுதல். அன்றிக்கே, [4] 'மகிழ்ந்து பிளந்த சிங்கத்தை ஒத்தது' என்னுதல். 'இரண்டு கூறு செய்து உகந்த சிங்கம்' என்னக் கடவது அன்றோ ?

1. 'ஆழ்துயர் செய்து அசுரரைக் கொல்லுமாறு' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'போழ்து மெலிந்த' என்பதற்குப் பிரமாணங்காட்டிப் பொருளும் அருளிச்செய்கிறார், 'பெரும்பாலும்' என்று தொடங்கி. 'பலித ப்ராயோ வாஸா:' என்பது, பிரமாண வாக்கியம்.

3. 'அப்படி வரம் உண்டோ?' என்ன, 'இரவிலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கம்பராமாயணம் இரணியன் வதைப்படலம் 11 முதல் 18 முடிய உள்ள செய்யுள்களைக் காண்க.

4. மூன்றாவது பொருளில் 'மகிழ்ந்து' என்ற சொல்லானது 'கீழ்து' என்று விகாரப்பட்டு வந்ததாகக் கோடல் வேண்டும். 'இரண்டு கூறு' என்பது, திருச்சந்த விருத். 62.

அப்பன் ஆழ்துயர் செய்து - நரசிங்கத்தினுடைய [1] மொறுந்த முகத்தைக் கண்டபோதே, மேல் போய் அனுபவிக்கக்கூடிய அனுபவமடைய அப்போதே அனுபவித்து அற்றான். என்றது, 'பல காலம் பகவத் பாகவத விஷயங்களிலே செய்து போந்த தீமை முழுதினையும் அரைக்கணத்திலே அனுபவித்து அற்றபடி. மிகவும் துக்கத்தை விளைத்து. [2] அசுரரைக் கொல்லுமாறே - அசுரனைக் கொன்றபடி. 'இதனால், என் சொல்லியவாறோ?' எனின், 'எல்லார்க்கும் பொதுவாளனாய் நிற்கும் நிலை ஒழிய, தாய்தந்தையர்கள் முகமாகக் குழந்தைகள் பக்கலிலே வத்சலனாய் நிற்பது ஒரு நிலையும் உண்டு அன்றோ? அது குலைந்தால், அவன் பகைவனாயும் நிற்கும் அன்றோ?. அப்போதும் இவன்தான் முன்னின்று பாதுகாப்பான்' என்பதனைத் தெரிவித்தபடி. [3] இத்தாலும் சொல்லிற்றாயிற்று, ஆபத்துக் கனத்ததனையும் கடுக வந்து இரட்சிக்கும் என்கை. [4] தமப்பன் பகையாக உதவினவன், அவனில் அண்ணியனான தான் தனக்குப் பகையானால் உதவச் சொல்ல வேணுமோ? [5] 'தனக்குத் தானே அன்றோ பகைவன்?' என்கிறபடியே, தனக்குத் தானே பகைவன். (6)

---

1. மொறுந்த - தூறு மண்டின.

2. 'அசுரரை' என்பது, 'காமரை வென்ற கண்ணோன்' (திருக்கோவையார். 164.) என்புழிப் போன்று ஒருமையின்கண் வந்தது. அசுரரை-அசுரனை; இரணியனை.

3. பலித்த பொருளாலே போதரும் பொருளை அருளிச்செய்கிறார், 'இத்தாலும்' என்று தொடங்கி.

4. இரணியன் வதையைச் சொல்லுவதற்குப் பிரயோஜனத்தை அருளிச்செய்கிறார், 'தமப்பன்' என்று தொடங்கி.

5. தனக்குத்தான் பகைவன் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'தனக்கு' என்று தொடங்கி.

'உத்தரேத் ஆத்மநா ஆத்மாநம் நஆத்மாநம் அவஸாதயேத்
ஆத்மைவ ஹி ஆத்மநோ பந்து: ஆத்மைவ ரிபு: ஆத்மந:'

என்பது, ஸ்ரீகீதை, 6:5.

'நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும் நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்.' (நாலடியார்)

என்னும் செய்யுள், பகவத் கீதைச் சுலோகத்தின் பொருளோடு ஒரு புடை ஒப்புமையுடைத்தாம்.

702

மாறு நிரைத்திரைக் குஞ்ச ரங்களின்
நூறு பிணம்மலை போற்புர ளக்கடல்
ஆறு மடுத்துஉதி ரப்புன லாஅப்பன்
நீறு படஇலங் கைசெற்ற நேரே.

பொ-ரை : 'எதிர் எதிராக நிரைத்து ஒலிக்கின்ற பாணங்களாலே இனம் இனமாக நூற்றுக்கணக்கான பிணங்கள் மலைகளைப் போன்று புரண்டு விழவும் கடலானது இரத்தத்தாலே நிறைந்து ஆறுகளிலே புக அதனாலேஆறுகள் எல்லாம் உதிரப்புனல் ஆகும்படியும், என்னப்பன் இலங்கையானது சாம்பலாகும்படி அழித்த நேர்மை இருந்தது,' என்றபடி.

வி-கு : 'அப்பன் இலங்கை செற்ற நேர். பிணம் மலைபோற்புரளவும், கடல் ஆறு மடுத்து உதிரப்புனல் ஆகும்படியும் இருந்தது' என்க. '(குருதியாகிய) ஆறு மடுத்துக் கடல் உதிரப்புனலா' எனலுமாம்.

ஈடு: ஏழாம் பாட்டு. [1] இராம விருத்தாந்தத்தை அருளிச் செய்கிறார்.

மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள் - [2] சாரிகை வந்த சடக்கு, நாலு திசைகளிலும் விட்ட அம்புகள் எதிர் அம்பாய் ஒன்றோடு ஒன்று பொருது கலார் கலார் என்று ஒலிக்கின்ற ஒலி, கடல் இரைத்தாற்போலே இராநின்றது. சாரிகை வந்த சடக்கு, தன்னில்தான் எதிரம்பு கோத்ததுகாணும். இனநூறு பிணம் மலை போல் புரள - [3] நூறு நூறாக இனம் இனமான பிணங்களானவை, அம்பு பட்டு உருவின சடக்காலே உயிர் ஓரிடத்து ஒதுங்கப்பெறாதே இரண்டு துண்டங்களிலும் கலந்து மலை போலே கிடந்து துடிக்கிறபடி. கடல் ஆறு மடுத்து உதிரப்புனலா - [4] 'தண்ணீரின் கூட்டம் தானாய்

1. 'இலங்கை செற்ற நேரே' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. சரங்கள் மாறாக நிரைத்து இரைக்கும் பிரகாரத்தை அருளிச் செய்கிறார், 'சாரிகை' என்று தொடங்கி. சாரிகை வந்த சடக்கு - மண்டலாகாரக் கதியின் வேகம். மாறு - எதிர். நிரைத்து - கலந்து.

3. பிணங்கள் புரளுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'நூறு நூறாக' என்று தொடங்கி. சடக்கு - வேகம்.

4. 'கடல் ஆறு மடுத்து' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தண்ணீரின்' என்று தொடங்கி.

'ஆபூர்ய மாணம் அசலப்ர திஷ்டம்'

என்பது, ஸ்ரீகீதை, 2 : 70. 'அசலப்ர திஷ்டம்' என்றது, 'கரையைத் தாண்டாது' என்றபடி.

நிறைந்திருக்கிறதாயும் ஒரே விதமாயும் இருக்கிற கடல்' என்கிற படியே, [1]புக்க எல்லாம் கொண்டிருக்கக்கூடிய கடல், இரத்த வெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே மடுக்கும்படி. [2]'வையமூடு பெருநீரில் மும்மை பெரிதே' என்றார் அன்றோ? நீறு பட [3]'சுடு காட்டுக்கு ஒப்பாக' என்று சொன்னபடியே, சாம்பலாகும்படியாக. இலங்கை செற்ற [4]நேரே - இலங்கை செற்ற பொழுது. 'நேர்' என்பது, 'நேரம்' என்று காலத்தைக் காட்டுவதாம். 'இலங்கை செற்ற பொழுது மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள்' என்பது அந்வயம். அன்றிக்கே, 'இலங்கையைச் செற்ற வாய்ப்பு' என்னுதல். அன்றிக்கே, 'மாயாப் பிரயோகத்தால் அன்று, செவ்வைப் பூசலிலே நின்றுகாண் இலங்கையை அழித்தது' என்னுதல். நேர் - நேராக என்றபடி. அப்போது, ஏகாரம்: தேற்றேகாரம். 'நேர்மை யாலே இலங்கை செற்றது' என்றபடி. (7)

703

நேர்சரிந் தான்கொடிக் கோழிகொண் டான்பின்னும்
நேர்சரிந் தான்எரி யும்அன லோன்பின்னும்
நேர்சரிந் தான்முக்கண் மூர்த்திகண் டீர்அப்பன்
நேர்சரி வாணன்திண் தோள்கொண்ட அன்றே.

**பொ-ரை:** 'என்னப்பன், எதிரிட்டு வந்து தோற்ற வாணனுடைய வலிய தோள்களை அழித்த காலத்தில், கோழிக்கொடியையுடைய முருகன் எதிரிட்டுத் தோற்றான்; அதற்குமேல், எரிகின்ற அக்கினி தேவனும் தோற்றான்; அதற்கு மேலே, மூன்று கண்களையுடைய சிவபெருமானும் தோற்றான்' என்றபடி.

**வி-கு:** கண்டீர்-முன்னிலை அசைச்சொல். நேர் சரிதல்-எதிர்த்துத் தோற்றல். கோழிக்கொடி, முருகனுக்கு உரியது.

---

1. 'ஆபூர்யமாணம்' என்றதனையும் கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார், 'புக்க' என்று தொடங்கி. ஆறு மடுத்து - ஆறுகளிலே புகுந்து.

2. இரத்தவெள்ளம் நிரம்பியதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'வையமூடு' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி, 11. 4 : 4.

3. 'சிதா தூமாகுலபதா க்ருத்ர மண்டல ஸங்குலா
அசிரேணைவ லங்கா இயம் ஸ்மஸாந ஸத்ருஸீ பவேத்'
என்பது, ஸ்ரீராமா. சுந். 26 : 26.

4. 'நேரே' என்றதற்கு, மூன்று பொருள்; நேரம் என்ற பொருளிலும், வாய்ப்பு என்ற பொருளிலும் 'நேரே' என்றதில் ஏகாரம் ஈற்றசை.

ஈடு: எட்டாம் பாட்டு. [1] வாணன் திண்தோள்களைக் கொண்ட வெற்றிச் செயலை அருளிச்செய்கிறார்.

கோழிக்கொடி கொண்டான் நேர் சரிந்தான் - மயிலைக் கொடியிலேயுடையனாய்த் தேவசேனாபதியாய் [2] இளமறியாய்த் தூசித் தலையிலே நின்ற சுப்பிரமணியன் தோற்றரவிலே கெட்டான். பின்னும் நேர் சரிந்தான் எரியும் [3] அனலோன் - அவ்வளவிலே நாற்பத்தொன்பது அக்கினிகளும் பெரிய கிளர்த்தியோடே எரிந்து தோன்றின: அவையும் எல்லாம் பின்னிட்டன. பின்னும் நேர் சரிந்தான் முக்கண் மூர்த்தி - [4] 'மகன் கொடி கட்டிக்கொண்டு சென்று இளிம்புபட்டான்' என்று தன் கொடியைப் போகட்டு வந்து தோற்றின உடனேயே, கண்ணைப் புதைத்துக் கெட்டு ஓடத் தொடங்கினான். [5] அவன் மறைத்துக்கொண்டு போக, இவர், '**முக்கண் மூர்த்தி கண்டீர்**' என்று கண்ணைக் காட்டிக் கொடுக்கிறார். [6] எல்லாம் செய்தாலும் உடம்பில் அடையாளத்தை மறைக்கப் போகாதே அன்றோ? [7] 'வாணன் ஈரைஞ்ஞூறு தோள்களைத் துணித்த நாள் அந்த அந்த ஆகுலம்' என்கிறபடியே, பாசுரம் இட்டுச் சொல்ல ஒண்ணாத வியாகுலம் அன்றோ அது?

அப்பன் - காரணம் இல்லாமலே பாதுகாப்பவன். நேர்சரி வாணன் - [8] பிரதானனான வாணன் தான் வந்து தோற்றினான்;

---

1. *'வாணன் திண்தோள் கொண்ட அன்று' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

2. *இளமறி - இளங்குட்டி. 'தோற்றரவிலே கெட்டான்' என்றது, 'நேர் சரிந்தான்' என்றதன் பொருள்.*

3. *'அனலோன்' என்பது, தொகுதியொருமை.*

4. *முருகனுக்குக் கொடியைச் சொல்லி, சிவனுக்கு நெற்றிக் கண்ணைக் கூறியதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'மகன்' என்று தொடங்கி. இளிம்பு படுதல் - எளிமைப்படுதல்.*

5. *'கண்டீர்' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'அவன்' என்று தொடங்கி.*

6. *'அவன் மறைத்துக்கொண்டு போனமை இவர்க்குத் தெரியுமோ?' என்ன, 'எல்லாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.*

7. *'கண்ணைப் புதைத்துக்கொண்டு ஓடும்படியான துன்பம் உண்டோ?' என்ன, 'வாணன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். இது, திருச்சந்த விருத்தம், 70.*

8. *நேர்தல் - என்பது ஒத்தலாதலின், கருத்துப் பொருளாகப் 'பிரதானனான' என்று பொருள் அருளிச்செய்கிறார்.*

[1] அவனும் பின்னிட்டு ஓடத் தொடங்கினன் என்னுதல்; அன்றிக்கே, 'நின்றவிடத்தே நின்று முதுகு காட்டினன்' என்னுதல். திண் தோள் கொண்ட அன்று - [2] கையில் ஆயுதம் போகட்டாரையும், மயிர் விரித்தாரையும் கொல்லக்கடவது அன்று. [3] தன்னோடு ஒக்க ஆறல்பீறலாய் இருப்பது ஒரு தேவதையைப்பற்றி, அரணுக்குள்ளே இருப்பாரைப் போலே திண்ணியனாய் இருந்தானாயிற்று. புருடோத்தமனைப் பற்றி இருப்பாரைப் போலே, காபாலிகந்தரைப் பற்றி நிர்ப்பரனாய் இருந்தான். [4] சர்வேஸ்வரனைப் பற்றி 'எதினின்றும் அஞ்சுகிறான் அல்லன்' என்று இருப்பாரைப் போன்று எண்ணினான்.

---

1. சரிதல் என்பதற்கு, முரிந்து போதல் என்பதும், முதுகு காட்டுதல் என்பதும் இரு பொருள். இவ்விரு பொருளையும் முறையே அருளிச்செய்கிறார், 'அவனும்' என்று தொடங்கியும், 'நின்றவிடத்தே' என்று தொடங்கியும்.

2. தலையை அறுக்காமல் திண்தோளைக் கொண்டமைக்கு மூன்று காரணம் அருளிச்செய்கிறார்: முதற்காரணம், 'கையில் ஆயுதம்' என்று தொடங்குவது. முதுகு காட்டிய போதே கையில் ஆயுதம் போகட்டமையும் தானே போதரும். இங்கே,

'வீறின்மையின் விலங்காமென மதவேழமும் எறியான்;
ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சில்என்று எறியான்;
மாறன்மையின் மறம்வாடும்என்று இளையாரையும் எறியான்;
ஆறன்மையின் முதியாரையும் எறியான்அயில் உழவன்.'

என்ற சீவக சிந்தாமணிச் செய்யுள் ஒருபுடை ஒப்பு நோக்கலாகும்.

3. 'திண்தோள்' என்ற இடத்திலேயுள்ள திண்மையை விளக்குகிறார், 'தன்னோடு' என்று தொடங்கி. பலி ஏற்பவனாதலாலும் கந்தையைத் தரித்திருப்பவனாதலாலும் 'ஆறல் பீறல்' என்கிறார். மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'புருடோத்தமனை' என்று தொடங்கி. காபாலிகந்தர் - கபாலத்தைத் தரித்திருப்பவனும் கந்தையைத் தரித்திருப்பவனுமான சிவன்.

4. மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'சர்வேஸ்வரனை' என்று தொடங்கி.

'நபிபேதி குதஸ்சந:' என்பது, தைத். உப. ஆநந்.

'இடராக வந்தென்னைப் புன்சிறு தெய்வங்கள் என்செயுமான்
இடராக வன்பிணி மாநாக மென்செயும் யான்வெருவி
இடராக வன்னி புனல்இடி கோள்மற்று மென்செயும்வில்
இடராக வன்அரங் கன்திருத் தாள்என் இதயத்ததே.'

என்பது, திருவரங்கத்தந்தாதி, 39.

திண்தோள் கொண்ட-[1] 'உஷை தந்தை அற்றவள் ஆக ஒண்ணாது' என்று கரத்தைக் கழித்துவிட்டான். 'கர பாதை அன்றே இவனைக் கண்டார் கால்களில் எல்லாம் விழச் செய்தது' என்று அவனுக்குள்ள கரத்தைக் கழித்து, இறையிலியாக்கிவிட்டான். [2] 'எந்தக் கைகள் அந்தப் பகவானைப் பூஜிக்கின்றனவோ அவைதாம் கைகள்' என்றும். [3] 'சர்வேச்வரனை வணங்கும்பொருட்டு விசித்திரமான இந்தச் சரீரமானது படைக்கப்பட்டது' என்றும் விதித்துக் கிடக்கச் செய்தேயும், ஆயிரங்கைகளையும் கொண்டு சம்பந்தம் இல்லாத விஷயத்திலே காரியங்கொள்ளுகையாலே அவற்றையே கழித்து விட்டான். [4] அந்தத் தேவதைதானே வந்து, 'வரம் தந்த நீயே அதனைக் கழிக்கவோ? நீ இவனைக் கொல்லில் என் காலிலே குனிவார் இல்லை இனி' என்று பல்லைக் காட்டுகையாலே விட்டான்.

[5] 'கிருஷ்ண கிருஷ்ண மஹா பாஹோ'- 'தேவரை உள்ளபடி அறியாதே அம்பை விட்டுக்கொண்டு நின்ற நிலையைக் கண்டு

---

1. தலையை அறுக்காததற்கு இரண்டாவது காரணத்தை அருளிச்செய்கிறார், 'உஷை' என்று தொடங்கி. கரம் - கையும், கப்பமும். இறையிலியாக்கி - இறையிறுப்பு இல்லாதவனாக்கி என்பதும், வேறு தெய்வம் இல்லாதவனாக்கி என்பதும் பொருள்.

2. 'மற்றை அவயவங்கள் இருக்கக் கைகளைக் கழிப்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'எந்தக் கைகள்' என்று தொடங்கி.

> 'ஸா ஜிஹ்வா யாஹரிம் ஸ்தௌதி தச்சித்தம் யத்ததர்பிதம்
> தாவேவ ச கரௌ ச்லாக்யௌ யௌ தத் பூஜா கரௌ கரௌ'

என்பது, ஸ்ரீவிஷ்ணு தர்மம். இங்கே, சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையில் வருகின்ற 'மூவுலகும்', 'மடந்தாழும்', 'பெரியவனை' என்ற தாழிசைகளை ஒப்பு நோக்கல் தகும்.

3. 'விசித்ரா தேஹஸம்பத்தி: ஈச்வராய நிவேதிதும்' என்பது, ஸ்ரீவிஷ்ணு தர்மம்.

4. தலையை அறுக்காததற்கு மூன்றாவது காரணத்தை அருளிச்செய்கிறார், 'அந்தத் தேவதை' என்று தொடங்கி.

5. அப்படிக் காட்டித் துதித்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'க்ருஷ்ண' என்று தொடங்கி.

> 'க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம்
> பரேசம் பரமாத்மாநம் அநாதி நிதனம் பரம்'

என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 33 : 41. 'மஹாபாஹோ, த்வாம் புருஷோத்தமம், ஜாநே' என்று 'தோள்வலி கண்ட பின்பு உன்னைச் சர்வேச்வரன் என்று அறிந்தேன்' என்னும் சிவனுடைய மறுதலை எண்ணத்தால் தோன்றும் பாவத்தை அருளிச்செய்கிறார், 'தேவரை' என்று தொடங்கி.

'இதர ஸஜாதீயனே!' என்று இருந்தேன்; 'கழுத்திலே கயிறு இட்ட பின்புகாண் நான் பூனை என்று அறிந்தேன்' என்பாரைப் போலே. 'இதனால் என் சொல்லியவாறே?' எனின், ஈஸ்வரனை ஒழிந்தார் அடங்கலும், தாங்கள் உளரான போது காப்பாற்றுகின்றவர்களாகச் செருக்குக்கொண்டு, ஆபத்து வந்தவாறே இவர்களைக் காட்டிக் கொடுத்துத் தங்கள் தங்களைக்கொண்டு தப்புவர்கள்; 'எல்லா நிலைகளிலும் தன்னை அழிய மாறியாயினும் அடியார்களைக் காப்பாற்றுவான் சர்வேஸ்வரன் ஆகையாலே, அடையத் தக்கவன் இவனே; அல்லாதார் பற்றத்தக்கவர் அல்லர்,' என்னும் இடம் சொல்லியபடி. (8)

704

அன்றுமண் நீர்எரி கால்விண் மலைமுதல்
அன்று சுடர்இரண் டும்பிற வும்பின்னும்
அன்று மழைஉயிர் தேவும்மற் றும்அப்பன்
அன்று முதல்உல கம்செய் ததுமே.

பொ—ரை: அப்பன் உலகத்தைப் படைத்ததும் ஆதியான சிருஷ்டி காலத்திலே; பூமியும் தண்ணீரும் நெருப்பும் காற்றும் ஆகாசமும் மலை முதலான பொருள்களும் ஆகிற இவற்றைப் படைத்ததும் அக்காலத்திலே; சூரிய சந்திரர்களையும், பிற பொருள்களையும் படைத்ததும் அக்காலத்திலே; அதற்கு மேலே, மழையையும் உயிர்களையும் தெய்வங்களையும் பிற பொருள்களையும் படைத்ததும் அக்காலத்திலே.

ஈடு: ஒன்பதாம் பாட்டு, [1] படைப்பும் உலகத்தாரால் செய்யப்படுவது அன்றிக்கே வேறுபட்டது ஒரு செயல் ஆகையாலே, அதனையும் வெற்றிச்செயலாக அருளிச்செய்கிறாராகவுமாம். அப்பன் முதல் உலகம் செய்ததும் அன்று - மஹோபகாரகன் முதலிலே உலகத்தை உண்டாக்கிற்றும் ஆதியான படைப்புக் காலத்திலே. அதற்குக் காரணமாக 'மண் நீர்' என்பது முதலாக அருளிச்செய்கிறார். அன்றிக்கே, முன்னும் பின்னும் கிருஷ்ணனுடைய செயலைப் பற்றி அருளிச்செய்கையாலே, 'வாணனைத் தண்டித்த அன்றுகண்டீர் உலகத்தை உண்டாக்கினன்' என்று அதனையே

1. இத்திருப்பாசுரத்திலே சிருட்டியை அருளிச்செய்வதற்கு இரண்டு வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார்: முதல் அவதாரிகை, இத்திருவாய்மொழியின் முன்னுரையிற்கூறிய 'பத்தும் பத்தாகக் காட்டிக் கொடுக்க' என்றதற்குச் சேரும்.

பேசுகிறார் என்னுதல். [1] பயிர் செய்கையே அன்றே வேண்டுவது? பயிர் அழியாமல் நோக்கின அன்றே அன்றோ பயிர் செய்ததாவது?

அன்று மண் நீர் எரி கால் விண் மலை முதல் - [2] காரணங்களோடு காரியங்களோடு வாசி அற உண்டாக்கினபடி. சுடர் இரண்டு - சந்திர சூரியர்களை உண்டாக்கினபடி. பிறவும் - மற்றும் உண்டான நக்ஷத்திரங்கள் முதலான ஒளிப்பொருள்களும். பின்னும் அன்று மழை உயிர் தேவும் மற்றும் - அதற்கு மேலே மழை பெய்யக் கடவதான மேகம், மழையாலே உயிர் வாழக்கூடிய ஆத்துமாக்கள், மழையைத் தோற்றுவிக்கின்றவர்களான தேவர்கள், மற்றும் உண்டான திரியக்குத் தாவரங்கள் முதலானவைகள். அப்பன் - எல்லாப் பொருள்களையும் தோற்றுவித்தவன். அன்று முதல் உலகம் செய்ததுமே - [3] 'தனித்தனியே சொல்லவேணுமோ? வாணனைத் தண்டித்து ஈர்அரசு அறுத்த அன்றுகண்டீர் இவற்றை எல்லாம் படைத்தது?' என்கிறார் என்னுதல். அன்றிக்கே, 'பெயர் வடிவங்களை இழத்து, [4] 'சத் ஒன்றே' இருந்தது என்கிற நிலையிலே [5] 'பல பொருள்கள் ஆகக் கடவேன்' என்று நினைத்த அன்று முதல்' என்றுமாம். (9)

705

*மேய்நிரை கீழ்புக மாபுர ளச்சுனை*
*வாய்நிறை நீர்பிளி றிச்சொரி யஇன*
*ஆநிரை பாடிஅங் கேஒடுங்க அப்பன்*
*தீமழை காத்துக்குன் றம்எடுத் தானே.*

---

1. 'வாணனைத் தண்டித்த அன்றோ உலகம் உண்டாயிற்று?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பயிர் செய்கை' என்று தொடங்கி. இங்கே,

> 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
> களைகட் டதனொடு நேர்.'

என்ற திருக்குறள் நினைவு கூர்தல் தகும்.

2. ஐம்பெரும்பூதங்களும் காரணமாய், மலை முதலானவை காரியங்களாகையாலே அருளிச்செய்கிறார், 'காரணங்களோடு' என்று தொடங்கி.

3. ஐம்பூதங்கள் முதலானவற்றை முன்னே அருளிச்செய்து, உலக சிருட்டியைப் பின்னே அருளிச்செய்ததற்கு, பாவம் அருளிச்செய்கிறார் 'தனித்தனியே' என்று தொடங்கி.

4. 'ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவ அத்விதீயம்' என்பது, சாந்தோக்யம். 6. 2 : 1.

5. 'பஹுஸ்யாம்' என்பது. சாந்தோ. 6. 2 : 3.

**பொ-ரை :** மேய்கின்ற பசுக்கூட்டங்கள் கீழே புகும்படியாகவும், மேலேயுள்ள விலங்குகள் புரண்டு விழும்படியாகவும், சுனைகளின் வாயளவும் நிறைந்திருக்கின்ற தண்ணீரானது ஒலித்துக்கொண்டு சொரியும்படியாகவும், பசுத்திரளும் ஆயர்பாடியும் அங்கே ஒடுங்கும் படியாகவும், என்னப்பன் கொடிய மழையினின்றும் பசுக்களையும் ஆயர்களையும் பாதுகாப்பதற்காகக் கோவர்த்தனம் என்னும் மலையைக் குடையாக எடுத்தான்.

**வி-கு :** 'புக, புரள, சொரிய, ஒடுங்க, குன்றம் எடுத்தான்' என்க. பாடி - ஆயர் பாடி.

**ஈடு :** பத்தாம் பாட்டு. [1]கோவர்த்தனத்தைக் குடையாகப் பிடித்துப் பாதுகாத்த செயலை அருளிச்செய்கிறார்.

மேய் நிரை கீழ் புக - [2]மேய்கிற பசுக்கள் புல்லும் உமிழாதே அசையிட்டுக்கொண்டு கீழே புகுர. மா புரள - மலையை எடுத்து மறிக்கையாலே அங்கு வாழ்கின்ற மிருகங்கள் எல்லாம் புரண்டு விழ. சுனை வாய் நிறை நீர் பிளிறிச் சொரிய-சுனையிடத்து நிறைந்து நிற்கிற நீரானது, நிறைகுடத்தைக் கவிழப் பிடித்தாற்போலே ஒலித்துக்கொண்டு சொரிய. [3]ஒரு மழை காக்கப் புக்கு அங்கே பல மழையை உண்டாக்கினபடி. [4]இன ஆநிரை பாடி அங்கே ஒடுங்க - பசுத்திரளும் திருவாய்ப்பாடியும் அங்கே ஒடுங்கவும். அப்பன்-ஆபத்திற்குத் துணைவனான உபகாரகன். தீ மழை காத்து- [5]கேட்டினை விளைக்க வந்த மழையாகையாலே 'தீ மழை' என்கிறார். [6]ஆயர்களும் பசுக்களும் அன்றிக்கே அன்று தாமே அன்றோ நோவு பட்டார்? குன்றம் எடுத்தானே - [7]'மலையை எடுத்துக் காத்த

---

1. 'தீ மழை காத்துக் குன்றம் எடுத்தான்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'மேய் நிரை' என்றதனை நிகழ்கால வினைத்தொகையாகக் கொண்டு பொருள் அருளிச்செய்கிறார், 'மேய்கிற' என்று தொடங்கி.

3. ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'ஒரு மழை' என்று தொடங்கி.

4. 'மேய் நிரை' என்றது, காட்டில் வசிக்கும் பசுக்களைச் சொல்லுகிறது. 'இன ஆநிரை' என்றது, ஊரில் இருக்கும் பசுக்களைச் சொல்லுகிறது.

5. 'மழை நல்லது அன்றோ? 'தீமழை' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கேட்டினை' என்று தொடங்கி.

6. பொதுவிலே, 'காத்து' எனக் கூறியதற்குக் கருத்து அருளிச் செய்கிறார், 'ஆயர்களும்' என்று தொடங்கி.

7. 'அப்பன்' என்றதனை நோக்கிக் கருத்து அருளிச்செய்கிறார், 'மலையை' என்று தொடங்கி.

மஹோபகாரகன்' என்கிருர். [1]'பசியினுல் உண்டான கோபம் ஆறுந்தனையும் மழை பெய்து போவானுக்கு' என்று ஏழுநாள் அன்றோ மலையைத் தரித்துக்கொடு நின்று நோக்கிற்று? இராவணன் முதலானோர்கள் ஆனுல் அன்றோ அழியச்செய்யலாவது? அநுகூலனுல் வந்த கேடு ஆகையாலே செய்யலாவது இத்தனையே அன்றோ? 'இதனுல் என் சொல்லியவாறோ?' எனின், அடியவன் தப்பினுலும் தான் பொறுத்துக் காப்பாற்றுவான் என்பதனைத் தெரிவித்தபடி. (10)

706

*குன்றம் எடுத்த பிரான்அடி யாரொடும்*
*ஒன்றி நின்றசட கோபன் உரைசெயல்*
*நன்றி புனைந்தவோர் ஆயிரத் துள்இவை*
*வென்றி தரும்பத்தும் மேவிக்கற் பார்க்கே.*

பொ—ரை: *'மலையை எடுத்த உபகாரகனை கண்ணபிரானுடைய அடியார்களோடும் பொருந்தி நின்ற ஸ்ரீசடகோபராலே அருளிச்செய்யப் பட்ட நன்மை பொருந்திய ஒப்பற்ற ஆயிரம் திருப்பாசுரங்களுள் இவை பத்தும் பொருந்திக் கற்பவர்கட்கு வெற்றியைக் கொடுக்கும்,' என்றபடி.*

வி—கு: *'இவை பத்தும் மேவிக் கற்பார்க்கு வென்றி தரும்' என்க*

ஈடு: முடிவில், [2]'இத்திருவாய்மொழியைக் கற்றவர்கட்கு இது தானே வெற்றியைத் தரும்,' என்கிருர்.

குன்றம் எடுத்த பிரான் அடியாரொடும் ஒன்றி நின்ற சடகோபன் உரை செயல் - [3]கோவர்த்தனத்தை எடுத்துத் தரித்த நீர்மையிலும் அப்போதை அழகிலும் ஈடுபட்டு இருக்குமவர்களோடே கூடிநின்று தாமும் பிரீதராய், பிரீதிக்குப் போக்கு வீடாகச் சொன்ன பாசுர

---

1. *அவனை அழிக்காததற்குக் காரணம் அருளிச்செய்கிருர், 'பசியினுல்' என்று தொடங்கி.*

2. *'வென்றி தரும் பத்தும் மேவிக் கற்பார்க்கே' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, அவதாரிகை அருளிச்செய்கிருர்.*

3. *'குன்றம் எடுத்த பிரான் அடியார்' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிருர், 'கோவர்த்தனத்தை' என்று தொடங்கி. 'பிரான்' என்றதனை நோக்கி, 'நீர்மையிலும்' என்கிருர். 'அப்போதை அழகிலும்' என்றது, மலையை எடுத்துக்கொண்டு திரிபங்கியாய் நின்ற போதை அழகினை.*

மாயிற்று. நன்றி புனைந்து ஓர் ஆயிரம் - [1] சர்வேஶ்வரனுடைய பரத்துவ சௌலப்பியங்களை வகையிட்டுத் தொடுத்த ஆயிரம். [2] **நன்மையாவது,** சம்சாரி சேதனனுக்கு, இவனே சர்வஸ்மாத்பரன் என்றும், சர்வ சுலபன் என்றும், சர்வ சமாஶ்ரயணீயன் என்றும் சொல்லுகை அன்றோ ? [3] அவையே அன்றோ முதல் திருவாய்மொழி தொடங்கி அருளிச்செய்தது ? அன்றிக்கே, [4] 'எம்பெருமானுடைய வெற்றிச் செயல்களைத் தொடுத்துச் சொன்ன இப்பத்தும்' என்னுதல். மேவிக் கற்பார்க்கு வென்றி தரும் - ஆசையோடு கற்பார் யாவர் சிலர், அவர்களுக்கு வெற்றியைப் பண்ணிக் கொடுக்கும். [5] செல்வத்தை விரும்புகிறவனுக்குச் செல்வத்திற்குத் தடையாகவுள்ளன வற்றை வென்று கொடுக்கும் ; கேவலனுக்கு விரோதியைப் போக்கிக் கொடுக்கும் ; பகவானைச் சரணம் அடைந்தவர்களில் உபாசகனுக்கு

---

1. 'நன்றி புனைந்த' என்றதன் பொருள், 'சர்வேஶ்வரனுடைய' என்று தொடங்கும் வாக்கியம்.

2. ''நன்றி' என்பது, பரத்துவம் முதலானவைகளைக் காட்டுமோ?' என்ன, 'நன்மையாவது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். சர்வ சமாஶ்ரயணீயன் - எல்லா ஆத்துமாக்களாலும் அடையப் படுகிறவன்.

3. 'அப்படிச் சொல்லிற்றோ?' என்ன, 'அவையே அன்றோ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. 'நன்று' என்பதனை, 'ஆயிரத்து'க்கு அடைமொழியாக்கிப் பொருள் அருளிச்செய்தார்மேல். 'பத்து'க்கு அடைமொழியாக்கிப் பொருள் அருளிச்செய்கிறார் 'எம்பெருமானுடைய' என்று தொடங்கி. நன்றி - நன்மையும் வெற்றியும்.

5. 'வென்றி தரும்' என்று பொதுவாக இருப்பதனால், எல்லாப் பலன்களையும் கொடுக்கும் என்கிறார், 'செல்வத்தை' என்று தொடங்கி.

'இதுதான் 'குலந்தரும்' என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்'; 'ஐஶ்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக்கொடுக்கும்'; 'கர்ம ஞான பத்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும்'; 'பிரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூப ஞானத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்' என்ற வாக்கியங்கள் இங்கு அநுசந்தேயங்கள். (முமுக்ஷுப்படி. திருமந்திரம். சூ. 18-21.)

ஐம்புலன்களை வெல்லுதல் முதலியவற்றைச் செய்து கொடுக்கும்; பிரபந்நனுக்குக் கைங்கரிய விரோதிகளை வென்று கொடுக்கும். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

ஆழிவண்ணன் தன்விசய மானவைமுற் றுங்காட்டி
வாழிதனால் என்று மகிழ்ந்துநிற்க—ஊழிலவை
தன்னைஇன்று போற்கண்டு தானுரைத்த மாறன்சொல்
பன்னுவரே நல்லதுகற் பார். (64)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

# ஐந்தாந்திருவாய்மொழி—‘கற்பார்’

## முன்னுரை

ஈடு: [1]மேல் திருவாய்மொழியிலே, எம்பெருமானுடைய வெற்றிச் செயல்களை அனுபவித்தார்; அவைதாம் அடியார்களின் பொருட்டே அன்றோ இருப்பன? ‘அவன், தன்னை இவர்களுக்கு ஆக்கி வைக்க, இவர்கள் புறம்பு உண்டான விஷயங்களிலே வேறு நோக்குள்ளவர்கள் ஆவதே!’ என்று ஆச்சரியப்படுகிறார். [2]‘யஸ்ய அஸ்மி - எவனுக்கு அடியவனாகிறேன்?’ என்கிறபடியே, யாவன் ஒருவனுடைய சத்தையே பிடித்து அவனுக்காய் இருக்கும்? அப்படி இருக்கிறவன் தான் [3]பிறந்தது தொடங்கி இவனுக்கு ஆக்கி வைக்கிறான் அன்றோ? பாதுகாப்பதற்கே உரியனவான பிறவிகளிலே வந்து பிறந்த படியையும், தன் சொரூபம் ரூபம் குணம் முதலானவை களையும் பிறர்க்கு ஆக்கி வைக்கிறபடியையும், அதற்குக் காரண மான கிருபையைத் தனக்கு வடிவாகவுடையனாய் இருக்கிறபடியை யும், கிருபையின் காரியமான செயல்களையும் நினைத்து, முற்றத்திலே பொற்குவியல் புதைந்து கிடக்க, அதனை அறியாதே மேலே சஞ்சரித்துப் புறங்கால் வீங்குவாரைப் போலே இச்செல்வம் தங் களுக்காக இருக்கச் சம்சாரிகள் புறம்பே போது போக்குவதே!’ என்று ஆச்சரியப்படுகிறார்.

---

1. *மேல் திருவாய்மொழிக்கும் இந்தத் திருவாய்மொழிக்கும் சுருக்க மாக இயைபு அருளிச்செய்கிறார். இத்திருவாய்மொழியில் வருகிற ‘கற்பார் இராம பிரானை அல்லால் மற்றும் கற்பரோ?’, ‘நாரணற்கு ஆளன்றி ஆவரோ?’, ‘கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் மேட்பரோ?’ என்பன போன்றவைகளைக் கடாட்சித்து, ‘இவர்கள்’ என்று தொடங்கி அருளிச் செய்கிறார்.*

2. *‘தன்னை இவர்களுக்கு ஆக்கி வைக்க’ என்றால், ‘அவனுடைய உண்மைத்தன்மை யாது?’ என்ற சங்கையிலே மேற்கூறிய இயைபினை விரித்து அருளிச்செய்கிறார், ‘யஸ்ய’ என்று தொடங்கி. சத்தை - இருப்பு.*

3. *இத்திருவாய்மொழியில் வருகின்ற ‘நாட்டிற்பிறந்து’ என்பது போன்றவைகளைக் கடாட்சித்து ‘பாதுகாப்பதற்கே’ என்று தொடங்கியும், ‘பிரான்’ என்றதனைத் திருவுள்ளம் பற்றித் ‘தன் சொரூபம்’ என்று தொடங்கியும், ‘தன்மையறிபவர்’ என்றதனைத் திருவுள்ளம் பற்றி ‘அதற்குக் காரணமான’ என்று தொடங்கியும், ‘புற்பா முதலா’ என்பது போன்றவைகளைத் திருவுள்ளம் பற்றி, ‘கிருபையின் காரியமான’ என்று தொடங்கியும் அருளிச்செய்கிறார்.*

[1] **ஆழ்வான்** ஒருகால், இத்திருவாய்மொழி பத்துப் பாசுரங்களையும் இராமாவதார விஷயமாக்கி நிர்வஹித்தாராம். [2] அதற்குக் காரணம்: ஆயிரத்தில் ஒன்றும் கடலில் குளப்படியும் போலே, பெருமாளுடைய குணத்தில் ஒரு பகுதியே அன்றோ? அல்லாத அவதாரங்கள் எல்லாவற்றிலும் உள்ளது ஆதலின். [3] 'பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்ற பிரான்' என்றும், 'மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள்' என்றும், மேலே சொல்லிப் போந்த இராமாவதாரத்தினுடைய செயலை அநுசந்தித்து, அவ்வழியாலே அன்றோ அவதாரங்களை அநுசந்திக்கிறது? மற்றைய அவதாரங்களிலே ஈடுபட்டவர்களும் இராமாவதாரம் பிராசங்கிகமாகச் சொல்ல வேண்டி வந்தால், [4] 'மனத்துக்கு இனியானை' என்றே அன்றோ சொல்லுவது? [5] '**பட்டர்** இராமாவதாரத்தில் போரப் பக்ஷபதித்து இருப்பர்' என்று, அவர் அருளிச்செய்யுமது கேட்கைக்காகச் **சிறியாத்தான்** ஒருநாள் 'பெருமாளுக்கு எல்லா நன்மைகளும் உளவாகிலும், கழுத்திலே ஓலை கட்டித் 'தூது போ' என்ன, தூது சென்ற

---

1. மேலே எல்லா அவதார விஷயமாகவும் அருளிச்செய்தார்; ஸ்ரீராமாவதார விஷயமாக மட்டும் இங்கு அருளிச்செய்கிறார், 'ஆழ்வான்' என்று தொடங்கி. ஆழ்வான்-கூரத்தாழ்வார்.

2. 'பல அவதாரங்களையும் சொல்லாநிற்க, ஸ்ரீராமாவதார விஷயம் என்பது யாங்ஙனம்?' என்ன, 'அதற்குக் காரணம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'பெருமாளுடைய குணத்தில் ஒரு பகுதியே அன்றோ அல்லாத அவதாரங்கள்!' என்கையாலே, அவை அப்ரதானங்களாய் இது பிரதானமாயிருக்கையாலே, ஸ்ரீராமபிரானுடைய விஷயமாக நிர்வஹித்தார் என்றபடி. 'பெருமாள்' என்றது, சக்கரவர்த்தி திருமகனை; இது, வைணவப் பெருமக்கள் வழங்கும் மரபு.

3. அத்துணைமாத்திரமே அன்று; மேல் திருவாய்மொழியில் சொல்லப்பட்டதாகையாலும், இத்திருவாய்மொழியின் முதல் திருப்பாசுரம் இராமாவதார விஷயமாகையாலும் இத்திருவாய்மொழி இராமவதார விஷயம் என்கிறார், 'பேரெயில்' என்று தொடங்கி.

4. 'இங்ஙனம் கூறினால் பக்ஷபாதம் வாராதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'மற்றைய அவதாரங்களிலே' என்று தொடங்கி. 'ஈடுபட்டவர்கள்' என்றது, ஸ்ரீஆண்டாளை. பிராசங்கிகம்-இடைப்பிறவரல். 'மனத்துக்கு இனியானை' என்றது, திருப்பாவை, 12. 'சொல்லுவது' என்றது, 'சொல்லுவது ஆகையாலே பரமார்த்தம்' என்றபடி.

5. 'பெருமாளுடைய குணத்திலே ஒரு பகுதியே அன்றோ அல்லாத அவதாரங்கள்?' என்கைக்கு, 'கழுத்திலே ஓலை கட்டித் தூது போன கிருஷ்ணன் நீர்மை பெருமாளுக்கு இல்லையே?' என்கிற சங்கையை ஆப்தர்களுடைய வினா மூலமாக அநுவதித்து, ஆப்த சம்வாதத்தாலே பரிஹரிக்கிறார் 'பட்டர்' என்று தொடங்கி.

கிருஷ்ணன் நீர்மை இல்லையே ?' என்ன, 'அது அங்ஙன் அன்று காண்; கழுத்திலே ஓலை கட்டித் 'தூது போ' என்பார் இல்லாமையாலே தவிர்ந்தார் அத்தனைகாண்,' என்று அருளிச்செய்தார். [1] நாடுடை மன்னர் வேறே சிலர் இலரே. முடி சூடிய க்ஷத்திரிய குலத்திலே பிறக்கையாலே போக விடுவாரைப் பெற்றது இல்லை. முடியைத் தவிர்ந்து சடையைப் புனைந்து நாட்டினை விட்டுக் காடு ஏறப் போனவர், தூது போகாமை இல்லை அன்றோ ?

[2] 'காடு ஏறப் போகவுமாம்; துரியோதனன் கோட்டியிலே போகை அன்றோ அரிது? [3] 'மதுசூதனரே! எந்த இடத்தில் நல்ல வார்த்தையும் கெட்ட வார்த்தையும் வாசி இல்லாமல் ஆகின்றதோ, அங்குத் தெரிந்தவன் ஒன்றும் பேசக்கூடாது,' என்பதே அன்றோ பிரமாணம்? 'பாண்டவர்கள் கிடக்கைக்கு ஐந்து ஊர் தரவேணும்' என்று இவன் சொன்ன வார்த்தைக்கும், 'பந்துக்களுக்கு ஒரு கோற் குத்தும் கொடேன்' என்று அவன் சொன்ன வார்த்தைக்கும் வாசி அறியாத கோட்டியிலே அன்றோ போய்ப் புக்கது? 'இராமாவதாரத்தில் தூது சென்ற திருவடியுடைய ஏற்றம் தன் திருவுள்ளத்திலே பட்டுக்கிடந்தே அன்றோ, [4] அவனே பின்னோர் தூது ஆதி மன்னர்க்கு ஆகிப் பெரு நிலத்தார் இன்னார் தூதன் என நின்றது?

---

1. 'அப்படி ஏவுவார் இலரோ?' என்ன, 'நாடுடை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதனை விவரணம் செய்கிறார், 'முடி சூடிய' என்று தொடங்கி.

2. 'காடு ஏறப் போகவுமாம்' என்று தொடங்கும் வாக்கியம், சிறியாத்தானுடைய சங்கா வாக்கியம். 'இராமாவதாரத்தில்' என்று தொடங்கி அருளிச்செய்யும் வாக்கியம், சிறியாத்தானுடைய சங்கைக்குப் பட்டர் அருளிச்செய்த பரிஹார வாக்கியம்.

3. 'அப்படித் துரியோதனன் சபை கொடியதோ?' எனின், அதன் கொடுமையை அருளிச்செய்கிறார், 'மதுசூதனரே' என்று தொடங்கி.

'யத்ர ஸூக்தம் துருக்தம் வாஸமம் ஸ்யாத் மதுசூதந
ந தத்ர ப்ரலபேத் ப்ராஜ்ஞ: பதிரேஷ்விவ நாயக:'

என்பது, பாரதம், உத்யோகபர். 95. இது, கிருஷ்ணனைப் பார்த்து விதுராழ்வான் கூறியது. இச்சுலோகத்தின் பொருளை விளக்குகிறார் 'பாண்டவர்கள்' என்று தொடங்கி. இங்கே, வில்லிபாரதம், கிருட்டிணன் தூதுச்சருக்கம், 142, 143-ஆம் செய்யுள்களைக் காணல் தகும்.

4. 'அவனே' என்று தொடங்குவது, பெரியதிருமொழி, 2. 2 : 3.

707

[1] கற்பார் இராம பிரானைஅல் லால்மற்றும் கற்பரோ?
புற்பா முதலாப் புல்லெறும் பாதிஒன்று இன்றியே
நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக்கு உய்த்தனன் நான்முக ளுர்பெற்ற நாட்டுளே.

**பொ–ரை:** 'நல்ல தேசமான அயோத்தியில் வாழ்கின்ற பரந்த புல் முதலாக, சிறிய எறும்பு முதலாக உள்ள சராசரங்கள் எல்லாவற்றையும் அவற்றின்பக்கல் ஒரு சாதனமும் இல்லாமல் இருந்தும், பிரமனாலே படைக்கப்பட்ட இந்த உலகத்திலே அவை நல்ல தன்மையையுடையனவாம்படி செய்தான்; ஆதலால், கற்கின்றவர்கள் ஸ்ரீராம பிரானுடைய கீர்த்தியை அல்லாமல் வேறு சில கீர்த்திகளையும் கற்பார்களோ?' என்றபடி.

**வி–கு:** 'பா புல் முதலாப் புல் எறும்பு ஆதியா நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் ஒன்று இன்றியே நற்பாலுக்கு உய்த்தனன்,' என்று கூட்டுக. 'ஒன்று' என்றது, அவனை அடைதற்கு உபாயமாகக் கூறப்பட்ட சாதனங்களில் ஒன்றும் என்றபடி.

இத்திருவாய்மொழி கலி நிலைத்துறை.

**ஈடு:** முதற்பாட்டு, [2] 'பிரியத்தையும் ஹிதத்தையும் நினைத்து ஒன்றைக்கற்பார், திருவயோத்தியில் உண்டான எல்லாப்பொருள்களையும் காரணம் ஒன்றும் இல்லாமலே தன் சேர்க்கையே சுகமாகவும் தன் பிரிவே துக்கமாகவுமுடையராம்படி செய்தருளின உபகார சீலனை சக்கரவர்த்தி திருமகனை அல்லது கற்பரோ?' என்கிருர்.

கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ - [3] 'இவ்விஷயத்தை ஒழியப் புறம்பு கற்குமது கல்விக்கு உடல் அன்று,'

---

1. 'மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவிஎன்ன செவியே!
திருமால்சீர் கேளாத செவிஎன்ன செவியே!'

என்ற சிலப்பதிகாரம் (ஆய்ச்சியர் குரவை) இங்கு நினைவு கூர்க.

2. 'உய்த்தனன், இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ' என்ற பதங்களைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

3. 'கற்பரோ' என்ற ஓகாரத்தின் பொருளை அருளிச்செய்கிருர் 'இவ்விஷயத்தை' என்று தொடங்கி. உடல்-காரணம்.

என்று இருக்கிறார். [1] 'அந்த ஞானந்தான் ஞானம் என்று சொல்லத் தக்கது; ஆகையால், மேற்கூறிய ஞானத்திற்கு வேறானது அஞ்ஞானம் என்று சொல்லப்பட்டது' என்றான் அன்றோ? பகவானை அடைவதற்கு உடலான ஞானம் ஞானமாகிறது; அல்லாதது அஞ்ஞானம் என்னக் கடவது அன்றோ? கற்பார் - [2] ஒருவன் ஒன்றைக் கற்பது 'அப்போதைக்கு இனியது' என்றுதல், 'பின்பு ஒரு நன்மையை விளைக்கும்' என்றுதல் ஆயிற்று; '**இராமபிரான்**' என்கையாலே 'அவை இரண்டும் இவ்விஷயத்தை ஒழிய இல்லை' என்கிறது. 'யாங்ஙனம்?' எனின், '**இராமன்**' என்கிற இதனால், புறம்பு போகாமல் காற்கட்டும்படியான அழகைச் சொல்லுகிறது; [3] '**பிரான்**' என்கிற இதனால், அவ்வழகாலே சேதநரை அநந்யார்ஹமாக்கும்படியும், நிலாத் தென்றல் சந்தனம்

---

1. 'உடல் அன்று' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அந்த ஞானந்தான்' என்று தொடங்கி.

'ஸம்ஜ்ஞாயதே யேந தத் அஸ்ததோஷம்
சுத்தம் பரம் நிர்மலம் ஏகரூபம்
ஸம்த்ருஸ்யதே வாப்யதிகம்யதே வா
**தத்ஜ்ஞாநம் அஜ்ஞாநம்அத: அந்யத் உக்தம்'**

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 6. 5 : 84. இதனை, 'தத் ப்ரஹ்ம யேந ஜ்ஞாநேந ஸம்ஜ்ஞாயதே ஸம்த்ருஸ்யதே அதிகம்யதே தததேவ ஜ்ஞாநம் அதோந்யத் அஜ்ஞாநம் உக்தம்' என்று சொற்களைக் கூட்டிப் பொருள் காண்க.

2. ''கற்பார்' என்னும் சொல்,' பிரியத்தையும் ஹிதத்தையும் நினைக்கின்றவர்கள்' என்ற பொருளைக் காட்டுமோ?' என்ன, 'பொருள் ஆற்றலால் காட்டும்,' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒருவன்' என்று தொடங்கி.

3. 'பிரான்' என்பதற்கு, ஸ்வாமித்துவம் உபகாரகத்துவம் என்னும் இரண்டு பொருளும் உண்டு ஆகையாலே, அவ்விருபொருள்களையும் காட்டத் திருவுள்ளம் பற்றி, அவ்வழகாலே சேதனர்களைத் தோற்பிக்கும் படியும், அவ்வழகை அடியார்களை அனுபவிப்பிக்கும் உபகாரகத்துவமும் சொல்லுகிறது என்கிறார் 'பிரான் என்கிற இதனால்' என்று தொடங்கி. அநந்யார்ஹமாக்கல்-தனக்கே உரியவர் ஆக்குதல்.

'பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்?
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்?

தண்ணீர் போலே, தன்னுடைய ஆனந்திக்கச் செய்கிற தன்மையும் பிறர்க்கேயாயிருக்கும் உபகாரமாம் தன்மையும் சொல்லுகிறது. [1]ப்ரிய வாதீச - பெருமாள் ஒன்றை அருளிச்செய்தால் அது செவிப் படாது ஒழியில் செய்யலாவது இல்லை; செவிப்படில் இனியதாய் அன்றி இராது. 'யார்க்கு?' என்றால், பூதா நாம் - சத்தையுடையன வான எல்லாப் பொருள்களுக்கும்: அசத்துக்கு வேறுபட்ட தன்மை மாத்திரமே வேண்டுவது. 'நன்று; அப்போது பிரியமாய்ப் பயன் கொடுக்குமிடத்தில் வேறு ஒரு பலனைக் கொடுக்குமோ?' என்னில், ஸத்ய வாதீச - அருளிச்செய்யுமதுதான் ஆத்மாக்களுக்கு ஹிதமாய் அன்றி இராது என்கிறது. [2]ஒரு வார்த்தையே இரண்டும் ஆகா நின்றால் அல்லாதனவற்றிற்குச் சொல்ல வேண்டா அன்றோ?

---

*தேருங்கால் நும்மகள் நுமக்கும்ஆங் கனையளே;*
*ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை*
*யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்?*
*சூழுங்கால் நும்மகள் நுமக்கும்ஆங் கனையளே.'*

என்பது, **கலித்தொகை**, 8.

1. 'பிரியம், ஹிதம்' என்னும் இரண்டும் பெருமாளே என்பதற்குப் பிரமாணமும், பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'ப்ரியவாதீச' என்று தொடங்கி.

'ப்ரியவாதீச பூதாநாம் ஸத்யவாதீச ராகவ:
பஹு ச்ருதாநாம் வ்ருத்தாநாம் ப்ராஹ்மணாநாம் உபாஸிதா;

என்பது, **ஸ்ரீராமா.** அயோத். 2 : 32.

'எதிர்வரு மவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா,
'எதுவினை இடரிலை இனிதுநும் மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொல்?' எனவே.'

என்பது, **கம்பராமாயணம்**, பால.

2. 'மேற்கூறிய சுலோகத்தில், ஸ்ரீராமபிரானுடைய வார்த்தைகள் அல்லவோ பிரியத்தையும் ஹிதத்தையும் கொடுக்கும் என்று சொல்லப் பட்டிருக்கின்றன! ஸ்ரீராமபிரானுக்குச் சொல்லவில்லையே!' எனின், 'அது கிம்புநர் நியாய சித்தம்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒரு வார்த்தையே' என்று தொடங்கி. 'அல்லாதனவற்றிற்கு' என்றது, 'சொரூபம் உருவம் குணம் முதலானவற்றிற்கு' என்றபடி.

[1]'ராமோ ராமோ ராம இதி' என்னும்படியன்றோ நாட்டை அகப்படுத்தியிட்டு வைக்கும்படி? [2]அவன் ஸத்தை இவனுடைய ஸத்தைக்குக் காரணம்; பின்பு உண்டானவை இவனுடைய போகத்துக்குக் கண்டவை. [3]ஆக, 'பிரியமும் ஹிதமும் ஆகிய இரண்டையும் வேண்டியிருப்பார் அவனை ஒழியக் கற்பரோ?' என்றபடி. [4]'நேரான ஐஸ்வரியத்தோடுகூட நேரான தர்மமும் ஸ்ரீராமபிரானிடத்தினின்றும் உண்டாயிற்று' என்பது ஸ்ரீராமாயணம். என்றது, [5]'நேரே சாதனம் சாத்தியம் ஆகிய இரண்டும் இந்த இராமனே என்கிறது அன்றோ?' என்றபடி. கற்பார் இராம பிரானை - [6]கற்பார் என்கை அன்று இவர்க்கு உத்தேசியம்; 'மற்றையவற்றைக் கற்கலா

---

1. 'அவ்வழகாலே சேதநரை அநந்யார்ஹமாக்கும்படியும்' என்று மேலே அருளிச்செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'ராமோ' என்று தொடங்கி.

'ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா:
ராமபூதம் ஜகத்அபூத் ராமே ராஜ்யம் ப்ரஸாஸதி'

என்பது, ஸ்ரீராமா. யுத். 131 : 97.

2. 'ராமோ ராமோ' என்று பிரியமாந்தன்மை ஒழிய, ஹிதமாந்தன்மை மேற்சுலோகத்தில் சொல்லப்படவில்லையே?' என்ன, 'அவன் ஸத்தை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, 'ஹிதமாந் தன்மைக்கு அவன் சத்தையே போரும்; பிரியமாந்தன்மையே சொல்லவேண்டுவது' என்றபடி. சத்தை-இருப்பு. 'பின்பு உண்டானவை' என்றது, குணம் விக்கிரகம் சௌந்தரியம் முதலானவைகளை.

3. கூறிய பொருள்களை முடிக்கிறார், 'ஆக, பிரியமும்' என்று தொடங்கி.

4. 'பிரியம், ஹிதம் என்னும் இரண்டும் அவ்விராமபிரானே' என்றதனால் பலித்த பொருள், உபாய உபேயங்கள் இரண்டும் அவ்விராமபிரானேயாவர் என்று கூறத் திருவுள்ளம் பற்றி, அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நேரான' என்று தொடங்கி.

'ராம: ஸத்புருஷோ லோகே ஸத்ய தர்ம பராயண:
ஸாக்ஷாத் ராமாத் விநிர்வ்ருத்த: தர்மஸ்சாபி ஸ்ரியாஸஹ'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 2 : 29. இச்சுலோகத்தின் பின் அடியில் 'ஸாக்ஷாத் ஸ்ரியாஸ: ஸாக்ஷாத் தர்ம: ராமாத் விநிர்வ்ருத்த:' என்று சொற்களைக் கூட்டிப் பொருள் காணல் வேண்டும். ஸ்ரீ என்றது, சத்தியத்தை; தர்மம் ' என்றது, சாதனத்தை. 'இவை இரண்டும் இவரிடத்தில் உண்டாயின' என்றது, இவர்தாமேயாயிருப்பர் என்றபடி.

5. ஆக, சாக்ஷாத் ஸ்ரீயோடேகூட, சாக்ஷாத் தர்மமானது இராமபிரானிலே உண்டாயிற்று என்பது பொருளாகையாலே, இதனை அருளிச்செய்கிறார், 'நேரே' என்று தொடங்கி.

6. ''கற்பார் இராமபிரானைக் கற்க வேண்டாவோ?' என்னாமல், 'மற்றுங்கற்பரோ' என்கிறது என்?' என்ன, 'கற்பார்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

காது,' என்று விலக்குதலேயாம், [1] ஆசையாலே செய்யப்படுவ தாகில் தானாகவே செல்லும் அன்றோ? ஆகையால், வேறு ஒன்றில் போகாமையே வேண்டுவது. [2] 'மற்றும்' என்றதனால், வேறு தெய் வங்களை வணங்குதல் முதலானவற்றை வேறுபடுத்துகிறார் அல்லர். வணங்கக்கூடிய பொருளிலே கூறு இடுகிறார். [3] வேறு தெய்வங் களாகிற பதரைக் கூட்டிக் கழிக்குமவர் அல்லரே இவர்? ஆதலால், பரத்துவத்தையும் மற்றை அவதாரங்களையும் கழிக்கிறார்.

[4] 'என் எண்ணமானது வேறிடத்தில் போகிறது இல்லை,' என்றாற்போலே, '**மற்றுங் கற்பரோ**' என்கிறார். ஸ்நேஹ: மே பரம: - [5] எழுந்தருளுகிற போது 'என் வழியே போந்தாலோ?' என்ன, 'அவ்வளவு அன்றுகாணும் எனக்குச் சிநேகம்,' என்கிறான். [6] 'என்றன் அளவு அன்றால் யானுடைய அன்பு' என்றும், 'உயிரின்

---

1. 'ஏனையவற்றை விலக்குதல் மாத்திரம் போதியதாமோ? படியுங் கோள் என்ன வேண்டாவோ?' என்ன, 'ஆகையாலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'மற்றும்' என்பதற்கு, 'வேறு தெய்வங்களை' என்று பொருள் அருளிச்செய்தார் மேல். இனி, 'மற்றும்' என்ற சொல், இறைவனுடைய ஐவகை நிலைகளுள், பரத்துவம் முதலான ஏனை நிலைகளையும், இராமா வதாரம் ஒழிந்த மற்றை அவதாரங்களையும் குறிப்பதாகத் திருவுள்ளம் பற்றி வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'மற்றும் என்றதனால்' என்று தொடங்கி.

3. 'ஏன்? 'மற்றும்' என்ற சொல்லால் மற்றைத் தேவர்களையே கூறுகிறார் என்று கொண்டாலோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய் கிறார், 'வேறு தெய்வங்களாகிற' என்று தொடங்கி.

4. அதற்குத் திருஷ்டாந்தமும் திருஷ்டாந்த சுலோகத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'என் எண்ணமானது' என்று தொடங்கி.

'ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:
பக்திர்ச நியதா வீர பாவோ ந அந்யத்ர கச்சதி'

என்பது, ஸ்ரீராமா. உத். 40 : 16. இது திருவடி கூற்று.

5. ஷை சுலோகத்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'எழுந் தருளுகிற போது' என்று தொடங்கி. எழுந்தருளுகிற போது - பரம பதத்துக்கு எழுந்தருளும் போது. 'அவ்வளவு அன்றுகாணும்' என்றது, 'இங்கே இருந்தே உம்முடைய சரித்திரத்தை அனுபவம் செய்யுமது ஒழிய, கூட வரும்படி அன்றுகாணும்' என்றபடி.

'பரம:' என்றதற்கு, 'தன்னைக்காட்டிலும் மேலானது' என்று பொருள் கொண்டு அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'என்றன்' என்று தொடங்கியும், 'உயிரின்' என்று தொடங்கியும். இவை முறையே, இரண்டாந்திருவந். 100, திருவாய். 9. 6 : 1.

பரமன்றிப் பெருகுமால் வேட்கையும்' என்றும் சொல்லுமாறு போலே. ராஜந் த்வயி - இதுதானும் என்னால் வந்தது அன்று. 'ரஞ்ஜயதீதி ராஜா' ஆகையாலே. நித்யம் ப்ரதிஷ்டித: - [1] 'இப்போது ஒண்ணு தாகில், மற்றொரு போது கொள்ளுகிறோம்,' என்றால், அது செய்ய ஒண்ணாது, தர்மியைப் பற்றிக் கிடப்பது ஒன்று ஆகையாலே. பக்திஶ்சநியதா - [2] பெருமாளை ஒழியச் செல்லாமை பிறந்து பிரிவில் முடிந்த சக்கரவர்த்தியின் நிலை சிநேகம்; பத்தியாவது, 'நில்' என்ன, 'குருஷ்வ - கொள்க' என்னும்படியாய், முறை அறிந்து பற்றின இளையபெருமாள் நிலை. வீர - [3] உம்முடைய வீரம் கொண்டு புறம்பே வென்றீர் என்று, இங்கும் வெல்ல முடியாது. தானும் அவன் ஆகையாலே தோற்பித்த துறையைப் பிடித்துச் சொல்லுகிறான், பாவோ ந அந்யத்ர கச்சதி - [4] என்னை மீட்டீராகிலும் என்னுடைய நெஞ்சினை மீட்கப் போகாது, 'என்னுடை நல் நெஞ்சந் தன்னை அகல்விக்கத் தானும் கில்லான் இனி' என்னுமாறு போலே. [5] 'சர்வ சத்தியான அவனாலும் மீட்கப் போகாது,' என்கை.

---

1. 'நித்யம்' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இப்போது' என்று தொடங்கி. 'மற்று ஒரு போது கொள்ளுகிறோம்,' என்றது, 'அன்பு இல்லாத காலத்திலே கூட்டிக்கொண்டு போகிறோம்,' என்றபடி. 'தர்மியைப் பற்றிக் கிடப்பது' என்றது, 'திருவடியுடைய சொரூபத்தைப் பற்றிக் கிடப்பது ஆகையாலே' என்றபடி. அன்றிக்கே, 'ராஜந் த்வயி' என்ற விலக்ஷண குணத்தோடு கூடிய பெருமாளுடைய சொரூபத்தைப் பற்றிக் கிடப்பதாகையாலே என்னுதல்.

2. பத்திக்கும் சிநேகத்துக்கும் வேறுபாடு: பத்தியாவது, அடியவனுக்கு ஸ்வாமியிடத்தில் பிறப்பது ஓர் அநுராக விசேடம். சிநேகமாவது, ஒருவரிடத்திலுள்ள குணம் காரணமாக வரும் பிரீதி. இந்த வேறுபாட்டினைக் காட்டுகிறார், 'பெருமாளை' என்று தொடங்கி.

3. 'வீர' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'உம்முடைய' என்று தொடங்கி. வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'தானும்' என்று தொடங்கி. 'அவனாகையாலே' என்றது, 'வீரன் ஆகையாலே' என்றபடி.

4. 'பாவ: அந்யத்ர ந கச்சதி' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'என்னை' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'என்னுடை' என்று தொடங்கி. இது, திருவாய். 1. 7 : 8.

5. 'தானுங் கில்லான்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'சர்வசக்தி' என்று தொடங்கி.

[1]'கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே' என்னுமாறு போலே, 'அந்யத்ர ந கச்சதி' என்கிறது. 'அந்யத்ர' என்கிறது, போகிற இடத்தின் பேரும் சொல்லுகை பொருந்தபடி; [2]'மற்று ஆரானும் உண்டு என்பார்' என்னுமாறு போலே, இவரும் '**மற்றுங் கற்பரோ?**' என்கிறார். கற்பரோ - [3]சேதநர் அல்லரோ? உலகம் அடங்கலும் தம்முடையபடி என்று இருக்கிறார்; 'இவ்வூரிற்பிள்ளைகள் கண்ட சர்க்கரை ஒழிய உண்ணும்படி எங்ஙனே?' என்பாரைப் போலே. மற்றையவற்றை விட்டு இராமபிரானைக் கற்கைக்குக் காரணம் சொல்லுகிறார் மேல்: புல் பா முதலா - பா என்பது, பொருள்; புல்லாகிற பொருள் என்னுதல். 'பா' என்பது பரப்பு; 'பரந்திருக்கிற புல்' என்னுதல்; என்றது, பசுவின் வாய்க்கு எட்டாதபடியாய் இருக்கையைத் தெரிவித்தபடி. இதனால், 'புல் முதலாகத் தாவரம் முடிவாக' என்றபடி.

புல் எறும்பு - ஆதி பிறவிகளிற் கடையான எறும்பு தொடக்கமாக. [4]பிரமனை எண்ணினால் பின்பு முடிவில் நிற்கக்கடவது அன்றோ எறும்பு? [5]'புற்பா முதலாப் புல் எறும்பு ஆதி' என்று

---

1. *'அந்யத்ர' என்றதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'கண்ட கண்கள்' என்று தொடங்கி. இது,* **அமலனாதிபிரான்,** 10.

2. *பரமபதத்திலே என்னாமல் 'அந்யத்ர' என்றதற்கு வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'மற்று ஆரானும்' என்று தொடங்கி. இது,* **சிறியதிருமடல்,** 4, 5.

3. *'கற்பரோ' என்ற ஓகாரத்துக்குத் திருஷ்டாந்தத்தோடு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'சேதநர் அல்லரோ?' என்று தொடங்கி.*

*'இவ்வூரிற்பிள்ளைகள் கண்ட சர்க்கரை ஒழிய உண்ணும்படி எங்ஙனே?' என்ற இடத்தில், ஓர் அரசகுமாரன் பசியால் இளைத்து ஓர் அம்மையார் வீட்டிற்குச் சென்று உணவு வேண்ட, அவளும், 'உண்' என்று சோறு இட, 'அதற்கு வியஞ்சனம் வேண்டும்' என்ன, அவள் ஒரு மா வடுவைக்கொண்டு வந்து வைக்க, அவன் 'கண்ட சர்க்கரை இல்லையோ?' என்ன, அவளும் 'இல்லை' என்ன, 'இவ்வூரிற்பிள்ளைகள் கண்ட சர்க்கரை இல்லாமல் எப்படி உண்பார்கள்?' என்று தன்னைப் போலே விசாரித்துச் சொன்னான் என்ற கதையைக் கூறுவர்கள்.*

4. *'சஞ்சரிக்கின்ற பொருள்களில் எறும்பு புல்லியதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பிரமனை' என்று தொடங்கி.*

5. *'அற்பமான புல்லையும் எறும்பையும் பிரதானமாகச் சொல்லுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'புற்பா முதலா' என்று தொடங்கி.*

இவற்றுக்கு ஒரு முதன்மை சொல்லுகிறுர் அல்லர்; 'ஸ்ரீராமபிரானுடைய திருவுள்ளத்துக்கு முற்பட்டன இவை,' என்கிறுர். [1] வெள்ளமானது தாழ்ந்த இடத்திலே ஓடுமாறு போலே. [2] தாவரங்களில் தாழ்ந்தது புல்; சங்கமங்களில் தண்ணியது எறும்பு; இவை இரண்டனையும் ஒக்க எடுக்கையாலே, ஞானபலம் மோக்ஷம் என்றதனைத் தவிர்க்கிறது. [3] 'ஞானம் உண்டாகையும் இல்லையாகையும் காரணம் அன்று, பெருமாள் கிருபைக்கு,' என்கிறது. [4] 'இவற்றின் கர்மங்களால் வரும் உயர்வு தாழ்வுகள் காரணம் அன்று,' என்கிறது; [5] காரணம் இல்லாமலே சேஷியாக இருக்கிற சர்வேஶ்வரன் பக்கல் விலக்காமையே பேற்றுக்கு வேண்டுவது. [6] ஸ்ரீ பரதாழ்வானைக் கண்டு சேதநர் எல்லாரும் கண்ணநீர் விழவிட்டு நிற்கக் கழுத்தளவு நீரிலே நிற்கிற மரங்கள் அன்றோ வாடிநின்றன, [7] 'மரங்களும் எல்லாம் வாடி நின்றன' என்கிறபடியே? [8] உப தப்த

---

1. 'இவை முற்படும்படி என்?' என்ன, அதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறுர், 'வெள்ளமானது' என்று தொடங்கி.

2. அறிவுள்ள பொருள்களைச் சொல்லாது, அறிவு இல்லாத புல்லையும் எறும்பையும் சொன்னதனுல் போதருவது ஓர் அர்த்த விசேடத்தை அருளிச்செய்கிறுர், 'தாவரங்களில்' என்று தொடங்கி.

3. 'ஆனுல், ஞானம் வேண்டாவோ?' என்ன, 'ஞானம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர்.

4. ''ஞாநாந் மோக்ஷ:' என்னுநிற்க, ஞானம் வேண்டா என்பான் என்?' என்ன, 'மோக்ஷத்திற்குக் காரணமான ஞானம் வேண்டுவதின்று என்பதன்று: கர்மங்களின் உயர்வு தாழ்வுகளோடு கூடின ஞானத்தை வேண்டா என்கிறது' என்கிறுராக, 'இவற்றின்' என்று தொடங்கி.

5. 'ஆனுல், பேற்றுக்கு வேண்டுவது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'காரணம் இல்லாமலே' என்று தொடங்கி.

6. 'கர்மம் காரணமாக வருகின்ற ஏற்றத் தாழ்வுகள் பிரயோஜனம் இல்லாதவைகளாய், விலக்காமை ஒன்றையே கொண்டு அவன் கிருபை பலித்த இடம் உண்டோ?' என்ன, 'ஸ்ரீபரதாழ்வானை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர்.

7. மரங்கள் வாடி நின்றமைக்குப் பிரமாணம் காட்டுகிறுர், 'மரங்கள்' என்று தொடங்கி.

'விஷயே தே மஹாராஜ ராமவ்யஸந கர்ஶிதா:
அபிவ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குர கோரகா:

என்பது, ஸ்ரீராமா. அயோத். 59 : 4.

8. 'உபதப்த உதகாநத்ய: பல்பலாநி ஸராம்ஸிச
பரிஶுஷ்க பலாஶாநி வநாநி உபவநாநிச'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 59 : 5.

உதகா நத்ய: - நீரோடு, அந்நீரில் விழுகிறுரோடு வாசி அற்றபடி. உபதப்தமாகையாவது, கரையருகும் கிட்ட ஒண்ணுதபடியாய் இருக்கை. பல்வலாநி ஸராம்ஸிச - இதில், சிறுமை பெருமை என்று ஒரு வாசி இல்லை, 'வனம் என்ன உபவனம் என்ன' என்பதுபோலே.

ஒன்று இன்றியே - எல்லாவற்றையும் என்கிறது அன்று; மேலே 'முற்றவும்' என்று முழுவதும் என்ற பொருளைக் காட்டுகிற சொல் உண்டாகையாலே. இனி, 'ஒன்று இன்றியே' என்கிறது, 'பேற்றுக்குத் தகுந்ததாய் இருப்பது ஒரு சாதனம் இன்றிக்கே இருக்கச்செய்தே' என்றபடி. [1] பெறுகிற தன் சிறுமையையும் பேற்றின் கனத்தையும் பார்த்தால், தன் பக்கல் ஒரு சாதனம் இன்றிக்கே இருக்கும் அன்றே? [2] பரம பத்தியோடு அவனே உபாய மானதோடு வாசி இல்லை, பேற்றைப் பார்த்தால் இத்தலையில் ஒன்றும் சொல்ல ஒண்ணுமைக்கு. [3] இனி, அங்கீகாரத்துக்குக் காரணமாய் இருப்பது ஒரு சாதனம் இன்றிக்கே இருக்க, யாது ஒன்றுலே பலம் உண்டாயிற்று, அதுவன்றே சாதனம்! அதாவது, 'திருவயோத்யையி னின்றும் குடிவாங்க நினைவு இல்லை' என்கிற இதுவன்றே?

நற்பால் அயோத்தியில் - நல்ல இடத்தையுடைத்தான திருவயோத்தியில். பால் - இடம். [4] இதனுல், 'நிலமிதியே இராம பத்தியை விளைக்கும்' என்கை. 'இந்தத் தேசமானது விரும்பின

---

1. 'அயோத்தியில் வாழ்தலே ஒரு சாதனமாக இருக்க, 'ஒன்று இன்றியே' என்கிறது என்?' என்ன, 'பெறுகிற' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

2. இதனைக் கிம்புநர் நியாயத்தாலே சாதிக்கிருர், 'பரம பத்தியோடு' என்று தொடங்கி.

3. 'ஆனுல், 'தேஶோயம் ஸர்வ காமதுக்' என்றதற்குக் கருத்து யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'இனி' என்று தொடங்கி. என்றது, தேசவாசம் வியாஜ மாத்திரமாகையாலே, 'தேஶோயம் ஸர்வ காமதுக்' என்றது, தேசத்தின் பெருமையைக் கூற வந்தது என்றபடி. 'சாதனம்' என்றது, 'வியாஜம்' என்றபடி.

4. 'நற்பால்' என்றதனுல், பலித்த பொருளை அருளிச்செய்கிருர், 'இதனுல்' என்று தொடங்கி. 'நிலத்தின் தன்மையே இராம பத்தியை விளைக்கும்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிருர், 'இந்தத் தேசமானது' என்று தொடங்கி. 'பவித்ரம் பரமம் புண்யம் தேஶோயம் ஸர்வ காமதுக்' என்பது, கருடபுராணம், 11.

'மானத்து வண்ட லுழவோர் எழுத்தின் வடிவுற்றசீர்
மானத் துவண்ட வினையாள ராயினு மால்வளர்வி
மானத் துவண்டல மாமரங் கம்வழி யாவரினும்
மானத்து வண்டமர் தாரண்ட ராம்பதம் வாய்க்குமங்கே.'

என்பது, திருவரங்கத்தந்தாதி.

வற்றை எல்லாம் தரக் கூடியது' என்கிறபடியே அன்றோ? [1]'கைகேசியின் உறவினர்களுக்கு வேலைக்காரியும் எங்கேயோ பிறந்தவளும்' என்கிறது அன்றோ? 'இதற்குக் கருத்து என்?' என்னில், 'இந்த அயோத்தியிலே பிறந்தாளாகில் பெருமாளுக்கு விரோதம் செய்யாள் ஆகையாலே, எங்கேனும் ஓரிடத்தே பிறந்தாள் ஒரு விழுந்தான் கிடக்கை' என்றது. [2]'யத: குதஶ்சித்ஜாதா - யாதாம் ஓரிடத்தில் பிறந்தாள்' என்று வியாக்கியானம் செய்தான் உடாலி. 'இந்த நிலத்திற்பிறவாமை இவளுக்குக் கொடுமை விளைந்தது,' என்கிருன் அன்றோ? [3]தேசந்தானே எல்லா நன்மைகளையும் பிறப்பிக்கவற்றாய் இருக்குங்காணும். [4]இவ்வூரிலவர்கள் மற்றையோரைப்போலே உண்டு உடுத்துத் தடித்து வார்த்தை சொல்லித் திரிந்து, பெருமாளுக்கு வருவது ஒரு பிரயோஜனத்தோடு மாறுபட்டவாறே, சத்துரு சரீரம் போலே இருக்க, சரீரங்களைப் போகட்டுக்கொடு நிற்பர்கள். சத்துரு சரீரம் போகடவேண்டுவது ஒன்றே அன்றோ?

[5]'இராகவனுக்காகச் சூழ்ந்துகொண்டிருக்கிற சேனையானது பிராணனிடத்தில் அருள் வைப்பது இல்லை,' என்கிறபடியே

1. 'நிலத்தின் தன்மையே ஸ்ரீராம பத்திக்குக் காரணமானுல், மந்தரைக்கு அப்பத்தி இல்லாமைக்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'கைகேசியின்' என்று தொடங்கி.

'ஜ்ஞாதி தாஸீயதோ ஜாதா கைகேய்யாஸ்து ஸஹோஷிதா
ப்ரஸாதம் சந்த்ர ஸங்காஶம் ஆருரோஹ யத்ருச்சயா'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 7 : 1. 'ஒரு விழுந்தான் கிடக்கை' என்றது, 'பிரசித்தியில்லாதவளாய்க் கிடப்பவள் ஒருத்தி' என்றபடி.

2. தாம் அருளிச்செய்ததற்குச் சம்வாதம் காட்டுகிருர், 'யத: குதஶ்சித் ஜாதா-யாதாம் ஓரிடத்தில் பிறந்தாள்' என்று. அப்படி வியாக்கியானம் செய்த உடாலிக்கும் கருத்து, தாம் மேலே அருளிச்செய்ததே என்கிருர், 'இந்த நிலத்தில்' என்று தொடங்கி.

3. ஆக, 'நற்பால்' என்ற அடைமொழியின் பொருளை முடித்துக் காட்டுகிருர், 'தேசம் தானே' என்று தொடங்கி.

4. 'இது கண்டது உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'இவ்வூரிலவர்கள்' என்று தொடங்கி. 'இவ்வூரிலவர்கள்' என்றது, திருவரங்கம் பெரிய கோயிலில் வசிக்கின்றவர்களை. தடித்து-பூரித்து. பெருமாளுக்கு-பெரிய பெருமாளுக்கு. 'சத்துரு சரீரம்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'சத்துரு சரீரம்' என்று தொடங்கி.

5. 'அவன் பிரயோஜனத்துக்காகத் தங்கள் உயிர்களை உபேக்ஷித்த பேர் உளரோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'இராகவனுக்காக' என்று தொடங்கி.

'ராகவார்த்தே பராக்ராந்தா ந ப்ராணே குருதே தயாம்'

என்பது, ஸ்ரீராமா. யுத்.

[1] பிராணன்கள் பழைமையாலே பல் காட்ட, உடையவரும் நீங்களும் ஒரு தலையானால் உங்களைக் கைக்கொள்ளப் போமோ என்றார்களே அன்றோ?' என்றபடி, [2] பழைமை பார்ப்பரோ, அவன் தானும் இவனைப் பற்ற 'பிராணன்களை விட்டு' என்னா நிற்க? அயோத்தியில் வாழும் - வசிக்கும் என்னாமல் 'வாழும்' என்கிறது, அத்தேச வாசமும் வாழ்வும் என்று இரண்டு இல்லாமையாலே; [3] 'வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்!' என்றும், 'நல்லார்கள் வாழும் நளிர் அரங்கம்' என்றும், சொல்லுகிறபடியே, 'அயோத்தியில் வாழும்' என்கிறார், [4] பிராப்பிய தேசத்தில் வசிப்பதுதான் வாழ்ச்சியாக இருக்குமன்றோ? [5] நித்தியப் பிராப்பியமான பொருள் அன்றோ இங்கு எப்பொழுதும் அண்மையில் எழுந்தருளியிருக்கிறது? [6] நமக்கு

---

1. மேற்சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'பிராணன்கள்' என்று தொடங்கி. 'பழைமையாலே பல் காட்ட' என்றது, 'எங்களுக்கு அருள் செய்ய வேண்டும்; அதாவது, காப்பாற்ற வேண்டும்,' என்கின்றன என்றபடி. 'உடையவர்' என்றது, ஸ்ரீராமபிரானை. 'உடையவரும் நீங்களும் ஒரு தலையானால் - இருவரும் நமக்கே பரமானால். உங்களைக் கைக்கொள்ளப் போமோ - 'உடையவராகிய சேஷியை விட்டு உங்களைக் கைக்கொள்ளப் போமோ?' என்றபடி.

2. 'பழைமை பார்க்க வேண்டாவோ?' என்ன, 'பழைமை பார்ப்பரோ?' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அவன் தானும் - அவ்விராமபிரானும்.

'ஆர்த்தோவா யதிவா த்ருப்த: பரேஷாம் பபரணாகத:
ஹரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா'

என்பது, ஸ்ரீராமா. உத். 18 : 18.

3. கூறிய பொருளுக்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'வேங்கடத்தை' என்றும், 'நல்லார்கள்' என்றும் தொடங்கி. இவை முறையே, நாய்ச்சியார் திரு. 8 : 9., 11 : 5.

4. வசித்தலையே வாழ்வாகச் சொல்லுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'பிராப்பிய தேசத்தில்' என்று தொடங்கி.

5. 'பிராப்பியதேசம் பரமபதமாக இருக்க, இதனைப் பிராப்பிய தேசம் என்கைக்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'நித்தியப் பிராப்பியமான பொருள் அண்மையில் இருந்தால் யாதானும் ஒரு காலத்தில் நமக்கு அனுபவம் உண்டாவதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நமக்கு' என்று தொடங்கி.

அனுபவம் ஒரு காலத்தில் உண்டாகிறது சரீரத்தின் சேர்க்கையால் அன்றோ? [1] தர்மியில் ஐக்கியத்தாலே அங்குத்தைக்கு ஒரு குறை இல்லை அன்றோ?

நற்பாலுக்கு உய்த்தனன் - நல்ல சுபாவத்தையுடைத்தாம்படி செலுத்தினன். என்றது, தன் சேர்க்கையாலே சுகத்தையுடையவர்களாகவும் தன் பிரிவாலே துக்கத்தையுடையவர்களாகவும் செய்கையைத் தெரிவித்தபடி. [2] இவற்றினுடைய கர்மங்களின் ஏற்றத் தாழ்வுகளால் வரில் அன்றோ அவற்றிற்குத் தக்க அளவுகளாய் இருப்பன? அவனாலே வந்தன ஆகையாலே எல்லார்க்கும் ஒக்க நன்மை விளைந்தபடி. [3] 'என்னால் நியமிக்கப்பட்டவராய் நீர் அந்த உத்தம உலகத்தை அடைவீர்,' என்கிறபடியே, இங்கு உண்டான பற்று அறுத்து ஒரு தேச விசேடத்து ஏறச்சென்று அனுபவிக்கும் அனுபவத்தைக் கொடுக்க வல்லவனுக்கு இங்குத் தன்னை ஒழியச் செல்லாமை விளைக்கை பணியுடைத்து அன்றே? நான்முகனார் பெற்ற நாட்டுளே நற்பாலுக்கு உய்த்தனன் - [4] அரசன் தன்

---

1. 'சரீரத்தின் சேர்க்கையாலே உண்டாக வேண்டுமோ? அங்குள்ள விஷயம் குறைவுபட்டிருப்பதனால் என்று கொண்டாலோ?' எனின், 'தர்மியில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'நன்று; புல் எறும்பு முதலானவற்றிற்கு இந்த நிலை உண்டாகக் கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'நன்று; மனித பாவனையில் இருக்கிற இவர் நற்பாலுக்கு உய்க்கக்கூடுமோ?[1] எனின், 'என்னால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

'அபராவர்த்திநாம் யாச யாச பூமிப்ரதாயிநாம்
மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாந் அநுத்தமாந்'

என்பது. ஸ்ரீராமா. ஆரண். 68 : 30. இது, ஜடாயுவைப் பார்த்து ஸ்ரீராமபிரான் கூறியது. 'பணியுடைத்தன்றே,' என்றது, 'அருமையுடையதன்றே?' என்றபடி.

4. நான்முகனார் நாடு என்னாமல், 'பெற்ற நாடு' என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'அரசன்' என்று தொடங்கி, ''மற்றும் கற்பரோ?' என்ற இடத்தில், கோயில் கந்தாடை நாயன், 'திருவடியும் திருப்பாணாழ்வாரும் தொண்டரடிப்பொடியாழ்வாரும் கூடி இருக்கிறதற்குக் கருத்துத் தெரியுமோ?' என்று ஸ்ரீபாதத்து முதலிகளைக் கேட்க, 'அடியோங்களுக்குத் தெரிந்தது இல்லை,' என்ன, ஆனால், 'ந அந்யத்ர கச்சதி' என்றும், 'மற்று ஒன்றினைக் காணாவே' என்றும், 'அச்சுவை பெறினும் வேண்டேன்' என்றும் மூவரும் ஏக ப்ரகிருதிகள் ஆகையாலே கூட எழுந்தருளியிருக்கிறார்கள் என்று அறியக்கடவீர்,' என்று பிரசாதித்தருளினார்.

னுடையான் ஒருவனுக்கு ஒரு நாட்டைக் கொடுத்தால் அவனுடைய ஆணையும் ஆஜ்ஞையுமாக அவனுடைய சுவாதந்திரியமே நடக்கும்படி செய்து கொடுக்குமாறு போலே, சம்சாரி சேதநர்க்குத் தலையான பிரமனுக்குக் கையடைப்பான நாட்டுக்குள்ளே, அவன் சுவாதந்திரியத்தையும் தவிர்த்து, இவற்றின் கர்ம பாரதந்திரியத்தையும் தன் குணத்தாலே பதஞ்செய்து, தன்னைப் பெற்ற போது ஜீவிக்கும்படியாய்ப் பெறுத போது உருவும்படியான தன்மையை உண்டாக்கினுன். ஆன பின்பு அவனை ஒழிய வேறேயும் சிலவற்றைக் கற்பரோ ? (1)

708

[1] நாட்டிற் பிறந்தவர் நாரணற்கு ஆளன்றி ஆவரோ?
நாட்டிற் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு
நாட்டை அளித்துஉய்யச் செய்து நடந்தமை கேட்டுமே.

**பொ-ரை :** 'இந்த உலகத்திலே பிறந்து மக்கள் படாத துன்பத்தை எல்லாம் தான் பட்டு, மனிதர்களுக்காக, நாட்டினை வருத்துகின்ற அரக்கர்களைத் தேடிச் சென்று கொன்றிட்டு நாட்டைப் பாதுகாத்து அகால மரணம் உண்டாகாதபடி வாழச்செய்து தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளின பிரகாரத்தை ஸ்ரீராமாயண முகத்தாலே கேட்டிருந்தும், இந்த உலகத்திலே பிறந்தவர்கள் ஸ்ரீ இராமபிரானுக்கு ஆள் ஆவரே அன்றி வேறு ஒருவர்க்கு அடிமை ஆவரோ ?' என்கிருர்.

**வி-கு :** 'பிறந்து பட்டு நாடித் தடிந்திட்டு அளித்து உய்யச் செய்து நடந்தமை கேட்டும் நாரணற்கு ஆள் அன்றி ஆவரோ ?' என்க.

**ஈடு :** இரண்டாம் பாட்டு. [2] 'மேல் பாசுரங்களில் சொல்லப் புகுகிற குணங்களை நோக்க, முதற்பாசுரத்திற்சொன்ன குணம் குணஹாநி' என்னும்படி மேலேயுள்ள பாசுரங்கள் குணுதிக்கியம் சொல்லுகின்றன,' என்று அருளிச்செய்வர்.

---

1. 'மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனர் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றத்
தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!
நாராய ணுவென்னு நாவென்ன நாவே!'

என்பது, சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை.

2. மேலே வருகின்ற திருப்பாசுரங்களிற்சொல்லுகிற குணங்கள் எல்லாம், கீழே கூறிய திருப்பாசுரங்களிற்கூறிய குணங்களைக்காட்டிலும் உயர்ந்தவை என்னுமிடம் தோன்ற அவதாரிகை அருளிச்செய்கிருர்.

நாட்டிற்பிறந்தவர் - [1] இப்பாசுரத்தில், 'திருவயோத்தியிலுள்ளாரை இராம குணங்களையே தாரகராம்படி செய்த அளவேயோ, நாட்டிலுள்ளாருடைய விரோதிகளைப் போக்கிக் காப்பாற்றும் விதம் உயர்ந்தது இல்லையோ?' என்கிறார். நாட்டிற்பிறந்தவர் - [2] 'நாட்டிற் பிறவாதார் இலரே அன்றோ? ஆயின், 'நாட்டிற்பிறந்தவர்' என்றதற்குப் பொருள்தான் யாதோ?' எனின், இராம குணங்கள் நடையாடும் இடத்திலே பிறந்தவர்கள் என்கிறது. [3] பெருமாளுடைய எல்லை இல்லாத இடம் இல்லை அன்றோ? 'மலைகளும் வனங்களும் காடுகளும் ஆகிய இவற்றோடு கூடிய இந்தப் பூமி இட்சுவாகு குலத்து அரசர்களைச் சேர்ந்தது,' என்கிறபடியே. [4] 'விதித: ஸஹி தர்மஜ்ஞ: - 'இராவணா! பெருமாளுடைய குணங்கள் கேட்டு அறியாயோ?' என்றாள் அன்றோ? [5] அந்தக் குணங்கள் நடையாடாதது ஓரிடம் உண்டானால் அன்றோ, அவ்விடம் இவர் எல்லை அன்றிக்கே இருப்பது? [6] நாட்டில் பிறக்கையாவது, அவருடைய எல்லைக்குள்ளே

---

1. முதல் திருப்பாசுரத்தில் கூறிய குணத்தைக்காட்டிலும் இத்திருப்பாசுரத்தில் கூறப்படுகின்ற குணம் உயர்ந்தது என்கிறார், 'இப்பாசுரத்தில்' என்று தொடங்கி.

2. 'நாட்டிற்பிறவாதார் இவரே அன்றோ?' என்றது, 'சேதநராகில் யாதாயினும் ஓர் ஊரில் பிறவாமல் இருப்பதற்கு இல்லை அன்றோ?' என்றபடி.

3. 'நன்று; இராமகுணங்கள் நடையாடுகிற இடம் என்ன வேண்டுமோ? பெருமாளுடைய தேசத்திலே பிறந்தவர்கள் என்ன ஒண்ணாதோ?' என்ன, 'அங்ஙனம் கூறின், அதற்குக் குற்றம் உண்டு' என்கிறார், 'பெருமாளுடைய' என்று தொடங்கி.

'இக்ஷ்வாகூணாம் இயம்பூமி: ஸஸைலவநகாநநா
ம்ருக பக்ஷி மநுஷ்யாணாம் நிக்ரஹ ப்ரக்ரஹாவபி'

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 18 : 6 இது வாலியைப் பார்த்து ஸ்ரீராமபிரான் கூறியது.

4. 'இராமகுணங்கள் நடையாடும் இடத்திலே பிறந்தவர்கள் என்று கூறுவதற்கும் குற்றம் உண்டு' என்கிறார், 'விதித:' என்று தொடங்கி. என்றது, 'பகைவர்கள் கூட்டத்திலும் இவர் குணங்கள் நடையாடுகையாலே இப்பொருளும் பொருந்தாது,' என்றபடி. 'விதித: ஸஹி தர்மஜ்ஞ: சரணாகத வத்ஸல:' என்பது, ஸ்ரீராமா. சுந். 21 : 20. இஃது இராவணனைப் பார்த்துப் பிராட்டி கூறியது.

5. மேலே கூறிய குற்றங்கள் இரண்டனையும் சேரப்பிடித்து அருளிச்செய்கிறார், 'அந்தக் குணங்கள்' என்று தொடங்கி.

6. 'நாட்டில் பிறந்தவர்' என்பதன் கருத்துதான் யாதோ?' எனின், அருளிச்செய்கிறார், 'நாட்டில் பிறக்கையாவது' என்று தொடங்கி.

பிறந்து, அவர் தோள் நிழலிலே வாழ்தல். நாரணற்கு ஆள் அன்றி ஆவரோ - 'பெருமாளுக்கு ஆள் அன்றி ஆவரோ?' என்றபடி.

பிரமன் முதலான தேவர்களும், [1] 'நீவிர் நாராயணரான தேவர் ஆவீர்' என்றார்களே அன்றோ? [2] 'ஒருவன் சோற்றை உண்டவர்கள் அவனை ஒழிய வேறு ஒருவர்க்குக் காரியம் செய்வர்களோ?' என்னுமாறு போலே. நாரணற்கு - [3] வரையாதே எல்லாரோடும் பொருந்துகையும், அடியார்களுக்காகத் தன்னை ஓக்கி வைக்கையும், அவர்களுக்காகத் தன் மார்பில் அம்பு ஏற்கையும், அவர்கள் விரோதிகளைப் போக்குகையும், அடியார்கட்கு வத்சலனாய் இருக்கையும், அவர்கள் தோஷத்தைப் பார்த்துவிட்டுப் போக மாட்டாமையும் ஆகிய இவை எல்லாவற்றாலும் பெருமானை '**நாராயணன்**' என்னத் தட்டு இல்லை அன்றோ? ஆள் அன்றி ஆவரோ - மேற்பாசுரத்திலே '**கற்பரோ?**' என்றது; இங்கே, '**ஆள் அன்றி ஆவரோ**' என்கிறது; [4] 'கல்வியினுடைய பலம் ஆள் ஆகை' என்றபடி. பிறந்தவர் ஆள் அன்றி ஆவரோ - [5] 'நீ காட்டில் வசிப்பதற்காகவே தோற்றுவிக்கப்

---

1. *'நன்று; 'நாரணன்' என்ற திருப்பெயர் ஸ்ரீராமபிரானைக் காட்டுமோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நீவிர்' என்று தொடங்கி.*

*'பவாந் நாராயணோ தேவ: ஸ்ரீமான் சக்ராயுதோ விபு:*

*என்பது,* **ஸ்ரீராமா. யுத்.** 120 : 13. *இது ஸ்ரீராமபிரானைப் பார்த்துப் பிரமன் கூறியது. இங்கு, கம்பராமாயணம், யுத்தகாண்டம், மீட்சிப் படலம் 98 முதல் 112 முடியவுள்ள செய்யுள்களைப் படித்து அறிதல் தகும்.*

2. *'நாட்டிற்பிறந்தால் நாரணற்கு ஆளாக வேண்டுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒருவன்' என்று தொடங்கி.*

3. *ஸ்ரீராமபிரானை 'நாரணன்' என்றதற்குப் பிரமாணம் காட்டினார் மேல்; காரணம் அருளிச்செய்கிறார், 'வரையாதே' என்று தொடங்கி. 'நாராயணன்' என்ற திருப்பெயரும் மேற்கூறிய குணங்கள் எல்லாம் பொருளாதலை முமுக்ஷுப்படி முதலிய இரஹஸ்ய கிரந்தங்களால் உணர்தல் தகும். வரையாதே - தாரதம்மியம் பாராமல். ஓக்கி வைக்கை- ஆக்கி வைக்கை.*

4. *'கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅ ரெனின்?'*

*என்பது, திருக்குறள்.*

5. *'பிறந்தவர் ஆள் அன்றி ஆவரோ?' என்றதனால் போந்த பொருளை அருளிச்செய்கிறார், 'நீ காட்டில்' என்று தொடங்கி. 'ஸ்ருஷ்ட ஸ்த்வம் வநவாஸாய' என்பது,* **ஸ்ரீராமா. அயோத்.** 40 : 5. *இஃது இளையபெருமாளைப் பார்த்துச் சுமத்திரா தேவி கூறியது. கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், நகர் நீங்கு படலம், 150, 151-ஆம் செய்யுள்களைக் காண்க.*

பட்டாய்' என்னுமாறு போலே. 'பிறந்தவர் பிறவியின் பலத்தை இழப்பரோ?' என்றபடி. [1] வகுத்த துறையிலே பாரதந்திரியமாகை யாலே வாசி அறிந்த இவர்களுக்கு உத்தேசியமாகத் தோற்றுமன்றோ? [2] வகுத்தது அல்லாத துறைகளில் பண்ணின வாசனையாலே 'இது புருஷார்த்தமோ?' என்று தோற்றுகிறது.

நாட்டிற்பிறந்து - [3] சம்சார சம்பந்தம் சிறிதும் இல்லாதவனு யிருக்கிறவன், கர்மங்கட்குக் கட்டுப்பட்டவர்களுங்கூட அருவ ருக்கும் தேசத்திலே பிறந்து. [4] 'செருக்கனை இராவணனுடைய வதத்தைப் பிரார்த்திக்கிற தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டவரும் நித்தியருமான விஷ்ணு மனித உலகத்திலே அவதரித்தார்; இது பிரசித்தம்' என்கிறபடியே. [5] ஸ:-ஜஜ்ஞே ஹி - 'கர்மங் காரண மான பிறவி இல்லை' என்று பிரமாண பிரசித்தனானவன் கண்டீர் கர்மங்கட்குக் கட்டுப்பட்டவர்கட்கும் இவ்வருகாய் வந்து பிறந்தான்' என்றபடி 'இப்படிப் பிறப்பதற்குக் காரணம் என்?' என்னில்,

1. 'ஸர்வம் பரவசம் துக்கம்' என்றபடியே, பாரதந்திரியம் துக்க ரூபமாய் இருக்க இதனைக் கல்விக்குப் பலமாகச் சொல்லலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'வகுத்த துறையிலே' என்று தொடங்கி. இவர்களுக்கு-ஆழ்வார்களுக்கு.

2. 'நமக்கு அப்படித் தோற்றவில்லையே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'வகுத்ததல்லாத' என்று தொடங்கி.

3. இங்கே வந்து பிறந்தது குணமாகைக்கு உறுப்பாக, அவனுடைய மேன்மையையும் சம்சாரத்தினுடைய தன்மையையும் அருளிச்செய்கிறார், 'சம்சார சம்பந்தம்' என்று தொடங்கி.

4. அப்படிப் பிறந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'செருக்கனை' என்று தொடங்கி.

'ஸஹி தேவை: உதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:
அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணு: ஸநாதந:'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 1 : 7. இங்கு, கம்பராமாயணம், திருவவதாரப் படலம், 5 முதல் 25 முடியவுள்ள செய்யுள்களையும், யுத்த காண்டம், நிகும்பலைப் படலம், 138 முதல் 142 முடியவுள்ள செய்யுள்களையும் படித்து அறிதல் தகும்.

5. மேலே காட்டிய சுலோகத்துக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'ஸ:' என்று தொடங்கி. ஸ: - பிரசித்தி பரமான தச்சப்தத்துக்குச் சொல்லப்படுகிற பொருளிலே நோக்கு என்கைக்காக, 'ஸஹி - ஜஜ்ஞே' என்று கூட்டி, இரண்டற்கும் பொருள் அருளிச்செய்கிறார், 'கர்மங் காரணமான' என்று தொடங்கி.

'அர்த்தித:' என்கிறது. அவர்கள் இரந்ததற்காக என்றபடி. [1] இரப்பு தான் இச்சையையும் பிறப்பிக்குமே அன்றோ? [2] 'இச்சையாலே மேற்கொள்ளப்பட்டது' அன்றோ? **தேவை :-** [3] தங்கள் காரியத் துக்காக இரந்து பிறக்கச் செய்து காரியம் தலைக்கட்டினவாறே எதிரிட்டு '**ஈஶ்வரோஹம்**' என்று இருப்பார்க்காகக் கண்டீர், 'நீள் நகர் நீள் எரி வைத்தருளாய்' என்பர்கள். என்றது, 'இலங்கையை சுட்டுத் தரவேணும்,' என்பர்கள் என்றபடி. **உதீர்ணஸ்ய ராவணஸ்ய -** [4] அச்சத்தை உண்டாக்குகின்றவனை பையல், தானே வரபலத்தாலே அழியச் செய்யவேண்டும்படி விஞ்சினவாறு. **வத அர்த்திபி:-** [5] தாங்கள் பட்ட நலிவாலே திருவுள்ளத்துக்குப் பொருந் தாதனவற்றையும் விண்ணப்பம் செய்தார்கள். [6] 'ஒருவனை அழியச் செய்ய ஒரு நாடாகப் பிழைக்குமாகில் ஆகாதோ?' என்று அழியச்

---

1. 'ஆத்ம மாயயா, ஸம்பவாமி- 'என் இச்சையாலே பிறக்கிறேன்' என்னாநிற்க, 'அவர்கள் இரந்த காரணத்தாலே பிறந்தான் என்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இரப்புதான்' என்று தொடங்கி.

2. இச்சையாலே அவதரித்தான் என்னுமதற்குப் பிரமாணம் காட்டு கிறார் 'இச்சையாலே' என்று தொடங்கி.

> 'இச்சா க்ருஹீத அபிமதோருதேஹ:
> ஸம்ஸாதித அஶேஷ ஜகத்தித: ய:'

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 6. 5 : 84.

3. 'அங்ஙனம் இரந்தவர்கள்தாம் ஒரு திருவடி, திருவனந்தாழ்வான் அல்லர்; செருக்குற்றவர்களாய்ச் சுயகாரியபரர்களாய் இருப்பவர்கள்' என்கிறார், 'தங்கள்' என்று தொடங்கி. சுயகாரிய பரர் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நீணகர்' என்று தொடங்கி. இது, திருவிருத். 92.

4. 'ராவண' என்ற சொல்லிற்குப் பொருள், 'அச்சத்தையுண்டாக்கு கின்றவனை பையல்' என்பது. 'பொருப்பரையன் மடப்பாவை இடப் பாகன் பொருப்பின்கீழ்க் கிடந்து போகாது, இரக்கம் உறக் கதறுதலால் இராவணன்தான் எனப்பெயரும் இயம்பி' என்பது, கம்ப. உத்தரகாண். வரையெடுத்த படலம்.

5. ''ஸுஹ்ருதம் ஸர்வ பூதாநாம்' என்று இருக்குமவனை இதற்காக யாசிக்கலாமோ?' என்ன, 'தாங்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. 'ஆயின், இறைவன் தன் திருவுள்ளத்துக்குப் பொருந்தாத காரியத்தைச் செய்வான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒருவனை' என்று தொடங்கி.

> 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
> களைகட் டதனொடு நேர்.'

என்பது, திருக்குறள்.

செய்தானத்தனை. அர்த்தித:- [1] தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளுந் தனையும் திருவுள்ளத்திற்பட்டுக் கிடந்தது இதுவே. அர்த்திதः:- [2] உபாசித்தவர் அல்லர்.

மாநுஷே லோகே விஷ்ணுः ஸநாதநः:- [3] 'உண்டு பண்ணப் பட்ட தேவர்கள், மனித வாசனைக்கு வாந்தி பண்ணிப் பூமியில் இழிய அருவருத்து, ஒன்றரை யோசனைக்கு அவ்வருகே நின்று ஹவிஸ் ஸினைக் கொள்ளுவர்கள்; அவர்கள் மனிதத் தானத்திலேயாம்படி யான பொருள்கண்டீர் இங்கே வந்து பிறந்தது,' என்கிறார். மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவன் அன்றோ? ஜஜ்ஞே- [4] 'தோன்றிய மாத்திரமன்று; நாட்டார் பத்து மாதங்கள் கர்ப்ப வாசம் அனுபவிக்கில் பன்னிரண்டு மாதங்கள் அன்றோ இவன் அனுபவித் தது? 'பின்னர்ப் பன்னிரண்டாவது மாதமான சித்திரை மாதத்தில்' என்பது ஸ்ரீராமாயணம். [5] 'நான் உன்னுடைய உதரத்தினின்றும் உண்டானேன்' என்பது ஸ்ரீ விஷ்ணு புராணம். நாட்டிற்பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா - கர்மங்கட்குக் கட்டுப்படாத தான் கர்மங்கட்குக் கட்டுப்பட்டவர்களோடே ஓரினனாய் நாட்டிலே வந்து பிறந்து, அவர்கள் படும் துக்கத்து அளவன்றிக்கே, கடலுக்கு அக் கரையிலே உயிரும் இக்கரையிலே உடலுமாம்படியான ஜானகியின்

---

1. *'அர்த்தித:' என்ற இறந்த காலத்துக்குக் கருத்து அருளிச்செய் கிறார், 'தன்னுடைச்சோதிக்கு' என்று தொடங்கி. என்றது, 'பிற்பட் டோம் என்று புண்பட்டான்' என்றபடி. தன்னுடைச் சோதி - பரமபதம்.*

2. *'அர்த்தித:' என்றதற்கு, வேறும் ஒரு கருத்து அருளிச்செய் கிறார், 'உபாசித்தவர் அல்லர்' என்று.*

3. *'விஷ்ணு:' என்று அவன் பெருமையையும், பிறந்த இடத்தின் கொடுமையையும் அருளிச்செய்கிறார், 'உண்டுபண்ணப்பட்ட' என்று தொடங்கி. 'அவர்கள் மனிதத் தானத்திலேயாம்படியான பொருள்' என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மனிசர்க்கு' என்று தொடங்கி.* இது, திருவாய். 8. 1 : 5.

4. *'ஜஜ்ஞே' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'தோன்றிய மாத்திரமன்று' என்று தொடங்கி.*

*'ததஸ்ச த்வாதஸே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ'*
என்பது, ஸ்ரீராமா. பால 18 : 10.

5. *இங்குப் பிறந்ததற்கு வேறு ஒரு பிரமாணம் காட்டுகிறார், 'நான்' என்று தொடங்கி. 'ஜாதோஹம் யத்தவோதராத்' என்பது,* ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 3 : 14.

பிரிவு என்ன, பெரியவுடையார் சாக்காடு என்ன, இந்த விதமான துக்கங்களையும் பட்டு, அதற்கு மேலே, செய்ந்நன்றி அறியாத மனிதர்கட்காக.

நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு நாட்டை அளித்து உய்யச்செய்து - யாதொரு குற்றமும் இல்லாத நாட்டினை நலிகிற இராவணன் முதலான கண்டகரை, [1]'பொருந்தார் கை வேல் நுதி போல் பரல் பாய மெல்லடிகள் குருதி சோர விரும்பாத கான் விரும்பி,' [2]'எவ்வாறு நடந்தனை எம்மிராமாவோ!' என்கிற படியே, அவர்கள் இருந்த இடங்களிலே தேடிச் சென்று கொன்று, இலங்கையின் வாசலிலே வீரலக்ஷ்மியோடு கூடினவராய்க்கொண்டு எழுந்தருளி நிற்க, அவ்வளவிலே பிரமன் முதலான தேவர்கள் வந்து, [3]'தருமத்தைத் தாங்குகிறவர்களுக்குள் சிறந்தவரே! எங்களுடைய இந்தக் காரியம் தேவரீரால் செய்யப்பட்டது; இராமரே! இராவணன் கொல்லப்பட்டான்; மகிழ்ச்சியுடையவராய் வைகுண்டத்திற்குச் செல்லும்' என்கிறபடியே, 'நாங்கள் வேண்டியவை அடைய எங்கள் அளவு பாராதே தேவர் செய்தருளிற்று; இனி, தன்னுடைச்சோதி ஏற எழுந்தருள அமையும்' என்ன, அவ்வளவிலே சிவன், 'நாடு அடையத் தேவரீருடைய பிரிவினாலே அழிந்ததைப் போன்று கிடக்கின்றது; திருத்தாய்மாரையும் திருத்தம்பிமாரையும் திருப்படை வீட்டிலுள்ள சனங்களையும், மீண்டு புக்குச் சில நாள் எழுந்தருளியிருந்து ஈரக்கையாலே தடவிப் பாதுகாத்து எழுந்தருள வேணும்,' என்ன, [4]'கடல்ஞாலத்து அளிமிக்கான்' என்னும்படியே, பதினோராயிரம் ஆண்டு எழுந்தருளியிருந்து பாதுகாத்தபடியைச் சொல்லு

---

1. *பெருமாள் திருமொழி*, 9 : 5.

2. *பெருமாள் திருமொழி*, 9 : 2.

3. *'ததிதம் ந: க்ருதம் கார்யம் த்வயா தர்மப்ருதாம்வர*
*நிஹதோ ராவணோ ராம ப்ரஹ்ருஷ்டோ திவமாக்ரம'*
*என்பது*, ஸ்ரீராமா. யுத். 120 : 29.

*இங்கே, கம்பராமாயணம், யுத்த காண்டம், மீட்சிப்படலம்,* 98 *முதல்* 115 *முடியவுள்ள செய்யுள்களைக் காண்க.*

4. திருவாய். 4. 8 : 5.

கிறது 'நாட்டை அளித்து' என்று. [1] இதற்காக அன்றே முக் கண்ணனை, [2] 'ஷடர்த்தநயநः ஸ்ரீமாந் - முக்கண்ணனை ஸ்ரீமாந்' என்றது? [3] இல்லையாகில், பிக்ஷுகனை 'ஸ்ரீமாந்' என்ன விரகு இல்லை அன்றே? நெடுநாள் இருந்து தன்னால் அல்லது செல்லாதபடி செய்து, இட்டு வைத்துப்போகாதே கூடக் கொடுபோய் உஜ்ஜீவிப் பித்தபடியைச் சொல்லுகிறது 'உய்யச்செய்து' என்று.

நடந்தமை கேட்டுமே [4] - 'விலங்கினங்கள் அனைத்தும் இராமனைப் பின் தொடர்ந்தன' என்கிறபடியே, தன்னுடனே கூடக் கொடுபோய் வைத்தான்' என்று ஐயப்பட வேண்டாதபடி அருளிச் செய்து வைத்தாரே அன்றே ஆழ்வார், 'அன்று சராசரங்களை வைகுந்தத்து ஏற்றி' என்று பரமபதத்தே கொடுபோனமையை? நடந்தமை கேட்டும் - கொடு சென்ற இந்தச் செயலைக் கேட்டும். என்றது, பசித்தார் [6] இளைத்தாரைப் பார்த்துக்கொடு போகையைத் தெரிவித்தபடி. [7] தாமரைக் கண்ணனுடைய திருநாம சங்கீர்த்தன

1. 'இதற்காகவன்றே' என்றது, 'எழுந்தருளியிருந்து............ எழுந்தருள வேணும் என்றதற்காக அன்றே?' என்றபடி.

2. 'ஷடர்த்த நயநः ஸ்ரீமாந் மஹாதேவோ வ்ருஷத்வஜः' என்பது, ஸ்ரீராமா. யுத். 120 : 3. 'வரதற்கும் வரதன்' என்பது, கம்ப ராமா. யுத். மீட்சிப்பட. 114.

3. ''ஸ்ரீமாந்' என்றதற்கு இது கருத்தாக வேண்டுமோ?' என்ன, 'இல்லையாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'மானேய் நோக்கி' (திருவாய். 1. 5 : 5) என்னும் திருப்பாசுரத்தின் வியாக்கியானம் பார்க்க.

4. 'திர்யக்யோநிகதாஶ்சாபி ஸர்வே ராமம் அநுவ்ரதா:' என்பது, ஸ்ரீராமா. உத்தரகாண். 109 : 22.

5. 'பிரமலோகத்தில் ஓர் இடத்திலே வைத்தான் என்று இருக் கிறதே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்குறார், 'இன்ன இடத்திலே' என்று தொடங்கி. 'அன்று சராசரங்களை' என்பது, பெருமாள் திருமொழி. 10 : 10.

6. 'பசித்தார் இளைத்தாரை' என்றது, 'பசித்தவர்களாகி இளைத் தவர்களை' என்றபடி. 'அத்யந்தம் ஆர்த்தரை' என்றவாறு.

7. 'அவன் பார்வை தாரகமாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தாமரைக்கண்ணனுடைய' என்று தொடங்கி.

'பாதேயம் புண்டரீகாக்ஷ நாம ஸங்கீர்த்தநாம்ருதம்'

என்பது, ஜிதந்தா. பாதேயம் – தோட்கோப்பு.

அமிருதமே அன்றோ பாதேயம்? [1]'புண்டரீகாக்ஷனே! உனக்குத் தோற்றோம்' என்றுகொடு போலேகாணும் போவது. [2]'இராமர், தாமரை மலர் போன்ற கண்களையுடையவர்' என்னப்படுவதன்றோ?

[3]மேற்பாசுரத்தில், ஐம்புல இன்பங்களில் ஈடுபட்டவராய், ''சர்வேஸ்வரன்' என்று ஒரு தத்துவம் உண்டு' என்று கேட்டார் வாய்க் கேட்டிருக்கிறவர்களை, தான் வந்து அவதரித்துத் தன்வடிவழகாலும் குணங்களாலும் வசீகரித்துத் தன்னை அல்லது அறியாதபடி செய்தான் என்று சொல்லிற்று; இப்பாசுரத்தில், 'இது ஓர் ஏற்றமோ? தன்னால் அல்லது செல்லாமையைச் செய்து போகட்டுப் போகையாகிறது படுகொலைக்காரரைப் போன்றதே அன்றோ, அங்ஙன் செய்யாதே தன்னோடே கூடக் கொடுபோய்ப் பாதுகாத்த குணத்துக்கு?' என்கிறார். (2)

709

[4]கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல் லால்மற்றுங் கேட்ப
கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுக ளேவையும் [ரோ?
சேட்பாற் பழம்பகை வன்சிசு பாலன் திருவடி
தாட்பால் அடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே.

---

1. அதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'புண்டரீகாக்ஷனே' என்று தொடங்கி. 'ஜிதந்தே புண்டரீகாக்ஷ' என்பது, ஜிதந்தா.

2. ஸ்ரீராமபிரான் புண்டரீகாக்ஷன் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'இராமன்' என்று தொடங்கி.

'ராம: கமல பத்ராக்ஷ: ஸர்வ ஸத்வ மநோஹர:
ரூப தாக்ஷிண்ய ஸம்பந்ந: ப்ரஸூதோ ஜநகாத்மஜே'

என்பது, ஸ்ரீராமா. சுந். 35 : 8. இது பிராட்டியைப் பார்த்துத் திருவடி கூறியது.

'அண்ணல்தன் திருமுகம் கமல மாமெனின்
கண்ணினுக் குவமைவேறு யாது காட்டுகேன்!
தண்மதி யாமென வுரைக்கத் தக்கதோ!
வெண்மதி பொலிந்தது மெலிந்து தேயுமால்.'

என்பது, கம்பராமாயணம்.

3. இத்திருப்பாசுரத்துக்கு முன்னுரையில் கூறிய தாத்பரியம் ஒழிய, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'மேற்பாசுரத்தில்' என்று தொடங்கி.

4. 'மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவிஎன்ன செவியே!
திருமால்சீர் கேளாத செவிஎன்ன செவியே!'

என்பது, சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை.

**பொ-ரை:** 'பகவானைப் பற்றிய நிந்தை மொழிகளைக் கேட்க வேண்டும் என்னும் விருப்பமுள்ளவர்களுடைய செவிகளையும் சுடக் கூடிய தாழ்ந்த வசைச்சொற்களையே பேசிய, பல காலமாக வருகின்ற பழம்பகைவனான சிசுபாலன், கண்ணபிரானுடைய திருவடிகளை அடைந்த தன்மையை அறிவாரான ஞானிகளை அறிந்து வைத்திருந்தும் தாங்கள் உய்வதற்குரிய வழியைக் கேட்கவேண்டும் என்று இருப்பவர்கள் கேசவனுடைய கீர்த்தியை அல்லாமல் வேறு சிலவற்றையும் கேட்பரோ ?' என்கிறார்.

வி – கு: 'தன்மை அறிவாரை அறிந்தும், கேட்பார்கள் கேசவன் கீர்த்தி அல்லால் மற்றும் கேட்பரோ ?' என்க.

ஈடு: மூன்றாம் பாட்டு. [1]'சிசுபாலனையும் உட்படத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்ட மேலான கிருபையை அறிந்தவர்கள், கேசியைக் கொன்ற கிருஷ்ணனுடைய கீர்த்தியை ஒழிய வேறு ஒன்றனைக் கேட்பரோ ?' என்கிறார்.

கேட்பார்கள் - [2]மேலே 'கற்பரோ' என்றது; அதாவது, முதல் நடு இறுதி தன் நெஞ்சிலே ஊற்றிருக்கும்படி வாசனை பண்ணுகையாயிற்று; இனி, கேட்கையாவது, கற்றுக் கேட்டுத் தெளிந்திருப்பான் ஒருவன் ஒரு பொருளை விரித்துப் பேசினால், அதனைப் புத்தி பண்ணி நம்பியிருத்தல். [3]நடுவிருந்த நான்கு நாள்களும் தன் நெஞ்சு தெளிவு பிறந்தது இல்லையேயாகிலும் விழுக்காட்டில் இருவர்க்கும் பலம் ஒத்திருக்கக்கடவது. [4]கற்றிலன் ஆகிலும் கேட்க வேண்டுவது

---

1. திருப்பாசுர முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'மேல் திருப்பாசுரத்தில் 'கற்பரோ' என்றார்; இத்திருப்பாசுரத்தில் 'கேட்பரோ' என்கிறார்; இவ்விரண்டற்கும் வேற்றுமை யாது ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'மேலே' என்று தொடங்கி. அதாவது-கற்கையாவது. ஊற்றிருக்கும்படி-மாறாதே தங்கியிருக்கும்படி.

3. 'ஆயின், ஓர் ஆசாரியனிடத்தில் ஐயம் திரிபுகள் அறக் கற்றவனுக்கு ஒழியக் கேட்டவனுக்கும் உஜ்ஜீவனம் உண்டோ ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நடு இருந்த' என்று தொடங்கி. இருவர்க்கும்-கற்றவனுக்கும் கேட்டவனுக்கும். பலம் - பகவானை அடைதல்.

4. 'நன்று; கல்லாதவனுக்குக் கேட்பதற்குதான் அதிகாரம் உண்டோ ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கற்றிலனாகிலும்' என்று தொடங்கி.

'கற்றில னாயினும் கேட்க; அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை.'

என்பது, திருக்குறள்.

உண்டே அன்றே? [1] கற்றுத் தெளியக் கண்ட பொருளைக் கேட்டு நம்பியிருத்தல். [2] கல்வியும் அதன் பலத்தின் உருவமான கைங்கரியமும் சேரப் பெற்றிலன் ஆகிலும், ஆசாரியன் பக்கலிலே ஓர் அர்த்தத்தைக் கேட்ட மாத்திரமாய் இருந்தாலும் தனக்கு ஓர் ஆபத்திலே உதவுகைக்கு ஒரு குறை இல்லை. [3] இனி, தன்னிழவு, பிறர்க்குச் சொல்லச் சத்தி இல்லாமையும், தன் நெஞ்சு தெளியாமையால் வருவதுவுமே அன்றே உள்ளது? கேட்பார்கள் - [4] செவியில் தொளை யுடையவர்கள். பகவத் குணங்களைக் கேட்கை அன்றே செவிக்குப் பிரயோஜனம்? 'கேளாச் செவிகள் செவி அல்ல கேட்டாமே' என்று நின்றதே அன்றே? [5] எறும்பு வளையைப் போன்றதே அன்றே?

---

1. மேலே கூறியதனை விவரணம் செய்கிறார், 'கற்று' என்று தொடங்கி.

2. 'நடுவிருந்த நான்கு நாள்களும்' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'கல்வியும்' என்று தொடங்கி. அதன் பலத்தின் உருவமான கைங்கரியமாவது, பிறரையும் தங்களைப் போன்று பயிற்சிக்கு அதிகாரிகளாக்கி இறைவன் திருவடிகளிலே சேர்த்து, அவனுக்கு முகமலர்ச்சியை உண்டாக்குதல்.

3. கேட்டவனுக்கு, இப்படிப் பலம் உண்டானதைப் போன்று இங்கு இருக்கிற நான்கு நாள்களும் இரண்டு துக்கமும் உண்டு என்கிறார் 'இனி' என்று தொடங்கி.

4. 'கேசவன் கீர்த்தி அல்லால் மற்றுங் கேட்பரோ?' என்கையாலே, செவிக்குப் பயன் இது என்கிறார், 'செவியில் தொளை' என்று தொடங்கி.

'செவிப்பயன்' என்றதன் மறுதலையால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'கேளாச் செவிகள்' என்று தொடங்கி.

> 'நீள்வான் குறளுருவாய் நின்றிரந்து மாவலிமண்
> தாளால் அளவிட்ட தக்கணைக்கு மிக்கானைத்
> தோளா மணியைத் தொண்டர்க் கினியானைக்
> கேளாச் செவிகள் செவியல்ல கேட்டாமே.'

என்பது, பெரிய திருமொழி.

> 'கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
> தோட்கப் படாத செவி.'

என்பது, திருக்குறள்.

5. 'செவி அல்ல என்பது என்? தொளை இருக்கின்றதே?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'எறும்பு வளையை' என்று தொடங்கி.

> 'தவப்பொழி மாரி காப்பத் தடவரைக் கவிகை அன்று
> கவித்தவன் கோயில் செல்லாக் கால்மரத் தியன்ற காலே;
> உவப்பினின் அமுத மூறி ஒழுகுமால் சரிதங் கேளாச்
> செவித்தொளை நச்சு நாகம் செறிவதோர் தொளைமற் றுமால்.'

என்பது, பாகவதம், சௌனகாதியர் அன்பினிலை உரைத்த அத்தியாயம்.

கேசவன் கீர்த்தி அல்லால் - [1]பகைவர்களை அழிக்குந் தன்மை யனுன ஸ்ரீ கிருஷ்ணன் கீர்த்தி அல்லது வேறே சிலவற்றைக் கேட் பரோ ? [2]பருவம் நிரம்பிக் கற்ற பின்பு அன்று விரோதிகளைப் போக்கியது ; பூதனை தொடக்கமான விரோதிகளைத் தொட்டிற் பருவத்தே அன்றோ போக்கியது ? [3]விரோதிகளை அழிப்பதுதான் அறிந்ததனுல் அன்று ; பொருளின் உண்மையாலேயே பாதகமாய் இருக்கிறபடி. நஞ்சு கொல்லுவது அறிவு உண்டாய் அன்றே ? 'நன்ருகத் திறந்த வாயையுடையவனும் மஹா பயங்கரமானவனு மான அந்தக் கேசி என்னும் அசுரன் இடியேறு உண்ட மரம்போன்று கிருஷ்ணனுடைய திருக்கரத்தால் இரண்டாகச் செய்யப்பட்டவனய்க் கீழே விழுந்தான்,' என்கிறபடியே, கேசியானவன் வாயை அங்காந்து கொண்டு கண்டார் எல்லாரும் நடுங்கும்படி வந்து தோற்ற, இளைஞு ராய் இருப்பார் துவாரம் கண்ட இடத்தே கை நீட்டக் கடவர்களாய் இருப்பார்கள் அன்ரே ? அந்த வாசனையாலே இவன் வாய்க்குள்ளே கையை நீட்ட, புதிதான அனுபவத்தால் கை விம்ம வளர்ந்து கொடுத்தது ; அப்போது இடியேறு உண்ட மரம்போலே இருபிளவாய் விழுந்தான். மற்றுங்கேட்பரோ - [4]மேலே கூறிய இராமனுடைய சரிதையைத்தான் கேட்பரோ ? [5]இவர் சுபாவம் இருந்தபடி என் ?

---

1. 'கிருஷ்ணன் கீர்த்தி' என்னுமல், 'கேசவன் கீர்த்தி' என்ற தற்குக் கருத்து அருளிச்செய்கிருர், 'பகைவர்களை' என்று தொடங்கி.

2. பகைவர்களை அழிப்பது சீலமாக இருக்கிறபடியை விவரிக்கிருர் 'பருவம்' என்று தொடங்கி. 'கற்ற பின்பு அன்று' என்றது, 'ஞானம் பிறந்த பின்பு அன்று' என்றபடி.

3. மேலே கூறியதனை விவரணம் செய்கிருர், 'விரோதிகளை' என்று தொடங்கி. உதாரணமுகத்தால் விளக்குகிருர், 'நஞ்சு' என்று தொடங்கி. கேசியைக் கொன்றதற்குப் பிரமாணம் காட்டுகிருர், 'நன்ருக' என்று தொடங்கி.

'வ்யாதிதாஸ்ய: மஹா ரௌத்ர: ஸ: அஸுர: க்ருஷ்ணபாஹுநா
நிபபாத த்விதாபூத: வைத்யுதேந யதா த்ரும:'

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 5. 16 : 14. இந்தச் சுலோகத்தில், பாஹுப்யாம் என்னுமல் 'பாஹுநா' என்றதற்கும், 'த்விதாபூத:' என்றதற்கும் கருத்து அருளிச்செய்கிருர், 'இளைஞராயிருப்பார்' என்று தொடங்கி.

4. 'மற்றும்' என்பதற்கு, 'வேறு விஷயங்களை' என்று மேலே பொருள் அருளிச்செய்தார்; வேறு அவதாரங்களை என்று பொருள் அருளிச் செய்கிருர், 'மேலே கூறிய' என்று தொடங்கி.

5. வியாக்கியாதாவின் ஈடுபாடு, 'இவர் சுபாவம்' என்று தொடங்கும் வாக்கியம்.

'இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ?' என்றார் மேல்; இங்கே, 'கேசவன் கீர்த்தி அல்லால் மற்றும் கேட்பரோ?' என்னாநின்றார்; 'இதுதனக்கு அடி என்?' என்னில், [1] அந்த அவதாரத்தினை நினைத்த போது [2] 'தயரதற்கு மகன்தன்னை அன்றி மற்றிலேன் தஞ்சமாக' என்பர்; இந்த அவதாரத்தை நினைத்த போது 'நம் கண்ணன் கண் அல்லது இல்லை ஓர் கண்ணே' என்பர்; இப்படி இழிந்த துறைகள்தோறும் அழுந்த வல்லார் ஒருவர் அன்றோ? [3] ஒவ்வொரு குணத்தை அனுபவிக்கப் புக்கால் வேறு குணங்களில் கால் வாங்கமாட்டாதவாறு போலே ஆயிற்று, ஒவ்வோர் அவதாரத்தில் இழிந்தால் மற்றை அவதாரங்களில் போகமாட்டாமையும்.

கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையும் - [4] இங்குக் 'கேட்பார்' என்றது, மேலே 'கேட்பார்' என்றது போன்று அன்று; கீழ்மை வசவுகளையே கேட்பாரைக் குறித்தது இங்கு. பகவானுடைய நிந்தைக்கு ஜீவனம் வைத்துக் கேட்கும் தண்ணியவர்களுங்கூடப் பொறுக்கமாட்டாமை செவி புதைத்து, 'இத்தனை அதிரச் சொன்னாய், இப்படிச்சொல்லப் பெறாய் காண்' என்று சொல்லும்படியான வசவு

---

1. ஒவ்வோர் அவதாரத்திலும் இவர்க்கு உண்டான பிராவண்யத்தின் மிகுதியைச் சொல்லுகிறது ஆகையாலே, விரோதம் இல்லை என்றுகொண்டு விடை அருளிச்செய்கிறார், 'அந்த அவதாரத்தினை' என்று தொடங்கி. தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் தாம் ஒவ்வோர் அறத்தையும் பற்றிக் கூறுமிடத்து 'அவ்வறத்தினுங்கு உயர்ந்தது பிறிது ஒன்று இல்லை' என்று கூறிச்செல்லுதலும் ஈங்கு நினைவு கூர்தல் தகும். மஹாமதிகளுக்கு இங்ஙனம் கூறுதல் இயல்பு.

2. 'தயரதற்கு' என்பது, திருவாய். 3. 6 : 8. 'நம் கண்ணன்' என்பது, திருவாய். 2. 2 : 1.

3. ஒவ்வோர் அவதாரத்திலும் இவர்க்கு உண்டாண பிராவண்யத்தின் மிகுதியைத் திருஷ்டாந்த முகத்தால் காட்டுகிறார், 'ஒவ்வொரு குணத்தை' என்று தொடங்கி.

4. 'பகவத் குணங்களைக் கேட்பார் செவி சுடு' என்றால் இவனுடைய வசவுகளின் கொடுமை சித்தியாது என்று திருவுள்ளம் பற்றிக் 'கேட்பார்' என்றதற்கு வேறு பொருள் அருளிச்செய்கிறார், 'இங்கு' என்று தொடங்கி. வில்லி பாரதம், இராயசூயச் சருக்கம், 114 முதல் 127 முடியவுள்ள செய்யுள்களைப் படித்தறிதல் தகும் இங்கு.

களேயே வைதல். 'அநுகூலராய் இருப்பார்க்கும் உடலின் சேர்க்கை யாலே தம்மை அறியாமலும் ஒரு தீச்செயல் விளையும் அன்றே? அப்படியே இவனுக்கும் தன்னை அறியாமலே ஒரு நல்வார்த்தையும் கலசுமோ?' என்னில், 'அதுவும் இல்லை' என்பார், 'வசவுகளே வையும்' என்கிறார். அதற்கு அடி சொல்லுகிறார் மேல்: சேண்பால் பழம்பகைவன் - [1]'மிகவும் ஜன்மப் பகைவன்' என்றபடி; [2]இந்தப் பிறவியே அன்றிக்கே முற்பிறவிகளிலும் பகைவனாய்ப் போருகிறான் அன்றோ? என்றது, 'இவன் ஒவ்வொரு பிறவியிலும் செய்த பகைச் செயல்களுக்கு ஓர் அளவு இல்லை அன்றோ?' என்றபடி. இப்படிப் பட்ட பிறவிகள்தாம் பல. [3]அந்த அந்தப் பிறவிகளில் உண்டான காலத்தின் மிகுதியும், செய்த பகைச்செயலின் மிகுதியும், இவை எல்லாவற்றையும் நினைக்கிறது, பகையினுடைய பழமையாலே. இதனால், 'நினைவு இல்லாமலே சொல்லிலும் வாசனையாலே தப்பாது,' என்கை. [4]அன்று ஈன்ற கன்று அப்போதே தாய் முலையிலே வாய் வைக்கும்: அது அந்தப் பிறவியின் வாசனை கொண்டு அன்றே? இவனுக்கும் இப்பிறவியிலே பகவானை நிந்தை செய்வதற்குக் காரணம் முற்பிறவிகளின் வாசனை அன்றோ?

திருவடி தாள்பால் அடைந்த-எல்லாப் பொருளுக்கும் சுவாமி யான கிருஷ்ணனுடைய திருவடிகளின் பக்கத்தைக் கிட்டின.

---

1. 'சேட்பால் பழம்பகைவன்' என்றதற்குக் கருத்து அருளிச் செய்கிறார், 'மிகவும்' என்று தொடங்கி. சேண் பழம்பகையைப் பாலாக வுடையவன்; 'சேண்' என்று மிகுதியாய், 'மிகவும் பழையதான பகையைச் சுபாவமாகவுடையவன்' என்பது பொருள்.

2. 'மிகவும் ஜன்மப் பகைவனானபடி எங்ஙனே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இந்தப் பிறவியே' என்று தொடங்கி.

இங்கு, வில்லி பாரதம், இராயசூயச் சருக்கம், 142 முதல் 150 முடிய வுள்ள செய்யுள்களைக் காண்க.

3. பகையினுடைய பழைமை கூறியதற்குப் பயனைத் தெரிவிக்கிறார், 'அந்த அந்த' என்று தொடங்கி.

4. 'இந்தப் பிறவியின் வாசனை ஆனாலோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அன்று' என்று தொடங்கி.

'பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலை;—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தரோ தற்செய்
கிழவனை நாடிக் கொளற்கு.'

என்பது நாலடியார்.

[1]சாயுஜ்ய லக்ஷண மோக்ஷமாகிறதுதான் இன்னது என்கிறது. என்றது, இடையீடு இன்றிக்கே கிட்டி நின்று நித்திய கைங்கரியம் செய்யப்பெறுதல் என்பதனைத் தெரிவித்தபடி. [2]'பரம்பொருளை அறிந்தவன் பரம்பொருள் போன்று ஆகிறான்,' என்றும், [3]'மேலான ஒப்புமையைப் பெறுகின்றான்' என்றும், [4]'தம்மையே ஒக்க அருள் செய்வர்' என்றும், [5]'என்னுடைய ஒப்புமையை அடைந்தவர்' என்றும், [6]'பரமாத்துமாவோடு ஒத்தவன்' என்றும் சொல்லுகிற வற்றால், வஸ்து ஐக்யம் சொல்லுகிறது அன்று; பேற்றில் வந்தால் அவனோடு இவனுக்கு எல்லா வகையாலும் ஒப்புமை உண்டு என்றது. [7]'உலகத்தைப் படைத்தல் முதலியன நீங்கலாக' என்றும், அனுபவத்தில் பரமாத்துமாவோடு ஒப்புமை கூறுகிற காரணத்தாலும்' என்றும் சொல்லுகையாலே. [8]சாயுஜ்யமாகிறது, 'அவனோடு ஒன்றும்' என்கிறது அன்று: அவன் திருவடிகளிலே கைங்கரியம்

---

1. 'தாள்பால் அடைந்த' என்கையாலே, சாயுஜ்யமாவது ஐக்கியம் அன்று என்று பரிகரிக்கிறார் 'சாயுஜ்ய' என்று தொடங்கி.

2. அதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார், 'பரம்பொருளை' என்று தொடங்கி.

'பிரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி' என்பது, முண்டகோபநிடதம், 3: 2.

'ப்ரஹ்மைவ' என்றவிடத்தில் ஏவகாரம், 'விஷ்ணுரேவ பூத்வா' என்ற இடத்திற்போன்று, 'ஸாம்யம் உபைதி' என்பது போன்ற வசனங்கட்குத் தகுதியாக, 'இவ' என்ற சொல்லின் பொருளைக் காட்டுகிறது.

3. 'பரமம் ஸாம்யம் உபைதி' என்பது, முண்டகோபநிடதம், 3.1: 3.

4. 'தம்மையே' என்பது. பெரிய திருமொழி

5. 'மம ஸாதர்ம்யமாகதா:' என்பது, ஸ்ரீ கீதை, 14 : 2.

6. 'ஸமானோ ஜ்யோதிஷா' என்பது, போதாயன விருத்தி.

7. மோக்ஷம் என்பது, ஐக்கியம் அன்று என்பதற்கு, வேறு பிரமாணமும் காட்டுகிறார், 'உலகத்தை' என்று தொடங்கி.

'ஜகத்வியாபாரவர்ஜம்', 'போகமாத்ர ஸாம்ய லிங்காச்ச' என்பன, பிரஹ்ம மீமாம்சை

8. 'நித்தியகைங்கரியம் செய்யப்பெறுதல்' என்று மேலே கூறியதனை விவரிக்கிறார், 'சாயுஜ்யமாகிறது' என்று தொடங்கி.

'ஆதிப் பரனோடுஒன் றாம்என்று சொல்லும்அவ் வல்லவெல்லாம்
வாதில்வென் றான்எம் மிராமா நுசன்மெய்ம் மதிக்கடலே'

என்பது, இராமாநுச நூற்றந்தாதி, 58.

செய்யும் என்கிறது; [1]'யாவர் மிக்க பத்தியையுடையவர்களாய் உபாசனை செய்கிறவர்களாய்ச் சமானமான உயர்ந்த ஜீவனத்தை அடைந்தார்களோ, அவர்கள் விரோதி கழிந்தவர்களாய் எப்பொழுதும் என்னுடைய தொண்டர்கள் ஆகிறார்கள்,' என்றும் சொல்லுகையாலே. தன்மை அறிவாரை அறிந்துமே - [2]கேட்பார்க்கு விஷயம் உண்டாக்குகிறார், [3]இந்தக் குணஞானமுடையாரை அறிந்து வைத்தும் கேட்பார்கள் கேசவன் கீர்த்தி அல்லால் மற்றுக் கேட்பரோ?

[4]'இவன், திருவடிகளைக் கிட்டிற்று என்கொண்டு?' என்னில், திருநாமங்களைச் சொல்லித் துவங்கரிக்கையும், கையும் திருவாழியுமான அழகை மரணகாலத்தில் நினைக்கவும் கூடும் அன்றோ? [5]மேலெழ ஆராய்ந்து பார்த்தால், சில காரணங்கள் சொல்லலாம்; இதற்கு இனி ஒரு காரணம் தேடிச் சொல்லுகையாவது, அவன் கிருபைக்கு ஒரு கொத்தை சொல்லுகையன்றோ? [6]'சர்வேஸ்வரன் கிருபையாலே சிசுபாலன் திருவடிகளைப் பெற்றான்' என்று ஆழ்வார்களும் இருடிகளும் எல்லாரும் சொல்லிக்கொண்டு போருவர்கள்

---

1. 'சாயுஜ்யம் என்பது, கைங்கரியத்தைச் சொல்லும்,' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'யாவர்' என்று தொடங்கி.

'ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே தீவ்ரபக்தா: தபஸ்விந:
கிங்கரா மம தே நித்யம் பவந்தி நிருபத்ரவா:'

என்பது, பரமஸம்.

2. 'தன்மை அறிவாரை அறிந்துமே' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கேட்பார்க்கு' என்று தொடங்கி. என்றது, ஓர் ஆசாரியன் பக்கலிலே கேட்கவேண்டுகையாலே, முன்னே 'கேட்பார்கள்' என்றவர்களுக்குத் 'தன்மை அறிவாரை' என்று கேட்கைக்கு விஷயம் உண்டாக்குகிறார் என்றபடி.

3. மேலே கூறியதனை விவரிக்குமுகத்தால் அந்வயமும் காட்டுகிறார், 'இந்தக் குணஞானமுடையாரை' என்று தொடங்கி.

4. 'பகைவனான சிசுபாலன் திருவடிகளைக் கிட்டுகைக்குக் காரணம் யாது?' என்னும் சங்கையை அநுவதித்துப் பரிகரிக்கிறார் 'இவன்' என்று தொடங்கி. துவங்கரிக்கை - 'நீ' என்று எதிரிட்டுப் பேசுதல்.

5. 'துவங்கரிக்கையும், வடிவழகை நினைத்தலுமாகிற இவற்றைக் காரணங்களாகச் சொல்ல வேண்டுமோ? 'சத்ருச ஸாதனம் உண்டு' என்று காரியத்தைக் கொண்டு அநுமித்தாலோ?' என்கிற சங்கையைத் திருவுள்ளம் பற்றிப் பரிகரிக்கிறார் 'மேலெழ' என்று தொடங்கி.

6. 'நிர்ஹேதுகம் என்கிறது என்கொண்டு?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சர்வேஸ்வரன்' என்று தொடங்கி.

அன்றே? [1] இவன்பக்கலிலே பரமபத்தி அளவாக உண்டானாலும், 'அதற்கும் கரணங்களின் சேர்க்கையைக் கொடுத்தான் ஈஶ்வரன் அன்றே?' என்று அதுவும் கழியாநிற்க, வருந்தி இல்லாதது ஒன்று உண்டாக்குகை பணி அன்று. [2] **ஆளவந்தார்**, 'சிசுபாலன் பெற்றிலன்காண்' என்று அருளிச்செய்வர்; 'அது என்?' என்னில், 'இதற்கு அடியாகச் சொல்லலாவது ஒரு சாதனம் இவன் கையில் இல்லாமையாலே; [3] நாட்டை நலியாமைக்குக் கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றி எறிந்தான் அத்தனைகாண்' என்று அருளிச்செய்வர். [4] 'காகம், திருமுன்பே எய்த்து விழுகையாலும், இவன், திருநாமத்தைச் சொல்லித் துவங்கரிக்கையாலும், அவன் குணங்கள் நினைத்தபடி விரிவாகப் பெறாதே குறைந்தவைகள் ஆயிற்றின' என்றே அன்றோ சொல்லுகிறது? [5] 'காகாசுரனிடத்திலும் சிசுபாலனிடத்திலும் சிறிது குணமாயினும் இருந்ததனால் குறைவுபட்டதான் தேவரீருடைய பொறுமை' என்கையாலே. [6] 'பலபல நாழம் சொல்லிப் பழித்த சிசுபாலன் தன்னை, அலைவலைமை தவிர்த்த அழகன்' என்றார் அன்றோ பெரியாழ்வாரும்? 'வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும்' என்றார் திருமழிசையாழ்வார்.

---

1. *'துவங்கரிக்கை முதலானவைதாம் ஒத்த சாதனமானாலோ?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவன் பக்கல்' என்று தொடங்கி.*

2. *'நன்று; சிசுபாலனைப் போன்று நாமும் வைது மோக்ஷம் பெறலாமோ?' எனின், 'அது மோக்ஷம் அன்று' என்கைக்கு ஓர் ஐதிஹ்யம் காட்டுகிறார், 'ஆளவந்தார்' என்று தொடங்கி. 'சாதனம் இவன் கையில் இல்லாமையாலே' என்றது, 'பிரார்த்தித்தல் இல்லாமையாலே' என்றபடி.*

3. *'எங்ஙனமாயினும் அவன் பெற்றானே?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நாட்டை' என்று தொடங்கி. கொற்றவன் - சுவாமி.*

4. *'இதற்கு இனி ஒரு காரணத்தைத் தேடிச் சொல்லுகையாவது அவன் கிருபைக்கு ஒரு கொத்தை சொல்லுகை' என்று மேலே அருளிச்செய்ததற்குப் பிரமாணம் காட்டுவதற்குத் திருவுள்ளம் பற்றி, அந்த அர்த்தத்தை அருளிச்செய்கிறார், 'காகம்' என்று தொடங்கி.*

5. *பிரமாணத்தை அருளிச்செய்கிறார், 'காகாசுரனிடத்திலும்' என்று தொடங்கி.*

*'பலிபுஜி சிசுபாலே தாத்ருக் ஆகஸ்கரே வா*
*குணலவ ஸஹவாஸாத் த்வத்க்ஷமா ஸங்குசந்தீ'*

*என்பது*, ஸ்ரீரங்கராஜஸ்தவம், 3 : 97.

6. *'சர்வேஶ்வரன் கிருபையாலே சிசுபாலன் திருவடிகளைப் பெற்றான் என்று ஆழ்வார்கள் அருளிச்செய்வர்' என்றார் மேல்; 'அருளிச்செய்தது எங்கே?' என்ன, காட்டுகிறார், 'பலபல' என்று தொடங்கி. இது*, பெரியாழ்வார் திருமொழி, 4. 3 : 5. *'வைது நின்னை' என்பது*, **திருச்சந்த விருத்தம், 111.**

'இப்பாசுரத்தில் ஏற்றமாகிறது, 'தன்னால் அல்லது செல்லாமை விளைந்தாரைக் கூடக் கொடு போனான்' என்றது ஓர் ஏற்றமோ, தன்பக்கல் அபராதம் செய்த சிசுபாலனுக்கும் அவர்கள் பேற்றைக் கொடுத்ததற்கு ?' என்பதாம். (3)

710

*தன்மை அறிபவர் தாம்அவற்கு ஆளன்றி ஆவரோ?*
*பன்மைப் படர்பொருள் ஆதுமில் பாழ்நெடுங் காலத்து*
*நன்மைப் புனல்பண்ணி நான்முக னைப்பண்ணித் தன்னுள்ளே*
*தொன்மை மயக்கிய தோற்றிய சூழல்கள் சிந்தித்தே.*

பொ - ரை: 'பல விதமாகப் படர்ந்திருக்கும் பொருள்களுள் ஒன்றும் இல்லாதபடி அழிவு அடைந்த காலத்து, நன்மையையுடைய தண்ணீரை உண்டாக்கிப் பின்னர்ப் பிரமனை உண்டாக்கி, முன் வாசனை அழியும்படி தன்னுள்ளே கலந்திருந்த எல்லாப் பொருள்களையும் தோற்றுவித்த விரகுகளைச் சிந்தித்து, உலக காரணனாய் இருக்கும் தன்மையை அறிகின்றவர்கள் தாம், காரணப்பொருளான கண்ணபிரானுக்கு ஆள் ஆவரே அன்றி மற்று ஒருவர்க்கு ஆள் ஆவரோ ?' என்றபடி.

வி – கு: மயக்கிய - கலந்து கிடந்த பொருள்கள். சூழல் - விரகு. 'சிந்தித்து அறிபவர் அவற்கு ஆள் அன்றி ஆவரோ?' என்க. அவற்கு – அவனுக்கு; அகாரவாச்சியனான கண்ணபிரானுக்கு.

ஈடு: நான்காம் பாட்டு. [1] 'சிசுபாலனுக்குத் தன்னைக் கொடுத்தது ஓர் ஏற்றமோ, பிரளயத்திலே மங்கிக் கிடந்த உலகத்தை உண்டாக்கின இந்த மஹாகுணத்துக்கு?' என்கிறார். சிசுபாலனைக் காட்டிலும் குறைந்தார் இலர் அன்றோ சம்சாரிகளில் ?

---

*'வைதா ரையும்முன் மலைந்தா ரையும்மலர்த் தாளில்வைத்தாய்*
*மொய்தாரை யத்தனைத் தீங்கிழைத் தேனையும் மூதுலகில்*
*பெய்தாரை வானிற் புரப்பான் இடபப் பெருங்கிரியாய்!*
*கொய்தாரை வேய்ந்த திருவடிக் கீழ்த்தொண்டு கொண்டருளே.'*

என்பது, அழகரந்தாதி.

1. *பின் மூன்று அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'உலகத்தைப் படைத்தது மஹா குணமானபடி யாங்ஙனம்? அவனைப் போன்று அனைவரும் வைதுகொண்டிருந்தார்களோ ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சிசுபாலனை' என்று தொடங்கி.*

தன்மை அறிபவர்தாம் - உண்மை நிலையினை அறியுமவர்தாம். என்றது, 'இதனுடைய படைப்பு [1] அவனுக்காகக் கண்டது என்று இருக்குமவர்கள்' என்றபடி; [2] 'காட்டில் வசிக்கும்பொருட்டே படைக்கப்பட்டாய்' என்பது போலே. அன்றிக்கே, [3] 'உலகத்திற்குக் காரணமாகவுள்ள பொருளே உபாசிக்கத் தக்கது என்று அறியுமவர்கள்' என்னுதல். 'காரணப்பொருளே தியானம் செய்யத் தக்கது' என்பது சுருதி. 'வேதத்தின் பூர்வபாகத்தின் பொருளை விசாரித்தபின் ஞானமுடையவனாய்ப் பிரஹ்மத்தை அறியக்கடவன்' என்று, 'இந்த உலகத்திற்குப் படைப்பு அளிப்பு அழிப்பு என்னும் முத்தொழில்களும் எதனிடத்தினின்று உண்டாகின்றனவோ, அது பிரஹ்மம்' என்றுநின்றதே அன்றோ? அவற்கு ஆள் அன்றி ஆவரோ - [4] கரண களேபரங்களைக் கொடுத்தது தனக்கு அடிமை

---

1. 'அவனுக்காகக் கண்டது' என்றது, 'அவனுடைய கைங்கரியத்துக்கு உடலாகப் படைக்கப்பட்டது' என்றபடி.

> 'கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை.'

என்பது, திருக்குறள்.

> 'திருமால்சீர் கேளாத செவிஎன்ன செவியே!'
> 'நாராய ணாவென்னா நாவென்ன நாவே!'
> 'கண்ணனைக் காணாத கண்ணென்ன கண்ணே!'

என்பவை, சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை.

2. மேலே கூறியதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'காட்டில்' என்று தொடங்கி.

> 'ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 40 : 5. இது இளையபெருமாளைப் பார்த்துச் சுமித்திரா தேவி கூறியது.

3. 'தன்மை அறிபவர்' என்பதற்கு, வேறும் ஒரு பொருளும். அதற்குப் பிரமாணங்களும் அருளிச்செய்கிறார், 'உலகத்திற்கு' என்று தொடங்கியும், 'காரணப் பொருளே' என்று தொடங்கியும், 'வேதத்தின்' என்று தொடங்கியும்.

> 'காரணம் து த்யேய:' என்பது, சுருதி.
> 'அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா, ஜந்மாத் யஸ்ய யத:'

என்பவை, பிரஹ்ம சூத்திரம். 1. 1 : 1, 2.

4. 'இதனுடைய படைப்பு அவனுக்காகக் கண்டது' என்று மேலே அருளிச்செய்ததற்குத் தகுதியாகப் பொருள் அருளிச்செய்கிறார், 'கரண களேபரங்களை' என்று தொடங்கி. 'இப்போது, கரண களேபரங்களைக் கொடுத்தவற்கு ஒழிய வேறு ஒருவர்க்கு ஆள் ஆவரோ?' என்பது பதப்பொருளாம். கரணம் - உறுப்புகள். களேபரம் - உடல்.

செய்கைக்கு அன்றோ? பன்மைப் படர்பொருள் ஆதும் இல் பாழ் நெடுங்காலத்து - தேவர்கள் முதலான வேற்றுமையாலே பல வகைப் பட்டுக் கர்மங்களுக்குத் தகுதியாக விரிந்த பொருள்களுள் ஒன்றும் இல்லாத காலத்து. என்றது, 'தேவர் மனிதர் திரியக்குகள் முதலான உருவங்களாக உண்டாகக்கூடிய பொருள்களுள் ஒன்றும் இல்லாத படி பாழ் கூவிக் கிடக்கிற நெடுங்காலத்து' என்றபடி. [1] ஈஸ்வரன் உலகத்தை அழித்து நெடுங்காலம் பாழ் கூவிக் கிடக்கும்படி இட்டு வைப்பான். பயிர் செய்கிறவன் விளைநிலம் உவர் கழியும்படி நீரைத் தேக்கி வைக்குமாறு போலே, இவற்றினுடைய துர்வாசனை போகைக் காகப் படைத்ததைப் போன்ற காலம் அழித்திட்டு வைப்பன். [2] கண்ணுக்கு இட ஒரு துரும்பு இல்லாதபடி சத்து என்ற நிலையுடன் கூடிய காலத்து.

நன்மைப் புனல் பண்ணி - [3] அழிப்பதற்குப் பரப்பின நீர் போல அன்று. 'தண்ணீரையே முதலில் படைத்தான்' என்கிறபடியே, முதன்முன்னம் தண்ணீரைப் படைத்து. நான்முகனைப் பண்ணி - [4] இவ்வளவும் வர அசித்தைக்கொண்டு காரியம் கொண்டு, 'இவை இரண்டும் நம் புத்தி அதீனமான பின்பு இனிச் சித்தையும் கொண்டு காரியம் கொள்ளுவோம்' என்று பார்த்துப் பிரமனையும் படைத்து. [5] 'எவனுக்கு ஆத்துமாக்கள் எல்லாம் சரீரமோ,' 'எவனுக்கு மண் முதலியவை சரீரமோ' என்கிறபடியே, இரண்டும் இவனுக்கு உறுப்

---

1. 'நெடுங்காலம் பாழாகவிட்டு வைப்பது எதற்காக?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஈஸ்வரன்' என்று தொடங்கி.

2. 'ஆதும் இல் பாழ் நெடுங்காலத்து' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'கண்ணுக்கு' என்று தொடங்கி. என்றது, 'கண்ணாலே காண்கைக்கு ஒன்றும் இல்லாதபடி' என்றவாறு.

3. 'நன்மை' என்ற சொல்லுக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'அழிப்பதற்கு' என்று தொடங்கி. முதலில் தண்ணீரைப் படைத்ததற்குப் பிரமாணத்தை அருளிச்செய்கிறார், 'தண்ணீரையே' என்று தொடங்கி.

'அப ஏவ ஸஸர்ஜாதௌ' என்பது, மநுஸ்மிருதி, 1 : 8.

4. 'இவ்வளவும் வர' என்றது, 'அண்ட சிருஷ்டி பர்யந்தம்' என்றபடி. இவை இரண்டும் - சித்தும் அசித்தும்.

5. 'இவை இரண்டும் அவன் 'புத்தியதீனம்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'எவனுக்கு' என்று தொடங்கி. 'யஸ்ய ஆத்மா ஸரீரம்' 'யஸ்ய ப்ருதிவீ ஸரீரம்' என்பன, பிருஹதாரண்ய உபநிஷத்.

பாய்ப் பரதந்திரமாய் அன்றோ இருப்பன ? [1] 'எவன் பிரமனை முன்பு படைத்தானோ' என்பது சுருதி. [2] ஒரு குழமணனைப் பண்ணி என் பாரைப் போலே 'நன்மைப் புனல் பண்ணி நான்முகனைப் பண்ணி' என்கிறார். தன்னுள்ளே - தன்னுடைய சங்கற்பத்தின் ஆயிரத்தில் ஒரு கூற்றிலே. தொன்மை மயக்கிய தோற்றிய சூழல்கள் சிந்தித்து - பழையதாக, 'ஸதேவ - சத் ஒன்றே' என்கிறபடியே, 'தான்' என்கிற சொல்லுக்குள்ளேயாம்படி பண்ணியிட்டு வைத்து, பின்னர் 'பஹுஸ்யாம் - பல பொருளாக ஆகக்கடவேன்' என்கிற படியே, இவற்றைத் தோற்றுவித்த விரகுகளைச் சிந்தித்து, உண்மை நிலையை அறியுமவர்கள் அவனை ஒழிய வேறே சிலர்க்கு ஆள் ஆவரோ ?

[3] 'விரோதியான சிசுபாலனுக்குத் தன் திருவடிகளைக்கொடுத் தான்' என்றது, 'இது ஓர் ஏற்றமோ விரோதிகளை உண்டாக்கித் தன்னை வைவித்துக்கொண்ட நீர்மைக்கு ?' என்கிறார்.

'பன்மைப் படர் பொருள், தன்னுள்ளே தொன்மை மயக்கிய, ஆதும் இல் பாழ் நெடுங்காலத்து நன்மைப் புனல் பண்ணி நான் முகனைப் பண்ணி, தோற்றிய சூழல்கள் சிந்தித்து, தன்மை அறிபவர் தாம் அவற்கு ஆள் அன்றி ஆவரோ ?' என்று கூட்டுக. (4)

711

*சூழல்கள் சிந்திக்கில் மாயன் கழல்அன்றிச் சூழ்வரோ ?*
*ஆழப் பெரும்புனல் தன்னுள் அழுந்திய ஞாலத்தைத்*
*தாழப் படாமல் தன்பால்ஒரு கோட்டிடைத் தான்கொண்ட*
*கேழல் திருவுரு வாயிற்றுக் கேட்டும் உணர்ந்துமே.*

பொ-ரை : 'பிரளய வெள்ளத்திலே ஆழ அழுந்திய பூமியைக் காலம் நீட்டிக்காமல், தன் திருமேனியில் ஒரு கொம்பிலே தானே கொண்ட வராகத்தின் அழகிய வடிவான இதனைக் கேட்டும்

---

1. சேதந சிருட்டியில் முதலில் பிரமனைப் படைத்ததற்குப் பிர மாணம் காட்டுகிறார், 'எவன்' என்று தொடங்கி.

'யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்' என்பது, ஶ்வேதாஶ்வ.உப.

2. படைத்தான் என்னாமல், 'பண்ணி' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'ஒரு குழமணனை' என்று தொடங்கி. குழமணன் - மரப்பாவை.

3. மேல் திருப்பாசுரத்தைக்காட்டிலும் இத்திருப்பாசுரத்தின் ஏற்றத்தை அருளிச்செய்கிறார், 'விரோதியான' என்று தொடங்கி.

உணர்ந்தும், தான் உய்வதற்குரிய உபாயங்களைச் சிந்தித்தால், ஆச்சரியமான செயலைச் செய்த எம்பெருமானுடைய திருவடிகளை அல்லாமல் வேறு ஒன்றனைப் பற்றுவரோ?' என்கிறார்.

வி-கு : சூழல் - உபாயம். சூழ்தல் - பற்றுதல். 'ஆழ அழுந்திய ஞாலம்' என்க. ஆற்றெழுக்காகப் பொருள் கூறலுமாம், தாழப்படாமல் - காலம் நீட்டிக்காமல். கேழல் - பன்றி. 'உணர்ந்தும் மாயன் கழல் அன்றிச் சூழ்வரோ?' என்க.

ஈடு : ஐந்தாம் பாட்டு. [1]'உலகத்தைப் படைத்தது ஓர் ஏற்றமோ, படைக்கப்பட்ட உலகத்தைப் பிரளயம் கொள்ள மஹா வராகமாய் எடுத்துக் காத்த குணத்துக்கு?' என்கிறார்.

சூழல்கள் சிந்திக்கில் - [2]தான் தன்னோடு உறவு அற ஜீவிக்கைக்கு உறுப்பான விரகு பார்க்கில். [3]தாங்கள் தாங்கள் விரும்பிய பொருள்கள் சித்திப்பதற்கு விரகுகள் பார்க்கில். மாயன் கழல் அன்றிச் சூழ்வரோ - [4]பாதுகாக்கப்படுகின்ற பொருள்களைப் பாது காத்தல் ஒரு தலையானால் தான் தன்னைப் பேணாதே நோக்கும் ஆச்சரியத்தையுடைய இறைவனது திருவடிகளை அல்லது பற்றுவரோ? ஆழப் பெரும்புனல்தன்னுள் அழுந்திய ஞாலத்தை - [5]'ஆழத்தையுடைத்தான மிக்க தண்ணீரிலே அழுந்தின பூமி' என்னுதல். 'பெரும்புனல் தன்னுள் ஆழ அழுந்திய பூமி' என்னுதல். அழுந்திய ஞாலம் - அண்டப்பித்தியில் சென்று ஒட்டின பூமி. தாழப்படாமல் - தரைப்படாமல்; மங்காமல். என்றது, [6]'உள்ளது கரைந்து போன

---

1. 'கேழல் திருவுருவாயிற்று' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. உபாயம் என்னுமல், 'சூழல்கள்' என்றதற்குக் கருத்து அருளிச் செய்கிறார், 'தான் தன்னோடு' என்று தொடங்கி.

3. 'சூழல்கள்' என்ற பன்மைக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'தாங்கள்' என்று தொடங்கி.

4. 'கேழல் திருவுருவாயிற்று' என்றதனைத் திருவுள்ளம் பற்றி 'மாயன்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'பாதுகாக்கப் படுகின்ற' என்று தொடங்கி.

5. 'ஆழ' என்பதனைப் 'பெரும்புன'லுக்கு விசேடணமாக்கியும், 'அழுந்திய' என்பதற்கு விசேடணமாக்கியும் இரு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார், 'ஆழத்தையுடைத்தான' என்று தொடங்கி.

6. 'அழுந்தியிருக்க, 'தாழப்படாமல்' என்னக் கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'உள்ளது' என்று தொடங்கி.

பின்பு, இனிச் சத்தையும்கூட அழிந்து போக ஒண்ணாது என்று பார்த்து' என்றபடி. தன்பால் ஒரு கோட்டிடைத் தான் கொண்ட - பெரிய பூமியைத் தன் எயிற்றிலே [1] நீலமணி போலே கொண்ட; [2] தன் திரு எயிற்றிலே ஒரு கூற்றிலே கொண்ட. [3] உதாரராய் இருப்பார் நாற்பது பேருக்குச் சோறு இட நினைத்து நூறு பேருக்குச் சோறு சமைக்குமாறு போலே, பாதுகாக்கப்படுகிற பொருள்களின் அளவு அன்றுகாணும் கொண்ட எயிற்றின் பெருமை; [4] வேறு முகத்தாலே காத்தல் அன்றியே, தன் முகத்தாலே எடுத்துக் காத்தபடி. கரைந்து போன பூமி வேண்டிக்கொள்ளச் செய்தது அன்று ஆதலின், '**தான் கொண்ட**' என்கிறார்.

கேழல் திரு உரு ஆயிற்று - [5] அழிவுக்கு இட்ட வடிவிற்கே ஆலத்தி வழிக்க வேண்டி இருந்தபடி. அடியார்களைப் பாதுகாக்க வந்து தன்னைப் பேணாதே ஒழிய ஒழிய அதுதானே நிறம் பெறும்படியாய்க்காணும் இருப்பது; [6] 'மானம் இலாப் பன்றியாம் தேசு' என்னும்படியே. 'மாசு உடம்பில் நீர் வாரா - எங்கேனும் உண்டான அழுக்கும் வந்து சேரும்படி இருப்பது ஒரு வடிவைக்கொண்டு. மானம் இலாப் பன்றியாம் - ஈஶ்வரனுந்தன்மை பின்னாட்டாதபடி இருக்கை. தன் இனங்கள் மோந்து பார்த்துத் '**தன்னினம்**' என்று

1. சுவேத வராஹம் ஆகையாலே, பூமியை 'நீலமணி' என்கிறார்.

2. 'இடை' என்ற சொல்லுக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'தன் திரு எயிற்றிலே' என்று தொடங்கி.

3. 'ஒரு கூற்றிலே கொண்டால் மற்றை இடம் எதற்காக?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'உதாரராய்' என்று தொடங்கி.

4. ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'வேறு முகத்தாலே' என்று தொடங்கி.

5. 'திரு' என்றதற்குத் 'திருமேனியின் அழகு' என்று பொருள் அருளிச்செய்கிறார், 'அழிவுக்கு' என்று தொடங்கி. அழிவுக்கு இட்ட வடிவு - தன் மேன்மையை விட்டு நீர்மையைக் கொள்ளுகையான வராஹ வேடத்துக்கு. 'ஆத்தும குணத்தால் வந்த அழகு' என்று பொருள் அருளிச்செய்கிறார், 'அடியார்களை' என்று தொடங்கி.

6. 'வராஹ நாயனார் அழகியார்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மானமிலாப் பன்றியாம் தேசு' என்று. இது, நாச்சியார் திருமொழி, 11 : 8. பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'எங்கேனும்' என்று தொடங்கி. 'மானமிலா' என்பதற்குப் பொருள், 'ஈஶ்வரனுந்தன்மை' என்று தொடங்கும் வாக்கியம். 'ஆம்' என்பதற்குப் பொருள், 'தன் இனங்கள்' என்று தொடங்கும் வாக்கியம்.

நம்பும்படி அகவாயில் புரை அற்று இருக்கை. [1] மாரீசனுகிய மாய மானை மோந்து பார்த்து 'இராக்கத வாசனை உண்டு' என்று போயின அன்றோ மற்றைய மான்கள்? பன்றியாம் தேசுடை தேவர்-இவ்வடிவு கொண்டிலனுகில் அருமந்த ஒளியை எல்லாம் இழக்குமத்தனை யன்றோ, நித்தியசூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்து அங்கே இருப் பதைக்காட்டிலும் தாழ விட்டதால் வந்த ஏற்றம்?' கேட்டும் உணர்ந்துமே - கேட்டும் மனனம் செய்தும், அதனுலே தம் முயற் சியை விட்டவர்கள் சூழல்கள் சிந்திக்கில் மாயன் கழல் அன்றிச் சூழ்வரோ?

தான் உலகத்திற்குக் காரணனுய் இருத்தல் முதலிய குணங் களுள் ஒன்றும் குறையாதபடி சங்கற்பத்தாலே உலகத்தைப் படைத் தான் என்னுமது ஓர் ஏற்றமோ, பிரளயம் கொண்ட பூமியைத் தன்னுருக் கெடுத்து வேற்றுருக்கொண்டு எடுத்த இந்த உபகா ரத்துக்கு? (5)

712

**கேட்டும் உணர்ந்தவர் கேசவற்கு ஆளன்றி ஆவரோ?**
**வாட்டமி லாவண்கை மாவலி வாதிக்க வாதிப்புண்டு**
**ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந் தார்க்கிடர் நீக்கிய**
**கோட்டங்கை வாமன னுய்ச்செய்த கூத்துகள் கண்டுமே.**

**பொ-ரை:** 'கொடுப்பதில் குறைவு இல்லாத கையையுடையமாவலி வருத்த வருந்தி, கூட்டம் கூட்டமாகச் சென்று இரந்தவர்களாகிய தேவர்களுக்குத் துன்பத்தை நீக்கும்பொருட்டுக் கோட்டம் பொருந்திய கையையுடைய ஸ்ரீ வாமனனுகிச் செய்த செயல்களைக் கண்டும் கேட்டும் உணர்ந்தவர்கள், கேசவனுக்கு ஆள் ஆவரே அன்றி வேறு ஒருவர்க்கு ஆள் ஆவரோ?' என்றபடி.

**வி-கு:** 'வண் (மையில்) வாட்டம் இல்லாத கை' என்க. 'கோட் டம் கை' என்றது, வாங்கும்போது கை வளைந்திருத்தலைக் குறித்தபடி. நீக்கிய 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; நீக்கும் பொருட்டு வாமனன் ஆனுன்.

---

1. *'வராஹமானுல் தன்னினம் என்று மற்றைப் பன்றிகள் நம்ப மாட்டாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'மாரீசனுகிய' என்று தொடங்கி. 'தேசு' என்றதற்கு பாவம், 'இவ்வடிவு' என்று தொடங்கும் வாக்கியம். 'தேவர்' என்பதற்கு பாவம், 'நித்தியசூரி களுக்கு' என்று தொடங்கும் வாக்கியம்.*

ஈடு: ஆறும் பாட்டு. [1]'மேலே கூறிய குணங்கள்தாம் ஓர் ஏற்றமோ, அலம் புரிந்த நெடுந்தடக்கையைக் கொண்டு கோட்டம் கை வாமனனாய் இந்தப் பூமியைக் காப்பாற்றிய மஹா குணத்துக்கு?' என்கிறார்.

கேட்டும் உணர்ந்தவர் - ஓர் ஆசாரியன் ஓர் அர்த்தத்தை உபதேசித்தால் அதனைக் கேட்டு, [2]'அறிந்து இதன்படி ஆகக் கடவன்' என்கிறபடியே, பின்னை அந்த அர்த்தத்தைத் தெளிந்திருக்குமவர்கள். கேசவற்கு ஆள் அன்றி ஆவரோ - [3]புறம்பே அடையத்தக்கவர் இல்லாதபடி தானே அடையத் தக்கவனானவனுக்கு ஒழிய ஆள் ஆவரோ? 'கேசவன்' என்ற பெயர் [4]'பிரமனும் ஈசனுமாகிய நாங்கள் இருவரும் தேவரீருடைய திருமேனியில் உண்டானோம்; ஆதலால், கேசவன் என்ற பெயரையுடையரானீர்,' என்கிறபடியேயாதல் அடர்ந்து நீண்ட மயிர்முடியையுடையவன் என்ற காரணத்தாலாதல் வந்தது. வாட்டம் இலா வண் கை - [5]கொடுத்து மாறக் கடவது அன்றியே, எப்போதும் கொடுக்கையிலே ஒருப்பட்ட கை. [6]இராவணன் முதலாயினோரைப் போன்று தலை அறுத்துப் போகட ஒண்ணாமைக்குக் காரணம் உண்டாகையாலே அழியச் செய்திலன்.

---

1. மேலே கூறிய ஐந்து திருப்பாசுரங்களிலும் கூறிய குணங்களைக் காட்டிலும், இத்திருப்பாசுரத்திற்கூறுகின்ற குணம் ஏற்றமானது என்கிறார், 'மேலே கூறிய' என்று தொடங்கி. 'அலம் புரிந்த' என்பது, திருநெடுந்தாண்டகம், 6. அலம் புரிந்த நெடுந்தடக்கை - இரவலர்கள் மனம் நிறையும்படி கொடுக்க வல்ல பெரிய கை.

2. 'ஏவம் ஜ்ஞாத்வா பவிதும் அர்ஹதி' என்பது. இதனை, 'ஜ்ஞாத்வா ஏவம் பவிதும் அர்ஹதி' என்று பிரித்துக் கூட்டிக்கொள்க.

3. 'பிரமனுக்கும் சிவனுக்கும் காரணன் ஆனவன்' என்ற பொருளிலே பாவம் அருளிச்செய்கிறார், 'புறம்பே' என்று தொடங்கி.

4. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பிரமனும்' என்று தொடங்கி.

'க இதி ப்ரஹ்மணோநாம ஈசோஹம் ஸர்வ தேஹிநாம்
ஆவாம் தவ அங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந்'

என்பது, பாரதம், ஹரிவம்ஸம், கைலாச யாத்திரை.

5. 'வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ என்சில? இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்றால்.'

என்பது கம்பராமாயணம்.

6. இப்போது இவனுடைய கொடையைக் கூறுதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இராவணன்' என்று தொடங்கி.

மாவலி வாதிக்க வாதிப்புண்டு-இது பற்றுசாக அவன் நெருக்க நெருக்குண்டு. ஈட்டம் கொள் தேவர்கள் - [1] கிராமணிகளைப்போலே, ஒருவர் உயர்வு ஒருவர் பொறுதே, தலை அறுப்பாரும் தலை அறுப்பு உண்பாருமாய்த் திரியக் கடவ சாதி அன்றோ? [2] இப்படிச் சேராச் சேர்த்தியாய் இருக்கிறவர்கள் ஆபத்து மிக்கவாறே தங்கள் தங்கள் செருக்கினைப் போகட்டு, எல்லாரும் ஒரு மிடறாய் வந்து விழுந்தார்கள். ஈட்டம் - திரள். சென்று இரந்தார்க்கு இடர் நீக்கிய - [3] கூறு செய்வானும் அம்பலத்தே இருந்தால் 'ஈஸ்வரனும் நம்பக்கல் வரத் தட்டு என்?' என்று இருக்குமாறு போலே, 'எல்லாரும் நம்பக்கல் வரவேணும்' என்று இருந்தவர்கள் தங்கள் ஆபத்தின் மிகுதியினால் அன்றோ செருக்கு உற்றவர்களாய் இருக்கிறவர்கள் திரள வந்து இரந்தது?' என்று திருவுள்ளத்தே கொண்டு அவர்கள் இடரைப் போக்கினபடி. ('பெரியவர் யார்?' என்ற ஐயத்தினால் விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் போரை மூட்டிவிட விஷ்ணு ஜயித்ததனால்) [4] 'விஷ்ணுவை அதிகனாக எண்ணினார்கள்' என்கிறபடியே, ஒரு சொத்தை வில்லை முரித்தபோதாக எம்பெருமான் அறப்பெரியன் என்பது; அல்லாத போது 'ஈஸ்வரோஹம்' என்பதான தேவசாதி பற்களைக் காட்ட, அவர்கள் இடரை நீக்கினபடி.

கோட்டம் கை வாமனனாய் - நீர் ஏற்கக் குவித்த அழகிய கையையுடையவனாய்; [5] 'பொல்லாக் குறள் உருவாய்ப் பொன்

---

1. 'ஈட்டங்கொள்' என்ற அடைமொழிக்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கிராமணிகளைப் போலே' என்று தொடங்கி. தலையறுப்பார் - சிவன். தலையறுப்புண்பார் – பிரமன்.

2. 'ஆயின், இப்படிப்பட்டவர்கள் ஒன்று கூடுவதற்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இப்படி' என்று தொடங்கி.

3. 'இரந்தார்க்கு' என்னுமல், 'சென்று இரந்தார்க்கு' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கூறு செய்வானும்' என்று தொடங்கி, கூறு செய்வான் - மணியம் பண்ணுமவன்.

4. 'ஆயின், அவர்கள் செருக்குக்கொண்டு திரிகின்றவர்களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'விஷ்ணுவை' என்று தொடங்கி.

'அதிகம் மேநிரே விஷ்ணும்'

என்பது, ஸ்ரீராமா. பால. 75 : 19.

இங்கே, கம்பராமாயணம், பரசுராமப்படலம், 25 முதல் 40 முடிய வுள்ள செய்யுள்களைப் படித்து அறிதல் தகும்.

5. நீர் ஏற்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பொல்லா' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி, 11 : 5.

கையில் நீர் ஏற்று' என்கிறபடியே, [1]தேவர்களை நெருக்குகையாலே அழியச் செய்ய வேணும்: குண விசேடத்தாலே அழியச்செய்ய மாட்டான்; இனி, இரண்டற்கும் தக்கதாக ஒரு வழி இரட்சகனை தான் பார்க்குமித்தனை அன்றோ? பொற்கை - பொலிவு எய்தின கை; 'அழகிய கை' என்றபடி. கொடுத்து வளர்ந்த கை; [2]'ஆயிரக் கணக்கான பசுக்களைத் தானம் செய்ததான பருத்து நீண்ட கை' என்றும், 'சத்திய பராக்கிரமத்தையுடையவரான பெருமாள் கொடுப்பார்; வாங்கமாட்டார்' என்றும் சொல்லுகிறபடியே. செய்த கூத்துகள் கண்டுமே - [3]அன்றே பிறந்து அன்றே வளர்ந்து அன்றே இரப்பிலே மூண்டு, மஹாபலி வேள்வி செய்யும் இடத்தளவும் செல்ல, பூமி நெளியும்படி பதறி நடந்து சென்று புக்கு, மான் தோலும் பூணு நூலும் தருப்பைப் புல்லுமான வணக்கமுள்ள வடிவத்தோடு நின்று, 'கொள்வன் நான்' என்றாற்போலே சொன்ன பிள்ளைப்பேச்சுகளும் சிறுகாலைக் காட்டிப் பெரிய காலாலே அளந்ததும் ஆகிற இச் செயல்கள் அடங்கலும் இவர்க்கு வல்லார் ஆடினாற்போலே இருக்கிறபடி.

[4]'இறைமைத் தன்மைக்குரிய மேன்மையும் கிடக்கச்செய்தே, திருமகள் கேள்வனை தான் இரந்து தன்னை அடைந்தாரைக் காத்த நீர்மைக்குப் பிரளயங்கொண்ட பூமியை எடுத்துக் காத்தது ஒரு குணமாயிற்றதோ?' என்கிறார். (6)

---

1. *'நீர் ஏற்க வேண்டுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார், 'தேவர்களை' என்று தொடங்கி.*

2. *'கொடுத்து வளர்ந்த கை' என்பதற்குப் பிரமாணங்கள் இரண்டு காட்டுகிறார், 'ஆயிரக் கணக்கான' என்று தொடங்கியும், 'சத்திய' என்று தொடங்கியும்.*

*'கோ ஸஹஸ்ர ப்ரதாதாரம் உபதாய புஜம் மஹத்'*

*என்பது,* ஸ்ரீராமா. யுத். 21 : 7.

*'தத்யாத் ந ப்ரதிக்ருஹ்ணீயாத்'*

*என்பது,* ஸ்ரீராமா. சுந். 33 : 25.

3. *'கூத்துகள்' என்ற பன்மைக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'அன்றே பிறந்து' என்று தொடங்கி. 'கொள்வன்' என்பது,* திருவாய். 3. 8 : 9.

4. *மேல் திருப்பாசுரத்தைக்காட்டிலும் இத்திருப்பாசுரத்திற்குரிய ஏற்றத்தை அருளிச்செய்கிறார், 'இறைமைத் தன்மைக்குரிய' என்று தொடங்கி.*

713

கண்டும் தெளிந்தும்கற் றார்கண்ணற்கு
ஆளன்றி ஆவரோ?
வண்டுண் மலர்த்தொங்கல் மார்க்கண்
டேயனுக்கு வாழுநாள்
இண்டைச் சடைமுடி ஈசன்
உடன்கொண்டு உசாச்செல்லக்
கொண்டங்குத் தன்னொடுங் கொண்டுஉடன்
சென்றது உணர்ந்துமே.

பொ-ரை: 'வண்டுகள் தேனை உண்ணுகின்ற மலர்களால் கட்டப்பட்ட மாலையைத் தரித்த மார்க்கண்டேயனுக்கு வாழ்நாள் அளித்தல் சம்பந்தமாக, பூமாலையைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமான், அவனைத் தன்னோடு அழைத்துக்கொண்டு, அறப் பெரியனான சர்வேஸ்வரன் பக்கல் உசாவ வேண்டும் என்று செல்ல, அந்த நிலையிலேயே அவனைக் காக்க வேண்டும் என்று திருவுள்ளத்தே கொண்டு தன்னோடே ஒத்த தன்மையையும் கொடுத்துப் பின் ஒரு நாளும் பிரியாதே சென்ற படியை உணர்ந்தும் கண்டும் தெளிந்தும் கற்றவர்கள் கண்ணபிரானுக்கு ஆள் ஆவரே அன்றி, மற்று ஒருவர்க்கு ஆவரோ? ஆகார்,' என்றபடி.

வி-கு: ஈசன் மார்க்கண்டேயனுக்கு வாழுநாளை உசாச்செல்ல, அங்குக் கொண்டு தன்னொடுங் கொண்டு உடன் சென்றதை உணர்ந்தும் கண்ணற்கு ஆளன்றி ஆவரோ?' என்க. இண்டை - மாலை.

ஈடு: ஏழாம் பாட்டு. [1] 'திருமகள் கேள்வனான தன்னைத் தாழவிட்டு இரந்து பாதுகாத்தது ஒரு பெரிய ஏற்றமோ, வேறு தெய்வத்தைத் துதித்து வணங்கிய மார்க்கண்டேயனை அங்கீகரித்த இம்மஹா குணத்துக்கு?' என்கிறார்.

கண்டும் தெளிந்தும் கற்றார்-கற்றுத் தெளிந்து கண்டார்; ஒருவன் பக்கலிலே ஓர் அர்த்தத்தைக் கேட்டு, அதிலே தெளிய வாசனை பண்ணி, பின்பு நேரே அறிதல் பரியந்தமாக்கி வைப்பார். [2] கேட்டல் தெளிதல்கள்தாம், நேரே பார்ப்பதற்குச் சமானமான ஆகாரத்தளவும் சென்று நிற்கும் அன்றோ? கண்ணற்கு ஆள் அன்றி ஆவரோ - [3] தியானிக்கின்றவர்கள், தியானிக்கப்படுகின்ற

1. பின் மூன்று அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'கேட்டல் தெளிதல்கள்தாம், நேரே பார்த்தல் அளவாய் இருக்குமோ?' என்ன, 'கேட்டல்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. 'கண்டார்' என்றதனைக் கடாட்சித்துப் பொருள் அருளிச்செய்கிறார், 'தியானிக்கின்றவர்கள்' என்று தொடங்கி. தியானிக்கப்படுகின்ற பொருள் - குணங்களால் மேம்பட்ட பொருள்.

பொருளை விட்டுப் புறம்பே போவரோ? வண்டு உண் மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழுநாள் - 'வண்டுகள் தேனைக் குடிக்கின்ற பூமாலையையுடைய ஸ்ரீ மார்க்கண்டேயனுக்கு வாழ்நாள் உண்டாகைக்காக' என்னுதல்; அன்றிக்கே. [1]'வாழுநாள்' என்பதனை, மேலே வருகின்ற 'உசாச்செல்ல' என்றதனோடு கூட்டலுமாம். [2]தாய் தந்தையர்கள் மார்க்கண்டேயனை ஒப்பித்து விளையாட விட, அங்கே ஓர் அசரீரி வாக்கியம் 'இவனுக்குச் சாக்காடு குறுகிற்று' என்று சொல்ல, அதனைக் கேட்டுத் தாய்தந்தையர்கள் வெறுக்க, 'இதற்கு நீங்கள் அஞ்ச வேண்டா; நான் போக்கிக்கொள்ளுகிறேன்,' என்று இவன் சென்று சிவனை அடைய, அவனும் பச்சை இடும் நாள் எல்லாம் இடுவித்துக்கொண்டு, ஒருநாளிலே வந்தவாறே தலைக்கடையையும் புழைக்கடையையும் அடைத்துச் சடையை விரித்துக் காட்டி, 'உன் காரியத்தைப் போன்றே ஆறல் பீறல்காண் என் காரியமும்: அருகில் மாலையைப் பாராதே என் தலையில் சடையைப் புத்தி பண்ணாய்' என்று காட்டி, [3]'ஆனாலும் நெடுநாள் பச்சை இட்டு என்னைத் துதித்த நீ பேசாதே போக ஒண்ணாதே அன்றோ? உனக்கு ஒரு பற்றுக்கோடு காட்டக் காணாய்!' என்று, சர்வேஸ்வரனுடைய சௌலப்யம் முதலிய குணங்களையும் மோட்சத்தைக் கொடுத்தல் முதலான குணங்களையும் சொல்லிக்கொண்டு சர்வேஸ்வரன் பக்கல் ஏறச்சென்றான்.

அங்குக் கொண்டு - [4]'ஐயோ! மரண பயத்தையுடையனாய்க் கொண்டு வந்தாய் அன்றோ!' என்று திருவுள்ளத்திலே கொண்டு: 'நெஞ்சிற்கொண்டு' என்னும்படியே. அன்றிக்கே, 'செருக்கனான

---

1. 'வாழுநாள்' என்பதனை, மேலே வருகின்ற 'உசாச்செல்ல' என்றதனோடு கூட்டிப் பொருள் காண்க. 'வாழுநாள் உண்டாகைக்காக அவனுடைய குணங்களை உசாவிக்கொண்டு செல்ல' என்னுதல்; 'வாழுநாளை உசாவிக்கொண்டு செல்ல' என்னுதல்.

2. 'மலர்த்தொங்கல்' என்ற அடைமொழிக்குக் காரணம் அருளிச்செய்கிறார், 'தாய்தந்தையர்கள்' என்று தொடங்கி. ஆறல் பீறல்-காரியத்துக்குத் தகுதி இல்லாதது. அருகில் மாலை-சடை அருகில் உள்ள மாலை.

3. சர்வேஸ்வரன் பக்கலிலே காட்டிக் கொடுப்பதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'ஆனாலும்' என்று தொடங்கி.

4. 'கொண்டு' என்பதற்கு, இரண்டு பொருள்: திருவுள்ளத்திலே கொண்டு என்பது முதற்பொருள்; இதனையே அருளிச்செய்கிறார் 'ஐயோ!' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நெஞ்சிற்கொண்டு

சிவன் கொண்டு வந்தான்' என்று பாராமல், ஒரு பிராட்டி புருஷ காரமாக வருவாரைக் கைக்கொள்ளுமாறு போலே கைக்கொண்டு என்னுதல். தன்னொடும் கொண்டு - இவன் வந்த காரியத்தை முடித்து, பின்பு தன்னுடன் ஒத்த தன்மையையும் கொடுத்து. உடன் சென்றது உணர்ந்தும்-[1] ஒரு 'கள்வன்கொல்' என்ற திருமொழியில் பிராட்டியைக் கொடுபோமாறு போலே கொடுபோனுன்காணும். [2] 'பின்னை என்றும் நின் திருவடிப் பிரியாவண்ணம் எண்ணிய' என்கிறபடியே [3] 'ஒரு வேறுபட்ட பொருள்' என்று தோற்றுதபடி தன்னோடு விளைகிற ரசத்தை உண்பித்தபடியை நினைத்து, கண்டும் தெளிந்தும் கற்றூர் கண்ணற்கு ஆள் அன்றி ஆவரோ?

[4] தன்னை அடைந்த இந்திரனுக்காகத் தன்னைத் தாழவிட்டது ஓர் ஏற்றமோ? 'என்னையே எவர்கள் சரணம் அடைகின்றூர்களோ அவர்கள் இந்த மாயையினைத் தாண்டுகின்றூர்கள்' என்னக் கடவ அவன், வேறு தேவதையைத் துதிக்க, அதற்குமேலே அவன் புருஷ காரமாகக் கொண்டு வந்து காட்டிக் கொடுக்க, 'என்செய்வான், தன்னை அடைந்தவனை அழிய விடாதே புறம்பேயாகிலும் கொண்டு போய் இரட்சிப்பித்தான்' என்னும் குணம் சிவனுக்கு உண்டாக,

---

என்னும்படியே' என்று. இது, பெரிய திருமொழி, 5. 8 : 4. என்றது, 'தண்ணியனும் இருக்கிற இவனுக்கு நாம் அல்லது வேறு புகல் இல்லை,' என்று நெஞ்சிலே கொண்டு என்றபடி. 'அவனை ஏற்றுக்கொண்டு' என்பது இரண்டாவது பொருள்; இதனையே அருளிச்செய்கிறூர், 'செருக்கனை' என்று தொடங்கி.

1. 'உடன் சென்றது' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறூர், 'ஒரு கள்வன்கொல்' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி, 3 : 7.

2. 'ஒத்த தன்மையைக் கொடுத்தானே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறூர், 'பின்னை' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 5. 8. 6. என்றது, மரணபயத்தை ஒழித்ததற்கு மேலே, தன் திருவடியை நாளும் பிரியாதபடி இருப்பதற்குத் திருவுள்ளம் பற்றியதைத் தெரிவித்தபடி.

3. இதற்குப் பொருள் அருளிச்செய்யாநின்றுகொண்டு, திருப்பாசுரத்திற்கு அந்வயம் காட்டுகிறூர், 'ஒரு வேறுபட்ட' என்று தொடங்கி.

4. மேல் திருப்பாசுரத்தைக்காட்டிலும் இத்திருப்பாசுரத்தின் ஏற்றத்தை அருளிச்செய்கிறூர், 'தன்னையடைந்த' என்று தொடங்கி.

'மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே'

என்பது, ஸ்ரீகீதை, 7 : 14.

மார்க்கண்டேயனைக் காத்த நீர்மைக்கு. [1] தாமத புருஷர்களுடைய சினேகம் சர்வேஶ்வரன் விடுகைக்குக் காரணம்; சத்துவநிஷ்டருடைய சினேகம் அவன் அங்கீகரிப்பதற்குக் காரணம்; இங்ஙனே இருக்கச் செய்தே அன்றோ சிவன் முன்னிலையாக வந்த மார்க்கண்டேயனுக்கும் காரியம் செய்தது! (7)

714

செல்ல உணர்ந்தவர் செல்வன்தன் சீர்அன்றிக் கற்பரோ?
எல்லை இலாத பெருந்தவத் தால்பல செய்மிறை
அல்லல் அமரரைச் செய்யும் இரணியன் ஆகத்தை
மல்லல் அரியுரு வாய்ச்செய்த மாயம் அறிந்துமே.

பொ-ரை: 'எல்லை இல்லாத பெரிய தவத்தினாலே, தேவர்களுக்குப் பல வகையாக மிக்க துன்பங்களைச் செய்யும் இரணியனுடைய சரீரத்தைப் பெரிய நரசிங்கமாகிக் கிழித்த ஆச்சரியத்தை அறிந்தும், (ஐஶ்வரிய கைவல்யங்களிலே இழியாமல் பகவத்விஷயத்திலே இழிந்து, அது தன்னிலும் அவதரித்த மேல்எல்லை அளவும்) செல்லும்படி அனுபவித்தவர்கள், திருமகள் கேள்வனுடைய பொருள் சேர் புகழை அன்றி மற்றையோருடைய பொருள் இல் புகழ்களைக் கற்பரோ? கல்லார்,' என்றபடி.

வி-கு: மிறை - துன்பம்; மிறை அல்லல் – மிக்க துன்பம். அமரரை - வேற்றுமை மயக்கம். அரி - சிங்கம்.

ஈடு: எட்டாம் பாட்டு. [2] வேறு தேவதையை வணங்கித் துதித்தவனை அங்கீகரித்த மஹாகுணத்தைக்காட்டிலும் மனிதவடிவம் சிங்கவடிவம் என்னும் இரண்டனையும் ஏறிட்டுக்கொண்டு தன்னை அடைந்தவனைப் பாதுகாத்த மஹா குணத்தை அருளிச்செய்கிறார்.

செல்ல உணர்ந்தவர் - போலியான ஐஶ்வரியம் கைவல்யம் என்னும் இவற்றின் அளவிலே முடிவு பெற்று நில்லாமல், எல்லை நிலமான பகவத் புருஷார்த்தத்தளவும் செல்ல உணர்ந்தவர். என்றது, 'அவனுடன் நித்தியமான இன்பத்தை வேண்டி இருக்கு

1. இது நீர்மையானபடியை விவரிக்கிறார், 'தாமத புருஷர்களுடைய' என்று தொடங்கி.

2. 'மல்லல் அரி உருவாய்ச் செய்த மாயம் அறிந்தும்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

மவர்கள்' என்றபடி. [1] வாய்க்கரையான சரீரம் சரீர சம்பந்தப்பட்ட பொருள்கள் அன்றிக்கே, ஆத்துமாவினுடைய உண்மை ஞானம் முன்னாகப் பகவானை அடைதல் அளவும் செல்ல உணர்ந்தவர்கள். செல்வன் தன் சீர் அன்றிக் கற்பரோ - ஸ்ரீமானுடைய கல்யாண குணங்களை ஒழியக் கற்பரோ? '**இன்னம் சொல்லாய் சீமானை**' என்னக் கடவது அன்றோ? எல்லை இலாத பெருந்தவத்தால்-அளவு இல்லாத பெரிய தவத்தாலே. [2] வரத்தைக் கொடுத்த தேவசாதிக்கும் குடியிருப்பு அரிதாம்படி அன்றோ பலித்தது? பல மிறை செய் அல்லல் அமரரைச் செய்யும் - தேவசாதி கிடந்த இடத்தில் கிடவாதபடி பல மிறுக்குகளைச் செய்து, துக்கத்தை உண்டாக்குகிற இரணியனுடைய சரீரத்தை. [3] மிறுக்கின் காரியம் - துக்கம்.

மல்லல் அரி உருவாய்-மல்லல்-பெருமை. [4] 'மஹாவிஷ்ணும்' என்கிறபடியே, இரணியன் குளம்படியாம்படியாகப் பெரிய வடிவைக் கொண்டு. அன்றிக்கே, மல்லல் என்று செல்வமாய், அதனால், இலட்சுமிநரசிம்மமாய்' என்னலுமாம்; [5] 'நாராயணனே நரசிங்கன், அமரேஶ்வரியான நீ சத்தி' என்னப்படுகின்றதே அன்றோ? [6] அவனை ஒழிந்திருப்பது ஒரு போதும் இல்லை அன்றோ? செய்த மாயம் அறிந்துமே - [7] சிறுக்கனுடைய சூளுறவு செய்த அக்காலத்திலே தோற்றி, இரணியனுடைய உடலை இரு பிளவு ஆக்கின இவ்வாச்சரியமான செயலை அறிந்தும்.

---

1. மேலே கூறியதனை விவரணம் செய்கிறார், 'வாய்க்கரையான' என்று தொடங்கி. வாய்க்கரையான - மேலெழுந்த வாரியான.

2. தவத்தின் மிகுதியை அருளிச்செய்கிறார்; 'வரத்தைக் கொடுத்த' என்று தொடங்கி.

3. மிறைக்கும் அல்லலுக்கும் வேறுபாடு காட்டுகிறார், 'மிறுக்கின் காரியம்' என்று. மிறுக்கு-பீடை.

4. 'உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் ஸர்வதோமுகம்
ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும் ம்ருத்யும் நமாம்யஹம்'
என்பது நரசிம். மந்.

5. 'இலட்சுமி நரசிம்மம்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'நாராயணனே' என்று தொடங்கி.

'நாராயணோ ந்ருஸிம்ஹஸ்து ஶக்திஸ்த்வம் அமரேஶ்வரி'
இங்கு 'ஶக்தி' என்றது, பிராட்டியை.

6. 'இங்கும் அவனைச் சொல்ல வேண்டுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவனை' என்று தொடங்கி.

7. 'மாயமாவது யாது?' என்ன, 'சிறுக்கனுடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

[1]'ஒருவன் புருஷகாரமாகக் கொடுவர அவனைக் காப்பற்றியது ஒரு குணமோ, தமப்பன் பகைபாக, முகம் ஒருவடிவும் திருமேனி ஒரு வடிவுமாகக் கொண்டு பாதுகாத்த குணத்துக்கு?' என்கிறார். [2]'பெற்றார் பெற்று ஒழிந்தார் பின்னும் நின்று அடியேனுக்கு உற்றானாய் வளர்த்து' என்கிறபடியே வந்து பாதுகாத்த குணம் அன்றோ? (8)

715

*மாயம் அறிபவர் மாயவற்கு ஆளன்றி ஆவரோ?*
*தாயம் செறும்ஒரு நூற்றுவர் மங்கஓர் ஐவர்க்காய்த்*
*தேசம் அறியஓர் சாரதி யாய்ச்சென்று சேனையை*
*நாசம் செய்திட்டு நடந்தநல் வார்த்தை அறிந்துமே.*

பொ – ரை: 'தாய பாகத்தைச் செறுத்துக் கைக்கொண்ட துரியோதனாதியர்கள் அழியும்படியாக, ஒப்பற்ற பாண்டவர்களுக்காகத் தேசம் எல்லாம் அறியும்படி ஒப்பற்ற சாரதியாய்ச் சென்று, சேனையை அழித்துத் தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளின நல்வார்த்தையை அறிந்தும், அவனுடைய ஆச்சரியமான செயல்களை அறிகின்றவர்கள் மாயவனுக்கு அடிமை ஆவரே ஒழிய வேறு ஒருவர்க்கு அடிமை ஆவரோ? ஆகார்,' என்றபடி.

வி – கு: 'மங்கச் சாரதியாய்ச் சென்று நாசஞ்செய்திட்டு நடந்த நல்வார்த்தை' என்க. மாயம் – தன்னை அடைந்தவர்கட்குச் சுலபனாய் இருக்கும் ஆச்சரியம்.

ஈடு: ஒன்பதாம் பாட்டு. [3]தன்னை அடைந்த பிரஹ்லாதனுக்காக நரசிங்கமான அதிலும் அதிக குணமான சாரதியாய் நின்ற செயலை அருளிச்செய்கிறார்.

---

1. இத்திருப்பாசுரத்துக்கு ஏற்றத்தை அருளிச்செய்கிறார், 'ஒருவன்' என்று தொடங்கி.

2. தமப்பன் பகையாலும் இவன் பாதுகாப்பான் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பெற்றார்' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி, 8. 9 : 7.

3. 'தேசம் அறிய ஓர் சாரதியாய்ச் சென்று' என்றதனைக் கடாட்சித்து, மேல் திருப்பாசுரத்தைக்காட்டிலும் இத்திருப்பாசுரத்துக்கு ஏற்றம் அருளிச்செய்யுமுகத்தால் அவதாரிகை அருளிச்செய்கிறார்.

மாயம் அறிபவர் - [1] அவனுடைய செயல்கள் முழுதும் தன்னை அடைந்தவர்களின்பொருட்டாய் ஆச்சரியமாய் இருக்கும் என்று அறியுமவர்கள். மாயவற்கு ஆள் அன்றி ஆவரோ-அடியவர்கட்குப் பரதந்திரப்பட்டவனுக்கு அன்றி ஆள் ஆவரோ? தாயம் செறும் ஒரு தூற்றுவர் மங்க - தாயபாகம் சம்பந்தமாகச் செறுகிற துரியோதனாதியர்களான தீயோர் கூட்டம் மங்க. [2]தாயம் கொண்டு நெருக்கிற்றுத் தம்மையோ? அநுகூலரான பாண்டவர்களை நெருக்கிற்றுத் தம்மை நெருக்கிற்றாய் இருக்கிறபடி. ஒரு நூற்றுவர், ஓர் ஐவர் - [3] நெருக்குகிறவர்களும் நெருக்குண்கிறவர்களும் இருக்கிறபடி. ஓர் ஐவர்க்காய் - [4] தீயோர் திரள் முழுதும் அங்கே திரண்டு ஒரு சாரதியை ஒழிய வேறு ஒரு துணை இன்றிக்கே இருக்கிறவர்கள்.

[5] 'தன்வழியே ஒழுகாதவர்களை அழியச்செய்து, தன்னை ஒழிய அறியாதவர்களுக்காகத் தான் தாழநின்று நோக்கினான். அன்றிக்கே, சம்பந்தம் இரண்டு தலைக்கும் ஒத்திருக்க, தாழ்ந்த தலை கண்டு நோக்கினானித்தனை அன்றோ?' என்னுதல். [6] 'கண்ணனுடைய திருவடிகள் அருச்சுனனுடைய மடியில் இருப்பதைப் பார்த்தேன்;

---

1. 'தேசம் அறிய ஓர் சாரதியாய்ச் சென்று' என்றதற்குத் தகுதியாக 'மாயம் அறிபவர்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'அவனுடைய' என்று தொடங்கி.

2. 'செறும்' என்று பொதுவாகக் கூறியதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தாயம்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'அநுகூலரான' என்று தொடங்கி.

3. 'நூற்றுவர், ஐவர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'நெருக்குகிறவர்களும்' என்று தொடங்கி. என்றது, 'இவர்களுடைய வலிமையையும் வலியின்மையையும் காட்டுகிறது' என்றபடி.

4. 'ஓர்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'தீயோர்' என்று தொடங்கி.

5. 'சம்பந்தம் ஒத்திருக்க, பாண்டவர்களைக் காத்துத் துரியோதனாதியர்களை அழிப்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தன் வழியே' என்று தொடங்கி. வேறும் ஒரு பரிகாரம் அருளிச்செய்கிறார் 'சம்பந்தம்' என்று தொடங்கி.

6. 'ஐவர்க்காய்' என்பதிலுள்ள 'ஆய்' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'கண்ணனுடைய' என்று தொடங்கி.

'அர்ஜுநாங்க கதௌ பாதௌ கேசவஸ்ய உபலக்ஷயே
அர்ஜுநஸ்ய து க்ருஷ்ணயா: ஸுபாயா: ச அங்ககாவுபௌ'

என்பது, பாரதம், உத்யோக பர்.

அருச்சுனனுடைய கால்கள் கற்புக்கரசியாகிய திரௌபதியினுடைய மடியில் இருப்பதைப் பார்த்தேன்,' என்கிறபடியே, [1] ஒருவர்க்கு ஒருவர் கால்மேல் கால் ஏறட்டு ஒருநாளாக இருந்த சமயத்திலே, 'சஞ்சயன் வாசலிலே வந்தான்' என்று சொல்ல, 'அவனைப் புகுர விடுங்கோள்; இவ்விருப்புக் காண உகப்பான் ஒருவன்; [2] உகவாதார் நெஞ்சு உளுக்கச் சொல்ல வல்லான் ஒருவன்; ஆன பின்னர் அவனை அழையுங்கோள்,' என்றான். உகவாதார் கண் படல் ஆகாதவாறு போன்று, உகந்தார் கண்பட்டால் உள்ள நன்மையும்: இப்படி அன்றோ பாண்டவர்கள் விஷயத்தில் அவன் இருக்கும்படி?

தேசம் அறிய ஓர் சாரதியாய் - [3] 'அருச்சுனன் ரதியாகவும் தான் சாரதியாகவும் எல்லா உலகத்திலுள்ளவர் கண்களுக்கு இலக்கானான்' என்னும்படியே, 'இன்னார் தூதன் என நின்றான்' என்கிறபடியே. [4] உலகத்தில் சுவாதந்திரியமும் பாரதந்திரியமும் முறை மாறின இடத்திலும் இரஹஸ்யத்திலே அன்றோ அவை நடப்பன? கணவனும் மனைவியின் காலைப் பிடிப்பதும் இரஹஸ்யத்திலே அன்றோ? இப்படி இருக்கச்செய்தே அன்றோ உலகப் பிரசித்தமாம்படி தன்னைத் தாழவிட்டது? சென்று சேனையை நாசம் செய்திட்டு - [5] 'இதுதானும் அருச்சுனன் முதலாயினோர் அம்பு

---

1. *மேலே காட்டிய சுலோகத்திற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'ஒருவர்க்கு ஒருவர்' என்று தொடங்கி.*

2. *'இவ்விருப்பில் அவனை அழைக்க வேண்டுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'உகவாதார்' என்று தொடங்கி.*

3. *சாரதியாய் நின்றதற்குப் பிரமாணங்கள் இரண்டு காட்டுகிறார், 'அருச்சுனன்' என்று தொடங்கியும், 'இன்னார்' என்று தொடங்கியும்.*

*'பார்த்தம் ரதிநம் ஆத்மாநம்ச ஸாரதிம் ஸர்வலோக ஸாக்ஷிகம் சகார'*

என்பது, கீதா பாஷ்யம்.

*'இன்னார் தூதன்' என்பது,* பெரிய திருமொழி, 2. 2 : 3. *இரண்டு பிரமாணங்கள் காட்டியதற்குக் கருத்து, 'தூதுவனாகியது எல்லாவுலகத்திலும் பிரசித்தமானாற்போல, சாரதியாய் நின்றதுவும் எல்லாவுலகங்கட்கும் பிரசித்தமாயிற்று,' என்பது.*

4. *'உலகம் அறியச் சாரதியாய் நின்றது இவனுக்கு ஓர் ஏற்றமோ? உலகத்திலுள்ளவர்களும் இப்படிச் செய்யார்களோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'உலகத்தில்' என்று தொடங்கி.*

5. *'அருச்சுனன் முதலாயினோர் அன்றோ சேனையை அழித்தது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இதுதானும்' என்று தொடங்கி.*

களாலே அன்று' என்றபடி. [1]'ஆயுதம் எடுக்க ஒண்ணுது' என்று வேண்டிக்கொண்டபடியாலே, சாரதியாயிருந்து தேர்க்காலாலே உழக்கிப் போகட்டான். நடந்த நல்வார்த்தை அறிந்தும் - [2]தன் மேலே அம்பு மழையாகப் பெய்கிற இத்தண்ணிய பூமியினின்றும், தன் வரவுக்கு எதிர்கொள்வார் இருந்த இடத்தே போய்ப் புக்கான் என்கிற பெரிய வார்த்தையை அறிந்தும். [3]'நீண்ட கண்களை யுடைய கண்ணபிரான் பூமியினுடைய பாரத்தைப் போக்கி உலகத்தை எல்லாம் மோஹிக்கச்செய்து மேலான தம் இருப்பிடத்தை அடைந்தார்' என்கிறபடியே, துரியோதனுதியர்கள் இல்லாத இடத்தே போய்ப் புகப்பெற்றது அன்றோ?

[4]'மேலே கூறிய செயல்கள் அடங்கலும் தன் சுவாதந்திரியம் கிடக்கச்செய்தே செய்தவை அன்றோ? [5]தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுதற்குத் திரு உகிராலும் உண்டே அங்கு; அவை போல அன்றே இங்கு? தன்னை அடைந்தவர்கட்குப் பரதந்திரனுய்த் தன்னை அழிய மாறி, பாண்டவர்களுக்காக உடம்புக்கு ஈடு இடாதே எதிரிகள் அம்புக்கு இலக்கு ஆக்கின இந்நீர்மைக்குப் போருமோ. மேலே கூறிய குணங்கள்?' என்கிறுர். (9)

---

1. சாரதியாய் இருந்து சேனையை அழித்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறுர், 'ஆயுதம்' என்று தொடங்கி.

2. 'பரமபதத்திற்குப் போனது நல்வார்த்தை ஆயினவாறு யாங்ஙனம்?' என்ன, 'தன்மேலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறுர். நல்வார்த்தை-பெரிய வார்த்தை.

3. போயினமைக்குப் பிரமாணம் காட்டுகிறுர், 'நீண்ட' என்று தொடங்கி.

'க்ருத்வா பாராவதரணம் ப்ருதிவ்யா: ப்ருதுலோசந:
மோஹயித்வா ஜகத் ஸர்வம் கத: ஸ்வம் ஸ்தாநமுத்தமம்'

என்பது, பாரதம், மௌசல. பர். இந்தச் சுலோகத்திலுள்ள 'உத்தமம்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறுர், 'துரியோதனுதியர்கள்' என்று தொடங்கி.

4. மேல் திருப்பாசுரத்திற்கூறிய பொருளைக்காட்டிலும் இத்திருப் பாசுரத்திற்கூறிய பொருளுக்கு ஏற்றத்தை அருளிச்செய்கிறுர், 'மேலே' என்று தொடங்கி.

5. 'நரசிங்கத்துக்குச் சுவாதந்திரியம் உண்டோ?' என்ன, 'தன்னை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர். ஈடு-மெய்புகு கருவி; கவசம்.

716

வார்த்தை அறிபவர் மாயவற்கு
ஆளன்றி ஆவரோ?
போர்த்த பிறப்பொடு நோயொடு
மூப்பொடு இறப்பிவை
பேர்த்துப் பெருந்துன்பம் வேரற
நீக்கித்தன் தாளின்கீழ்ச்
சேர்த்துஅவன் செய்யும் சேமத்தை
எண்ணித் தெளிவுற்றே.

பொ - ரை: 'ஆத்துமசொரூபம் தெரியாதபடி மறைத்துக்கொண் டிருக்கிற பிறப்பும் நோயும் மூப்பும் இறப்பும் என்னும் இவற்றை நீக்கிப் பெரிய நரகத்துன்பத்தையும் அடியோடு நீக்கித் தன் திருவடிகளின் கீழே நித்தியமான கைங்கரியத்தைக் கொடுத்து, அவன் செய்கின்ற சேமத்தை எண்ணித் தெளிவை அடைந்து, அவனுடைய வார்த்தையை அறிகின்றவர்கள், அக்கண்ணபிரானுக்கு அடிமை ஆவரே அன்றி மற்று ஒருவர்க்கு ஆள் ஆவரோ?' என்றபடி.

வி - கு: வார்த்தையாவது, 'என்னையே சரணமாகப் பற்று; நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் நீக்குகிறேன்,' என்ற பகவத் கீதை வாக்கியம். 'பேர்த்து நீக்கிச் சேர்த்துச் செய்யும் சேமம்' என்க. (அதனை) எண்ணித் தெளிவுற்று அறிபவர் என்க.

ஈடு: பத்தாம் பாட்டு. [1]மேலே சேதநர்க்குச் செய்த உபகாரங்கள் எல்லாம் சம்சாரத்திலே இருக்கச்செய்தே செய்தவை அன்றோ? அவை போன்றது அன்றி, சம்சாரம் மறுவல் இடாதபடி செய்து தன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்டது ஒரு மஹோபகாரத்தை அருளிச்செய்கிறார்.

வார்த்தை அறிபவர் - [2]மஹாபாரதம் எல்லாவற்றாலும் சொல்லிற்றாயிற்றது ஒருவார்த்தை அன்றோ? [3]வார்த்தையாவது, பிரயோ

1. பின் மூன்று அடிகளையும் கடாட்சித்து இத்திருப்பாசுரத்துக்கு ஏற்றம் அருளிச்செய்யுமுகத்தால் அவதாரிகை அருளிச்செய்கிறார். 'மேலே' என்றது, முதல் மூன்று திருப்பாசுரங்களும், ஏழாந்திருப் பாசுரமும் ஒழிந்த மற்றை ஐந்து திருப்பாசுரங்களையும். அந்தத் திருப் பாசுரங்கள் நான்கிலும் சொன்னவை சம்சாரத்தில் இருக்கும்போதே செய்தவை அல்ல; இந்த ஐந்து திருப்பாசுரங்களிலும் கூறியவை சம்சாரத்தில் இருக்கும்போதே செய்தவை.

2. 'வார்த்தை' என்ற ஒருமைக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'மஹாபாரதம்' என்று தொடங்கி.

3. 'அது எப்படி?' என்ன, 'வார்த்தையாவது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

ஜனத்தோடு கூடி இருப்பது அன்றோ? [1]'என் ஒருவனையே சரண மாகப் பற்று,' என்றதனை அன்றோ இங்கு வார்த்தை என்கிறது? [2]மேலே சொன்னவை அடங்கலும் கடல் போலே; அதில் அமிருதம் போலே இது. மாயவற்கு ஆள் அன்றி ஆவரோ - [3]அவன் 'என்னையே பற்று' என்று சொல்லாநின்றால், இவர்கள் அவனை ஒழியவும் பற்றுவர்களோ? [4]இரஹஸ்யங்கள் எல்லாவற்றையும் வெளியிட்டான் அன்றோ அவள் குழல் முடிக்கைக்காக?

போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பு இவை - பரணி, கூடு வரிந்தாற்போலே, இவ்வாத்துமாவை அறிய ஒண்ணாத படி சூழப் பொதிந்து கிடக்கிற பிறவிகள், அவை புக்க இடத்தே புகக்கடவ நோய், அங்ஙனேயாகிலும் சிலநாள் செல்லாதபடி இடி விழுந்தாற்போலே நிற்கிற முதுமை, அங்ஙனேயாகிலும் இருக்க ஒண்ணாதபடி இவனுக்கு விருப்பம் இல்லாத இறப்பு, இவற்றை எல்லாம். போர்த்து - [5]ஈஸ்வரனுக்கும் ஒரு விரகு பார்த்துத் தள்ள வேண்டும்படி அன்றோ அவற்றின் கனம், விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாறுபோலே தள்ளி? பெருந்துன்பம் வேர் அற நீக்கி-பிறவி போனால்

---

1. 'அவ்வார்த்தைதான் யாது?' என்ன, 'என் ஒருவனையே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்ய: மோக்ஷயிஷ்யாமி மாஶுச:'

என்பது, ஸ்ரீ கீதை, 18 : 66.

2. 'பிரயோஜனத்தோடு கூடி இருப்பதன்றோ?' என்று மேலே அருளிச்செய்த வாக்கியத்தைத் திருஷ்டாந்தத்தோடு விவரிக்கிறார், 'மேலே' என்று தொடங்கி. 'இது' என்றது, சரமஶ்லோகத்தை.

3. 'அவன் அருளிச்செய்த வார்த்தை அறிந்தால் வேறு ஒருவருக்கு ஆளாக ஒண்ணுதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன் என்னையே' என்று தொடங்கி. அவன்-பரம ஆப்தன்; கிருஷ்ணன்.

4. 'மாயவன்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'இரஹஸ்யங்கள்' என்று தொடங்கி. மாயவன்-பெரிய காதலையுடையவன். அவள்-திரௌபதி. பரணி-ஒரு பூச்சி விசேடம்; இது தன் உடலிலிருந்து நூலை இடும்.

5. 'போர்த்து' என்பதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'ஈஸ்வரனுக்கும்' என்று தொடங்கி. போக்கும் விதத்தை அருளிச்செய்கிறார், 'விரகர்' என்று தொடங்கி.

பின் வரக்கூடியதான கைவல்யமாகிற பெரிய துக்கத்தை வாசனையோடே போக்கி. [1] 'முன்பு நின்ற நிலைதான் நன்று' என்னும்படி அன்றோ இதன் தன்மை? அதற்கு, பின்னை ஒரு சரீரத்தை எடுத்தாகிலும் பகவானை அடைவதற்குத் தகுதி உண்டே அன்றோ? இது எப்பொழுதும் அழிந்ததே அன்றோ?

தன் தாளின்கீழ்ச் சேர்த்து - பாதரேகைபோலே இருக்கத் திருவடிகளிலே சேர்த்து. அவன் செய்யும் சேமத்தை எண்ணி - [2] பின்னை இவனுடைய மீட்சி தன் புத்தி அதீனமாம்படி பண்ணிவிடுகை. இவன் நினைவோடு தன் சங்கற்பத்தோடு வாசி அறும்படி செய்தல். [3] இவனும் சேதனனாய் இருக்கச் செய்தே, முத்தன் ஆனால் கொள்ளும் பல வகையான நிலைகளும் அவன் புத்தி அதீனமாய் அன்றோ இருப்பன?' இவன் கையிலே இவனைக் காட்டிக் கொடுத்தாலும் அவனுக்கு அஞ்ச வேண்டாதபடியாய் இருக்கை. எண்ணித் தெளிவுற்று - இதனை எண்ணித் தெளிந்து. [6] அவன் 'என்னையே பற்று' என்று

1. 'கைவல்யம் பெருந்துன்பமாமோ?' என்ன, 'முன்பு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதனைத் தெளிவு பெற விவரணம் செய்கிறார், 'அதற்கு' என்று தொடங்கி.

2. 'சேமம்' என்பதற்கு, 'மீண்டு வருதல் இல்லாதபடி செய்யும் பாதுகாவல்' என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி

'இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்.' தைத்திரீ. பிரு. என்பது போன்ற பிரமாணங்களாலே மீட்சி உண்டு என்று அறியக் கூடியதாயிருக்க, மீண்டு வருதல் இல்லை என்னக் கூடுமோ?' என்ற சங்கைக்கு விடை அருளிச்செய்கிறார், 'பின்னை' என்று தொடங்கி. 'தன் புத்தி அதீனமாம்படி' என்றது, 'ஈஸ்வரனுடைய புத்தி அதீனம்' என்றபடி.

3. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'இவன்' என்று தொடங்கி. வாசியறும்படி செய்தலாவது, இரண்டும் ஒரே தன்மையாய் இருத்தல்.

4. 'சேதநன் ஆகையாலே இவனுக்கும் வேறு ஒரு நினைவு உண்டாகாதோ?' என்ன, 'இவனும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. 'இவன் நினைவோடு' என்று தொடங்கி மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'இவன்' என்று தொடங்கி. என்றது, 'இவனுடைய சுவாதந்திரியமும் அவனுடைய சங்கல்பத்துக்குத் தகுதியாகவே இருக்கும்' என்றபடி.

6. 'தெளிவு' என்றதனைக் காட்டாநின்றுகொண்டு அந்வயமும் காட்டுகிறார், 'அவன் என்னையே' என்று தொடங்கி. என்றது, 'போர்த்த பிறப்பொடு' என்று தொடங்கி, 'அநிஷ்ட நிவர்த்தி முன்னாக இஷ்டப் பிராப்தியையும் செய்து தருகிறேன்' என்று அவன் அருளிச்செய்த சரம

சொன்னதில், தலையாடியிலே 'எல்லா விரோதிகளையும் நானே போக்கி என்னைத் தருவன்' என்று சொன்னதனைத் தெளிந்திருக்கு மவர்கள்; அவனுக்கு அல்லது ஆள் ஆவரோ? [1]மேலே கூறிய குணங்கள் எல்லாம், 'மண் தின்ன வேணும்' என்று அழுத குழந்தைக்கு அதனை இட்டு அதற்குப் பரிஹாரம் பண்ணுமாறு போலே ஆயிற்று; இங்கு, இவற்றினுடைய ஹிதமே பார்த்துச் சம்சாரம் தொடக்கமான எல்லாத் துன்பங்களும் மறுவலிடாதபடி போக்கித் தன் திருவடிகளின் கீழே வைத்துக் காத்த பெரிய நீர்மைக்குப் போருமோ மேலே கூறியவை அடங்கலும்?

[2]மேலே செய்த பரிஹாரங்கள் கிரந்தி கிடக்கச் செய்யும் பரிஹாரம் போலே சம்சாரம் கிடக்கச் செய்த பரிஹாரங்கள் அன்றோ? அது புண் இல்லாதபடி அறுத்து நோக்குவாரைப்போலே இதிற் சொல்லுகிற குணம். [3]மேற்கூறியவை சம்சாரிகள் இச்சையாலே செய்தவை; இது ஈசுவரன் தன்னிச்சையாலே செய்ததன்றோ? (10)

717

தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு
இன்பக் கதிசெய்யும்
தெளிவுற்ற கண்ணனைத் தென்குரு
கூர்ச்சட கோபன்சொல்
தெளிவுற்ற ஆயிரத் துள்இவை
பத்தும்வல் லார்அவர்
தெளிவுற்ற சிந்தையர் பாமரு
மூவுல கத்துள்ளே.

---

ஸ்ரீலோகத்தின் பின்னடியின் பொருளை எண்ணித் தெளிவுற்று, 'என்னையே உபாயமாகப் பற்று' என்று அருளிச்செய்த சரமஸ்லோகத்தின் முன்னடியின் பொருளை அறிந்தவர்கள் மாயவற்கு ஆள் அன்றி ஆவரோ?' என்றபடி. இதனால், 'வார்த்தை' என்றது, சரமஸ்லோகத்தின் முன்னடியினை. மற்றை மூன்று அடிகளும் சரமஸ்லோகத்தின் பின்னடியின் பொருள். தலையாடி-சரமஸ்லோகத்தின் பின்னடி.

1. முன்னுரையில் இத்திருப்பாசுரத்திற்கு ஏற்றம் அருளிச் செய்தார் அன்றோ? அந்த ஏற்றத்தைத் திருஷ்டாந்தம் காட்டி விவரிக்கிறார், 'மேலே' என்று தொடங்கி. 'மேலே' என்றது, ஸ்ரீகீதையில், சரம ஸ்லோகத்துக்கு முன்னே கூறியவற்றை.

2. அந்த ஏற்றத்தை வேறு ஒரு முகத்தாலும் அருளிச்செய்கிறார், 'மேலே செய்த' என்று தொடங்கி. கிரந்தி-கட்டி.

3. மேலே 'மண் தின்ன வேணும்' என்று தொடங்கி அருளிச் செய்த வாக்கியங்களால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'மேற் கூறியவை' என்று தொடங்கி.

பொ - ரை : ஞானத்தைப் பெற்று அந்த ஞானத்திற்கு இடையீடு இல்லாமல் நின்ற அடியார்கட்கு மோக்ஷ உலகத்தைத் தருகின்ற ஞானமே சொரூபமான கண்ணபிரானை, அழகிய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபராலே அருளிச்செய்யப்பட்ட தெளிந்த ஆயிரம் திருப்பாசுரங்களுள் இவை பத்துத் திருப்பாசுரங்களையும் வல்லவர்கள், பரந்திருக்கின்ற மூன்று உலகத்திற்குள் தெளிந்த சிந்தையினையுடைய ராவர்.

ஈடு : முடிவில், [1]'இத்திருவாய்மொழி கற்று வல்லவர்கள் சம்சாரத்துக்குள் இருந்து வைத்தே சுத்த பாவர்' என்கிறார்.

தெளிவுற்று வீவு இன்றி நின்றவர்க்கு-'பிராப்பிய பிராபகங்கள் இரண்டும் அவனே' என்று அறுதியிட்டு, பின்னர் [2]நாட்டார் செயல்களைக் கண்டாதல், போலி வார்த்தைகளைக் கண்டாதல் பிற்காலியாதே நின்றவர்களுக்கு. [3]பாரதப் போரிலே நின்று அருச்சுனனை நோக்கி, 'நான் சொன்ன இது உனக்குத் தொங்கிற்றே? எதிரே போந்ததோ?' என்ன, [4]'நிலைபெற்றேன்' என்ன, அவன், 'ஆனால் நம் காரியம் செய்யப் பார்த்தது என்?' என்று கேட்க, [5]'உன்னுடைய வார்த்தையின்படி செய்கிறேன்' என்கிற படியே, 'தேவரீர் ஏவின அடிமை செய்யக் கடவேன்,' என்றான் அன்றோ? [6]'அருச்சுனன்தான் எம்பெருமானைப் பெற்றானே,

1. 'பாமரு மூவுலகத்துள்ளே தெளிவுற்ற சிந்தையர்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'அவனே உபாய உபேயங்கள் என்று அறுதியிட்டவனுக்குப் பின் வீவுக்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நாட்டார்' என்று தொடங்கி. நாட்டார் செயல்களாவன, சாதன அநுஷ்டானங்கள். போலி வார்த்தைகளாவன : உபாயபல்குத்துவம் - சாதனம் சிறிதாய் இருத்தல், உத்தேஸ்ய துர்லபத்துவம் - பேறு கிடைத்தற்கு அரியதாய் இருத்தல், ஸ்வகிருததோஷபூயஸ்த்வம்-தன்னால் செய்யப்பட்ட பாவங்கள் பலவாக இருத்தல் என்னுமிவை.

3. 'அப்படிப் பிற்காலியாமல் நின்ற பேர் உளரோ?' என்ன' அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பாரதப் போரிலே' என்று தொடங்கி. 'தொங்கிற்றே?' என்றது, 'உறுதியாகத் தங்கியிருக்கின்றதா?' என்றபடி. 'எதிரே போந்ததோ?' என்றது, 'எதிர்த்ததோ?' என்றபடி. அதாவது, 'பொருத்தமில்லாததாகப்பட்டதோ?' என்றபடி,

4. 'ஸ்த்திதோஸ்மி' என்பது, ஸ்ரீகீதை, 18 : 73.

5. 'கரிஷ்யே வசநம் தவ' என்பது, ஸ்ரீகீதை, 18 : 72.

6. 'அருச்சுனன்' என்று தொடங்கும் வாக்கியம், இடைப்பிறவரல்.

இல்லையோ?' என்று **நம்பிள்ளை** சீயரைக் கேட்க, 'உமக்கு அது கொண்டு காரியம் என்? இது சொன்னவன் எல்லார்க்கும் பொதுவானவனுகில், பகவானுடைய வார்த்தை என்னுமிடம் நிச்சயமாகில், தங்கள் தங்களுடைய கர்மங்கட்குத் தகுதியாகவும் ருசிக்குத் தகுதியாகவும் பெறுகிருர்கள்; பெற்றவர்களை ஆராய்ந்து பார்த்து அதனுலே அன்றே நாம் பற்றப் பார்க்கிறது?' என்று அருளிச்செய்தார். [1]சேர்ந்து குளிர்ந்த தண்ணீர் இருந்தால், அது குடித்துத் தாகம் கெட்டவனைக் கண்டு அன்றே தாகம் கொண்டவன் தண்ணீர் குடிப்பது? இன்பக் கதி செய்யும் - தனக்குமேல் ஒன்று இல்லாத தான ஆனந்தத்தோடு கூடிய பேற்றினைப் பண்ணிக் கொடுக்கும், தெளிவுற்ற கண்ணனை - இவன் தெளியமாட்டாத இழவு தீர இவனுக்கு நித்தியமான கைங்கரியத்தைக் கொடுக்கையிலே தான் தெளிந்தபடியே இருக்கும் கண்ணபிரானை. [2]'நான் நினைக்கிறேன்' என்பது போலே.

தெளிவுற்ற ஆயிரம் - [3]மலையிலே கலங்கின நீரானது ஒரோ பிரதேசங்களிலே வந்து தெளிந்து உபயோகத்திற்குத்தகுதியாமாறு போலே ஒரு சிலரே ஓதத் தகுந்ததாய்க் கூளமும் பலாப்பிசினும்

---

1. அதற்கே வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிருர், 'சேர்ந்து' என்று தொடங்கி.

2. அவன் தெளிந்திருப்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிருர் 'நான் நினைக்கிறேன்' என்று.

'ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே சரீரே ஸதி யோநர:
தாதுஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விஸ்வரூபஞ்ச மாமஜம்'

'ததஸ்தம் ம்ரியமாணந்து காஷ்டபாஷாண ஸந்நிபம்
அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்'

என்பன, **வராஹசரமம்.**

3. 'திருவாய்மொழிக்குத் தெளிவுறுகையாவது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'மலையிலே' என்று தொடங்கி.

'மண்ணுடின ஸஹ்ய ஜலம் தோதவத்திச் சங்கணித் துறையிலே துகில் வண்ணத் தெண்ணீராய அந்தஸ்தத்தைக் காட்டுமாபோலே அல்பஶ்ருதர் கலக்கின ஶ்ருதி நன்ஞானத்துறை சேர்ந்து தெளிவுற்று ஆழ் பொருளை அறிவித்தது,' என்பது, **ஆசார்யஹ்ருதயம்**, சூத். 71.

'அந்த மிலாமறை ஆயிரத்து ஆழ்ந்த அரும்பொருளைச்
செந்தமி ழாகத் திருத்தில னேல்நிலத் தேவர்களும்
தந்தம் விழாவும் அழகும்என் னும்தமி ழார்கவியின்
பந்தம் விழாஒழு கும்குரு கூர்வந்த பண்ணவனே.'

என்ருர் கம்பநாடரும். **சடகோபரந். 14.**

போலே ஒன்றே அறுதியிட்டுப் பிரிக்க ஒண்ணுதபடியாயிருக்கிற வேதார்த்தமானது, எல்லாரும் படிக்கத்தகுந்ததாய் எல்லா ஐயங்களும் தீர்ந்து தெளிந்தது அவர் பக்கலிலே வந்தவாறே. இவை பத்தும் வல்லார் அவர் தெளிவுற்ற சிந்தையர் - இத்திருவாய்மொழியைக் கற்க வல்லவர்கள், இவ்வாழ்வார்தம்மைப் போலே தெளிவுற்ற நெஞ்சினையுடையராவர். 'அப்படித் தெளிவது தேச விசேடத்திலே போனலோ?' என்னில், பாமரு மூவுலகத்துள்ளே - 'பாபம் நிறைந் திருக்கிற தேசத்திலே' என்றபடி. [1] அவ்வருகே ஒரு தேச விசேடத்தே போனல் பெறக்கடவ தெளிவை. அதற்கு எதிர்த்தட்டான இங்கே இருந்தேயுடையராவர்; [2] 'சர்வேஶ்வரன் தானே இங்கு வந்து அவதரிக்கிலும் சோக மோகத்தைச் செய்ய வல்ல சம்சாரத்தே இருந்தே தெளிவுற்ற சிந்தையர்; குற்றங்களுக்கு எல்லாம் எதிர்த் தட்டான பரமாத்துமாவையும் தன் வழி ஆக்க வல்ல இவ்விபூதியிலே இருந்து வைத்தே சுத்த பாவராய் இருப்பர். பாபம் என்பது, 'பா' எனக் கடைக்குறைந்து நிற்கிறது. (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*கற்றோர் கருதும் விசயங் களுக்கெல்லாம்*
*பற்றும் விபவகுணப் பண்புகளை—உற்றுணர்ந்து [சொல்*
*மண்ணிலுள்ளோர் தம்மிழவை வாய்ந்துரைத்த மாறன்*
*பண்ணிலினி தானதமிழ்ப் பா.* (65

ஆழ்வார் எம்பெருமானர் சீயர் திருவடிகளே அரண்.

---

1. 'மூவுலகத்துள்ளே' என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச் செய்கிருர், 'அவ்வருகே' என்று தொடங்கி.

2. ''இங்கே இருந்தே' என்கைக்கு, இவ்வுலகின் தன்மை யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'சர்வேஶ்வரன்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிருர், 'குற்றங்களுக்கு' என்று தொடங்கி,

# ஆறாந்திருவாய்மொழி—'பாமரு'

## முன்னுரை

ஈடு: [1] இப்படித் தெளிந்தால், பின்னைச் செய்வது கூப்பிடுகை போலேகாணும்; [2] இல்லையாகில் 'சம்சாரம் நன்று' என்று கலங்கினர் ஆவரே. [3] 'அம்மங்கி அம்மாள், 'இத்திருவாய்மொழி பாடக் கேட்டு அனுபவித்துப்போரும் இதற்கு மேற்பட, இதில் ஓடுகிற ஆர்த்திக்கு நம்மாற்பாசுரம் இட்டுச் சொல்லப் போகாது' என்று பணிக்கும்' என்று அருளிச்செய்வர். [4] மேலே, 'ஆழி எழச் சங்கும்' என்ற திருவாய்மொழியிலே, சர்வேஶ்வரன் காட்டிக் கொடுத்த வெற்றிச் செயல்களை அனுபவிக்கைக்கு உறுப்பாக, அவனுடைய வீரச்செயல்களை அருளிச்செய்தார்; அருளிச்செய்த முகத்தாலே அவனுடைய அவதாரங்களையும் அதற்கு அடியான கிருபை முதலான குணங்களையும் நினைத்து, 'இக்குணங்களும் நடையாடாநிற்க, இவற்றிலே சம்பந்தம் உண்டாய் இருக்க, தாங்கள் சேதநராய் இருக்க, சம்சாரிகள் இதனை இழப்பதே!' என்று ஆச்சரியப்பட்டார் மேல் திருவாய்மொழியில். 'அவர்கள் விருப்பம் இல்லாமையாலே இழக்கிறார்கள்: விருப்பமுடைய நாம் இழப்போம் அல்லோம்; அவனுடைய அவதாரங்களையும் வடிவழகையும் அனுபவிப்போம்,' என்று பார்த்த

---

1. மேல் திருவாய்மொழியிலேயுள்ள 'வார்த்தை அறிபவர்' என்ற திருப்பாசுரத்தோடு இத்திருவாய்மொழிக்கு இயைபினை அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி வியாக்யாதா ஈடுபடுகிறார், 'இப்படி' என்று தொடங்கி. என்றது, 'விருப்பம் இல்லாததனை நீக்குதல் விருப்பமுள்ளதனைக் கொடுத்தல் ஆகியவற்றைச் செய்யுமவன் அவனுகையாலே, 'அவனே உபாயம்' என்று அறுதியிட்டு நம்பினால், பின்பு செய்யக்கூடியது இல்லாமையாலே கூப்பிடுகை அன்றோ உள்ளது?' என்றபடி.

2. இப்படிக் கூப்பிடாத போது வரும் குற்றத்தை அருளிச்செய்கிறார், 'இல்லையாகில்' என்று தொடங்கி. இல்லையாகில் - இப்படிக் கூப்பிட்டலராகில்.

3. ஆர்த்தியாலே இத்திருவாய்மொழியில் கூப்பிடுகிறார் என்பதற்கு ஆப்தவசனம் காட்டுகிறார், 'அம்மங்கி அம்மாள்' என்று தொடங்கி. ஆர்த்திக்கு - துக்கத்துக்கு.

4. இயைபினை அருளிச்செய்கிறார், 'மேலே' என்று தொடங்கி.

விடத்து, அவற்றை அப்போதே கிட்டி அனுபவிக்கப் பெருமல் மிகவும் துக்கித்தவராய்ச் சர்வேஶ்வரனுக்குப் பரமபதத்திலும் இருப்பு அரிதாம்படி ஆர்த்தியாலே நிரம்பிற்று. ஒரு கடல் கையெடுத்துக் கூப்பிடுமாறு போலே கூப்பிடுகிற கூப்பீடு கேட்டு அவ்விருப்புக் குலைந்து வந்து முகங்காட்ட வேண்டும்படி, அவன் [1] பிராப்பியனுய் இருக்கிறபடியையும் பிராபகனுய் இருக்கிறபடியையும் விரோதிகளை அழிக்கும் தன்மையனுய் இருக்கிறபடியையும் சொல்லி, கேட்டா ரடைய நீராகும்படி பெருமிடறு செய்து கூப்பிடுகிருர்.

[2] 'பஹவோ ந்ருப' - சக்கரவர்த்தி, 'பெருமாளைத் திருமுடி சூட்ட' என்று கோலி, 'அறுபதிஞயிரம் ஆண்டு ஒரு தலை மிதிக்க ஒரு தலை மேல் எழும்படியான இராச்சியத்தை வருந்தி ஒருபடி அடிப்படுத்திேனும்; இதனை ஒரு சிறு பிள்ளையின் தலையிலே வைத்தால் பொறுக்குமோ, பொருதோ?" என்று விசாரித்து, 'இதனை உலகத்தோடே கூட்டிப் பார்ப்போம்' என்று கோலி, அரசர்கள் எல்லாரையும் திரட்டி, 'நான் இங்ஙனே பெருமாளைத் திருமுடி சூட்டப் பாராநின்றேன் : உங்களுக்கு இஷ்டமோ, இன்ரே?' என்று கேட்க, உடனே, [3] 'கிழவா! போகாய்' என்ன, [4] 'நாம் ஒருப்பட்ட

---

1. *இத்திருவாய்மொழியில் வருகிற 'தாமரைக் கண்ணுவோ' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'பிராப்பியனுய்' என்று தொடங்கியும், 'வந்து எய்துமாறு அறியேன்' என்றதனைத் திருவுள்ளம் பற்றிப் 'பிராபகனுய்' என்று தொடங்கியும், 'விறல் மாலியைக் கொன்று' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'விரோதிகளை' என்று தொடங்கியும் அருளிச்செய்கிருர். பிராப்பியன்-அடையத் தக்கவன். பிராபகன்-அடைவதற்கு வழியாய் இருப்பவன்.*

2. *'குணங்களை அனுபவிக்கப் பெருவிட்டால் கூப்பிட வேண்டுமோ?' என்ன, 'திருவயோத்தியையிலுள்ளாரையும் ஈடுபடுத்தாநின்ருல் இவரால் ஆறி இருக்கப் போமோ?' என்று கூறத் திருவுள்ளம் பற்றி, 'அவர்கள் அப்படிக்குணங்களில் ஈடுபட்டார்களோ?' என்ன, ஈடுபட்டமைக்குப் பிரமாணமும் பிரமாணத்திற்கு அவதாரிகை முன்னுகப் பொருளும் அருளிச்செய்கிருர், 'பஹவோ ந்ருப' என்று தொடங்கி. இங்குக் கூறுகின்ற அவதாரிகையோடு, கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், மந்திரப்படலம் 13 முதல் 44 முடியவுள்ள செய்யுள்களைப் படித்து இன்புறல் தகும்.*

3. *'கிழவா போகாய்' என்றது,*

*'அநேகவர்ஷ ஸாஹஸ்ரோ வ்ருத்தஸ்த்வம் அஸி பார்த்திவ*
*ஸராமம் யுவராஜாநம் அபிஷிஞ்சஸ்வ பார்த்திவம்'*

**(ஸ்ரீராமா. அயோத். 2 : 21.)** *என்றதனைத் திருவுள்ளம் பற்றி.*

4. *'கதம்நு மயி தர்மேண ப்ருதிவீம் அநுஶாஸதி*
*பவந்தோத்ரஷ்டும் இச்சந்தி யுவராஜம் மமாத்மஜம்'*

*என்பது,* **ஸ்ரீராமா. அயோத். 2 : 25.**

காரியம் நன்ருக விழுந்தது ; அரசர்கள் கூட்டம் இப்படி விரையப் பெறுவதே!' என்று அதிலே மிகுந்த உவகையனுய், அந்த உவகையை நெஞ்சிலே இட்டுவைத்து, 'அதனை இவர்கள் வாயாலே சொல்லக் கேட்கலாகாதோ ?' என்று நினைத்து, 'வாரீர்கோள் ! அறுபதினுயிரம் ஆண்டு அரசைச் செலுத்துகிற இடத்து, இற்றைவரை எனக்கு என்று ஒரு சுகத்தைக் கோலாதே உங்கள் இரட்சணத்துக்கு ஆமவையே தேடிக்கொடு போந்த நான், ஒரு வார்த்தை சொன்னுல், 'இப்போது நீ இருந்தாயாகில் வீகம் என் ? கிரமத்திலே செய்து கொள்ளுகிருேம்,' என்னுதல் : அன்ருகில், 'உனக்குப் பிரியமாகில் அப்படிச் செய்யலாகாதோ ?' என்று ஒருவார்த்தை சொல்லி ஆறியிருத்தல் செய்கை ஒழிய, படுகொலைக்காரர் கையிலே அகப் பட்டார், 'தப்ப வேணும்' என்று பார்க்குமாறு போலே நீங்கள் இங்ஙன் கூப்பிடுகைக்கு நான் செய்த குற்றம் என் ?' என்ன,

[1]'ஓ அரசனே ! உன் பிள்ளையான ஸ்ரீராமபிரானுக்கு மங்கள கரமான குணங்கள் பல இருக்கின்றன ' என்கிறபடியே, 'எதிரிகள் அம்பால் அழியப்பெற்றது இல்லை உன்னுடைய தேசம் ; உன் மகனுடைய குணத்தாலே நாட்டைப் படுகொலைக்குத்தினுய்காண் நீ,' என்ருர்கள் ஆயிற்று. என்றது, [2]'நாங்கள் குணங்களால் வெல்லப்பட்டவர்களாய் இவ்வார்த்தை சொன்ஞேமித்தனை அல்லது ஒரு காரியபுத்தியோடு சொன்ஞேம் அல்லோங்காண்,' என்ருர்கள் என்றபடி. [3]'தாதுக்களுக்கு இமயமலை போன்று குணங்களுக்குப் பிறப்பிடமாய் இருக்கின்ருன், ஒருவராலும் அசைக்கக்கூடாத ஆற்றலையுடையனுயும் இருக்கிருன்,' என்கிறபடியே, [4]தாதுக் களானவை 'இன்ன மலையிற்பொன்' என்றவாறே விலை போமாறு

---

1. 'தே தம் ஊசு : மஹாத்மாநம் பௌரஜாநபதைஸ்ஸஹ
பஹவோ ந்ருப கல்யாண குணு: புத்ரஸ்ய ஸந்தி தே'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 2 : 26.

2. அதனை விவரணம் செய்கிருர், 'நாங்கள்' என்று தொடங்கி.

3. வேறும் ஒரு பிரமாணம் காட்டுகிருர், 'தாதுக்களுக்கு' என்று தொடங்கி.

'ஜ்ஞாந விஜ்ஞான ஸம்பந்நோ நிதேஸே நிரத: பிது:
தாதூநாம் இவ ஸைலேந்த்ரோ குணாநாம் ஆகரோ மஹாந்'

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 15 : 21.

4. இந்தச் சுலோகத்துக்கு பாவம் அருளிச்செய்கிருர், 'தாதுக்களானவை' என்று தொடங்கி.

போலே, புறம்பே குணங்கள் சிலவற்றைக் கண்டால், 'பெருமாள் பக்கல் குணம்' என்று இட்டாயிற்று அங்கு விலை போவது. 'இவ்வடிவத்தில் குணம்' என்றாயிற்றுப் புறம்பு விலைபோவது; இப்படிப்பட்டவனுடைய குணங்களைச் சொல்லிக் கூப்பிடுகிறார்.

718

[1] பாமரு மூவுலகும் படைத்த பற்ப நாபாவோ!
பாமரு மூவுலகும் அளந்த பற்ப பாதாவோ!
தாமரைக் கண்ணா வோ! தனி யேன் தனி ஆளாவோ!
தாமரைக் கையாவோ! உன்னை என்றுகொல் சேர்வதுவே?

பொ-ரை: 'பரப்பையுடைய மூன்று உலகங்களையும் உண்டாக்கின திருவுந்தித் தாமரையையுடையவனே! பரப்பையுடையவான மூன்று உலகங்களையும் அளந்த தாமரை போன்ற திருவடிகளையுடையவனே! தாமரை போன்ற திருக்கண்களையுடையவனே! தாமரை போன்ற திருக்கரங்களையுடையவனே! தனியேனாய் இருக்கின்ற என்னைத் தனித்து ஆளுகின்றவனே! உன்னைச் சேர்வது என்றுகொல்?' என்கிறார்.

வி-கு: 'பற்பநாபன், பற்பபாதன், தாமரைக் கண்ணன், தாமரைக் கையன்' என்பன, [2] விளி ஏற்றலின் ஈறு கெட்டு அயல் நீண்டு ஓகாரம் பெற்று வந்தன. ஓகாரங்கள், துக்கத்தின் மிகுதியைக் காட்ட வந்தன. 'பத்மம்' என்பது, 'பற்பம்' எனத் திரிந்தது.

இத்திருவாய்மொழி, கலிநிலைத்துறை.

ஈடு: முதற்பாட்டு. [3] 'உலகத்தைப் படைத்தல் முதலாயினவற்றைச் செய்து உபகரித்து எல்லையற்ற இனியனாய் இருக்கிற

---

1. 'பெரியவனை மாயவனைப் பேருலகம் எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனை'
'மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சேவடி'

என்பது, சிலப்பதி. ஆய்ச்சியர் குரவை.

2. 'கரனிருந்த வனமன்றோ இவைபடவுங் கடவேனோ
அரனிருந்த மலையெடுத்த அண்ணாவோ அண்ணாவோ'

என்பது, கம்பராமா. சூர்ப்பணகைப்பட. 109.

3. 'பாமரு மூவுலகும் படைத்த, பாமரு மூவுலகும் அளந்த தாமரைக் கண்ணாவோ, தாமரைக் கையாவோ' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

உன்னை, உன்னாலே உபகாரம் கொண்டு உன் சுவடு அறிந்த நான் கிட்டுவது என்றோ ?' என்கிறார்.

பாமரு மூன்று உலகும் படைத்த பற்பநாபாவோ - பா என்பது, தேவர் மனிதர் முதலான பொருள்களைக் காட்டுவதாய், பா மருவி இருந்துள்ள ; அதாவது, 'பொருள்களினுடைய நெருக்கத்தை யுடையவான மூன்று உலகு' என்னுதல். அன்றிக்கே, 'பாபம் மருவி இருந்துள்ள மூன்று உலகு' என்னுதல் : பாபம் என்றது, 'பா' எனக் கடைக்குறைந்து வந்தது. அன்றிக்கே, 'பா' என்று பரம்புதலாய், 'பரப்பையுடையவான மூன்று உலகு' என்னுதல். 'மூன்று உலகு' என்று, கீழும் மேலும் நடுவுமான உலகங்களைச் சொல்லுதல். அன்றிக்கே, கிருதகம், அகிருதகம், கிருதகாகிருதகம் என்று இவ்வகையிலே ஆக்கிச் சொல்லுதல். [1]'என் தாயே' என்பாரைப் போலே, '**படைத்த பற்ப நாபாவோ!**' என்கிறார். [2]இதனை உண்டாக்குகைக்கு அடியான சம்பந்தமேயாய், இனிமை இன்றிக்கே ஒழிந்ததாகில்தான் நான் ஆறி இரேனோ? [3]நீ இதனை வருந்திப் படைத்தது அழிக்கைக்காகவோ? அன்றிக்கே, [4]இல்லாத பொருள்களை உண்டாக்கக்கூடிய நீ, உள்ள பொருளை அழிக்கிறது என் ?' என்னுதல்.

பாமரு மூன்று உலகும் அளந்த பற்ப பாதாவோ - [5]இவற்றை உண்டாக்கி 'மேல் பட்டது படுகிறது' என்று இருந்தாயாகில்தான் ஆறி இரேனோ? பெற்ற தாய் வளர்க்குமாறு போலே இவற்றைக் கண்களிலே வெண்ணெய் இட்டுக்கொண்டு நோக்குமவன் அல்லையோ ? மஹாபலி போன்றவர்கள் பருந்து இருஞ்சிறைபோலே

---

1. *'படைத்த பற்பநாபாவோ' என்று காரணத்துவத்தை இட்டு விசேடிக்கையாலே கிடைத்த பொருள் சம்பந்தம் என்னும் இடம் தோற்ற அருளிச்செய்கிறார், 'என் தாயே' என்று தொடங்கி.*

2. *'பற்பநாபாவோ' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'இதனை' என்று தொடங்கி.*

3. *'நாபாவோ' என்றதிலேயுள்ள ஓகாரத்துக்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'நீ இதனை' என்று தொடங்கி.*

4. *வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'இல்லாத' என்று தொடங்கி.*

5. *படைத்தலைக் கூறிய பின், 'அளந்த' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'இவற்றை' என்று தொடங்கி.*

இதனைக் கவர்ந்து கொண்டால் எல்லை நடந்து மீட்டுக்கொள்ளுமவன் அன்றோ நீ? [1] 'படிக்கு அளவாக நிமிர்த்த நின் பாத பங்கயமே தலைக்கு அணியாய்' என்று ஆசையுடைய நான் இருக்க, இச்சை இல்லாதார் தலைகளிலே திருவடியை வைப்பதே!' 'அது செய்தமை உண்டு, உமக்கு இப்போது விருப்பம் என்?' என்ன, அருளிச் செய்கிறார் மேல் :

தாமரைக் கண்ணனோ - [2] 'கடாட்சத்தைத் தருதலாலே மறு படியும் என்னைக் காப்பாற்றி அருளவேண்டும்,' என்னுமாறு போலே 'திருக்கண்களாலே நோக்கவேணும்' என்கிறார். [3] தோன்றுதலும், வளர்தலும், வாழ்தலும் எல்லாம் உன் பக்கலிலேயாயிற்று. தனியேன் தனி ஆளாவோ - [4] ஆக, திருக்கண்களின் அழகை அநுசந்தித்தார்; அக்கண்ணழகே தாரகமாக இருக்கும் நித்தியசூரிகள் திரளிலே தம்மை இருக்கக் கண்டிலர்; அதனாலே '**தனியேன்**' என்கிறார். [5] 'பெண்களுடைய நோக்கே தாரகமாக இருக்குமவர்களுடைய திரளுக்கும் கூட்டு அன்றிக்கே, உன் நோக்கே தாரகமாக இருக்கும் அவ்விபூதியிலுள்ளாருடனும் கூட்டு ஆகாதே, என்னை மூன்றும் விபூதியாக்கி ஆளுகிறவனே!' என்பார், '**தனி ஆளாவோ**' என்கிறார். அன்றிக்கே, 'உன் கிருபையே தாரகமாக இருக்கிற என்னை உன் கிருபைக்கு என்னை ஒழிய வேறு விஷயம் இல்லையாம்படி

---

1. *'பாதாவோ' என்றதிலேயுள்ள ஓகாரத்திற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'படிக்களவாக' என்று தொடங்கி. 'படிக்கு அளவாக' என்பது,* திருவாய். 9. 2 : 2.

2. *கண்களின் அழகைச் சொன்னதற்கு* பாவம் *அருளிச்செய்கிறார் 'கடாட்சத்தை' என்று தொடங்கி.*

*'அவலோகந தாநேந பூயோ மாம் பாலய அவ்யய'*

*என்றது,* ஸ்ரீவிஷ்ணு புரா. 16. 20 : 1.

3. *மேல் இரண்டு அடிகளையும் கூட்டிக்கொண்டு, 'தாமரைக் கண்ணனோ' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'தோன்றுதலும்' என்று தொடங்கி.*

4. *கண்களின் அழகைச் சொன்னதன் பின், 'தனியேன்' என்றதற்கு* பாவம் *அருளிச்செய்கிறார், 'ஆக' என்று தொடங்கி. 'தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை'* (திருவாய். 2. 6 : 3.) *என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'அக்கண்ணழகே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.*

5. *'தனி ஆளாவோ' என்றதற்கு* பாவம் *அருளிச்செய்கிறார், 'பெண்களுடைய' என்று தொடங்கி.*

ஆளுகிறவனே' என்றுமாம். தாமரைக் கையாவோ-[1] அக்குரூரனைப் போன்று போரேனோ? [2]'ஸோப்யே நம்' திருக்கையில் அடையாள மித்தனையும் இலச்சினைப்படியே அவன் உடம்பிலே காணலாம்படி அவனைத் தீண்டி அவன் ஸ்பரிசத்தாலே செயல் அற்றவனாய் நிற்கை யாலே கையைப் பிடித்து ஏறட்டு, பின்னை அணைக்கைக்கு இருவரைக் கண்டது இல்லை. [3]'மிருதுவான கைகளால் கண்டாகர்ணனுடைய சரீரத்தையுங்கூட எல்லாவிடத்திலும் தொட்டருளினார்,' என்கிற படியே.

உன்னை என்றுகொல் சேர்வதுவே - [4]'பதினான்கு ஆண்டு களும் முடிந்தபின் பஞ்சமி திதியில்' என்று நாள் இட்டுக்கொடுக்க லாவது தம்பிமார்க்கோ? உனக்கே உரியரான அடியார் ஆனால் 'இன்ன நாள் பெறக்கடவது' என்று ஒருநாள் இட்டுக் கொடுக்கல் ஆகாதோ? [5]அடியன் ஆகில் தலைவன் கொடுத்த நாள் பெறக்

---

1. திருக்கைகளை வர்ணிப்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அக்குரூரனை' என்று தொடங்கி.

2. அதற்குப் பிரமாணமும் பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச் செய்கிறார், 'ஸோப்யேநம்' என்று தொடங்கி.

'ஸோபி ஏநம் த்வஜ வஜ்ராப்ஜ க்ருத சிஹ்நேந பாணிநா
ஸம்ஸ்ப்ருஸ்ய ஆக்ருஷ்யச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே'

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 5. 18 : 2.

இந்தச் சுலோகத்திலுள்ள 'ஸம்ஸ்ப்ருஸ்ய' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'திருக்கையில்' என்று தொடங்கி. 'ஆக்ருஷ்ய' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'அவன் ஸ்பரிசத்தாலே' என்று தொடங்கி. 'ஸுகாடம்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'இருவரைக் கண்டது இல்லை' என்று.

3. வேறும் ஒரு பிரமாணம் அருளிச்செய்கிறார், 'மிருதுவான' என்று தொடங்கி.

பஸ்பர்ஸ அங்கம் ததா விஷ்ணு: பிஸாசஸ்ய அபி ஸர்வத:'
கரேண ம்ருதுநா தேவ: பாபந்நிர்மோசயந் ஹரி:'

என்பது, ஹரி வம்ஸம். 275 : 15.

4. ''என்றுகொல்' என்கைக்கு நாம் யார்க்கு நாள் இட்டுக் கொடுத் தோம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பதினான்கு' என்று தொடங்கி.

'பூர்ணே சதுர்த்தஸே வர்ஷே பஞ்சம்யாம்'

என்பது, ஸ்ரீராமா. யுத். 127 : 1.

5. 'நாம் செய்ததனைக் கண்டிருக்க வேண்டாவோ?' என்ன, 'அடி யன் ஆகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

கடவதாய் அன்றோ இருக்க அடுப்பது? அங்ஙனம் கிரமத்திலே அடைகிறோம் என்று பார்த்து ஆறி இருக்க மாட்டுகின்றிலேன். தனியேன் உன்னை என்று கொல் சேர்வதுவே - [1] நாராயணனை ஒழிந்து இருப்பது ஒரு நாரம் இல்லையே? இனிச் 'சேருகையாவது, அடியார்கள் குழாங்களை உடன் கூடுகை அன்றோ? [2] 'உன்னை என்றுகொல் சேர்வதுவே' என்னுநிற்க, அது சேரும்படி என்?' என்னில், [3] ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்பக் கண்டு வைக்கையாலே, 'உன்னைச் சேர' என்ற போதே தன்னடையே வருமன்றோ? (1)

719

என்றுகொல் சேர்வதுஅந் தோ!அரன்
நான்முகன் ஏத்தும்செய்ய
நின்திருப் பாதத்தை யான்?நிலம்
நீர்எரி கால்விண்ணுயிர்
என்றஇவை தாம்முத லாமுற்று
மாய்நின்ற எந்தாயோ!
குன்றுஎடுத்து ஆநிரை மேய்த்துஅவை
காத்தஎம் கூத்தாவோ!

பொ-ரை: 'நிலமும் நீரும் நெருப்பும் காற்றும் ஆகாயமும் உயிரும என்ற இவை முதலாக மற்றுமுள்ள எல்லாப் பொருள்களும் உனக்குச் சரீரமாக நின்ற எந்தையே! பசுக்கூட்டங்களை மேய்த்து, மலையைத் தூக்கிப் பிடித்து அப்பசுக்களைக் காத்த எம் கூத்தனே! சிவனும் பிரமனும் ஏத்துகின்ற நின் செய்ய திருப்பாதத்தை யான் சேர்வது என்றுகொல்? அந்தோ!' என்கிறார்.

வி-கு: 'அந்தோ' என்பது, இரக்கத்தைக் காட்டும் இடைச் சொல். 'அரன் நான்முகன் ஏத்தும் செய்ய நின் திருப்பாதத்தை யான் சேர்வது என்றுகொல்?' என்க. 'எந்தை, கூத்தன்' என்பன, விளி ஏற்றலின் ஈறு திரிந்து ஓகாரம் பெற்றன.

---

1. 'அவனைச் சேராதிருந்தால் சத்தை உண்டோ?' 'என்றுகொல் சேர்வது?' என்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நாராயணனை' என்று தொடங்கி.

2. சங்கிக்கிறார், 'உன்னை' என்று தொடங்கி. 'அது சேரும்படி' என்றது, 'அடியார்கள் குழாங்களை உடன் கூறுவதனைக் காட்டும்படி' என்றபடி.

3. அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒண்டொடியாள்' என்று தொடங்கி. என்றது, 'இவருடைய அபிமானத்திலே இவர்கள் அடங்கினவர்களாய் இருக்கையாலே, அவனைச் சொன்னால் இவர்களையும் தன்னடையே சொல்லிற்றும்,' என்றபடி.

ஈடு : இரண்டாம் பாட்டு. [1] 'வேறு விஷயங்களிலே நோக்கு உள்ளவர்களாய்ப் புறம்பே தாரகம் முதலானவைகளாம்படி இருக்கின்றவர்களுக்குங்கூட விரும்பும்படியாக இருக்கிற திருவடிகளை, வேறு ஒன்றிலும் நோக்கு இல்லாதவனாய் இதுவே பிரயோஜனமாக இருக்கிற நான் என்று பெறக்கடவேன்?' என்கிறார்.

என்றுகொல் - [2] திருக்கையில் ஸ்பரிச சுகத்தை விரும்பி, 'என்றுகொல் சேர்வது ?' என்ற அளவே அன்றோ மேல் ? அதற்கு ஒரு மறுமொழி பெறாதே இருக்க, 'என்றுகொல் சேர்வது ?' என்கிறது என்ன நிலையோதான்! அந்தோ - இனி 'என்றுகொல் சேர்வது ?' என்பாருங்கூட இன்றியே ஒழியக்காண் புகுகிறது ; நான் முடிந்தேன் என்கிறார். [3] 'அந்தோ' என்பதனால், தம்முடைய ஆற்றாமையைத் தெளிவுபடுத்துகிறார். அரன் நான்முகன் ஏத்தும் செய்ய நின்திருப்பாதத்தை - [4] அழிப்பாருடன் ஆக்குவாருடன் வாசி அற உகக்கும்படியான திருவடிகளை. வேறு பிரயோஜனங்களை விரும்புகின்றவர்களுக்குங்கூட விரும்பத் தக்கனவாம்படி இருக்கிற திருவடிகளை வேறு பிரயோஜனங்களை விரும்பாத நான் என்று பெறக்கடவேன் ? [5] தங்கள் தங்கள் தொழில்களிலேயே நோக்கு

---

1. 'அரன் நான்முகன் ஏத்தும் செய்ய நின் திருப்பாதத்தை யான் என்றுகொல் சேர்வது?' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். வேறு விஷயங்களிலே நோக்குள்ளவர்கள்' என்றது, படைத்தல் முதலான தொழில்களைத் திருவுள்ளம் பற்றி. அரிய செயல்களைச் செய்து இந்த அதிகாரங்களைப் பெறுகையாலே, 'புறம்பே தாரகம் முதலானவைகளாம்படி' என்றதும் இப்பதங்களிலே சித்திப்பதாம்.

2. 'என்று கொல்?' என்று மீளவும் இத்திருப்பாசுரத்தில் கூறுவது, ஆற்றாமையின் மிகுதியாலே என்கிறார், 'திருக்கையில்' என்று தொடங்கி. என்றது, 'ஆற்றாமையாலே சொல்லுகையாலே கூறியது கூறல் இல்லை,' என்றபடி.

3. 'நான் முடிந்தேன்' என்பதற்குத் திருப்பாசுரத்தில் சொல் இல்லையே?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அந்தோ' என்று தொடங்கி.

4. பிரமன் முதலாயினார்க்கு வேறு நோக்கும் வேறு பயனும் உண்டு ஆகையாலே, இரண்டையும் இரண்டு வாக்கியத்தாலே அருளிச்செய்கிறார், 'அழிப்பாருடன்' என்று தொடங்கி.

5. 'அழிப்பாருடன்' என்று தொடங்கிய முதல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'தங்கள்' என்று தொடங்கி. 'செய்ய நின் திருப்பாதம்' என்பதற்குப்பொருள் அருளிச்செய்கிறார், 'விரும்பத் தக்கனவாய்' என்று தொடங்கி.

உள்ளவர்கள் பிரமன் முதலாயினாரும் தத்தம் தொழில்களிலே நோக்கு இல்லாதவர்களாய் ஏத்தும்படி விரும்பத் தக்கனவாய்ச் சிவந்திருந் துள்ள உன் திருவடிகளை, வேறு ஒன்றிலும் நோக்கு இல்லாத நான் கிட்டப்பெறுவது என்றோ? அரன் நான்முகன் ஏத்தும் செய்ய நின் திருப்பாதத்தை யான் என்றுகொல் சேர்வது?

நிலம் நீர் எரி கால் விண் உயிர் என்ற இவை முதலா முற்றுமாய் நின்ற-[1] பெற்ற பின்பு நோக்குகை அன்றிக்கே, 'குழந்தையைப் பெற வேணும்' என்று ஏற்கவே வருந்தும் தாயைப் போலே, படைப்பதற்கு முன்பே இவற்றை உண்டாக்குகைக்காகத் [2] திரிவ்ருத்கரணத்தை நினைத்துப் பஞ்சீகரணத்தைச் செய்து, இவற்றை அடையப் படைத்து, [3] படைக்கப்பட்ட பொருள்கள் பொருளாந்தன்மையைப் பெறுதல், பெயரை அடைதல் முதலியவைகளுக்காக உயிர் வழியாக அநுப்பிரவேசித்து, பின்னர், இவற்றைச் சொல்லுகிற சொற்கள், அசித்தும் அசித்தை விரும்பி நிற்கிற உயிரும் உயிருக்குள் உயிராய் இருக்கிற பரமாத்துமாவுமான இக்கூட்டத்தைச் சொல்லுகின்றன வாய்க் கொண்டு, தன்னளவிலே வரும்படி நிற்கிற நிலையைச் சொல்லுகிறது, '**முற்றுமாய் நின்ற**' என்னும் இதனால். [4] இவை அறியாது இருக்க, இவற்றின் பேற்றுக்கு அவன் வருந்த வேண்டு வதற்கு உரிய காரணத்தைச் சொல்லுகிறது, '**எந்தாய்**' என்ற இதனால். என்றது, 'அதற்கு அடியான சம்பந்தத்தைச் சொல்லு கிறது' என்றபடி. [5] இவற்றை உண்டாக்கும் நாளிலே உண்டாக்கி,

---

1. *படைத்த பின்பு பாதுகாத்தலைச் செய்கை அன்றிக்கே, படைத் தலையும் இவனே செய்தான் என்னுமதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'பெற்ற பின்பு' என்று தொடங்கி.*

2. *இவற்றை முன்னைய பத்துகளில் விளக்கியிருக்கிறேன்.*

3. *'முற்றுமாய் நின்ற' என்றது, 'சொரூப ஐக்கியத்தைச் சொல்லு கிறது அன்று; அநுப்பிரவேசத்தால் வந்த பிரகார பிரகாரி பாவத்தைச் சொல்லுகிறது,' என்கிறார், 'படைக்கப்பட்ட' என்று தொடங்கி.*

4. *'எந்தாய்' என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'இவை அறியாதிருக்க' என்று தொடங்கி.*

5. *'குன்று எடுத்து' என்பதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'இவற்றை' என்று தொடங்கி.*

'இனிமேல் வரும் ஆபத்தை இவை தாமே நீக்கிக்கொள்ளுகின்றன,' என்று விட்டு வைக்கை அன்றிக்கே, அரியன செய்தும் நோக்குமவன் என்கிறார் மேல் :

குன்று எடுத்து - மலையை எடுத்தே அன்றோ நோக்கிற்று? ஆநிரை மேய்த்து - நோக்குமிடத்து, வரையாதே பசுக்களை நோக்குமவனாயிற்று. அவை காத்த எம் கூத்தாவோ - [1] மழையிலே நோவுபடுகிற பசுக்களைப் பாதுகாப்பதற்காக மலையை எடுத்தான் அவன்; அப்போது திரிபங்கியாய் நின்ற வடிவுதான் வல்லார் ஆடினாற் போலே தமக்குக் கவர்ச்சிகரமாயிருக்கையாலே, '**எம் கூத்தாவோ**' என்கிறார்.

[2] ஆக, இந்த இரண்டு பாசுரங்களாலும் அவன் விரும்பப் படுகின்றவனாக இருக்கும் தன்மையைச் சொல்லும் முகத்தால், பிராப்பியத்துவம் சொல்லப்பட்டது: மேல் ஐந்து பாசுரங்களாலே, அவனுடைய பிராபகத்துவம் சொல்லப்படுகிறது. (2)

720

காத்தஎங் கூத்தாவோ! மலைஏந்திக்
கன்மாரி தன்னைப்

[3] **பூத்தண் துழாய்முடி யாய்!புனை
கொன்றையஞ் செஞ்சடையாய்!**

**வாய்த்தஎன் நான்முக னே!வந்துஎன்
ஆருயிர் நீஆனால்**

**ஏத்தருங் கீர்த்தியி னாய்!உன்னை
எங்குத் தலைப்பெய்வனே?**

**பொ-ரை :** 'மலையை ஏந்திக் கல்மழையைத் தடுத்துப் பசுக்களைப் பாதுகாத்த எம் கூத்தனே! குளிர்ந்த பூக்களையுடைய திருத்துழாயினைத் தரித்த திருமுடியையுடையவனே! கொன்றை மாலையை அணிந்த அழகிய சிவந்த சடையையுடைய சிவபெருமானைச் சரீரமாகவுடைய

1. 'அவை காத்தவனே' என்னாமல், 'எம் கூத்தாவோ' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'மழையிலே' என்று தொடங்கி.

2. அவதாரிகையில் அருளிச்செய்த பிராப்பிய பிராபகங்களுக்கு வாசகமான திருப்பாசுரங்கள் இத்தனை என்கிறார், 'ஆக' என்று தொடங்கி.

3. 'ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ
நலமுழு தளைஇய புகர்அறு காட்சிப்
புலமும் பூவனும் நாற்றமும் நீ
வலனுயர் எழிலியும் மாக விசும்பும்
நிலனும் நீடிய இமயமும் நீ'

என்ற பரிபாடற்பகுதி ஈண்டு ஒப்பு நோக்குக.

வனே ! படைக்கும் தொழிலையுடைய பிரமனைச் சரீரமாகவுடையவனே ! நீயே விரும்பி வந்து என்னுடைய அரிய உயிரும் நீயே ஆயினாய்; அப்படி ஆனால், துதிக்க முடியாத கீர்த்தியையுடையவனே ! உன்னை எங்கே சேர்ந்து அனுபவிப்பேன் ?' என்கிறார்.

ஈடு : மூன்றாம் பாட்டு. [1]'பிரமன் சிவன் முதலானவர்களுக்கும் காரணனாய் இருக்கிற நீ, காரணம் இல்லாமலே வந்து நீயே தாரகனும்படி செய்தருளினாய்; ஆன பின்னர், நீயே குறையும் செய்தருள வேணும்,' என்கிறார்.

காத்த எம் கூத்தாவோ - [2]மேலே கிருஷ்ணனுடைய சரிதம் வந்ததே அன்றோ, 'ஆநிரை மேய்த்து அவை காத்த எம் கூத்தாவோ' என்று? 'எத்திறம்' என்றால், பின்னரும் 'எத்திறம்' என்று அதிலே போமித்தனை அன்றோ ? மேலே கூறியது வடிம்பிட்டு, திரியட்டும் 'காத்த எம் கூத்தாவோ' என்கிறார். அன்றிக்கே, 'பசுக்கள், தம்மைப் பாதுகாத்துக்கொள்வதற்கு மலையை எடுத்தனவோ ?' என்னுதல். மலை ஏந்திக் கல்மாரி தன்னை-[3] கல்லாலே பெய்தலாலே கல்லை எடுத்துப் பாதுகாத்தான்; நீராலே பெய்தானாகில் கடலை எடுத்து நோக்குங்காணும். பூத்தண் துழாய் முடியாய் புனை கொன்றை அம் செம் சடையாய் வாய்த்த என் நான்முகனே ! - [4]அவர் அவர்களுடைய சொரூபங்களுக்கே உரியனவான இலட்சணம் சொல்லுகிறது.

---

1. *பின் அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

2. *மீண்டும் 'காத்த எம் கூத்தாவோ!' என்றதற்கு இரண்டு வகையாகப் பரிகாரம் அருளிச்செய்கிறார், 'மேலே' என்று தொடங்கியும், 'பசுக்கள்' என்று தொடங்கியும். 'எத்திறம்' என்னும் கிருஷ்ணாவதாரச் சரிதமிறே ப்ரஸ்துதமாயிற்று; ஒருகால் 'எத்திறம்' என்றால் பின்னையும் 'எத்திறம்' என்னுமா போலே அது பின்னாட்டுகிறபடி' என்பது, இருபத்துநாலாயிரப்படி. வடிம்பிட்டு-தாண்டி. திரியட்டும்-மீண்டும்.*

*இரண்டாவது பரிகாரத்துக்குக் கருத்து, 'தமக்கு ஒரு சாதனத்தைச் செய்வதற்குத் தகுதி இல்லை என்கைக்காக மீளவும் சொல்லுகிறார் என்பது.*

3. *'மலை ஏந்திக் கல்மாரிதன்னைக் காத்த' என்றதற்கு ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'கல்லாலே' என்று தொடங்கி.*

4. *'பூத்தண் துழாய்' என்றும், 'புனைகொன்றை' என்றும், 'வாய்த்த' என்றும் கொடுத்த அடைமொழிகட்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'அவர் அவர்களுடைய' என்று தொடங்கி. சொரூபங்களுக்கு - மூர்த்திகளுக்கு.*

பூத்தண் துழாய் முடியாய் - [1] தனக்கே சிறப்பானதாய் இறைமைத் தன்மைக்குச் சூசகமான மாலையாயிற்று இது ; [2] தன்னுடைய சத்தை தன் அதீனமாம்படி இருக்கும் பொருளுக்கு இலக்ஷணமாயிற்று இம்மாலை, [3] 'இதனால் இவர் பெற்றதாயிற்றது என் இப்போது ?' என்னில், 'உன் சத்தை உன் அதீனமாக இருக்க, நான் எங்ஙனே உன்னைப் பெறுகைக்கு ஒரு சாதனத்தைச் செய்து காணும்படி ?' என்கை. புனை கொன்றை அம் செம் சடையாய் - [4] பிறர் சத்தையோதான் உன் அதீனம் அன்றிக்கே இருக்கிறது? [5] பசுக்களின் சத்தை உன் அதீனமானாற்போன்று ஈஸ்வரர்களாகச் செருக்குற்றிருப்பார்களுடைய சத்தையும் உன் அதீனமாய் அன்றோ இருக்கிறது ? [6] புனையப்பட்ட கொன்றையையுடையதாய் அழகியதாய்ச் சிவந்திருந்துள்ள சடையையுடைய சிவனும் நீ இட்ட வழக்கு.

வாய்த்த என் நான்முகனே - [7] மேலே இரண்டு இடங்களிலும் சொன்ன மாலைகள் அவர் அவர்கட்கே உரியனவாய் இருக்குமாறு

---

1. ''பூத்தண் துழாய் முடியாய்' என்றதனால், சர்வேஸ்வரனுடைய அஸாதாரண லக்ஷணம் சொல்லுகிறது,' என்கிறார், 'தனக்கே' என்று தொடங்கி.

2. அதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'தன்னுடைய' என்று தொடங்கி.

3. 'பூத்தண் துழாய் முடியாய்' என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இதனால்' என்று தொடங்கி.

4. 'பூத்தண் துழாய் முடியாய்' என்றதற்கு அருளிச்செய்த கருத்தைத் திருவுள்ளத்தே கொண்டு 'புனை கொன்றை அம் செஞ்சடையாய்' என்றதற்கு இயைபு அருளிச்செய்கிறார், 'பிறர்' என்று தொடங்கி. 'சடையாய்' என்கிற சாமாநாதிகரண்யம் சரீர சரீரி பாவ நிபந்தனமாகையாலே, 'சிவனுடைய இருப்பும் சர்வேஸ்வரனுடைய அதீனம்' என்றபடி.

5. 'காத்த எம் கூத்தாவோ' என்றதனைக் கடாட்சித்து, மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'பசுக்களின்' என்று தொடங்கி. என்றது, 'பசுக்களின் சத்தை போன்று பசுபதியினுடைய சத்தையும் அவன் அதீனம்' என்றபடி.

6. பதங்கட்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'புனையப்பட்ட' என்று தொடங்கி.

7. 'மலைகளை அடைமொழியாக்கி மேலே கூறியவாறு கூறாது, 'வாய்த்த' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'மேலே' என்று தொடங்கி. தனக்கு அடைத்த காரியம்-படைப்பு. வேதங்களிற்கூறியபடியே படைக்க வேண்டுமாகையாலும், வேதங்கள் தாம் நான்காக இருக்கையாலும், நான்கு வேதங்களையும் உச்சரிக்க நான்கு முகங்கள் வேண்டுகையாலும், தனக்கு அடைத்த காரியத்துக்கு நான்கு முகங்கள் அசாதாரணமாக இருக்க வேண்டும் என்றபடி.

போலே ஆயிற்று, இவனுக்கும் தனக்கு அடைத்த காரியத்துக்கு நான்கு முகங்கள் சிறப்பாக இருக்கிறபடி. [1] இன்னமும், ஈஶ்வரன் தனக்கும் 'இப்படிப் படைப்போம்' என்ருலும் முடியாதபடியாயிற்று பிரமனுடைய படைப்பில் உண்டான வாய்ப்பு. 'என்' என்னும் சொல், [2] விசேடியத்திலே ஊற்றமாகக்கடவது. [3] வையதிகரண்யத் தாலே சொன்னல் கழற்றிக்கொள்ளுகைக்கும் உடலாய், கேவலம் பேதத்தையே சொல்லுகிறது என்று மயங்குவதற்கும் உடலாய் இருக்கும்; சாமாநாதிகரண்யத்தாலே சொன்னல் சேஷ சேஷி பாவமாகிற பிரிவும் தோற்றி இருக்கும்.

[4] ஆக, சாமாநாதிகரண்யம் வையதிகரண்யம் என்னும் இரண் டற்கும் பலம் எல்லாவற்றையும் நியமித்தலே அன்றே? ஆனலும், சாமாநாதிகரண்யத்தாலே சொல்லுமதற்கு இத்தனை வாசி உண்டு. [5] ஸ்வம் உத்திஶ்ய-தன்னை நோக்கியே அன்றே இவற்றைத் தாங்கிக்

---

1. 'வாய்த்த' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'இன்ன மும்' என்று தொடங்கி. வாய்த்த-ஆற்றல் பொருந்திய.

2. 'விசேடியத்திலே ஊற்றமாகக் கடவது' என்றது, 'நான்முகனைச் சரீரமாகவுடைய சரீரியான சர்வேஶ்வரனிடத்திலே சேரக்கடவது' என்றபடி.

3. 'வையதிகரண்யமாகப் பொருள் சொல்லாமல், சாமாநாதி கரண்யமாகப் பொருள் அருளிச்செய்வான் என்?' என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'வையதிகரண்யத்தாலே' என்று தொடங்கி. கழற்றிக்கொள்ளுகைக்கு-உறவு அறுத்துக்கொள்ளுகைக்கு. 'சேஷ சேஷி பாவமாகிற பிரிவும் தோன்றியிருக்கும்' என்றது, 'சரீர சரீரிகளுக்குப் பேதம் உண்டாகையாலே, சேஷ சேஷி பாவமாகிற பிரிவும் தோன்றி இருக்கும்,' என்றபடி. 'பிரிவும்' என்ற உம்மையாலே 'அப்ருதக் விசேஷணத்துவமும் தோற்றி இருக்கும்' என்றபடி. அப்ருதக் விசேஷணத்துவம்-பிரிக்க முடியாத விசேடணமான தன்மை.

4. இரண்டாலும் சித்தித்தது நிர்வாகத்துவமேயாகிலும், சாமாநாதி கரண்யத்தாலே சொல்லுமதற்கு அப்ருதக்ஸித்தியாகிற உயர்வு உண்டு என்று சாமாநாதிகரண்யத்துக்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிருர், 'ஆக' என்று தொடங்கி. 'இத்தனை வாசி' என்றது, மேலே அருளிச்செய்தன வற்றைத் திருவுள்ளம் பற்றி.

5. 'அப்ருதக்ஸித்த விசேஷணங்களாய் நியமிக்கப்படுகின்றவர் களாய் இருப்பர்களோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'ஸ்வம் உத்திஶ்ய' என்று தொடங்கி. 'தன்னை நோக்கியே' என்றது, 'தனக்குச் சேஷமாக' என்றபடி.

கொண்டிருக்கிறன்? [1]'திருவரங்கநாதனே! திருமால் தன்னை நோக்கியே சேதனங்கள் அசேதனங்கள் ஆகிய இவற்றினுடைய சொரூபம் இரட்சணம் நியமனம் முதலானவற்றை ஏற்றுக்கொள்ளுகிறன் என்று உபநிடதம் சொல்லுகிறது' என்கிறபடியே, [2]சத்தையே பிடித்து, அளித்தல் நியமித்தல் முதலியவைகள் அகப்பட அவன் அதீனமாயிருக்கையாலே, பிரிய நின்று ஒரு சாதனத்தைச் செய்வதற்கு ஒரு தகுதி இல்லையாம்படி ஆயிற்றுப் பாரதந்திரியத்தின் எல்லை இருக்கும்படி.

வந்து என் ஆர் உயிர் நீ - [3]பிறர் பக்கல் செய்த உபகாரத்தைச் சொல்ல வேணுமோ? என் பக்கல் செய்த உபகாரந்தானே அமையாதோ? [4]'நீ ஒருவன் உளை' என்று கனக் கண்டும் அறியாதே புறம்பே பற்று உள்ளவனாய் இருக்கிற என்னை, அதனைத் தவிர்த்து உன்படியை அறிவித்து உன்னை ஒழியத் தரியாதபடியான நிலையைப் பிறப்பித்தாய். ஆனால் - இப்படி இருந்த பின்பு. ஏத்த அருங் கீர்த்தியினாய் - [5]நீ சத்தையை உண்டாக்க உன்னாலே சத்தையைப் பெற்று இருக்கிற நான் 'ஏத்துவேன்' என்றால், என்னாலேதான் ஏத்தலாம்படி இருந்ததோ? [6]ஆனால் - உன்படி அது; என்படி இது;

---

1. *இதனால், சத்தை ஸ்திதி நியமனம் முதலானவைகள் அவன் அதீனம் என்று தோற்றுமையாலே, மேலே கூறிய பதங்களையும் எடுத்து விவரணம் செய்கிறார், 'திருவரங்கநாதனே!' என்று தொடங்கி.*

*'உபாதத்தே ஸத்தா ஸ்திதி நியமநாத்யை: சித்அசிதௌ ஸ்வம் உத்திஸ்ய ஸ்ரீமாந் இதிவததி வாக் ஔபநிஷதீ'*

என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம், 2 : 87.

2. *இச்சுலோகம் முன்னாக, இத்திருப்பாசுரத்திற்சொல்லுகிற சாமாநாதிகரண்யத்துக்கு இடத்துக்குத் தகுதியாகப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார், 'சத்தையே' என்று தொடங்கி.*

3. *'வாய்த்த என் நான்முகனே' என்றதன் பின், வந்து என் ஆர் உயிர் நீ' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'பிறர் பக்கல்' என்று தொடங்கி.*

4. *'அந்த உபகாரம் யாது?' என்ன, 'நீ ஒருவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

5. *'என் ஆருயிர் நீ ஆனால்' என்றதன் பின் 'ஏத்தருங்கீர்த்தியினாய்' என்கையாலே, 'என்னால் ஏத்தி முடிக்கப் போகாத கீர்த்தியையுடையன்' என்று கூறத் திருவுள்ளம் பற்றி அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'நீ சத்தையை' என்று தொடங்கி.*

6. *'ஏத்தருங்கீர்த்தியினாய் வந்து என் ஆர் உயிர் நீ ஆனால்' என்று கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார், 'ஆனால் உன் படி' என்று தொடங்கி.*

இங்ஙனே இருந்த பின்பு, உன்னை எங்குத் தலைப்பெய்வனே - யான் ஓர் உபாயத்தைச் செய்து உன்னை எங்கே வந்து கிட்டப் புகுகிறேன்? என்னாலே வந்து கிட்டுகை என்று ஒன்று உண்டோ? (3)

721

எங்குத்தலைப் பெய்வன்நான்! எழில்மூ வுலகும் நீயே
[1] அங்குஉயர் முக்கண்பிரான் பிரம பெருமான் அவன்நீ
வெங்கதிர் வச்சிரக்கை இந்திரன் முதலாத் தெய்வம்நீ
கொங்கலர் தண்அந் துழாய்முடி என்னுடைக் கோவலனே!

பொ – ரை: தேனோடு மலர்கின்ற குளிர்ந்த அழகிய திருத்துழாயைத் தரித்த திருமுடியையுடைய என்னுடைய கோபாலனே! அழகிய மூன்று உலகங்களும் நீ இட்ட வழக்கே; அவ்வுலகங்களிலே ஞானம் சத்தி முதலியவற்றால் உயர்ந்த மூன்று கண்களையுடைய சிவனும் அவனுக்குத் தந்தையாகிய பிரமனும் அவனும் நீ இட்ட வழக்கு; கொடிய கிரணங்களையுடைய வச்சிராயுதத்தைக் கையிலேயுடைய இந்திரன் முதலான தெய்வங்களும் நீ இட்ட வழக்கு; இங்ஙனம் இருக்க, நான் உன்னை எங்கே வந்து கிட்டுவேன்?

வி – கு: 'பெருமானாகிய பிரமன் அவன்' என்க. கோவலன் என்பது, 'கோபாலன்' என்ற சொல்லின் சிதைவு என்பர் அடியார்க்கு நல்லார்.

ஈடு: நான்காம் பாட்டு. [1] மேற்பாசுரத்தில், 'அவர்கள் சொரூபம் அவன் அதீனம்' என்றது; அந்த அந்தச் சொரூபத்தைப் பற்றி இருப்பன சில உயர்வுகள் உளவே அன்றோ? அவையும் அவனுக்கு அதீனங்கள் என்கிறது இதில்.

[2] எங்குத் தலைப்பெய்வன் நான் - [3] வலி இல்லாதான் ஒருவனை 'மலையைத் தாங்கு' என்றால், அவனாலே அது செய்து தலைக்கட்டப்

1. திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. துன்பத்தின் மிகுதியாலே மீண்டும், 'எங்குத் தலைப்பெய்வன்?' என்கிறார்.

3. 'நான் எங்குத் தலைப்பெய்வன்?' என்று தம்முடைய அசத்தியைச் சொல்லுகிறவருடைய கருத்தை அருளிச்செய்கிறார், 'வலி இல்லாதான்' என்று தொடங்கி.

போமோ ? எழில் மூன்று [1] உலகும் நீயே - மூன்று உலகங்களிலே உள்ள பொருள்களின் உயர்வுகளும் உன் அதீனம். அங்கு உயர் முக்கண்பிரான்- அந்த அண்டத்தில் மற்றைத் தேவர்களைக்காட்டிலும் சிவன் பக்கல் வந்தவாறே ஓர் உயர்வு உண்டே அன்றோ? அந்த உயர்வு உன் அதீனம். பிரம பெருமான் அவன் நீ - அவனுக்கும் தந்தையாய்ப் பதினான்கு உலகங்கட்கும் ஈஶ்வரனாகையாலே வருவது ஓர் ஏற்றம் உண்டே அன்றோ பிரமனுக்கு? அதுவும் நீ இட்ட வழக்கு. வெம் கதிர் வச்சிரம் கை இந்திரன் முதலாத் தெய்வம் நீ - [2] 'வச்சிரத்தைக் கையிலேயுடையவன் புரந்தரன் என்ற பெயரையுடையவன்' என்கிறபடியே, வெவ்விய கதிரையுடைத்தான வச்சிரத்தைக் கையிலே யுடையனாய் இருக்கிற இந்திரன் தொடக்கமான தேவதைகளுடைய உயர்வுகளும் நீ இட்ட வழக்கு. கொங்கு அலர் தண் அம் துழாய் முடி என்னுடைக் கோவலனே - [3] உன்னை ஒழிந்த பொருள்களினுடைய உயர்வுகளும் உன் அதீனமாம்படி இருக்கிற நீ, உன்னுடைய உயர்வு நான் இட்ட வழக்காம்படி ஆனாய். [4] தேனையுடைத்தாய் மலர்ந்த செவ்வித் திருத்துழாயாலே அலங்கரிக்கப்பட்ட மயிர் முடியை யுடையையாய், அவ்வழகை எனக்குப் பிரகாசிப்பித்த அடியார்கட்கு அடக்கமுடையவனாய் இருக்கிற கிருஷ்ணனே !

'கொங்கு அலர் தண்அம் துழாய் முடி' என்கையாலே, இனிமையின் மிகுதி சொல்லிற்று ; 'என்னுடைக் கோவலனே !' என்கையாலே, அடியார்கட்குப் பவ்யனாய் இருக்கும் தன்மையைச் சொல்லுகிறது. (4)

---

1. 'உலகம்' என்பது, உலக மக்களைக் காட்டுகிறது. இதனை ஆகுபெயர் என்பர் நச்சினார்க்கினியர். மக்கட்டொகுதியை உணர்த்தும் வழியும் உரிய பெயரேயாகலின் ஆகுபெயர் அன்று என்பர் சேனாவரையர். இங்கு 'எழில்' என்ற பதத்திலே பொருள் நோக்கு ஆகையாலே 'மூவுலகு எழிலும் நீயே' என மாற்றிக் கூட்டுக. பின்னே வருகின்ற 'உயர்', 'பெருமான்', 'வெங்கதிர் வச்சிரம்' என்பனவற்றிற்கும் இங்ஙனமே கொள்க.

2. 'வஜ்ரஹஸ்த: புரந்தர:' என்பது, பிருஹத் சௌத்ராமணி.

'வச்சிரத் தடக்கை அமரர் கோமான்'

என்பது, சிலப். கட்டுரைகாதை, அடி, 50.

3. மேலே அருளிச்செய்த உயர்வுகளை எல்லாம் அநுவதித்துக் கொண்டு, 'என்னுடைய' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'உன்னை' என்று தொடங்கி.

4. ஈற்றடியினால் போதரும் பொருளை அருளிச்செய்கிறார், 'தேனையுடைத்தாய்' என்று தொடங்கி.

722

என்னுடைக் கோவலனே! என்பொல்
லாக்கரு மாணிக்கமே!
உன்னுடை உந்திமலர் உலக
மவைமூன் றும்பரந்து
உன்னுடைச் சோதிவெள்ளத்து அகம்பால்
உன்னைக் கண்டுகொண்டிட்டு
என்னுடை ஆர்உயிரார் எங்ஙனே
கொல்வந்து எய்துவரே?

**பொ-ரை :** என்னுடைய கோபாலனே ! என்னுடைய பொல்லாக் கருமாணிக்கமே ! உன்னுடைய திருவுந்தித்தாமரையில் பிறந்த உலகங்களிலே சத்துவம் இராஜசம் தாமதம் என்னும் முக்குணங்களைப் பற்றி வருகின்ற விஷயங்களிலே பரந்து அனுபவிக்கின்ற என் அரிய உயிரானவர், உன்னுடைய சோதி வெள்ளமான ஸ்ரீவைகுண்டத்திலே எழுந்தருளியிருக்கிற உன்னைக் கண்டுகொண்டு வந்து அடைவது எங்ஙனே கொல்?' என்கிறார்.

**வி—கு :** 'மூன்று' என்பது, முக்குணங்களைக் குறிக்கின்றது. 'பரந்து' என்ற சொல்லுக்குப் பின் 'அனுபவிக்கின்ற' என்ற சொல்லைக் கொணர்ந்து கூட்டுக. 'பரந்து அனுபவிக்கின்ற என் ஆர் உயிரார்' என்க. உயிரார் - இகழ்ச்சிக்குறிப்பு.

ஈடு: ஐந்தாம் பாட்டு. [1]'எல்லாம் செய்தாலும் 'சாஸ்திர பலம் பிரயோக்தரி' அன்றோ ? பலம் உம்மதான பின்பு நீரும் சிறிது முயற்சி செய்ய வேணுங்காணும்,' என்ன, 'நீ படைத்த உலகங்ளிலே விஷயங்கள்தோறும் அகப்பட்டுக் கிடக்கிற நான் உன்னைப் பெறுகைக்கு ஒரு சாதனத்தைச் செய்து வந்து பெறுகை என்று ஒன்று உணடோ ?' என்கிறார்.

என்னுடைக் கோவலனே - [2]பாண்டவர்களுடைய கோவலன் ஆனாற்போலே ஆயிற்று: இது சீலம் இருந்தபடி. என் பொல்லாக்

1. 'எல்லாம் செய்தாலும்' என்றது, 'சொரூபம் என்ன, உயர்வுகள் என்ன, ஆகிய இவைகள் என்னுடைய அதீனமாய் இருந்தவேயாகிலும்' என்றபடி. 'சாஸ்திரபலம் பிரயோக்தரி' என்றது, 'சாஸ்திரம் பயனுடைத்தாவது இவன் கர்த்தாவாகும்போது' என்றபடி. இரண்டாம் அடியையும் நான்காம் அடியையும் கடாட்சித்து, 'நீ படைத்த' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. 'பாண்டவர்களுடைய கோவலன் ஆனாற்போலே' என்றது, 'இன்னாருடைய மனிதன்' என்னுமாறு போலே என்று திருஷ்டாந்தம் என்றபடி. 'இன்னார் தூதன் என நின்றான்' என்பது திருமங்கை மன்னன் திருமொழி. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'இது சீலம் இருந்தபடி' என்று.

கரு மாணிக்கமே-இது வடிவழகு இருந்தபடி. [1] ‘அழகிது’ என்னில், உலகத்தோடு ஒப்பாம் என்று பார்த்து, வேறு சொல்லாலே சொல்லுகிறராதல்; அன்றியே, ‘தொளையா மணி’ என்கிறராதல். பொல்லல்-தொளைத்தல். [2] ‘அனுபவிக்கப்படாத இரத்தினம் போலே’ என்றபடி. ‘உன்னுடை உந்தி மலர் உலகமவை மூன்றும் பரந்து - [3] உன்படி இதுவாய் இருக்க, உன்னை ஒழிந்த விஷயங்களினுடைய வடிவழகிலும் குணங்களிலும் கால் தாழ்ந்து போந்தவனாய் இருந்தேன் நான். [4] உன்னுடைய உந்தியிலே மலராநின்றுள்ள உலகங்கள் மூன்றிலும் உண்டான விஷயங்கள்தோறும், [5] தனித்தனியே அற்றுக் கால் தாழ்ந்து போந்தவனாய் இருந்தேன் நான். நீ ஸர்வசத்தி யோகத்தாலே பரந்திருக்கும் இடம் முழுதும் நான் என்னுடைய ஆசையாலே கால் தாழ்ந்து திரிந்தேன். [6] இது என் நிலை இருந்தபடி. அதற்கு மேலே நீ எட்டா நிலத்தை இருப்பிடமாகவுடையையாய் இருந்தாய்.

உன்னுடைச் சோதி வெள்ளத்து அகம்பால் உன்னைக் கண்டு கொண்டிட்டு - உனக்கே சிறப்பாய் எல்லை அற்ற ஒளி உருவமாய், [7] ‘சூரியன் அக்கினி ஆகிய இவர்களின் ஒளியைக்காட்டிலும்

---

1. ‘வடிவழகினைச் சொன்னால் ‘பொல்லா மணி’ என்பான் என்?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘அழகிது என்னில்’ என்று தொடங்கி.

2. தொளையா மணி என்ற பொருளால் போதரும் பொருளை அருளிச்செய்கிறார், ‘அனுபவிக்கப்படாத’ என்று தொடங்கி.

3. ‘உன்னுடை உந்தி மலர் உலகமவை மூன்றும் பரந்து’ என்கிறவருடைய கருத்தை அருளிச்செய்கிறார், ‘உன் படி’ என்று தொடங்கி. ‘படி’ என்பது சிலேடை. ‘கருமாணிக்கம்’, ‘என்னுடைக் கோவலன்’ என்பனவற்றால் கிடைக்கும் வடிவழகுக்கும் குணங்களுக்கும் எதிர்த்தட்டாக அருளிச் செய்கிறார், ‘உன்னை ஒழிந்த’ என்று தொடங்கி.

4. பதங்கட்குப் பொருள் அருளிச்செய்கிறார், ‘உன்னுடைய உந்தியிலே’ என்று தொடங்கி.

5. ‘பரந்து’ என்றதன் பொருள், ‘தனித்தனியே’ என்று தொடங்குவது. அதனை விவரணம் செய்கிறார், ‘நீ’ என்று தொடங்கி.

6. ‘இது என் நிலை இருந்தபடி’ என்றது, ‘சாதந அநுஷ்டானம் முன்னை விரக்தியும் இல்லை’ என்றபடி. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், ‘அதற்கு மேலே’ என்று தொடங்கி.

7. ‘அத்யர்க்காநல தீப்தம் தத் ஸ்தாநம் விஷ்ணோ: மஹாத்மந:
ஸ்வயைவ ப்ரபயா ராஜந் துஷ்ப்ரேக்ஷம் தேவதாநவை:’
என்பது, பாரதம், ஆரண்ய பர். 163.

அதிகமாக விளங்குகிற, மஹாத்துமாவான நாராயணனுடைய வைகுண்டம்' என்று சொல்லப்படுகிற ஸ்ரீவைகுண்டத்தை இருப்பிடமாகவுடையையாய் இருக்கிற உன்னை, சரீரத்திலும் சரீரத்தோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் உண்டான சம்பந்தம் அற்று நெடுந்தூரம் வழி வந்து அதற்குத் தக்கதாய் இருப்பது ஒரு சரீரத்தை மேற்கொண்டு பரமபதத்தை அடைந்தால் அனுபவிக்க வேண்டி இருந்தது; [1] ஆக, என் நிலை இருந்தபடி இது; உன் நிலை இருந்தபடி அது; [2] என் நெஞ்சில் ஈடுபாடு இருந்தபடி இது; ஆன பின்பு இந்த முதலியார் கடுக வந்து உன்னைக் கிட்டாரோ? [3] ஆக, சொரூபம் உன் அதீனமாய் இருந்தது, அவர் அவர்களுடைய உயர்வுகளும் உன் அதீனமாய் இருந்தன; என் நிலை இது, உன் நிலை அது; என் நெஞ்சில் ஈடுபாடு இது; ஆன பின்பு, நான் ஒரு சாதனத்தைச் செய்து வந்து கிட்டுகை என்று ஒரு பொருள் உண்டோ?' என்கிறார். (5)

723

வந்துஎய்து மாறுஅறியேன் மல்கு
நீலச் சுடர்தழைப்பச்
செஞ்சுடர்ச் சோதிகள் பூத்துஒரு
மாணிக்கம் சேர்வதுபோல்
அந்தரமேற் செம்பட்டோடு அடிஉந்தி
கைமார்பு கண்வாய்
செஞ்சுடர்ச் சோதி விடஉறை
என்திரு மார்பனையே.

பொ-ரை: 'செறிந்த நீலச் சுடரானது பரவச் சிவந்த சுடர்ச் சோதிகள் மலர்ந்து ஒரு நீல இரத்தினம் சேர்வது போன்று, திருவரையின் மேலே அணிந்திருக்கிற செம்பட்டோடு திருவடிகளும் திருவுந்தியும் திருக்கைகளும் திருமார்பும் திருக்கண்களும் திருவாயும் சிவந்த சுடர்ச் சோதியைப் பரப்ப எழுந்தருளியிருக்கின்ற என் திருமார்பனை நான் சென்று கிட்டும் வழியை அறியேன்,' என்றவாறு.

1. மேலே அருளிச்செய்த அர்த்தங்களையெல்லாம் நிகமித்துக் கொண்டு, 'என்னுடை ஆர் உயிரார் எங்ஙனேகொல் வந்து எய்துவரே?' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'ஆக என் நிலை' என்று தொடங்கி.

2. 'என் நிலை இருந்தபடி இது' என்றதனை விவரணம் செய்கிறார், 'என் நெஞ்சில்' என்று தொடங்கி.

3. மேல் இரண்டு திருப்பாசுரங்களின் பொருள்களையும் கூட்டிக் கொண்டு, மேலே அருளிச்செய்த மூன்று வாக்கியங்களையும் விவரணம் செய்கிறார், 'ஆக, சொரூபம்' என்று தொடங்கி.

வி—கு : வந்து–இடவழுவமைதி. 'செலவினும் வரவினும்' (தொல் சொல்.) என்னும் பொதுச் சூத்திரத்தாற்கொள்க. 'மார்பனை வந்து எய்துமாறு அறியேன்' என்க. 'தழைப்பப் பூத்து ஒரு மாணிக்கம் சேர்வது போல் சோதி விட உறை திருமார்பன்' என்க.

ஈடு : ஆறும் பாட்டு. [1] ஆனாலும், 'ஏதேனும் ஒருபடி நீரும் சிறிது செய்து வந்து கிட்ட வேண்டாவோ?' என்ன, 'உன்னை வந்து கிட்டும் உபாயம் அறியேன்,' என்கிறார்.

வந்து எய்துமாறு அறியேன் - வந்து கிட்டும் உபாயத்தை அறியேன். என்றது, [2] 'நீதானே மேல் விழுந்து உன் வடிவழகைக் காட்டாநின்றால் அதனை விலக்காமைக்கு வேண்டுவது உண்டு; என்றால் உன்னை ஒரு சாதனத்தைச் செய்து வந்து கிட்டப் போகாது,' என்றபடி. [3] 'ஆனால், இழந்தாலோ?' என்ன, 'இழக்கலாம்படியோ உன் படி இருக்கிறது?' என்கிறார். மல்கு நீலம் சுடர் தழைப்ப - [4] வடிவழகு இல்லை என்று விடவோ, பெறுவிக்கைக்குப் புருஷகாரம் இல்லை என்று விடவோ, எனக்கு ஆசை இல்லையாய் விடவோ குறைவு அற்ற நீலப் புகரானது தழைப்ப? [5] கர்மம் காரணமாக வந்தது அல்லாமையாலே மேன்மேலென மிக்கு வருதலின், '**தழைப்ப**' என்கிறார். என்றது, 'இவ்வளவு என்ன ஒண்ணுதபடி மேன்மேலென வளராநிற்கின்றது' என்றபடி. நெஞ்சுடர்ச் சோதிகள் பூத்து-சிவந்த சுடரையுடைத்தான ஒளியானது காலப்பூ அலர்ந்தாற் போலே பூத்து. ஒரு மாணிக்கம் சேர்வதுபோல் - அனுபவத்திற்

---

1. 'வந்து எய்துமாறு அறியேன்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'எய்துமாறு அறியேன்' என்னாமல், 'வந்து எய்துமாறு அறியேன்' என்கையாலே, 'விலக்காமைக்கு வேண்டுவது உண்டு என்று தோற்றுகிறது' என்கிறார், 'நீதானே' என்று தொடங்கி.

3. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'ஆனால்' என்று தொடங்கி.

4. 'மல்கு நீலச் சுடர் தழைப்ப' என்றது முதல் 'சோதி விட' என்றது முடியக் கருத்து அருளிச்செய்கிறார், 'வடிவழகு' என்று தொடங்கி. 'என் திருமார்வனை' என்றதனை நோக்கி, 'பெறுவிக்கைக்கு' என்று தொடங்கியும், 'வந்து எய்துமாறு அறியேன்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'எனக்கு' என்று தொடங்கியும் அருளிச்செய்கிறார்.

5. 'மல்கு நீலம்' என்றவர், மீண்டும் 'தழைப்ப' என்பதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கர்மம் காரணமாக' என்று தொடங்கி.

குத் தகுதியாம்படி ஒரு மாணிக்கமானது சாய்ந்தாற்போலே. 'மல்கு நீலம் சுடர் தழைப்ப' என்கையாலே, நிறம் இருந்தபடி சொல்லிற்று; 'நெஞ்சுடர்ச் சோதிகள் பூத்து' என்கையாலே, திவ்விய அவயவங்கள் இருந்தபடி சொல்லிற்று; 'ஒரு மாணிக்கம் சேர்வதுபோல்' என்கையாலே, இரண்டும் பற்றுக்கோடான திருமேனியைச் சொல்லுகிறது. 'செஞ்சுடர்ச் சோதிகள் பூத்து' என்கிற இடத்தில் தெரியாதபடி [1] மறைத்துச் சொல்லிற்று ஒன்று உண்டே அன்றோ? அதனை விளக்கமாக அருளிச்செய்கிறார் மேல்:

அந்தரம் மேல் செம்பட்டோடு அடி உந்தி கை மார்பு கண் வாய் செஞ்சுடர்ச் சோதி விட - அந்தரம் - நடுவு. உடம்புக்கு நடுவு, அரை. திருவரையில் திருப்பீதாம்பரத்தோடே, திருவடிகள், திரு நாபிக்கமலம், திருக்கைகள், [2] பெரிய பிராட்டியார் எழுந்தருளியிருக் கையாலே மேலே கூறியவற்றோடு ஒக்கச் சொல்லலாம்படி சிவந் திருக்கிற திருமார்பு, திருக்கண்கள், திருப்பவளம் இவை, சிவந்த சுடரையுடைத்தான ஒளியை வீச. உறை என் திருமார்பனை - [3] இதுவும் ஓர் ஆபரணம் போலே: என் தலைவியான பெரிய பிராட்டி யாரைத் திருமார்பிலே உடையவனை. [4] திருப்பாற்கடலிலே நீர் உறுத்தாதபடி திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு, அதிலே பலப்பல வர்ணங்களாய் இருப்பது ஒரு மேல் விரியை விரித்தாற்போலே அவன் சாய்ந்தருள, மேல் எழுந்தருளி இருக்கு

---

1. *'மறைத்துச் சொல்லிற்று' என்றது, 'மல்கு நீலச் சுடர்', 'ஒரு மாணிக்கம்' என்கிற இடத்தில் உபமேயம் விளங்குவது போன்று 'செஞ்சுடர்ச் சோதிகள் பூத்து' என்ற இடத்தில் உபமேயம், திவ்விய அவயவங்கள் என்று விளங்காமையாலே என்றபடி.*

2. *'திருமார்பு கரிய நிறமாய் இருக்க, அவயவங்களோடே கூட்டு வான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பெரிய பிராட்டியார்' என்று தொடங்கி.*

3. *பெரிய பிராட்டியாருடைய சேர்த்தியையும் ஓர் ஆபரணமாக உருவகம் செய்கிறார், 'இதுவும்' என்று தொடங்கி.*

4. *'சேர்வது போல்' என்றதற்குச் சேர இன்ன இடத்திலே என்ன வேண்டுகையாலே, அதனை அருளிச்செய்கிறார், 'திருப்பாற் கடலிலே' என்று தொடங்கி.*

மாயிற்றுப் பிராட்டி. [1]'நானும் மிக்க ஆயாசத்தினுல் பெருமாள் மடியில் தூங்கிக்கொண்டிருந்தேன்' என்னக் கடவதன்றோ? (6)

724

என்திரு மார்பன் தன்னை என்மலைமகள் கூறன் தன்னை
என்றும்என் நாமகளை அகம்பாற் கொண்ட நான்முகனை
நின்ற சசிபதியை நிலங்கீண்டு எயில்மூன்று எரித்த
வென்று புலன்துரந்த விசும்பா ளியைக்கா ணேனே?

பொ—ரை: 'என்னுடைய திருமகளை மார்பிலே கொண்ட திருமாலை, என்னுடைய பார்வதியை ஒரு பக்கத்திலேயுடைய சிவபெருமானுக்கு உள்ளுயிராய் இருப்பவனை, என்னுடைய சரஸ்வதியை எப்பொழுதும் தன்னிடத்திலே கொண்டவனுன பிரமனுக்கு உள்ளுயிராய் இருப்பவனை, நின்ற இந்திரனுக்கு உள்ளுயிராய் இருப்பவனை, நிலத்தைக் கோட்டாலே குத்தி மேலே கொண்டு வந்து, முப்புரங்களை எரித்த, ஐம்புலன்களையும் வென்று ஓட்டிய சுவர்க்கலோகத்தை ஆளுகின்றவனைக் காணேனே?' என்கிருர்.

வி – கு: நிலங்கீண்டல், எயில் மூன்று எரித்தல், வென்று புலன் துரத்தல், விசும்பு ஆளுதல் என்னும் நான்கனையும், மேலே கூறிய நால்வர்க்கும் முறை நிரல் நிறையாகக் கொள்க. 'என் திருமார்பனுய் நிலங் கீண்டவன், என் மலைமகள் கூறனுய் எயில் மூன்று எரித்தவன், நாமகளை அகம்பாற்கொண்ட நான்முகனுய் வென்று புலன் துரந்தவன், சசிபதியாய் விசும்பு ஆண்டவன்' என்க. சசி - இந்திராணி.

ஈடு: ஏழாம் பாட்டு. [2]உத்தேசிய லாபம் அவனுலேயாயிருந்தது. இத்தலையாலே முயற்சி செய்வதற்குத் தகுதி இல்லாதபடியான

1. 'மலராள் தனத்துள்ளான்' (மூன்ருந்திருவந். 3.) என்ன வேண்டியிருக்க, அவன் மார்விலே இருக்கிருள் எனக்கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'நானும்' என்று தொடங்கி.

'பரிஶ்ரமாத் ப்ரஸுப்தா ச ராகவாங்கே அஸ்மிஅஹம் சிரம்
பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச மமஅங்கே பரதாக்ரஜ:'

என்பது, ஸ்ரீராமா. சுந். 38 : 20.

2. பிரமன் முதலாயினேரை அவர் அவர்களுடைய மனைவிமார்களோடு சேர்த்துச் சொல்லுவதற்குக் கருத்து, 'அவர் அவர்களுக்கு விருப்பமான விஷயங்களைச் சர்வேஶ்வரன் தலைக்கட்டிக் கொடுக்கிருன் என்பதே அன்றோ? 'இப்படியே நாம் விரும்புகிற தன் திருவடிகளில் கைங்கரியத்தையும் நமக்குத் தருவான்' என்று திருவுள்ளம் பற்றி, 'உத்தேசிய லாபம் அவனுலேயாய் இருந்தது' என்கிருர். 'எயில் மூன்று எரித்து' என்பது போன்றவைகளாலே, இவர்கள் செய்கிற தொழிலும் அவன் அதீனம் என்கையாலே, 'தாம் ஒரு சாதனத்தைச் செய்வதற்குத்

பாரதந்திரியம் உண்டாய் இருந்தது; [1] அத்தலையாலே பெறுமிடத்தில் ஒரு கண்ணழிவு இன்றிக்கே இருந்தது; [2] இப்படி இருக்கச்செய்தேயும் இழந்து இருக்கக் காண்கையாலே 'நான் இந்த இழவோடே கிடந்து முடிந்து போமித்தனையேயன்றோ ?' என்கிறார்.

என் திரு மார்பன்தன்னை - இவ்விடத்திலே 'என்' என்கிற சொல், விசேடண அமிசத்திற்கு அடைமொழி; [3] 'என் திருமகள் சேர் மார்பன்' என்ற இடத்திலே கொண்டது போன்று கொள்க. என் சுவாமினியான பெரிய பிராட்டியாரைத் திருமார்விலே யுடையவனை. [4] 'என் மலைமகள் கூறன்' என்பது முதலான இடங்களில் உள்ள 'என்' என்பது, விசேடிய அமிசத்திலே ஊற்றம். 'என்றது, என் சொல்லியவாறோ ?' எனின், [5] 'அவனுடைய விபூதி யோகத்துக்கு உறுப்பாகச் சொல்லுகிறார் இத்தனை அன்றி, 'மறந்தும் புறம்தொழா மாந்தர்' ஆக இருக்குமவர் ஆதலின், இவர்களோடே தமக்கு ஒரு சம்பந்தம் உண்டு என்கிறார் அல்லரே ?' என்றபடி, என் மலைமகள் கூறன் தன்னை - இமயமலையின் பெண்பிள்ளையைத் தன னுடம்பிலே ஒரு பக்கத்திலேயுடையவனாய் இருக்கிற சிவனைத் தான் இட்ட வழக்காகவுடையனாய் இருக்கிறவனை.

---

*தகுதியில்லாதபடியான பாரதந்திரியம் தோன்றுகிறது' என்று திருவுள்ளம் பற்றி, 'இத்தலையாலே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.*

1. *'என் திரு மார்பன்தன்னை' என்றதனைத் திருவுள்ளம் பற்றி 'அத்தலையாலே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். கண்ணழிவு-கால தாமதம்.*

2. *'காணேனே' என்றதனைக் கடாட்சித்து அருளிச்செய்கிறார், 'இப்படி இருக்கச் செய்தேயும்' என்று தொடங்கி.*

3. *பக். 91. காண்க.*

4. *'என் திருமார்பன்' என்ற இடத்தில் 'என்' என்பதனைத் திருவுக்கு அடைமொழி ஆக்கினது போன்று, 'என் மலைமகள் கூறன்தன்னை' என்பது போன்ற இடங்களில் 'என்' என்பதனை 'மலைமகள்' முதலாயினார்க்கு அடைமொழி ஆக்கலாகாது என்கிறார், 'என் மலைமகள்' என்று தொடங்கி. 'விசேடிய அமிசத்திலே' என்றது, பரம 'விசேஷ்யனான சர்வேஸ்வரனிடத்தில்' என்றபடி.*

5. *'விசேஷண அமிசத்திலே ஊற்றமானால் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவனுடைய' என்று தொடங்கி. 'மறந்தும்'* **என்பது, நான்முகன் திருவந். 68.**

என்றும் என் நாமகளை அகம்பால் கொண்ட நான்முகனை - சரஸ்வதியை என்றுமொக்கத் தன் பக்கலிலேயுடையனாய் இருக்கிற பிரமனுக்கு அந்தராத்துமாவாயுள்ளவனை. நின்ற சசிபதியை - இவர்களை எண்ணினால் தன்னை எண்ணலாம்படி ஐஸ்வரியத்தால் குறைவற்றிருக்கிற இந்திரனுக்கு அந்தராத்துமாவாய் உள்ளவனை. [1]'அவன் பிரமன், அவன் சிவன்' என்றால், 'அவன் இந்திரன்' என்று ஒக்கச் சொல்லலாம்படி முட்டுப்பொறுத்துநின்ற இந்திரனுக்கு அந்தர்யாமியாயுள்ளவனை. [2]'இப்போது இவை சொல்லுகிறதற்குக் கருத்து என் ?' என்னில், 'சொரூபமும் உயர்வும் அவன் அதீனம்' என்றார் ; இங்கே, 'தக்க வயதினை அடைந்த புத்திரர்களுக்கு ஒத்த இடங்களிலே திருமணம் செய்விக்கும் தமப்பன்மார்களைப் போலே, இவர்கள் தாம் மனைவிகளை அடைந்ததும் தந்தாமால் அன்று; சர்வேஸ்வரனாலேயாம்' என்பதனைத் தெரிவித்தபடி.

'இவர்களுடைய செயல்கள் எல்லாம் அவனுடைய அதீனம்' என்கிறது மேல் : நிலம் கீண்டு...விசும்பாளியை - [3]'பிரளய சமுத்திரத்திலே மூழ்கினதாய் அண்டப்பித்தியிலே புக்கு ஒட்டின பூமியை மஹா வராஹமாய்ப் புக்கு எடுத்துக்கொண்டு ஏறின போதைய செயல் தன்னுடைய அதீனம் ஆனாற்போலே, அவர்களுடைய செயல்களும் அவனுடைய அதீனம்' என்கிறது. எயில் மூன்று எரித்த - மதிள் மூன்றை எரித்த. [4]'விஷ்ணு அந்தராத்துமாவாய் நின்றான்' என்னக்கடவது அன்றோ? அதுவும் அவன் இட்ட வழக்கு. வென்று

---

1. சிவன் முதலானவர்களோடு இந்திரனையும் சேர்த்து எண்ணுவதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அவன் பிரமன்' என்று தொடங்கி.

'ஸப்ரஹ்மா ஸஶிவ: ஸேந்த்ர:' என்பது, தைத். நாரா.

2. சிவன் முதலாயினோரை, தத்தம் மனைவிமார்களோடே சேர்த்துச் சொல்லுவதற்குக் கருத்தை அருளிச்செய்கிறார், 'இப்போது' என்று தொடங்கி. இவை சொல்லுகிறதற்கு-மனைவிமார்களோடே இவர்களைச் சேர்த்துச் சொல்லுவதற்கு.

3. 'நன்று; 'நிலங்கீண்டு' என்று அவன் தன் செயலைச் சொல்லுவான் என்?' என்ன, திருஷ்டாந்தத்தின்பொருட்டு' என்கிறார், 'பிரளய சமுத்திரத்திலே' என்று தொடங்கி.

4. 'மதிள் மூன்று எரித்தது சர்வேஸ்வரனோ?' என்ன, 'ஆம்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'விஷ்ணு' என்று தொடங்கி.

'விஷ்ணு: ஆத்மா பகவத: பவஸ்ய அமிததேஜஸ:
தஸ்மாத் தநுர்ஜ்யா ஸம்ஸ்பர்ஶம் சவிஷேஹே மஹேஶ்வர:'
என்பது, பாரதம், கர்ணபர்வம்.

புலன் துரந்த-படைப்புக்கு உறுப்பாக ஐம்பொறிகளை அடக்கியவனை. புலன்களை வென்று ஓட்டின விசும்பாளியை - சுவர்க்கத்தை வன்னியம் அறுத்து ஆளுகின்றவனை. காணேனே - காணப் பெறேனே ?

[1] ஆகச் சொல்லிற்றாயிற்றது: உத்தேசிய லாபம் அவனாலேயாய் இருந்தது. அதற்கு உறுப்பான முயற்சியில் ஈடுபடுதற்குத் தகுதி இல்லாதபடி அதுவும் அவன் இட்ட வழக்காய் இருந்தது. [2] இனி, இத்தலையாலே பேறு ஆம் அன்று விளம்பத்திற்குக் காரணம் உண்டாய் இருந்தது; அவனாலே பேறு ஆம் அன்று விளம்பத்திற்குக் காரணம் இன்றிக்கே இருந்தது. இப்படி இருக்கச்செய்தேயும் தம்மை இழந்து இருக்கக் கண்டார் ஆகையாலே, 'இனி, இந்த இழவோடே இங்ஙனே முடிந்துபோமித்தனையே அன்றோ ?' என்று வருந்துகிறார். (7)

725

*ஆளியைக் காண்பரி யாய்அரி*
*காண்நரி யாய்அரக்கர்*
*ஊளை இட்டு அன்றுஇலங் கைகடந்து*
*பிலம்புக்கு ஒளிப்ப*
*மீளியம் புள்ளைக் கடாய்விறன்*
*மாலியைக் கொன்று பின்னும்*
*ஆளுயர் குன்றங்கள் செய்துஅடர்த்*
*தானையும் காண்டுங்கொலோ ?*

பொ - ரை: 'யாளியைக் கண்ட குதிரை போலவும், சிங்கத்தைக் கண்ட நரி போலவுமாகி அரக்கர்கள் கதறிக்கொண்டு அக்காலத்தில் இலங்கையை விட்டுப் பிலத்திலே சென்று மறைய, வலிய அழகிய கருடப் பறவையை நடத்தி வலிய மாலி என்றவனைக் கொன்று, பின்னும் உயர்ந்த பிண மலைகளாக வீரர்களைக் கொன்று குவித்த சர்வேசுவரனையும் காணக்கூடுமோ ?' என்கிறார்.

வி - கு: ஆளி வேறு; அரி வேறு. 'ஒளிப்பக் கடாய் மாலியைக் கொன்று குன்றங்கள் செய்து அடர்த்தவன்' என்க. அடர்த்தவன் — பெயர்.

---

1. மேற்கூறியவற்றால் போதரும் பொருளை அருளிச்செய்கிறார், 'ஆக' என்று தொடங்கி.

2. செயல்களும் அவன் அதீனங்கள் என்கையாலே, பலித்த பாவத்தை அருளிச்செய்கிறார், 'இனி இத்தலையாலே' என்று தொடங்கி. திருவாய்மொழி, முதல் பத்து, முதல் திருவாய்மொழி, 6, 8 பாசுரங்களின் வியாக்கியானங்களைப் பார்க்க.

ஈடு: எட்டாம் பாட்டு. [1]'மாலி தொடக்கமான பகைவர்கள் கூட்டத்தைக் கொன்றருளின சர்வேஸ்வரனைக் காண வல்லோமே?' என்கிறார். [2]முதல் இரண்டு பாசுரங்களாலே பிராப்பியன் அவனே என்னும் இடம் சொல்லி, மேல் ஐந்து பாசுரங்களாலே, பிராபகன் அவனே தன்னைப் பெறுகைக்கு என்னும் இடம் சொல்லி, இப்பாசுரத்தாலும் அடுத்த பாசுரத்தாலும் பகைவர்களை அழிக்கின்ற அவனது தன்மையைச் சொல்லி, தடைகளைப் போக்குவான் அவனே என்னும் இடத்தைச் சொல்லுகிறார்.

ஆளியைக் காண் பரியாய் - யாளியைக் கண்ட குதிரை போலவும். அரி காண் நரியாய் - சிங்கத்தைக் கண்ட நரியைப் போலவும். [3]ஸ்ரீராமாயணத்தே, அந்த அரக்கர்கள் அஞ்சின படியாகப் பல உதாரணங்களை இட்டுச் சொல்லிப் போரக்கடவ தன்றே? இங்கே இரண்டு வகையாலே அதனைச் சூசிப்பிக்கிறார். பரி - குதிரை. அரக்கர் ஊளை இட்டு - மேலே 'நரி' என்கையாலே அதற்குத் தகுதியாகச் சொல்லுகிறார். அன்று இலங்கை கடந்து பிலம் புக்கு ஒளிப்ப - தூசித்தலையில் நேர் நின்று போர் புரிய ஆற்றல் இல்லாமையாலே இலங்கையை விட்டுப் போய்ப் பாதாளத்திலே புக்கு ஒளிப்ப. என்றது, 'புற்றுகள் எப்போதும் ஒக்கப் பாம்பு பற்று அறுதல் ஆறு போலே என்றும் ஒக்க அரக்கர்கள் மாறாதே, 'மாலி, சுமாலி, மால்யவான்' என்றாற்போலே சொல்லப்படுகிறவர்கள் வாழ்ந்து போந்தார்களாய், பெரிய திருவடி முதுகிலே வந்து தோன்றி, அவர்களை அழித்தானாகச் சொல்லக்கடவது அன்றே? அதனை இங்கே அருளிச்செய்கிறார்' என்றபடி. [4]கையில் ஆயுதம் போகட்

---

1. பின் இரண்டு அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மேல் திருப்பாசுரங்களோடு இதற்கு இயைபு அருளிச்செய்கிறார், 'முதல் இரண்டு' என்று தொடங்கி. பிராப்பியன் - பற்றப்படுமவன். பிராபகன்-பற்றுவதற்கு வழியாய் இருப்பவன்.

3. 'ஸ்ரீ ராமாயணத்தே' என்றது, வால்மீகி ராமாயணத்தில் உத்தரகாண்டத்தில், மாலி சுமாலி இவர்களோடு போர் செய்வதனைக் கூறும் இடத்தில் என்றபடி. இதனைக் கம்பராமாயணம், உத்தரகாண்டத்தில், இலங்கையழித்த படலத்தால் உணர்க.

4. 'இலங்கையை விட்டுப் போக வேண்டுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கையில்' என்று தொடங்கி. உள்ளே பட்டுப்போனாருமாய்-இலங்கைக்குள்ளே பட்டுப் போனாருமாய். சிந்தாமணி, மண்மகளிலம்பகம், 158, 160-ஆம் செய்யுள்களையும், சிறுபஞ்சமூலம், 41-ஆம் செய்யுளையும் ஈண்டுக் காண்க.

டாரையும், முதுகு காட்டினுரையும் கொல்லக் கூடாதே அன்றோ ? ஆகையாலே, தப்பி ஓடிப் போய் ஒளிப்பாரும் உள்ளே பட்டுப் போனாரு மாய்ப் போனார்களாதலின், '**பிலம் புக்கு ஒளிப்ப**' என்கிறார்.

மீளி அம் புள்ளைக் கடாய் - வலியையுடைய பெரியதிருவடியை நடத்தி. மீளியம் : ஒருசொல் ; வலி என்பது பொருள். அன்றிக்கே, 'மீளி அம் புள்' என்று பிரித்து, [1] 'கறையணி மூக்குடைப் புள்ளைக் கடாவி' என்கிறபடியே, பகைவர்களுக்கு யமன் போலே இருப்பானாய், [2] 'தூவாய புள்ளூர்ந்து' என்கிறபடியே, அநுகூலர்க்குக் காண்பதற்கு இனியதான வேடத்தையுடையவனான பெரிய திருவடியை நடத்தி என்னுதல். [3] பெரிய திருவடி முதுகிலே வந்து தோற்றும் போதை அழகையே அன்றோ இவர் பாவித்துக் கிடப்பது? [4] மீளி என்று வலிக்கும், யமனுக்கும், பாலை நிறத் தலைமகனுக்கும் பேராகச் சொல்லுவர்கள். விறல் மாலியைக் கொன்று - [5] ஆக, பிரசித்தர் களிலே ஒருவனைச் சொல்லிற்று. பின்னும் ஆள் உயர் குன்றங்கள் செய்து - பின்னும் ஆண் பிள்ளைகளாய் இருப்பார் பலரை அழியச் செய்து, அவர்களாலே பிணமலையாம்படி செய்து. ஆண்களாலே உயர்ந்த மலைகளாம்படி செய்து. அடர்த்தானையும் காண்டுங்கொலோ- [6] அவன் அரக்கர் கூட்டத்தை அழியச் செய்தாற்போலே, நம் விரோதிகளைப் போக்கி நமக்குக் காட்சியிலே தொடர்புண்டாய் நாம் கண்டோமாய்த் தலைக்கட்ட வல்லோமோ ? (8)

---

1. *'கறையணி' என்பது*, திருவாய். 3. 10 : 2.

2. *'தூவாய' என்பது*, பெரியதிருமொழி, 6. 8 : 3.

3. *'பெரிய திருவடி அடியார்கட்குக் காட்சிக்கு இனியனோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பெரிய திருவடி' என்று தொடங்கி. 'பண்கொண்ட புள்ளின் சிறகு ஒலி பாவித்து'* (திருவாய். 3. 8 : 5) *என்ற தனைத் திருவுள்ளம் பற்றி, 'இவர் பாவித்துக் கிடப்பது' என்கிறார்.*

4. *'மீளி' என்பது, பல பொருள் ஒருசொல் என்பதனைக் காட்டு கிறார் 'மீளி' என்று தொடங்கி. 'கன்னி விடலை காளை மீளி' என்பது, நம்பியகப்பொருள்.*

5. *'அவதாரிகையில் 'மாலி தொடக்கமான' என்று அருளிச்செய்து வைத்து, இங்கு ஒருவனைக் கொன்று என்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஆக' என்று தொடங்கி.*

6. *'அடர்த்தானையும் காண்டுங்கொலோ!' என்கிறவருடைய மனோ பாவத்தை அருளிச்செய்கிறார், 'அவன்' என்று தொடங்கி.*

726

**காண்டுங்கொ லோநெஞ்ச மே!கடிய வினையே முயலும்**
**ஆண்திறல் மீளிமொய்ம்பில் அரக்கன் குலத்தைத் தடிந்து**
**மீண்டுமவன் தம்பிக்கே விரிநீர் இலங்கை அருளி**
**ஆண்டுதன் சோதி புக்க அமரர்அரி ஏற்றினையே?**

**பொ - ரை :** கொடுந்தொழிலையே செய்கின்ற ஆண் தன்மையினையும் திறலையும் மிக்க வலியினையுமுடைய அரக்கனை இராவணனுடைய குலத்தைக் கொன்று, மீண்டும், அவனுடைய தம்பியாகிய விபீஷணனுக்கே கடல் சூழ்ந்த இலங்கையைக் கொடுத்து, திரு அயோத்தியில் வீற்றிருந்து பதினோராயிரம் ஆண்டுகள் அரசாட்சியைச் செலுத்தித் தன்னுடைச் சோதியை அடைந்த நித்தியசூரிகளுக்கு ஆண் சிங்கத்தைப் போன்றவனை சர்வேஸ்வரனை நெஞ்சமே! காண்போமோ?

**வி - கு :** 'குலத்தைத் தடிந்து தம்பிக்கு அருளி ஆண்டு புக்க அரியேறு' என்க.

**ஈடு :** ஒன்பதாம் பாட்டு. [1] 'இராவணன் முதலியோரை அழித்த சக்கரவர்த்தி திருமகனை, நெஞ்சே! காண வல்லோமோ?' என்கிறார்.

காண்டுங்கொலோ நெஞ்சமே - [2] இழவாலே கட்டிக்கொண்டு கதறுகைக்குக் கூட்டான நீ, இப்பேற்றாலே இன்பமடைந்தவர் அனுபவிக்கும் அனுபவத்துக்கும் கூட்டாய் நாம் அவனைக் காண வல்லோமோ? கடிய வினையே முயலும் - [3] தாயையும் தமப்பனையும் இரண்டு இடங்களிலே ஆக்குவாரைப் போலே அன்றோ, பெருமாளையும் பிராட்டியையும் இரண்டு இடங்களிலே ஆக்கிற்று? இதில்

---

1. திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'நெஞ்சமே!' என்று விளித்து, 'காண்டுங்கொலோ?' என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'இழவாலே' என்று தொடங்கி. 'அமரர் அரியேற்றினைக் காண்டுங்கொலோ?' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'இப்பேற்றாலே' என்கிறார். 'இப்பேற்றாலே' என்றது 'பகவானைக் கண்ட தன்மையாலே' என்றபடி.

3. 'கடிய வினை' இன்னது என்கிறார், 'தாயையும்' என்று தொடங்கி.

தாழ்ந்திருப்பது ஒரு செயல் இல்லையாயிற்று, இவன் செய்யுமவற்றில். [1]'கிரமத்திலே பலம் கொடுக்கிறோம்' என்று சர்வேஶ்வரனுக்கு ஆறியிருக்க ஒண்ணாதபடியாயிற்றுக் கொடிய செயல்கள் செய்யும் படி. [2]'மிகக்கொடியனவான பாவங்கள், மிக உயர்ந்தனவான புண்ணியங்கள் ஆகிய இவற்றால் உண்டான பலன்களை இப்பிறப்பிலேயே மூன்று வருடங்களில் மூன்று மாதங்களில் மூன்று பக்ஷங்களில் மூன்று நாள்களில் அனுபவிக்கிறான்' என்னும்படியே. கடிய வினையே என்ற ஏகாரத்தால் இவன் நல்வினைத் தொடர்பு இல்லாதவன் என்பது பெறப்படும்.

ஆண் திறல் மீளி மொய்ம்பில் அரக்கன் - ஆண்பிள்ளைத் தனத்தில் வந்தால், [3]திறலையுடைய சிங்கம் போன்ற மிடுக்கையுடைய அரக்கன். மீளி-சிங்கம். அன்றிக்கே, 'திறலையுடையனாய், பிறரை அடக்குதற்குரிய ஆற்றலையுடையனாய், யமனைப் போன்ற மிடுக்கையுடையனான இராவணனுடைய' என்னுதல். குலத்தைத் தடிந்து - [4]'ஜனகராஜன் திருமகள் காரணமாகப் பிசாச ஜாதி அற்றதாயும் அரக்கர் குலம் அற்றதாயும் செய்வேன்' என்கிறபடியே, குலமாக அழித்து.

---

1. *'கடிய வினை' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'கிரமத்திலே' என்று தொடங்கி.*

2. *மிகப்பெரிய பாவங்களும் புண்ணியங்களும் இப்பிறவியிலேயே பலன் கொடுக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மிகக் கொடியனவான' என்று தொடங்கி.*

*'அத்யுத்கடை: புண்யபாபை: இஹைவபலம் அஶ்நுதே*
*த்ரிபி: வர்ஷை: த்ரிபி: மாஸை: த்ரிபி: பக்ஷை: த்ரிபி: திநை:'*

*என்பது, தர்ம சாஸ்திரம்.*

*'மிகப்பெரிய அறஞ்செய்தாரும் மிகப்பெரிய பாவஞ்செய்தாரும் முறையானன்றி இம்மைதன்னுள்ளே அவற்றின் பயன் அனுபவிப்பார் என்னும் அறநூல் துணிபு பற்றி, இப்பேரறஞ்செய்தானும் கொல்லப் படான்' என்பது* திருக்குறள், 326, பரிமேலழகருரை.

3. *'திறல்' என்பதற்கு 'மிடுக்கு' என்றும், 'பிறரை அடக்குதற்குரிய ஆற்றல்' என்றும்; 'மீளி' என்பதற்குச் 'சிங்கம்' என்றும், 'யமன்' என்றும் பொருளாம்.*

4. *'கரிஷ்யே மைதிலீஹேதோ: அபிஶாசம் அராக்ஷஸம்'* *என்பது,* ஸ்ரீராமா. ஆரண். 64 : 66.

அவன் தம்பிக்கே விரிநீர் இலங்கை அருளி - [1]'இராவணன் தானேயாகிலும்' என்கிறபடியே, 'சரணம்' என்ற சொல் அழகிதாய் இருந்தது, 'அவனோடு சம்பந்தமுடையான் ஒருவன் வந்தானாகை அன்றிக்கே, அவன்தானே வரப்பெறுவதுகாண்' என்று செவி சீப்பாய்ந்து இருந்தார் அன்றோ? [2]'அங்குநின்றும் வந்தான் ஒருவனைக் கைக்கொண்டாராக அமையாதோ? இந் நிர்ப்பந்தம் என்?' என்னில், அவனோடு சம்பந்தமுடையான் ஒருவனைக் கைக்கொண்டால், அவன் தானும் நான்கு பேருமாகப் போம்; அவன்தானே வரப்பெற்றதாகில் துருப்புக்கூடாக நோக்கிற்று ஆகலாம் அன்றோ? [3]மேலும், பகைமையில் முதிர நின்றானும் அவனே ஆகையாலே, 'காப்பாற்றுமவனாக வேண்டும்' என்ற விருப்பம் உள்ளதும் அவனிடத்திலே அன்றோ? [4]இப்படி அவனை அங்கீகரிப்பததற்குக் கோலிப் பெறாத இழவு தீர்ந்தது இவனைக் கைக்கொண்ட பின்பாயிற்று. [5]'நான் இராவணனுக்குப் பின்

---

1. ''அவன் தம்பிக்கு' என்கைக்கு, அவன் சம்பந்தம் அங்கீகாரத்துக்குக் காரணமோ?' என்ன, 'இராவணன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

'விபீஷணோ வா ஸுக்ரீவ யதிவா ராவண: ஸ்வயம்'

என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 34. இச்சுலோகத்துக்குப் பொருள் அருளிச் செய்கிறார், 'சரணம்' என்று தொடங்கி. செவி சீப்பாய்ந்து-விரும்பி.

'எந்தையே! இராகவ! சரணம் என்ற சொல்
தந்தவர் எனைவரோ சாற்று மின்என' (கம்பராமா. விபீட. 36.)

என்ற செய்யுட்பகுதியில் இவ்வியாக்கியானக் கருத்துத் தோற்றுதல் காண்க.

2. 'இராவணன் தானே வரவேண்டும்' என்று ஆசைப்பட்டிருந்த பெருமாளுடைய கருத்தை வினா விடை ரூபமாக அருளிச்செய்கிறார், 'அங்கு நின்றும்' என்று தொடங்கி. என்றது, 'எல்லாரையும் காப்பாற்றலாம்' என்றபடி. துருப்புக் கூடு-தூற்றுப்பொலி.

3. 'இராவணனையே கைக்கொள்ள வேண்டும் என்றதற்கும் வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார், 'மேலும்' என்று தொடங்கி.

4. 'ஆனால், அவன் வந்தான் இல்லையே?' என்ன, 'இப்படி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. 'அப்படி அவன் சம்பந்தம் அடியாகக் கைக்கொண்டாரோ?' என்ன, 'நான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, 'அவன் தன்னுடைய தோஷத்தை முன்னிட்டுக்கொண்டு வர, அதுவே பற்றாசாக அங்கீகரித்தார்' என்றபடி.

'அநுஜ: ராவணஸ்ய அஹம் தேந ச அஸ்மி அவமாநித:
பவந்தம் ஸர்வபூதாநாம் ஶரண்யம் ஶரணம் கத:'

என்பது ஸ்ரீராமா. யுத். 19 : 4.

பிறந்தவன்' என்று அவன் வர, இவரும் [1]'அவன் தம்பியே' என்றுயிற்று அவனைக் கைக்கொண்டது. விரிநீர் இலங்கை அருளி - கடல் சூழ்ந்த இலங்கையைக் கொடுத்தருளி.

மீண்டும் ஆண்டு - இராவணனைக் கொன்ற பின்பு, பிரமன் முதலான தேவர்கள், 'தேவரை அம்புக்கு இலககு ஆக்கி, நாங்கள் எங்கள் காரியத்தைத் தலைக்கட்டிக்கொண்டோம்; இனி தன்னுடைச் சோதி ஏற எழுந்தருள அமையும்,' என்ன, அவ்வளவிலே சிவன், 'தேவர் அங்ஙன் செய்தருள ஒண்ணுது, திருவடி சூடுதற்குத் தடை உண்டாகையாலே திருத்தாய்மாரும் இழவுபட்டிருந்தார்கள் : நாடும் அடைய நொந்திருந்தது : ஸ்ரீபரதாழ்வானும் ஆர்த்தனுய் இருந்தான்: ஆன பின்பு, [2]'வருந்தியிருக்கிற ஸ்ரீபரதாழ்வானையும் பெருமை பொருந்திய ஸ்ரீகௌஸல்யையாரையும் சமாதானம் செய்து' என்கிற படியே, ஸ்ரீபரதாழ்வான் தொடக்கமானுர் 'இழவுகள் எல்லாம் தீரும்படி மீண்டு எழுந்தருளி, திருமுடி சூடி, நாட்டை வாழ்விக்க வேணும்' என்ன, அது திருவுள்ளத்துக்குப் பொருந்தும் செயலாகையாலே பதினேராயிரம் ஆண்டு ஒரு படிப்பட இருந்து நாட்டினை வாழ் வித்தருளி.

தன் சோதி புக்க - அம்புக்கு இலக்கு ஆக்குவார் இருந்த இடத்தை விட்டுத் தனக்கே சிறப்பாய் எல்லை அற்ற பேரொளிப் பிழம்பு வடிவமாய் இருக்கிற பரமபதத்திலே போய்ப்புக்க. அமரர் அரி ஏற்றினையே-[3] அம்பு இட்டு எய்வார் இன்றிக்கே ஆநுகூல்யமே தன்மையாய்த் தொண்டிலேயே நிலை பெற்றவர்களான நித்திய சூரிகள் நடுவே அவன் இருக்கும் இருப்பைக் காண வல்லோமே ? [4] பசுக்களின் கூட்டத்தின் நடுவே ஓர் இடபம் செருக்கித் திரியுமாறு போலே, நித்தியசூரிகள் கொண்டாட, அவர்கள் நடுவே அதனாலே

---

1. *'பஞ்செனச் சிவக்கும் மென்கால் தேவியைப் பிரித்த பாவி*
*வஞ்சனுக்கு இளைய என்னை வருகஎன் றருள்செய் தானே?'*

*என்றூர் கம்பரும்.*

2. *'ஆர்ர்வாஸ்ய பரதம் தீநம் கௌஸல்யாம்ச யஶஸ்விநீம்'* என்பது, ஸ்ரீராமா. யுத். 122 : 4.

3. *'அமரர் அரி ஏற்றினைக் காண்டுங்கொலோ நெஞ்சமே' என்கிற வருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறூர், 'அம்பு இட்டு' என்று தொடங்கி.*

4. *'அரி ஏறு' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறூர், 'பசுக்களின்' என்று தொடங்கி.*

செருக்கி மேனாணித்திருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. [1] நித்திய சூரிகள் திரளிலே அந்த ஓலக்கத்தின் நடுவே இருக்கும் இருப்பைக் காண்கை அன்றோ பிராப்பியமாகிறது? (9)

727

ஏற்றருவை குந்தத்தை அருளும்
நமக்கு ஆயர்குலத்து
ஈற்றிளம் பிள்ளை ஒன்றாய்ப்புக்கு
மாயங்களே இயற்றிக்
கூற்றியல் கஞ்சனைக் கொன்று ஐவர்க்காய்க்
கொடுஞ்சேனை தடிந்து
ஆற்றல் மிக்கான் பெரிய பரஞ்சோதி
புக்க அரியே.

பொ - ரை: 'பிறந்த ஓர் இளம்பிள்ளையாய் ஆயர் குலத்திலே புகுந்து ஆச்சரியமான காரியங்களையே செய்து, யமனைப் போன்ற தன் மையனான கம்ஸனைக் கொன்று, பாண்டவர்களுக்காகக் கொடிய சேனைகள் எல்லாவற்றையும் கொன்று, ஆற்றலில் மிக்கானாய், பெரிய பரமபதத்திலே சென்று சேர்ந்த கிருஷ்ணனானவன், ஒருவர் தம் முயற்சியால் ஏறுதற்கு அரிய பரமபதத்தை நமக்குக் கொடுப்பான்' என்றவாறு.

**வி - கு:** ஏற அரு என்பது, 'ஏற்றரு' என்றாயிற்று. 'அரி நமக்கு வைகுந்தத்தை அருளும்,' என்க. அரி - சிங்கம்; உவம ஆகு பெயர். 'ஈன்ற இளம்' என்பது, 'ஈற்றிளம்' என்றாயிற்று. 'ஆயர் குலத்திலே புக்கு இயற்றிக் கொன்று தடிந்து ஆற்றலின் மிக்கான்' என்க. ஆற்றல் - பொறை. வலியுமாம்.

ஈடு: பத்தாம் பாட்டு. [2] பிராப்பியன் அவனே என்னும் இடத்தைச் சொல்லி, தன்னைப் பெறுதற்குச் சாதனம் தானே என்னும் இடத்தையும் சொல்லி, விரோதிகளை அழிப்பானும் அவனே என்னும் இடத்தையும் சொல்லி, இப்படி நம் பேற்றுக்குக் கண்ணழிவு

1. 'அமரர் அரி ஏற்றினைக் காண்டுங்கொலோ' என்று கூட்டிக் கருத்து அருளிச்செய்கிறார், 'நித்தியசூரிகள்' என்று தொடங்கி.

2. மேல் திருப்பாசுரங்களில் கூறியனவற்றை அநுவதித்துக் கொண்டு இத்திருப்பாசுரத்திற்கு இயைபு அருளிச்செய்கிறார், 'பிராப்பிய' என்று தொடங்கி. உபாய கிருத்தியம், அநிஷ்டங்களை நீக்கி இஷ்டங்களை அடைவித்தலாகையாலே, மேல் இரண்டு திருப்பாசுரங்களிலும் அநிஷ்டங்கள் நீக்கினதை அருளிச்செய்து, இத்திருப்பாசுரத்திலே இஷ்டத்தை அடைவித்தலை அருளிச்செய்கிறார் என்றபடி. 'வைகுந்தத்தை அருளும்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'அவன் தன்னை' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'வைகுந்தத்தை அருளும்' என்னாநிற்க, 'தன்னை நமக்குத் தரும்' என்றது, பரமபதத்தே சென்றால் அனுபவிக்கப் படுகின்றவன் அவனாகையாலே என்க.

இன்றிக்கே இருந்த பின்பு அவன் தன்னை நமக்குத் தரும் என்று அறுதியிடுகிறார்.

ஏறஅரு வைகுந்தத்தை அருளும் நமக்கு - ஒருவராலும் தம் முயற்சியால் அடைய ஒண்ணாதிருக்கிற ஸ்ரீவைகுண்டத்தை அவன் தானே தரப் பெற இருக்கிற நமக்குத் தரும். [1] 'எல்லா வழியாலும் அவன் தன்மையை அறிந்து, 'அதனைத் தரும்' என்று இருந்தீரே யாகிலும், பெற இருக்கிற நம் படியைப் பாரானோ?' என்னில், ஆயர் குலத்து ஈற்றிளம்பிள்ளை - நம்படி பார்க்க அறியாத இளைஞன். [2] 'இளைஞனே! (சிசுபாலனுக்கு) நித்தியசூரிகளோடு ஒத்த இன்பத்தை அளித்தவன் ஆனாய்' என்னக்கடவதன்றோ? ஈற்றிளம்பிள்ளை - [3] 'ஈறான இளம்பிள்ளை' என்றாய், மிக்க இளைஞன் என்றபடி. ஈறு - முடிவு. அன்றிக்கே, ஈன்றிளம்பிள்ளை என்றாய், 'கற்றிளம்பிள்ளை' என்றபடி. இரண்டாலும் அதி இளைஞன் என்றபடி. ஒன்றாய்ப் புக்கு - [4] கம்ஸனும் பொய்யே அம்மானாய் 'வில் விழவுக்கு' என்று அழைத்து விட, இவனும் பொய்யே மருகனாய் அவற்றிற்கெல்லாம் தானே கடவனாக விரும்பிப் போய்ப் புக்கானாயிற்று. அன்றிக்கே, 'வில்விழவு' என்று கொண்டு ஒரு வியாஜத்தை இட்டுப் போய்ப் புக்கு என்னுதல்.

மாயங்களே இயற்றி - ஆயுதச்சாலையிலே புக்கு ஆயுதங்களை முரிப்பது, [5] ஈரங்கொல்லியைக் கொன்று பரிவட்டம் சாத்துவது, குவலயாபீடத்தின் கொம்பை முரிப்பது, மல்லரைக் கொல்லுவது ஆன ஆச்சரிய காரியங்களையே செய்து. இயற்றுதல் - செய்யத்

---

1. *மேலிற்பத்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'எல்லாவழியாலும்' என்று தொடங்கி.*

2. *நம் குற்றத்தை அறியாதவனாக இருப்பான் என்பதற்கு உறுப்பாக, அவன் இளமையைச் சொல்லுகிறதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'இளைஞனே' என்று தொடங்கி.*

'*முக்த ஸாயுஜ்யதோ*பூ:' என்பது, ஸ்தோத்ர ரத்நம், 63.

3. *'ஈறு என்று எல்லையாய், 'பிள்ளைத்தனத்தில் எல்லையானவன்' என்னுதல்; 'ஈன்றணிய பிள்ளை' என்னுதல்' என்பது, இருபத்து நாலாயிரப்படி.*

4. *'ஒன்றாய்ப் புக்கு' என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார், 'கம்ஸனும்' என்றும், 'வில்விழவு' என்றும் தொடங்கி.*

5. *ஈரங்கொல்லி-வண்ணான்.*

தொடங்குதல். இவன் இப்படிச் செய்யப் புக்கவாறே அவற்றைக் கேட்டுப் பொறுக்கமாட்டாமல் கூற்றுவனைப் போலே கிளர்ந்தான் ஆயிற்றுக் கம்ஸன். கூற்று இயல் கஞ்சனைக் கொன்று-மஞ்சத்திலே இருந்த கம்ஸனை முகம் கீழ்ப்பட விழ விட்டுக் கொன்று போகட்டானாயிற்று. இயல்வு - தன்மை. [1] 'அந்தக் கண்ணபிரான், கிரீடம் கீழே விழும்படி மயிரைப் பிடித்து இழுத்துப் பூமியிலே தள்ளினார்' என்றதற்குக் கருத்து என்னையோ?' எனின், 'இராஜத் துரோகிகளைக் கொல்லும்போது இராஜ சிந்நங்களை வாங்கிக் கொல்லுவாரைப் போலேகாண்' என்று அம்மாள் பணிப்பர். [2] தான் கொடுத்த தரம் ஆகையாலே மற்று ஒருவர்க்குத் தோற்றத்துக்குக் காரணமாக வேண்டும் அன்றோ? ஆக, தன்னைத்தான் அறிவதற்கு முன்பு, கம்ஸன் வரவிட்டவர்களையும் அவனையும் தப்புகைக்குப் பணி போந்தது; பருவம் நிரம்பித் தன்னைத்தான் அறிந்த பின்பு, பாண்டவர்கள் காரியம் செய்து திரிந்த இத்தனை என்கிறார்.

ஐவர்க்காய்க் கொடுஞ்சேனை தடிந்து - பாண்டவர்களைச் சீறினவர்கள் அடைய 'சாரதி, சாரதி' என்று வாய் பாறிக்கொண்டு வர, அவர்களை அடையத் தேர்க்காலாலே உழக்கிப் போகட்டானாயிற்று. ஆற்றல் மிக்கான் - [3] பகைவர்களையும் வேரோடே வாங்கிப் போகட்டு, தருமபுத்திரன் தலையிலே முடியையும் வைத்து, இவள் குலைந்த குழலையும் முடிப்பித்த இடத்திலும், [4] 'நிலைபெறாத மனத்தையுடையவனாய் இருக்கிறேன்' என்றே அன்றோ எழுந்தருளினான்?

---

1. 'கொன்று' என்பதற்குப் பிரமாணம் முன்னாகப் பொருள் அருளிச்செய்கிறார், 'அந்தக் கண்ணபிரான்' என்று தொடங்கி.

'கேசேஷு ஆக்ருஷ்ய விகளத் கிரீடம் அவநீதலே
ஸ கம்ஸம் பாதயாமாஸ தஸ்ய உபரி பபாத ச'

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 5. 20 : 84.

2. 'முடியை வாங்கிக் கொல்லுகிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தான் கொடுத்த' என்று தொடங்கி. 'இறைவன் கொடுத்த சிந்நங்கள் இருக்கில் அவனாலும் கொல்லப் போகாது' என்கை. தேற்றத்துக்கு-நம்புவதற்கு.

3. 'ஆற்றல்' என்பதற்குப் 'பொறுமை' என்று பொருள் கொண்டு பாவம் அருளிச்செய்கிறார், 'பகைவர்களையும்' என்று தொடங்கி.

4. 'நாதிஸ்வஸ்த மநா:' என்பது, பாரதம், உத்யோக.

ஆற்றல் என்று பொறையாய், 'பொறை மிக்கவன்' என்னுதல். அன்றிக்கே, வலியாய், 'வலி மிக்கவன்' என்னுதல். இவற்றை அடைய அழியச் செய்கைக்கு அடியான வலியைச் சொன்னபடி. பெரிய பரஞ்சோதி புக்க அரியே - [2] கம்ஸனும் துரியோதனனும் இல்லாத இடத்தில் பரமபதத்திலே போய்ப் புக்க பின்பும், 'நித்திய சூரிகள் நடுவே இருந்தோம் அன்றோ?' என்று பாராதே, கம்ஸன் துரியோதனன், கர்ணன் என்று, ஆசிலே வைத்த கையுந்தானு மாய்ப் பகைவர்கள் மேலே சீறின சீற்றத்தின் வாசனை அங்கேயும் தொடர்ந்தபடி. (10)

728

**புக்க அரிஉருவாய் அவுணன்உடல் கீண்டுஉகந்த**
**சக்கரச் செல்வன்தன்னைக் குருகூர்ச்சட கோபன்சொன்ன**
**மிக்கஓர் ஆயிரத்துள் இவைபத்தும்வல் லார்அவரைத்**
**தொக்குப்பல் லாண்டிசைத்துக் கவரிசெய்வர் ஏழையரே.**

**பொ-ரை:** *அந்த நரசிங்கத்தின் உருவமாகிப் புக்கு அவுணனாகிய இரணியனுடைய சரீரத்தைப் பிளந்து மகிழ்ந்த சக்கரத்தையுடைய சர்வேசுவரனை, திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர் அருளிச் செய்த மேம்பட்ட ஒப்பற்ற ஆயிரம் திருப்பாசுரங்களுள் இத்திருப் பாசுரங்கள் பத்தையும் கற்று வல்லவர்களாகிய அவர்களைப் பெண்கள் சூழ்ந்துகொண்டு பல்லாண்டு பாடிச் சாமரை வீசுவார்கள்.*

ஈடு: முடிவில், [3] 'இத்திருவாய்மொழி கற்றாரை மதிமுக மடந்தையர் விரும்பித் திருப்பல்லாண்டு பாடிச் சிறப்பிப்பார்கள்,' என்கிறார்.

---

1. *வலி என்ற பொருளில் பாவம் அருளிச்செய்கிறார், 'இவற்றை யடைய' என்று தொடங்கி.*

2. *'அரி' என்பதற்குப் பகைவன் என்றும், 'திருவாழியையுடைய வன்' என்றும் பொருள் கொண்டு அருளிச்செய்கிறார், 'கம்ஸனும்' என்று தொடங்கி. அரி-சக்கரத்தையுடையவன் என்ற பொருளில், 'அரம்அஸ்ய அஸ்திஇதி அரீ' என்று பதத்தைப் பிரித்துக்கொள்வது. ஆசு-ஆயுதப்பிடி.*

3. *'அவரைத் தொக்குப் பல்லாண்டு இசைத்துக் கவரி செய்வர் ஏழையரே' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

புக்கு அ அரி உருவாய் - அந்த அரி உருவாய்ப் புக்கு. [1] அவ் வரியுரு என்னுமித்தனையாயிற்றுச் சொல்லலாவது. [2] நரசிங்கமான வேடத்தைக்கொண்டு பகைவன் அண்மையிலே கிட்டி. அன்றிக்கே, இரணியன் உடலைப் பிளந்துகொடு புறப்பட்ட போதைக்கடுமை, புறம்பு இட்டு ஒருவன் வந்து செய்தானுகை அன்றிக்கே, உள்ளு நின்றும் ஒரு சிங்கம் பிளந்துகொண்டு புறப்பட்டாற்போலேயாயிற்று அதனைச் சொல்லுதல். அவுணன் உடல் கீண்டு உகந்த - இரணியன் உடலைப் பிளந்து போகட்டு, 'சிறுக்கன் விரோதி போகப்பெற்றோம்!' என்று உகந்தானுயிற்று. சக்கரச் செல்வன்தன்னை - [3] இரணிய னுடைய உடலுங்கூடத் திரு உகிருக்கு அரை வயிறுகப் போகை யாலே, பின்னை அழகுக்குப் பத்திரங்கட்டின இத்தனையாயிற்று.

குருகூர்ச் சடகோபன் சொன்ன - ஆழ்வார் அருளிச்செய்த. [4] மிக்க ஓர் ஆயிரத்துள் இவை பத்தும் வல்லார்-பகவத் விஷயத்தை உள்ள அளவும் சொன்ன ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப் பத்தையும் கற்றவர்களை. தொக்குப் பல்லாண்டு இசைத்துக் கவரி செய்வர் ஏழையர் - [5] கிண்ணகத்தில் இழிவாரைப்போலே தனி இழிய ஒண்ணுமை திரண்டு கொண்டு, 'பொலிக! பொலிக!' என்று மங்களாசாசனம் செய்து, சர்வேஶ்வரன் பக்கல் செய்யக்கூடிய [6] அசாதாரண கைங்கரியங்களையடைய இப்பத்தைக் கற்றவர்கள்

---

1. 'உக்ரம் வீரம்' என்பது போன்ற மந்திரலிங்கத்தையும் திருவுள் ளம் பற்றி, 'அவ்வரியுரு' என்று தொடங்கி அருளிச்செய்கிறுர்.

2. பதப்பொருள் அருளிச்செய்கிறுர், 'நரசிங்கமான' என்று தொடங்கி. வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறுர், 'அன்றிக்கே' என்று தொடங்கி. என்றது, 'இரணியன் உடலிலே பிரவேசித்திருக்கிற அரியுருவாய்' என்றபடி.

3. 'சக்கரச் செல்வன்' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறுர், 'இரணியனுடைய' என்று தொடங்கி. செல்வம்-திருவாழியால் வந்த அழகு. பத்திரம்-ஆயுதம்.

4. 'மிக்க' என்றது, 'பகவானைப் பற்றிச் சொல்லுகிற ஆற்றலால் மிக்க' என்றபடி.

5. கிண்ணகம்-ஆற்றுப்பெருக்கு.

6. அசாதாரணம்-பொதுவானது அன்று; ஒருவர்க்கே உரியது.

பக்கலிலே செய்யாநிற்பர்கள் மதிமுகமடந்தையர். நெடுநாள் சம்சாரத்தில் பட்ட இழவெல்லாம் தீரும்படி அவர்களாலே கொண்டாடப் பெறுவர்கள். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*பாமரு வேதம் பகர்மால் குணங்களுடன்*
*ஆமழகு வேண்டற்பா டாமவற்றைத்—தூமனத்தால்*
*நண்ணியவ னைக்காண நன்குருகிக் கூப்பிட்ட*
*அண்ணலைநண் ணூரரை யர்.* (66)

ஆழ்வார் எம்பெருமானர் சீயர் திருவடிகளே அரண்.

# ஏழாந்திருவாய்மொழி—‘ஏழையர்’

## முன்னுரை

ஈடு: [1]மேல் திருவாய்மொழியிலே ‘மல்கு நீலச் சுடர் தழைப்பச் செஞ்சுடர்ச் சோதிகள் பூத்து ஒரு மாணிக்கம் சேர்வது போல், அந்தரமேல் செம்பட்டோடு அடி உந்தி கை மார்பு கண் வாய், செஞ்சுடர்ச்சோதி விட உறை என் திருமார்பனையே’ என்று அவன் வடிவழகினைச் சொன்னார்; அவ்வடிவழகுதானே நெஞ்சிலே ஊற்றிருக்க, அதனையே பாவித்த காரணத்தாலே, அந்த பாவனையின் மிகுதியாலே கண் கூடாகக் காண்பதே போன்றதாய், பின்பு கண் கூடாகப் பார்ப்பதாகவே நினைத்து அணைக்கக் கணிசித்துக் கையை நீட்டி, அப்போதே பெருமையாலே தமக்குப் பிறந்த ஆற்றாமையை, எம்பெருமானோடே கலந்து பிரிந்து உருவு வெளிப்பாட்டாலே நோவு படுகிறாள் ஒரு பிராட்டி பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

[2]சர்வேஸ்வரனோடே கலந்து பிரிந்து தளர்ந்து உருவு வெளிப் பாட்டாலே நோவுபடுகிறாள் ஒரு பிராட்டி. [3]ஒருவர் ஒருவரோடு கலக்கும் போது [4]காட்சி முன்னாகப் பின்பே அன்றோ மற்றைப் பரிமாற்றங்களை ஆசைப்படுவது? ஆகையாலே, திருக்கண்களின் அழகைக் கூறி, அவ்வழியாலே திருமுகத்தில் அழகைக் கூறிப் பின்பு அவ்வருகே சில பரிமாற்றங்களை ஆசைப்பட்டு அப்போதே

---

1. மேல் திருவாய்மொழிக்கும் இதற்குமுள்ள இயைபினைச் சுருக்கமாக அருளிச்செய்கிறார், ‘மேல் திருவாய்மொழியிலே’ என்று தொடங்கி. ஊற்றிருக்க-ஊறிக்கொண்டு இருக்க; ‘மாறாதே தங்கியிருக்க’ என்றபடி.

2. மேலே சுருங்க அருளிச்செய்த அந்த இயைபினை விரித்து அருளிச்செய்கிறார், ‘சர்வேஸ்வரன்’ என்று தொடங்கி.

3. ‘முன்னே திருக்கண்களின் அழகைச் சொல்லுவான் என்?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘ஒருவர்’ என்று தொடங்கி.

4. அகப்பொருள் பற்றிய கோவைகளில், முதல் முன்னம் ‘காட்சி’ என்னும் துறையே அமைந்திருத்தல் காண்க. ‘பரிமாற்றங்கள்’ என்றது, மெய்தொட்டுப் பயிறல் முதலாயினவற்றை. ‘ஒரு பிராட்டி, திருக் கண்களின் அழகைக்கூறி, திருமுகத்தில் அழகைக்கூறி, ஆசைப்பட்டு, கைவாராமையாலே நோவுபட’ எனக் கூட்டுக.

அது கைவாராமையாலே நோவுபட; இவள் நிலையைக் கண்ட தோழிமாரும் தாய்மாரும், 'உனக்கு ஓடுகிறது என்?' என்று கேட்க, [1] ஆற்றாமை பிரசித்தமாயினபடியால் சிலர்க்குச் சொல்லிச் சிலர்க்கு மறைக்கும்படியான நிலை இல்லையே! ஆகையாலே, அவர்களைக் குறித்து, 'அவனுடைய திருமுகத்தில் அழகானது தனித்தனியும் [2] திரளவும் வந்து நலியாநின்றது' என்ன, 'நீ இங்ஙனே சொல்லுமது [3] உன்னுடைய பெண்மைக்குப் போராது; அவனுடைய தலைமைக்கும் போராது; [4] நீதான் எங்களை நோக்கக் கடவதாய் இருப்பது ஒரு தன்மை உண்டே அதுக்கும் போராது; ஆன பின்பு, இதனைத் தவிர்,' என்று ஹிதம் சொல்லுவாரும் பொடிவாருமாக; 'நீங்கள் பொடிகிற இதனைக் கேட்டு மீளும் அளவு அன்று அது என்னை நலிகிறபடி: [5] இனித்தான் ஏதேனுமாக உறைத்ததிலே ஊன்றி நிற்குமத்தனை அன்றோ? [6] ஆன பின்பு, நீங்கள் என்னை விட்டுப் பிடிக்க அமையும்,' என்று அவர்களுக்குத் தன் பக்கல் நசைஅற வேண்டும்படி தனக்குப் பிறந்த ஆற்றாமையை அறிவிக்கிறாளாய் இருக்கிறது.

[7] 'இவர்க்குத் திருவாய்மொழி எங்கும் ஓடுகிற தன்மைகள், சர்வேஶ்வரனுடைய குணங்களை ஆசைப்படுகையும், அதுதான்

---

1. 'தோழிமார்க்கு ஒழிய, தாய்மார்க்குத் தன் நிலையைக் கூறலாமோ?' என்ன, 'ஆற்றாமை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'திரளவும்' என்றது, திருவாய்மொழியில் வருகின்ற 'கோளிழைத் தாமரையும்' என்ற திருப்பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி.

3. 'நிற்றி முற்றத்துள்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'உன்னுடைய பெண்மைக்குப் போராது' என்கிறார்.

4. 'நீதான் எங்களை நோக்கக் கடவதாய் இருப்பது ஒரு தன்மை' என்றது, 'எங்கள் வார்த்தைகளைக் கேட்டு எங்களுக்கு அடங்கியவளாய் இருப்பது ஒரு தன்மை' என்றபடி.

5. 'நாங்களும் நலிகின்றோமோ? எங்கள் வழியே ஒழுக ஒண்ணாதோ?' என்ன, 'இனித்தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். உறைத்ததிலே-பிரபலமானதிலே.

6. 'நங்கைமீர் நசை என் நுங்கட்கே?' என்றதனைத் திருவுள்ளம் பற்றி 'ஆன பின்பு' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

7. இதற்குச் சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிறார், 'இவர்க்கு' என்று தொடங்கி.

மானஸ அனுபவமாய் இருக்கையும், அனுபவித்த குணங்கள் ஒழிய மற்றைய குணங்களிலே விருப்பம் செலுத்துதலும், [1] அதுதன்னில் கிரமப் பிராப்தி பற்றுமையும், அதுதான் மேல் நின்ற நிலையை மறக்கும்படி செய்கையும் ஆகிற இவையே அன்றோ? அவற்றைக் காட்டிலும், உருவு வெளிப்பாடாகச் சொல்லுகிற இதில் ஏறின அமிசம் என்?' என்னில், 'முன்பு பிறந்த தெளிவும் கிடக்கச்செய்தே மேலே விருப்பத்தை உண்டாக்குமது அன்றோ உருவு வெளிப்பாடாகிறது? [2] மற்றைய இடத்தில், முன் பிறந்த தெளிவை அழித்தே அன்றோ மேலில் விருப்பம் பிறப்பது? 'எங்ஙனேயோ?' என்ற திருவாய்மொழியிலும் [3] பெரும்பாலும் இதுவே அன்றோ ஓடுகிறது? அதில் இதற்கு வாசி என்?' என்னில், அதில் பிரீதியும் பிரீதி இன்மையும் சமமாக இருக்கும்; இங்குப் பிரீதி இன்மை மிக்கிருக்கும். [4] திருக்கண்களில் அழகை 'இணைக்கூற்றங்கொலோ!' என்னும்படியாயிற்று இங்குத் தீங்கு செய்வதில் உறைப்பு இருக்கும்படி.

729

**ஏழையர் ஆவிஉண்ணும்**
**இணைக்கூற்றங்கொலோஅறியேன்**
**ஆழியங் கண்ணபிரான்**
**திருக்கண்கள்கொலோஅறியேன்**
**சூழவும் தாமரைநாண்**
**மலர்போல்வந்து தோன்றுங்கண்டீர்**
**தோழியர்காள்!அன்னைமீர்!**
**என்செய்கேன்துயராட்டியேனே.**

**பொ-ரை:** தோழிமீர்காள்! அன்னைமீர்காள்! கடல் போன்ற நிறத்தையுடைய அழகிய கண்ணபிரானுடைய திருக்கண்கள், பெண்களினுடைய உயிர்களை உண்ணும்படியான இரண்டு கூற்றங்கள் தாமோ? அறியேன்! அல்லது, திருக்கண்கள்தாமோ? அறியேன்! அத்

---

1. அதுதன்னில்-வேறு குணங்களை அனுபவிக்குமிடத்தில்.

2. 'மற்றைய இடத்தில்' என்றது, உருவு வெளிப்பாடு அல்லாத இடத்தில் என்றபடி.

3. 'பெரும்பாலும்' என்பது, அத்திருவாய்மொழியில், சில திருப்பாசுரங்களில் உருவு வெளிப்பாடு உண்டு என்றபடி.

4. 'மிக்கிருக்கும்' என்பதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'திருக்கண்களில்' என்று தொடங்கி.

திருக்கண்கள் நான்கு புறங்களிலும் அன்று மலர்ந்த மலர்கள் போன்று வந்து தோன்றுநின்றன; வருத்தத்தையுடைய யான் என்ன செய்வேன்?

வி - கு: கூற்றம் - உயிரையும் உடலையும் கூறுபடுபடுத்துமவன்; யமன். கண்டீர் - முன்னிலையசை.

இத்திருவாய்மொழி கலிநிலைத்துறை.

ஈடு: முதற்பாட்டு. [1]'இம்முகத்துக்குக் கண்ணாக இருப்பவர் நாம் அன்றோ?' என்று முற்படத் திருக்கண்களின் அழகு வந்து தம்மை நலிகிறபடியை அருளிச்செய்கிறார்.

ஏழையர் ஆவி உண்ணும் இணைக்கூற்றங்கொலோ அறியேன்- [2]ஒவ்வொரு விஷயத்திலே விருப்பத்தைச் செய்து, அவை பெறுவிடில் தரிக்கமாட்டாத பலம் இல்லாத பெண்களுடைய பிராணன்களை முடிக்கிற கூற்றுகள் இரண்டோ? [3]பிரிந்து ஆற்றாமையை விளைத்தவனுக்கும் அன்றிக்கே, 'இது ஆகாது' என்று ஹிதம் சொல்லி மீட்கப் பார்க்கும் பருவம் கழிந்த தாய்மார்க்கும் அன்றிக்கே, அபலைகளையே முடிப்பன இரண்டு கூற்றமோ! [4]தன் கண் அழகு தான் அறிகின்றிலனே! தன்னையும் நலிந்ததாகில் வாரானோ? [5]கண்ணாடிப் புறத்திலும் கண்டு அறியானோ? இராமபாணம்போலே, ஒப்பனை குறி அழியாதே இருக்க உயிரை முடியாநின்றது ஆதலின், 'ஆவி

---

1. 'திருக்கண்கள்கொலோ அறியேன்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி ரசோக்தியாகக் கருத்து அருளிச்செய்கிறார், 'இம்முகத்துக்கு' என்று தொடங்கி. இம்முகத்துக்கு-இந்த முகத்துக்கு என்பதும், இந்த இடத்துக்கு என்பதும் பொருளாம். 'கண்ணாய் இருப்பவர்' என்பதற்கு, பிரதானமாய் இருப்பவர் என்பதும் ஒரு பொருள்.

2. பெண்கள் என்னாமல், 'ஏழையர்' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'ஒவ்வொரு விஷயத்திலே' என்று தொடங்கி.

3. 'ஏழையர்' என்றதனால், மற்றையோரினின்றும் வேறுபடுத்திக் காட்டுகிறார், 'பிரிந்து' என்று தொடங்கி. அபலைகள்-பலம் இல்லாதவர்கள்; சிறு பெண்கள்.

4. 'அவனுக்கு வருத்தம் இல்லை என்பதனைத் தான் அறிந்தவாறு யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தன் கண் அழகு' என்று தொடங்கி.

5. 'தன் கண்ணழகு தான் அறிவதற்குக் காரணம் உண்டோ?' என்ன, 'கண்ணாடி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்

**உண்ணும்**' என்கிறது. [1] கூற்றுவர் இருவர் தங்களிலே கிருத சங்கேதராய் வந்தாற்போலேகாணும் திருக்கண்களில் அழகு பாதகமா கின்றன என்பாள், '**இணைக் கூற்றங்கொலோ**' என்கிறாள். ''**அறியேன்**' என்பான் என்? '**கூற்றம்**' என்று அறுதி யிட்டாலோ?' என்னில், கூற்றுவர் இருவர் கிருத சங்கேதராய் வந்தாலும் அபலைகளையே நலியவேண்டும் நிர்ப்பந்தமில்லையே! 'ஆடவர்களுடைய கண்ணையும் மனத்தினையும் கவர்கின்றவர்' அன்றோ? அதனாலே '**அறியேன்**' என்று சொல்லுகிறது.

ஆழி அம் கண்ணபிரான் திருக்கண்கள்கொலோ அறியேன் - [2] அன்றிக்கே, பெண் பிறந்தாரையே நலியக்கூடியவைகள் தாமேயோ? [3] அற்பம் அண்ணியாரே பாதகராம் அன்று தப்ப விரகு இல்லை; இப்படி முதலுறவு பண்ணிப் பொருந்தவிட்ட இத்திருக்கண்கள் தாமேயோ? [4] உபகாரம் செய்தலையே சுபாவமாகவுடைய கிருஷ்ண னுடைய கடல் போன்ற திருக்கண்கள் என்னுதல்; அன்றிக்கே, 'கடல் போலே சிரமஹரமான வடிவையுடைய உபகாரசீலனான கிருஷ்ணனுடைய திருக்கண்கள்' என்னுதல். அறியேன்-[5] இதற்கு முன்பு பிரிந்து அறியாமையாலே திருக்கண்கள் பாதகமாம் என்று

---

1. *'உயிர்களுக்கு எல்லாம் தாயாய் அளிக்கின்ற தண் தாமரைக் கண்ணை 'இணைக்கூற்றம்' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கூற்றுவர் இருவர்' என்று தொடங்கி. கிருதசங் கேதர்-கிருதம்-செய்யப்பட்ட; சங்கேதம்-குறி; ஒற்றுமை உணர்ச்சியை யுடையவர்கள்.*

2. *'கண்ணபிரான் திருக்கண்கள்' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி.*

3. *'இப்படி நலிகிற இடத்தில் 'பிரான்' என்பான் என்?' என்ன, 'அற்பம் அண்ணியாரே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய் கிறார். என்றது, 'பிரதிகூலன் வருத்தத் தொடங்கினால் உபாயத்தாலே தப்பலாம்; அநுகூலன் வருத்தத்தொடங்கினால் தப்பப் போகாது,' என்றபடி. இதனால், 'உபகாரகனைப்போலே இருந்து வருத்துகிறவனா கிறான்' என்றபடி. புணர்ச்சி நிகழ்ந்தவுடனே பிரிந்து போகையினாலே 'அற்பம் அண்ணியார்' என்கிறது.*

4. *சொற்களுக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'உபகாரம் செய் தலையே' என்று தொடங்கி.*

5. *'திருக்கண்கள் என்று அறுதியிட்டு உரையாமல், 'அறியேன்' என்பான் என்?' என்ன, 'இதற்கு முன்பு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

அறியக் காரணம் இல்லை. [1]'உயிர்க்கு எல்லாம் தாயாய் அளிக்கின்ற தண் தாமரைக்கண்' என்றே அன்றோ கேட்டிருப்பது? இக்கடாக்ஷமே தாரகமாக அன்றோ உலகம் அடைய ஜீவிப்பது? நாம் கேட்டிருந்தபடி அன்றிக்கே இராநின்றது, இப்போது காண்கிறபடி. 'ஆனல், தப்பினலோ?' என்னில்,

சூழவும் தாமரை நாண்மலர் போல் வந்து தோன்றும் கண்டீர் - [2]மூலபலத்தின் அன்று பார்த்த இடமெல்லாம் பெருமாளே ஆனாற் போலே ஆயிற்று; [3]இராம பாணத்துக்கு இராக்கதர்கள் தப்பலாம் அன்றாயிற்று, இக்கண்களின் அழகின்கீழ் அபலைகளாய் இருப்பார்க்குத் தப்பலாவது? [4]'புண்டரீக நெடுந்தடங்கள் போலப் பொலிந்து எமக்கு எல்லா இடத்தவும்' என்னக் கடவது அன்றோ? [5]பாம்பைக் கண்ட அச்சம் போலே இருக்கை. [6]இருய்க்க நினைத்த இடம் எங்கும் தானேயாய் இராநின்றது. [7]'இப்போது 'தாமரை நாண்மலர் போல்' என்பான் என்?' என்னில், [8]'பூஜிக்கத்தக்க

---

1. 'உயிர்க்கெல்லாம்' என்பது, பெரிய திருமொழி, 7. 1 : 9. இத் திருப்பாசுரத்துக்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'இக்கடாக்ஷமே' என்று தொடங்கி.

2. 'சூழவும்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'மூல பலத்தின்' என்று தொடங்கி. கம்பராமாயணம் யுத்தகாண்டம் மூலபல வதைப்படலம் 115 முதல் 119 முடியவுள்ள செய்யுள்களைக் காண்க.

3. 'தாமரை நாண்மலர்' என்றதற்கு பாவம் 'இராமாயணத்துக்கு' என்று தொடங்கும் வாக்கியம்.

4. திருக்கண்கள் எங்கும் பரந்திருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'புண்டரீகம்' என்று தொடங்கி. இது, திருவிருத்தம், 39.

5. பார்த்த இடமெல்லாம் திருக்கண்கள் பாதகத்தைத் தருகின்றன என்னுமதற்கு, வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'பாம்பைக் கண்ட அச்சம்' என்று தொடங்கி.

6. 'சூழவும்' என்று தொடங்கும் தொடருக்குப் பொருள் அருளிச் செய்கிறார், 'இருய்க்க' என்று தொடங்கி.

7. பிரிந்திருக்கும் வேளையில் 'நாண்மலர்' என்னுதல் கூடாது என்று சங்கிக்கிறார், 'இப்போது' என்று தொடங்கி.

8. 'என்? 'தாமரை நாண்மலர்போல்' என்ன ஒண்ணாதோ?' என்ன, பிரிந்துள்ள காலத்திலே அவன் உருவி இருக்கையாலே அப்படிச் சொல்ல ஒண்ணாது என்று திருவுள்ளம்பற்றி, சொல்ல ஒண்ணாமைக்குப் பிரமாணங்கள் காட்டுகிறார், 'பூஜிக்கத்தக்க' என்று தொடங்கியும், 'நைவ தம்ஸ்ராந்' என்று தொடங்கியும்.

பிராட்டியே! அந்தப் பெருமாள் தேவரீரைப் பார்க்காத காரணத்தால் மிகப்பெரியதாயும் எரிந்துகொண்டும் இருக்கிற நெருப்பினாலே சூழப்பட்ட நெருப்புமலை போன்று பரிதபிக்கிறார்,' என்றும், [1] 'நைவதம் ஶாந் ந மஶகாந் - பெருமாள் ஊர்ந்ததும் கடித்ததும் துடைக்க அறியார்' என்றும் சொல்லப்படும் நிலை அன்றோ அவருடைய நிலை? 'நன்று; அதற்கு அடி என்?' என்ன, 'த்வத்கதேநாந்தராத்மநா-உன்னிடத்தில் வைத்த மனத்தையுடையவராதலாலே' பெருமாள் இங்கே குடி போர, அங்கு இவை யார்தான் அறிவார் என்றான் அன்றோ? பிரிவில் இவ்வளவு அன்று அன்றோ அத்தலைக்கு [2] ஆற்றாமை? [3] அதனை அறிகிலளே இவள். [4] தன்னோடே வந்து கலந்து விளைநீர் அடைத்துக்கொண்டு பிரிகிற போதைச் செவ்வி அன்றோ இவள் அறிவது? அதுவே அன்றோ இவள் நெஞ்சில் பட்டுக் கிடப்பது? [5] பின்பு அவன் பட்டது அறியாளே; ஆகையாலே, 'தாமரை நாண்மலர் போல்' என்று சொல்லுகிறாள்.

---

'ஸ தவ அதர்ஶநாத் ஆர்யே ராகவ: பரிதப்யதே
மஹதா ஜ்வலதா நித்யம் அக்நிநேவாக்நிபர்வத:'

என்பது, ஸ்ரீ ராமா. சுந். 35 : 44.

1. 'நைவ தம்ஶாந் நமஶகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந்
ராகவோபநயேத் காத்ராத் த்வத் கதேநாந்தராத்மநா'

என்பது, ஸ்ரீராமா, சுந். 36 : 42.

அதற்கு-துடைக்க அறியாமல் இருந்ததற்கு. 'என்றான்' என்றது, ஸ்ரீ வால்மீகியை.

'கன்மத்தை ஞாலத் தவர்ஆர் உளரே கடப்பார்?
பொன்மொய்த்த தோளான் மயல்கொண்டு புலன்கள் வேறாய்
நன்மத்தை நாகத் தயல்சூ டியநம்ப னேபோல்
உன்மத்த னானன் தனைஒன் றும் உணர்ந்தி லாதான்.'

என்பது, கம்பராமா. உருக்காட்டுப்பட. 84.

2. 'ஆற்றாமை' என்பதனை, 'இப்போது தாமரை நாண்மலர்போல் என்பான் என்?' என்ற மேல் வாக்கியத்தோடு கூட்டுக.

3. மேல் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார், 'அதனை' என்று தொடங்கி.

4. 'ஆயின், பின் எதனை அறிவாள்?' எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தன்னோடே' என்று தொடங்கி, என்றது, 'கலவிக் காலத்துச் செவ்வியைச் சொல்லுகிறாள்' என்றபடி. விளைநீர் அடைத்துக் கொண்டு-விளையும்படி ஒருகாலே நீரைத் தேக்கிக்கொண்டு; 'பூர்ணமாக அனுபவித்து' என்றபடி.

5. 'அதனை அறிகிலளே இவள்' என்று மேலே அருளிச்செய்ததனை விவரணம் செய்கிறார், 'பின்பு' என்று தொடங்கி.

வந்து தோன்றும் - [1] பிரத்தியக்ஷத்தில் அத்தலேயாலே வரவு ஆனாற்போலே உருவு வெளிப்பாட்டிலும் அத்தலேயாலே வந்து தோன்ற ஆயிற்றுத் தான் அறிகிறது. கண்டீர் - உங்களுக்கு இது தோற்றுகிறது இல்லேயோ? தோழியர்காள் அன்னேமீர் - [2] சிலர்க்குச் சொல்லிச் சிலர்க்கு மறைக்கும்படியன்றே இவள் நிலே? என்றது, [3] 'தோழிமார்க்குச் சொன்ன இதனேத் தாய்மார்க்குச் சொல்லுவோம் அல்லோம்,' என்று மறைக்கும் அளவு அன்று ஆயிற்று, இவளுக்குப் பிறந்த நிலே விசேடம்,' என்றபடி. என்செய்கேன்-[4] இதனேத் தப்பப் பார்ப்பதோ, அனுபவிக்கப் பார்ப்பதோ? எதனேச் செய்கேன்? துயராட்டியேனே - [5] 'இறைவனுடைய ஆனந்தத்தை அறிந்தவன் எப்பொருளினின்றும் அஞ்சான்,' என்று இருக்க வேண்டி இருக்க, அங்ஙன் அன்றிக்கே, 'அவசியம் அனுபவிக்கத் தக்கது' என்கிற படியே, [6] பழைய கிலேசமே அனுபவிக்கும்படி ஆயிற்றே. (1)

730

*ஆட்டியும் தூற்றியும் நின்றுஅன்னே
 மீர்!என்னே நீர்நலிந்துஎன்?
மாட்டுயர் கற்பகத் தின்வல்லி
 யோகொழுந் தோஅறியேன்
ஈட்டிய வெண்ணெய்உண் டான்திரு
 மூக்குஎன தாவியுள்ளே
மாட்டிய வல்விளக் கின்சுட
 ராய்நிற்கும் வாலியதே.*

---

1. 'வந்து தோன்றும்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'பிரத்யக்ஷத்தில்' என்று தொடங்கி.

2. இருவரையும் விளிப்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'சிலர்க்கு' என்று தொடங்கி.

3. மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார், 'தோழிமார்க்கு' என்று தொடங்கி.

4. 'சூழவும்' என்கையாலே, 'தப்பப்போகாது' என்றபடி.

5. 'ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் நபிபேதி குதஶ்சந' என்பது, தைத்திரீ.

'இடராக வந்தென்னேப் புன்சிறு தெய்வங்கள் என்செயுமான்
 இடராக வன்பிணி மாநாக மென்செயும் யான்வெருவி
 இடராக வன்னி புனல்இடி கோள்மற்றும் என்செயும்வில்
 இடராக வன்அரங் கன்திருத் தாள்என் இதயத்ததே.'

என்ற திருவரங்கத்தந்தாதிச்செய்யுள், மேற்சுலோகப்பொருளோடு ஒப்பு நோக்கல் தகும்.

6. 'பழைய கிலேசமே' என்றது, 'பிரிவின் கிலேசமே' என்றபடி.

பொ - ரை : தாய்மார்களே! நீங்கள், என்னை வருத்தியும் பழி மொழிகளைக் கூறியும் நின்று நலிவதனால் பயன் யாது? திரட்டிய வெண்ணெய் உண்டவனான கிருஷ்ணனது அழகிய மூக்கானது, பக்கத்தில் உயர்ந்து விளங்குகின்ற கற்பகத்தின் கொடியோ? அல்லது, கொழுந்தோ? அறியேன்; அது, என்னுடைய உயிருக்குள்ளே ஏற்றிய வலிய விளக்கினது சுடராய் நிற்கும் பெருமையையுடையது.

வி – கு : 'திருமூக்கு வல்லியோ, கொழுந்தோ அறியேன்; திரு மூக்குச் சுடராய் நிற்கும் வாலியது,' என்க.

ஈடு: இரண்டாம் பாட்டு. [1]'இரண்டுக்கும் நடுவே நாம் இருக்க, இவை முற்படுகையாவது என்? அத்தனையோ நம் மூக்கு வலி?' என்று திருமூக்கில் அழகு நலிகிறபடியைச் சொல்லுகிறது.

ஆட்டியும் தூற்றியும் - ஆட்டுகையாவது, தாம் தாம் பழி சொல்லி அலைக்கை. தூற்றுகையாவது, பிறரும் அறியப் பழி சொல்லுகை. நின்று - [2]'அச்சம் உறுத்தி மீட்கலாமோ?' என்று ஒருகால் அலைக்கை இயல்பே அன்றோ? அங்ஙன் அன்றிக்கே, முன்பு செய்ததற்கு ஒரு பிரயோஜனம் காணாதிருக்கச் செய்தேயும் விடாதே நின்று. அன்னைமீர் என்னை நீர் நலிந்து என்-[3] ஹிதத்திலே நடக்கும் தமப்பனைப் போலே, என் பிரியத்திலே நடக்கும் நீங்கள் என்னை நலிகிறது என்?[4] என் உகப்பே பேருக நினைத்திருக்கக்கூடிய நீங்கள் நலிகிறது என்? [5]அந்த உருவு வெளிப்பாட்டைத் தடை

---

1. 'திருமூக்கு' என்றதனைத் திருவுள்ளம் பற்றி ரசோக்தியாக, பாவம் அருளிச்செய்கிறார், 'இரண்டுக்கும்' என்று தொடங்கி. மூக்கு வலி-மூக்கு என்ற பெயரையுடைய நம்முடைய வலி. 'மூச்சு' என்பது ரசோக்தி.

2. 'நின்று' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அச்சம் உறுத்தி' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'அங்ஙன் அன்றிக்கே' என்று தொடங்கி.

3. இத்தனைநாளும் தோழிமாரைப் பிரியத்தை நோக்குகின்றவர்களாகவும், தாய்மாரை ஹிதத்தை நோக்குகின்றவர்களாகவும் சொல்லிக் கொடு போந்தாள்; இப்போது தாய்மாரைப் 'பிரியத்தை நோக்குகின்றவர்கள்' என்கிறாள், 'ஹிதத்திலே' என்று தொடங்கி.

4. 'நீர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'என் உகப்பே' என்று தொடங்கி.

5. 'என்னை நலிவதனால் உங்களுக்கு ஒரு பிரயோஜனம் இல்லை,' என்று 'என்' என்பதற்கு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார், 'அந்த உருவு வெளிப்பாட்டை' என்று தொடங்கி.

செய்யலாம் என்றே, என்னை மீட்கலாம் என்றே ? ஒரு பிரயோஜனம் இல்லாததிலேயும் முயற்சி செய்யக் கடவதோ ?' என்பாள், '**நலிந்து என்**' என்கிருள். ' என்றது, [1] 'அவனுடைய மூக்கு வலி இருக்கிற படியையும் அறிந்து நீங்கள் என் செய்யப்படுகிறீர்கோள்?' என்றபடி.

[2] 'நாங்கள் சொல்லுகிற ஹித வசனத்துக்கு ஒரு பிரயோஜனம் இல்லையாகில், என் செய்தால் பிரயோஜனம் உண்டு ?' என்ன, **மாடு உயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ அறியேன்** - வல்லீர் கோளாகில் இந்தச் சந்தேகத்தை அறுத்துத் தாருங்கோள். ஒரு கடல் அருகே அக்கடல் ஊற்றே தாரகமாக வளருகிறது ஒரு கொடி போலே ஆயிற்று, திருக்கண்களுக்கு அருகே திருமூக்கு இருக்கிறபடி. மாடு - அருகு. [3] 'உந்நஸம் - உயர்ந்த மூக்கை யுடைய' என்கிறபடியே '**உயர்**' என்கிறது. [4] ஒழுகு நீட்சியாலே கொடி என்னவுமாய், ஊக்கம் மாருமையாலே கொழுந்து என்னவு மாய் இராநின்றதாதலின், '**வல்லியோ கொழுந்தோ**' என்கிறது. 'இன்னது' என்று நிச்சயிக்க அரிதாக இருக்கையாலே '**அறியேன்**' என்கிறது. 'முற்றுவமை இருக்கிறபடி, எங்களுக்கு அறியப் போமோ? இதிலே உட்புகநின்று அனுபவிக்கிற நீ பின்னைச் சொல்லாய்' என்ன, சொல்லுகிருள் மேல் :

**ஈட்டிய வெண்ணெய் உண்டான் திருமூக்கு** - [5] அநுகூலர் களுடைய சம்பந்தமுடைய திரவியத்தால் அல்லது தரிக்க மாட்டாதே வெண்ணெய் களவு காணப் புக்குக் கொண்டியிலே பிடி உண்டு, பின்பு அதனை இல்லை செய்கைக்காக முகத்திலே தடவிக்கொள்ளுமே;

---

1. அதனை விவரணம் செய்கிருர், 'அவனுடைய' என்று தொடங்கி.

2. 'வல்லியோ, கொழுந்தோ அறியேன்' என்று அவர்கள் முன்னே ஐயப்படுதற்குக் கருத்து, 'இதனை நிச்சயித்துத் தரவேண்டும்' என்பது ஆகையாலே, அதனை அவர்களுடைய வினவாக அருளிச்செய்கிருர், 'நாங்கள்' என்று தொடங்கி. 'தாருங்கோள்' என்றது, 'இந்த ஐயத்தை அறுத்துத் தருதல் பிரயோஜனம்' என்றபடி.

3. 'ஶுசி ஸ்மிதம் கோமள கண்டம் உந்நஸம்
லலாட பர்யந்த விலம்பிதாலகம்'

என்பது, தோத்திரரத்தினம், 32.

4. ''வல்லியோ கொழுந்தோ' என்பதற்கு, உரிய தர்மம் யாது ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'ஒழுகு நீட்சியாலே' என்று தொடங்கி.

5. 'ஈட்டிய வெண்ணெய் உண்டான்' என்று விசேடித்ததற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'அநுகூலர்களுடைய' என்று தொடங்கி. கொண்டி - களவு.

அவ்வெண்ணெயிலே முடை நாற்றமும் உருவு வெளிப்பாட்டிலே தோற்றுகிறதாயிற்று இவளுக்கு. [1] அப்போதை முடைநாற்றம் தோற்றும்படியாயிற்று உருவு வெளிப்பாட்டில் மெய். 'நீ காண்ப தாகச் சொல்லுகிற இது எங்களுக்குத் தெரிகிறது இல்லையே !' என, எனது ஆவியுள்ளே - என் மனத்திற்குள்ளே. மாட்டிய - 'சுடர் வெட்டிய' என்னுதல்: 'ஏற்றிய' என்னுதல். வல் விளக்கின் சுடராய்-விரக தாபத்தாலே அவியாத விளக்காயிற்று. [2] ''ஏற்றிய பெருவிளக்கு' என்று ஒரு தமிழ்ப்புலவன் இட்டு வைத்தான்' என்று அருளிச்செய்வர். நிற்கும் வாலியதே - வலிதாய் நின்று நலியாநிற்கும். [3] 'விளக்காகிறது தான் சிறிது நேரம் இருப்பது மாய் ஓர் இடத்திலே இருப்பதுமாய் அன்றோ இருப்பது? இது அங்ஙன் அன்றிக்கே, எப்போதுமாய் எங்கும் உண்டாய் இரா நின்றது: பாதகத்துவத்தில் உறைப்பை நினைத்துச் சொல்லுகிற வார்த்தை அன்றோ இது? (2)

731

*வாலிய தோர்கனி கொல்?வினை*
*யாட்டியேன் வல்வினைகொல்?*
*கோலம் திரள்பவ ளக்கொழுந்*
*துண்டங்கொ லோஅறியேன்*
*நீல நெடுமுகில் போல்திரு*
*மேனியம் மான்தொண்டைவாய்*
*ஏலும் திசையுள்எல் லாம்வந்து*
*தோன்றும்என் இன்உயிர்க்கே.*

**பொ-ரை:** நீல நிறம் பொருந்திய பெரிய முகில் போன்ற திருமேனி யையுடைய அம்மானது கொவ்வைக்கனி போன்ற திரு அதரமானது, தூய்மையையுடையதான ஒப்பற்ற பழந்தானோ? தீவினையேனுகிய என்னுடைய கொடிய தீவினைதானோ? அழகிய திரண்ட பவளத்தினது கொழுவிய துண்டுதானோ? அறியேன்! தப்புவதற்குத் தகுதியான திக்குகளில் எல்லாம் எனது இனிய உயிரைக் கொள்ளை கொள்ளுதற்கு வந்து தோன்றுநின்றது.

---

1. 'முடை நாற்றம் இப்போது தோற்றுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அப்போதை' என்று தொடங்கி.

2. 'மாட்டிய' என்பதற்கு, 'ஏற்றிய' என்று பொருள் அருளிச் செய்ததற்குச் சம்வாதம் காட்டுகிறார், 'ஏற்றிய பெருவிளக்கு' என்று தொடங்கி.

3. 'வல்விளக்கு' என்றும், 'வாலியது' என்றும் சொன்னதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'விளக்காகிறதுதான்' என்று தொடங்கி.

வி கு: 'அம்மான் தொண்டைவாய் கனிகொல்? வினைகொல்? கொழுந்துண்டங்கொலோ? அறியேன்; திசையுள் எல்லாம் வந்து தோன்றும்' என்க.

ஈடு: மூன்றும் பாட்டு. [1] அது தன் மூக்கு வலி காட்ட நாம் பேசாதே இருந்தால், 'அத்தனையோ இதன் வாய் வலி' என்று நம்மை ஏசுவர்கள் என்று திருப்பவளத்தின் அழகு வந்து நலிகிறபடியை அருளிச்செய்கிறார்.

வாலியது ஓர் கனிகொல் - [2] முன்பு பிஞ்சாய், பின்பு பக்குவமாய், பின்பு அனுபவயோக்கியம் அன்றிக்கே போவன சில பழங்கள் உளவே அன்றோ? அங்ஙன் அன்றிக்கே, என்றும் ஒக்க ஒரே தன்மையாய் இருப்பது ஒருகனியோ? [3] அத்தலையில் இனிமை போது செய்யாமையாலே இத்தலையில் ஆற்றாமையும் போது செய்யாதே! வினையாட்டியேன் வல்வினைகொல் - [4] இனிய பொருள் தீயது ஆயிற்று, அனுபவிக்கின்றவர்கள் செய்த பாபத்தாலே அன்றோ? அமிருதமே விஷமாம்படியான பாவத்தைச் செய்தேன். [5] பாவத்தைச்

---

1. 'தொண்டை வாய்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி ரசோக்தியாக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'வாலியதோர் கனி' என்பதற்கு, 'ஒரே தன்மையதாய் இருக்கும் கனி' என்பது பொருள். அதனை எதிர்த்தட்டாக விவரணம் செய்கிறார் 'முன்பு' என்று தொடங்கி. வாலியது-வலியது. வன்மையாவது, நிலைத்திருக்கும் தன்மையது. என்றது, 'ஒரே தன்மையானது' என்றபடி. சில பழங்கள்-எட்டிப்பழம் முதலானவை.

3. மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'அத்தலையில்' என்று தொடங்கி. போது செய்கை-குவிதல்.

4. 'வல்வினை' என்கைக்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இனிய பொருள்' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'அமிருதமே' என்று தொடங்கி

'கொஞ்சுகிளி அன்னமொழி குமுதஇதழ் அமுதால்
எஞ்சினன் நராதிபதி ஈதொரு வியப்போ!
அஞ்சுதரு தீவினையின் ஆரமுதும் நஞ்சாம்;
நஞ்சும்அமு தாம்உரிய நல்வினையின் மாதோ.'

என்பது, வில்லி பாரதம்.

5. பதப்பொருள் அருளிச்செய்கிறார், 'பாவத்தை' என்று தொடங்கி. 'பலத்தைக் கொடுப்பதாய்க்கொண்டு குடி ஏறிற்றோ?' என்றது, 'அவனிடத்தில் அதரமாகத் திரண்டதோ?' என்றபடி.

செய்த என்னுடைய பாபமானது பலத்தைக் கொடுப்பதாய்க் கொண்டு அங்கே குடி ஏறிற்ருே? [1] அங்கே கிடந்தே அன்ருே இங்கே அனுபவிப்பிப்பது? என்றது, 'பகவத் விஷயத்தில் தண்டனை உருவமாகக் கிடந்தே அன்ருே இங்கு அனுபவிட்பிப்பது?' என்ற படி. [2] செய்த செயலாகையாலே செய்த போதே நசித்துப் போமே? [3] இவன் செய்த பாபத்துக்கு, தானே சுவதந்தரமாய் நின்று பலத்தைக் கொடுப்பதற்குத் தகுதி இல்லையே! [4] அனுபவித்தாலும் அழியாத பாவம்' என்பாள், 'வல்வினை' என்கிருள்.

கோலம் திரள் பவளம் கொழுந்துண்டங்கொலோ அறியேன் - அழகு திரண்டிருந்துள்ள பவளத்தினுடைய அன்பினையுடைத்தான முறியோ? அறிகிலேன். புழுதி புடைத்திராமைக்கு 'முறியோ' என்கிறது; [5] முறித்த வாயானது ஒளி உண்டாய் நெய்த்திருக்கும் அன்ருே? நீல நெடுமுகில் போல் திருமேனி அம்மான் - [6] இதுதான் என்றும் உண்டாய் இருக்கச் செய்தே, இதற்கு முன்பு பாதகமாயிற்று இல்லை அன்ருே? கூட்டுப்படை நின்றவாறே வலியாநின்றதாயிற்று. நீலமாய் இனிமை அளவு இறந்துள்ள முகில் போன்ற வடிவை யுடைய சர்வேஶ்வரனுடைய. தொண்டை வாய்-கோவ்வைப்பழம் போலே கனிந்து நெய்த்து அன்ருே திருப்பவளந்தான் இருப்பது?

1. 'தன் ஆற்ருமையாலே சொல்லும் அளவே அன்று; உண்மையும் அதுவே' என்கிருர், 'அங்கே' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிருர், 'பகவத் விஷயத்தில்' என்று தொடங்கி.

2. 'தண்டனை உருவமாகக் கிடந்து அனுபவிக்கவேண்டுமோ, தானே சுவதந்தரமாக அனுபவிப்பித்தாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர், 'செய்த செயலாகையாலே' என்று தொடங்கி.

3. அசேதனம் ஆகையாலும் மாட்டாது என்று வேறும் ஒரு வகையில் விடை அருளிச்செய்கிருர், 'இவன் செய்த' என்று தொடங்கி.

4. 'வல்வினையேன்' என்பதில் 'வல்' என்ற சொல்லுக்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'அனுபவித்தாலும்' என்று தொடங்கி.

5. 'துண்டம் புழுதி புடைத்திராதோ?' என்ன, 'முறித்த வாயானது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். நெய்த் திருத்தல்-பளபளவென்றிருத்தல்.

6. 'இதுதான்' என்றது, திருப்பவளத்தில் அழகினை. கூட்டுப் படையாவது, திருமேனியில் அழகு. பதப்பொருள் அருளிச்செய்கிருர், 'நீலமாய்' என்று தொடங்கி.

தொண்டை-கொவ்வை. [1] தன்னில்தான் உண்டான பகை பார்த்திருக்கிறது இல்லையாயிற்று, இவளை நலிகிறவிடத்தில். [2] ‘இரண்டுக்கும் சேர வன்னியம் இல்லை அன்றே? [3] அவை நலிந்துகொடு தோற்றா நின்றதாகில் தப்பப் பார்த்தாலோ?’ என்ன, ‘வாய்வலி தப்பலாயோ இருக்கிறது?’ என்கிறாள் மேல்: ஏலும் திசையுள் எல்லாம் [4]-நானும் இவை நலியாத இடம் தேடித் தப்ப விரகு பாராநின்றேன்: அவ்வவ் விடங்களிலே வந்து தோன்றாநின்றது. என்றது, ‘பார்த்த இடமெல்லாம் தானேயாய் இராநின்றது,’ என்றபடி. ‘தோன்றுகிறதற்குக் கருத்து என்?’ என்னில், என் இன் உயிர்க்கே-என்னுடைய நற்சீவனை முடிக்கைக்காக. (3)

732

*இன்னுயிர்க்கு ஏழையர் மேல்வளை*
*யும்இணை நீலவிற்கொல்?*
*மன்னிய சீர்மத னன்கருப்*
*புச்சிலை கொல்?மதனன்*
*தன்னுயிர்த் தாதைகண் ணப்பெரு*
*மான்புரு வம்மவையே*
*என்னுயிர் மேலன வாய்அடு*
*கின்றன என்றும்நின்றே.*

**பொ - ரை:** மன்மதனுக்கு உயிர் போன்ற தந்தையாகிய கண்ண பிரானுடைய புருவங்களானவை, இனிய உயிர்களைக் கவர்வதற்காகப் பெண்கள்மேல் வளைகின்ற நீல நிறம் பொருந்திய விற்கள்தாமோ? அன்றிக்கே, நிலைபெற்ற கீர்த்தியையுடைய மன்மதனுடைய கரும்பு வில்தாமோ என்னுடைய உயிர் மேலனவாய் எப்பொழுதும் நிலை பெற்று வருத்துகின்றன?

---

1. ‘திருமேனியில் கருமையும் பரபாகமாய் மாறுபாடில்லாதே, கூடி நலியக்கூடுமோ?’ என்ன, ‘தன்னில்தான்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. ‘நலிகிற இடத்தில் இரண்டும் பிரதானமாய் இருக்குமோ?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘இரண்டுக்கும்’ என்று தொடங்கி. ‘ஒன்றே பிரதானம்’ என்றபடி. என்றது, ‘திருமுகத்தின் அழகினைச் சொல்லுகிற பிரகரணம் ஆகையாலே, திரு அதரமே பிரதான மாய், திருமேனி அழகு கூட்டுப்படையாம்’ என்றபடி. சேரவன்னியம் இல்லை-ஒத்த பகை இல்லை.

3. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், ‘அவை’ என்று தொடங்கி.

4. ‘எல்லாம்’ என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் ‘நானும்’ என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், ‘பார்த்த பார்த்த’ என்று தொடங்கி.

வி - கு : 'கண்ணபெருமான் புருவமவை நீல விற்கொல்? கருப்புச் சிலைகொல்? என் உயிர் மேலனவாய் என்றும் நின்று அடுகின்றன,' என்க.

ஈடு : நான்காம் பாட்டு. [1] 'என்தான்! இங்ஙனே கீழ் மேல் ஆயிற்றே போய்?' என்று திருப்புருவத்தில் அழகு வளைந்துகொடு வந்து நலிகிறபடியை அருளிச்செய்கிறார்.

இன் உயிர்க்கு - என்னுடைய நற்சீவனைக் கொள்ளுகைக்காக. ஏழையர்மேல் வளையும் - [2] வளைப்பாரும் இன்றிக்கே வளைக்கைக்கு விஷயமுமின்றிக்கே, செயப்படுபொருள் இல்லாமலும் செய்பவன் இல்லாமலும் வளையாநின்றது. வளைப்பார் இல்லாமையாலே கர்த்தா இல்லை; விஷயம் இல்லாமையாலே செயப்படுபொருள் இல்லை. ஏழையர்மேல் வளையும் இணை நீல வில்கொலோ - ஏழையர்மேல் வளைகிற [3] நீலமான இரண்டு விற்களோ? என்றது, [4] 'பகைவர்களை அழிக்கத் தக்க, இந்திரவில் போன்ற விற்களைப் பிடித்து' என்னும் படியே என்றபடி. [5] இந்திர வில்லுக்கு அபலைகளையே நலியவேணும் என்னும் நிர்ப்பந்தம் இல்லை அன்றோ? மன்னிய சீர் மதனன் கருப்புச் சிலைகொல் - [6] பெண் பிறந்தாரையே நலியக் கூடியதான காமனுடைய வில்லுதானேயோ? [7] அதுதன்னிலும் சிவனாலே வடிவு

---

1, 'புருவமவையே' என்றதனைத் திருவுள்ளம் பற்றி ரசோக்தியாக அவதாரிகை அருளிச்செய்கிறார். 'கீழ்மேலாயிற்றே?' என்றது, 'தாழ்ந்தது மேலாய் விட்டதோ?' என்பது ரசோக்தி.

2. புருவம் தானே வளைந்திருக்கையாலே 'வளைப்பாரும் இன்றிக்கே' என்கிறார். 'ஏழையர்' என்கையாலே 'விஷயம் இல்லை' என்கிறார்.

3. 'நீலமான இரண்டு விற்கள்' என்றது, இந்திர வில்லினைக் குறித்தது.

4. 'இந்திரவில் அப்படி இனியதாக இருக்குமோ?' என்ன, 'இருக்கும்' என்று அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பகைவர்களை' என்று தொடங்கி.

'ஶக்ரசாப நிபே சாபே க்ருஹீத்வா ஶத்ருநாஶநே'

என்பது, ஸ்ரீ ராமா. கிஷ்கிந். 3 : 9.

5. 'நன்று; ஐயப்படுவான் என்? அதுதானே என்ன ஒண்ணாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இந்திரவில்லுக்கு' என்று தொடங்கி.

6. 'மதனன் கருப்புச் சிலைகொல்' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'பெண் பிறந்தாரையே' என்று தொடங்கி.

7. 'மன்னிய சீர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அது தன்னிலும்' என்று தொடங்கி.

இழப்பதற்கு முன்புத்தை அவன் கையில் வில்லாக வேணும். கருப்புச் சிலைகொல் - [1] கண்ணுக்கு ஆபாசமாய்ப் பாதகம் உறைத்திருக்கிறபடி.

மதனன் தன் உயிர்த்தாதை கண்ணப்பெருமான் புருவம் அவையே-அவனுடைய சம்பந்தத்தால் வந்த இராசகுலங்கொண்டு திரிகிறவன் கையில் வில்லுக்கு இத்தனை உறைப்பு உண்டாக மாட்டாது, அவனுக்குங்கூடத் தந்தையான கிருஷ்ணனுடைய திருப்புருவங்கள்தாமே ஆகவேணும். [2] தன் கைச்சார்ங்கமதுவே போல் புருவ வட்டம் அழகியவனுடைய புருவங்கள்தாமேயாக வேண்டும். ஆண்டாள் வார்த்தை இருக்கிறபடி அன்றோ? [3] 'தருமம் அறியாக் குறும்பனை - [4] தருமம் அறியும் போது முடி சூடின க்ஷத்திரியன் வயிற்றிலே பிறந்தவனாக வேண்டாவோ ? [5] யாதவர்கள் நேரே முடி சூடுவது இல்லை அன்றோ ? இரக்கம் [6] இருக்கும்படி முதலிலே புதியது உண்டு அறியாதவனாயிற்று. ஸ்ரீநந்தகோபர், தம்முடைய இராச்சியத்திலே மூலையடியே நடந்து திரிவான் ஒரு

---

1. 'போர்க்கு உரிய கருவி அல்லாத கருப்புச் சிலை பாதகம் ஆமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கண்ணுக்கு' என்று தொடங்கி.

2. 'திருப்புருவங்கள் 'சிலைகொல்' என்று விகற்பிக்கும்படி விற்போல இருக்குமோ?' என்ன, 'இருக்கும்' என்று அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'தன்கைச் சார்ங்கம்' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி. 14 : 6. 'ஆண்டாள் வார்த்தை இருக்கிறபடி அன்றோ?' என்றது, 'ஏனையோரைப் போல அன்றித் திருப்புருவத்தில் அழகினை உட்புக்கு அனுபவித்தவன் வார்த்தை' என்றபடி.

3. திருப்பாசுரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'தருமம் அறியா' என்று தொடங்கி. ஈண்டுத் தருமம் என்றது, கிருபையை; 'ஆந்ருஶம்ஸ்ய பரோ தர்ம:' எனப்படுகையாலே.

4. 'தருமம் அறியா' என்றதன் பின் 'குறும்பனை' என்கிறவனுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார், 'தருமம் அறியும் போது' என்று தொடங்கி.

5. 'ஸ்ரீ வசுதேவர் க்ஷத்திரியர் அல்லரோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'யாதவர்கள்' என்று தொடங்கி.

6. 'தருமம் அறியா' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'அருள்' என்று தொடங்கி. 'குறும்பனை' என்பதற்குப் பொருள், 'ஸ்ரீ நந்தகோபர்' என்று தொடங்கும் வாக்கியம்.

பிள்ளையையாயிற்றுப் பெற்றது. [1] தன் கைச் சார்ங்கம் - கையிலே வில்லைக் கண்டால், 'முகத்திலே இருக்கக்கூடிய அது கையிலே இருந்ததே!' என்னலாம்படியாய் இருக்கும்; முகத்திலே கண்டவாறே, 'கையிலே இருக்கக்கூடிய இது முகத்திலே இருந்ததே !' என்னலாய் இருக்கும். அதுவே போல என்கிறதாயிற்று, முற்றும் ஒத்திருக்கை யாலே. [2] 'புருவ வட்டமழகிய' என்றதனுல் 'தருமமறியான்' என்று இழக்க ஒண்ணுதபடியாயிற்று, வடிவழகு இருப்பது. பொருத்தம் இலியை - சில பொருள்கள் உளவே அன்றோ, நிறங்கள் அழகியனவாய்ப் பார்த்தவாறே அனுபவிக்க யோக்கியம் அன்றிக்கே இருப்பன ? அவை போலே, வடிவழகேயாய், ஆசைப்பட்டார் பக்கல் ரசம் தொங்கிலும் தொங்காளுயிற்று. கண்டீரே - [4] அவனுக்குப் பொருத்தம் இல்லாவிட்டால், நமக்குப் பொருத்தம் இல்லையாகில் அன்றோ விட்டிருக்கலாவது? அவன் பொருந்தாமை தமக்குத் தொடர்ந்து திரியுமத்தனையாயிற்று.

புருவம் அவையே-[5] மேலே கூறிய அழகுகள்தாம் அநுகூலங்கள் என்னும்படியாகவாயிற்று, இவை பாதகமாகிறபடி. என் உயிர் மேலனவாய்-[6] இருப்பன அங்கேயாய் இருக்கச் செய்தேயும், நோக்கு

---

1. *'தன்கைச் சார்ங்கம் அதுவேபோல்' என்பது, முற்றுவமை என்று கூறத் திருவுள்ளம் பற்றி, அதனை விரித்து அருளிச்செய்கிறுர், 'தன்கைச்சார்ங்கம்' என்று தொடங்கி.*

2. *'சீர்மை இல்லாவிட்டால் விடுமத்தனை அன்றோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'புருவ வட்டம்' என்று தொடங்கி.*

3. *'புருவவட்டம் அழகிய' என்றதனோடே 'பொருத்தம் இலியை' என்றதனையும் கூட்டி, பாவம் அருளிச்செய்கிறுர், 'சில பொருள்கள்' என்று தொடங்கி. 'சில பொருள்கள்' என்றது, எட்டிப்பழம் முதலாயினவற்றை. தொங்குதல்-இருத்தல்.*

4. *'பொருத்தம் இல்லாவிட்டால், 'கண்டீரே' என்று கேட்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'அவனுக்கு' என்று தொடங்கி.*

5. *'அவையே' என்ற ஏகாரத்துக்குப் பொருள் அருளிச்செய்கிறுர், 'மேலே கூறிய' என்று தொடங்கி.*

6. *'அவன் முகத்திலே இராநிற்க, இவர்க்குத் தீங்கு தருவன வாதல் யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'இருப்பன' என்று தொடங்கி.*

என்மேலேயாய் இராநின்றது. [1] எங்கும் பக்கம் நோக்கு அறியாமல் அன்றோ இருப்பது ? அடுகின்றன - கொல்லாநின்றன. என்றும் நின்றே-பாதகமாகாநிற்கச்செய்தேயும் அழிந்து போகக் கூடியனவாய் இருப்பன சில பொருள்கள் உள அன்றோ ? இவை அங்ஙன் அன்றிக்கே என்றும் ஒக்க நின்று நலியாநின்றன. என்னை நலிகைக்காக நித்தியமாய் இருக்கும் தன்மையை ஏறிட்டுக்கொண்டன ; [2] 'நித்தியமாய் இருப்பதும் நித்தியமாய் இருக்கும் வடிவை ஏறிட்டுக் கொண்டதும்' என்கிறதுதானே அன்றோ நலிகிறது ? (4)

733

*என்றுநின் றேதிக ழும்செய்ய*
*ஈன்சுடர் வெண்மின் னுக்கொல்?*
*அன்றிஎன் ஆவி அடும்அணி*
*முத்தங்கொ லோ?அறியேன்*
*குன்றம் எடுத்த பிரான்முறு*
*வல்எனது ஆவிஅடும்*
*ஒன்றும் அறிகின்றி லேன்அன்னை*
*மீர்!எனக்கு உய்விடமே.*

பொ - ரை : [3] கோவர்த்தன மலையைத் தூக்கிக் குடையாகப் பிடித்த உபகாரகனான ஸ்ரீகிருஷ்ணனுடைய முறுவலானது, என்றும் நிலைபெற்று விளங்குகின்ற செம்மையை வீசுகின்ற சுடரையுடைய வெண்மையான மின்னல்தானோ ? அன்றி, என் உயிரை வருத்துகின்ற அழகிய முத்துகள்தாமோ ? அறியேன் எனது ஆவியை வருத்துகின்றது ; அன்னைமீர் ! நான் பிழைக்கும் இடத்தை ஒரு சிறிதும் அறிகின்றிலேன்,' என்றபடி.

வி - கு : 'முறுவல், மின்னுக்கொல் ? முத்தங்கொல் ? அறியேன் ; உய்விடம் ஒன்றும் அறிகின்றிலேன்,' என்க.

---

1. 'இந்த நோக்குத் தம்மேலேயோ?' என்ன, 'ஆம்' என்று அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'எங்கும்' என்று தொடங்கி. இது, திருவாய். 2. 6 : 2.

2. 'நித்தியம்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நித்தியமாய்' என்று தொடங்கி. 'நித்யம் நித்யாக்ருதிதரம்' என்பது, பிரமாணம்.

3. 'முறுவல் எனது ஆவி அடும்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். வாய்க்கரையிலே - 'அதரத்திலே' என்பது பொருள். 'தொடக்கத்திலே' என்பது வேறும் ஒரு பொருள்.

என்றும் நின்றே திகழும் செய்ய ஈன் சுடர் வெண் மின்னுக் கொல் - என்றும் ஒக்க மாறுதே விளங்காநிற்பதாய், செய்ய சுடரை ஈனுநின்றுள்ள வெண்மின்னே ? [1] திருப்பவளத்திற் சிவப்பும் திருமுத்து நிரையில் வெளுப்புமாய்க் கலந்து தோற்றுகிற போது, திருப்பவளத்தின் சிவப்பை அது ஈன்ருற்போலே ஆயிற்று இருக் கிறது. [2] இதனை 'அசிராம்ஶு:' என்பர்களே. பிறரை நலிய என்றவாறே பல் இறுகிக்கொண்டு வருகிறதுகாணும். அன்றி என் ஆவி அடும் அணி முத்தங்கொலோ-அன்றிக்கே, என் உயிரை முடிக்கிற திருமுத்து நிரைதானேயோ ? [3] யானை அணி செய்து வந்து தோன்றினுற்போலே இருத்தலின், 'அணிமுத்தம்' என்கிறது. அன்றிக்கே, 'அழகிய முத்தம்' என்னுதல். [4] மேலே 'வெண்மின்னுக் கொல்' என்ற இடத்தே திருஅதரத்தோடே கூடின சேர்க்கையாலே நலிந்தபடி சொல்லிற்று; இங்குத் தனியே நலிகிறபடி சொல்லுகிறது.

குன்றம் எடுத்த பிரான் முறுவல் எனது ஆவி அடும்-மலையை எடுத்து மழையிலே நோவுபடாதபடி பெண்களை நோக்கின உபகார கனுடைய முறுவலானது, என் ஒருத்திக்கும் பாதகமாகாநின்றது. [5] 'பசுக்களை அன்றோ தான் நோக்கிற்று ?' என்னில், [6] 'மிக்க வருத்தம் அடைந்த பசுக்களின் கோபிமார்களின் கூட்டத்தைப்

---

1. 'வெண்மின் செய்ய சுடரை ஈனக் கூடுமோ?' என்ன, 'திருப்ப வளத்தில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

2. 'மின்னல் என்றும் நிற்கக் கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'இதனை' என்று தொடங்கி. என்றது, 'நலிகைக்காக நித்தியத்துவத்தை ஏறிட்டுக்கொண்டது' என்றபடி. 'இதனை' என்றது, மின்னலே. அசிராம்ஶு:-தோன்றி மறையும் ஒளி; என்றது, மின்னல்.

'பல் இறுகிக்கொண்டு' என்றது, சிலேடை: 'பல்லானது நிலையுள்ள தன்மையை ஏறிட்டுக்கொண்டு' என்பதும், 'பல்லைக் கடித்துக்கொண்டு' என்பதும் பொருள்.

3. 'யானை அணி செய்து வந்து தோன்றினுற்போலே' என்றது, தீமை செய்தலின் உறைப்பைக் காட்டினபடி. அணி செய்து-நிரை செய்து.

4. 'செய்ய ஈன் சுடர் வெண்மின்' என்று திருஷ்டாந்தத்திலே சொன்னுற்போலே, தார்ஷ்டாந்திகத்திலும் திருவதரத்தின் காந்தியோடு கூடிய முத்தம் என்ன வேண்டாவோ?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர், 'பசுக்களை' என்று தொடங்கி.

5. 'பெண்களைப் பாதுகாத்தமை உண்டோ?' என்று சங்கித்துப் பரிஹரிக்கிருர், 'பசுக்களை' என்று தொடங்கி.

6. 'கோ கோபீஜந ஸங்குலம், அதீவார்த்தம்' என்பது, ஸ்ரீவிஷ்ணு. புரா. 5. 11. 13.

பார்த்து' என்னக்கடவது அன்றே? [1]மழையால் வந்த நலிவை மலையை எடுத்து நீக்கி, அவர்கள் துன்பம் எல்லாம் போம்படி புன்முறுவல் செய்துகொண்டாயிற்று நின்றது. 'ஆனல், இது வாராதபடி இடம் தேடி உஜ்ஜீவிக்கப் பார்த்தாலோ?' என்ன, [2]ஒன்றும் அறிகின்றிலேன் அன்னைமீர் எனக்கு உய்விடமே-'எனக்குச் சென்று உஜ்ஜீவிக்கலாவது ஓரிடம் உண்டோ?' என்று நானும் தேடாநின்றேன்: 'இங்கு ஒதுங்குதற்கு ஓரிடம் காண்கின்றிலேன். அன்றிக்கே, மேலே சொன்ன அழகுகள் பாதகமாகிற இத்தனை அல்லது, ஒதுங்க நிழலாய் இருப்பது ஓரிடம் காண்கின்றிலேன்,' என்னுதல். (5)

734

**உய்விடம் ஏழையர்க் கும்அசு ரர்க்கும் அரக்கர்கட்கும்**
**எவ்விடம்? என்றிலங் கிமக ரம்தழைக் கும்தளிர்கொல்?**
**பைவிடப் பாம்பணை யான்திருக் குண்டலக் காதுகளே**
**கைவிடல் ஒன்றும்இன் றிஅடு கின்றன காண்மின்களே.**

பொ-ரை: 'பெண்களுக்கும அசுரர்களுக்கும் அரக்கர்க்கட்கும் உய்விடம் எங்கே?' என்றுகொண்டு விளங்கி மகரத்தின் வடிவாகத் தழைக்கின்ற தளிர்கள்தாமோ படத்தையுடைய விஷம் பொருந்திய பாம்பைப் படுக்கையாகவுடைய எம்பெருமானது குண்டலங்கள் தரித்த காதுகள்? சிறிதும் விட்டு நீங்குதல் இன்றி என்னை வருத்துகின்றன காண்மின்கள்,' என்கிறாள்.

வி-கு: 'குண்டலக் காதுகள், மகரம் தழைக்கும் தளிர்கொல்? ஒன்றும் கைவிடல் இன்றி அடுகின்றன காண்மின்கள்,' என்க. மகரம்-மகரகுண்டலங்கள்.

ஈடு: ஆறும் பாட்டு. [3]'நாம் செவிப்பட்டிருக்க இவற்றை முன்னே போகவிட்டிருந்தோம்' என்று திருக்காதில் அழகு

1. 'குன்றம் எடுத்தபிரான் முறுவல்' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'மழையால்' என்று தொடங்கி.

2. 'ஒன்றும்' என்றதற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற்பொருள், 'ஓர் இடமும்' என்பது. 'அழகுகளுக்குள்ளே உய்விடமான ஓர் அழகும்' என்பது இரண்டாவது பொருள்.

3. 'காதுகள்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி ரசோக்தியாக அவதாரிகை அருளிச்செய்கிறார். செவிப்பட்டிருக்க-செவியாய் இருக்க என்பதும், கேட்டிருக்க என்பதும் பொருள்.

வந்து நலிகிறபடியைச் சொல்லுகிறது. [1] காதாட்டிக்கொண்டு சொல்லுவரே.

ஏழையர்க்கும் அசுரர்க்கும் அரக்கர்கட்கும் உய்விடம் எவ்விடம் என்று இலங்கி மகரம் தழைக்கும் தளிர்கொல் - 'அசுரர்கட்கும் அரக்கர்கட்கும் பெண்களுக்கும் தப்பிப்போய்ப் பிழைக்கும் இடம் எவ்விடம்?' என்று விளங்குகின்றனவாய்க் கொண்டு மகரம் தழைக்கின்ற தளிரே? [2] அசுரரும் அரக்கரும் அழகு கண்டால் பொறுக்கமாட்டாமல் முடிவர்கள்; பெண்கள் அடையப் பெறுமல் முடிவர்கள். 'பெண்களை நலியுமாறு போலே அசுரர்கட்கும் அரக்கர்கட்கும் சினேகத்தை விளைத்துப் பாதகம் ஆகாநின்றன' என்று ஒரு தமிழன் கூறிவைத்தான் என்று கூறியதனைச் சீயர் கேட்டருளி, [3] 'இப்பொருள் அழகிது: ஆனாலும், அபக்ஷதர்மம்; அசுரர்களுக்கும் அரக்கர்களுக்கும் பாதகம் ஆகாநின்றது என்று இப்போது இது சொல்லுகை, தேட்டம் அன்றே? ஆன பின்பு அது வேண்டா,' என்று அருளிச்செய்தாராம். பை விடம் பாம்பு அணையான் திருக்குண்டலம் காதுகள் - தன்னுடைய ஸ்பரிசத்தாலே விரிந்திருக்கிற படங்களையும், உகவாதார் முடியும்படியான விஷத்தையுமுடையனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய திருக்குண்டலக் காதுகளே. [4] 'திருக்காதுகளில் அழகு பாதகம் ஆமாறுபோலே ஆயிற்று, திருவனந்தாழ்வானுடைய சேர்த்தியும்

---

1. *வேறும் ஒரு வகையாக ரசோக்தியாக அவதாரிகை அருளிச்செய்கிறார், 'காதாட்டிக்கொண்டு சொல்லுவரே' என்று. 'அவனுடைய திருமகர குண்டலங்களும் திருக்காதுகளும் நலிகிறபடி சொல்லுகிறான்'* என்பது, இருபத்து நாலாயிரப்படி.

2. *'அழகு இருவர்க்கும் பாதகமாம் விதம் எப்படி?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அசுரரும்' என்று தொடங்கி.*

3. *'இப்பொருள் அழகிது!' என்றது, ஒரு பகுதி உடன்பட்டபடியைத் தெரிவிக்க வந்தது. 'அபக்ஷதர்மம்' என்றது, 'பிரகரணத்துக்குச் சேராதது' என்றபடி. அபக்ஷதர்மம் என்றதனை விவரிக்கிறார், 'அசுரர்களுக்கும்' என்று தொடங்கி. 'தேட்டம் அன்றே' என்றது, 'பெண்களுக்குப்பாதகம் என்று சொல்லி வருகிற பிரகரணம் ஆகையாலே, அசுரர்களுக்குப் பாதகம் என்பதனை இங்குச் சொல்ல வேண்டாவே' என்றபடி. 'அசுரர்கட்கும் அரக்கர்கட்கும் பாதகமாமாறு போன்று, பெண்களுக்கும் பாதகமாம்' என்பதே முதல் அடிக்குப் பொருளாம்.*

4. *'அழகுகளைச் சொல்லி வருகிற இவ்விடத்திலே, திருவனந்தாழ்வான் சேர்த்தியைச் சொல்லுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'திருக்காதுகளில்' என்று தொடங்கி.*

பாதகம் ஆகிறபடி. அன்றிக்கே, [1] 'பெறுகைக்கு அநந்த புருஷகார முண்டாய் இருக்கக்கண்டீர், நான் நோவுபடுகிறது!' என்னுதல். [2] மேலே பாதகமாகக் கூறப்பட்டவையும் 'நன்று' என்னலாம்படி இவை நலிகின்றனவாதலின், 'காதுகளோ' என்கிறாள். என்றது, 'அவை, தண்ணீர்ப்பந்தல் வைத்தது என்னும்படியாக ஆயின,' என்றபடி. 'மாலை.......நல்கிற்றை எல்லாம்' என்னுமாறுபோலே. கைவிடல் ஒன்றும் இன்றி - ஒருகாலும் கைவிடாதே; என்றது, 'ஒருகால் விட்டுப் பற்றுமது அன்றிக்கே' என்றபடி. அடுகின்றன - முடியாநின்றன. காண்மின்களே - அவர்களுக்கும் எல்லாம் உருவு வெளிப்பாடாய்த் தோற்றும் என்றிருக்கிறாள்; [3] 'வாயுந் திரையுகளில்' ஆழ்வார் அன்றோ? (6)

735

*காண்மின்கள் அன்னையர் காள்!என்று*
*காட்டும் வகைஅறியேன்!*
*நாண்மன்னு வெண்திங்கள் கொல்,நயந்*
*தார்கட்கு நச்சிலைகொல்*
*சேண்மன்னு நால்தடந் தோள்பெரு*
*மான்தன் திருநுதலே?*
*கோண்மன்னி ஆவி அடும்கொடி*
*யேன்உயிர் கோளிழைத்தே.*

பொ-ரை: 'தாய்மார்களே! பாருங்கோள் என்று காட்டுகின்ற தன்மையை அறியேன்; நீட்சி பொருந்திய வலிய நான்கு திருத்தோள்களையுடைய கண்ணபிரானது அழகிய நெற்றியானது, எட்டாம் நாள் பிறைதானோ? அன்றி, விரும்பினவர்கட்கு நஞ்சு வடிவாக இருப்பது ஒரு இலைதானோ? அறியேன்; கொடியேனாகிய என்னுடைய உயிரைக் கொள்ளுவதற்கு நினைத்து வலியோடு என் உயிரை வருத்துகின்றது,' என்கிறாள்.

வி-கு: நாள் மன்னு வெண்திங்கள் - எட்டாம் பிறை. நச்சு - பெயர்ச்சொல்; விஷம். 'கொடியேன் உயிர் கோள் இழைத்துக் கோள் மன்னி ஆவி அடும்,' என்க. கோள்-வலிமையும், கொள்ளுதலும்.

---

1. மேலே எழுப்பிய வினாவிற்கே வேறும் ஒரு வகையாகப் பரிகாரம் அருளிச்செய்கிறார், 'பெறுகைக்கு' என்று தொடங்கி.

2. 'காதுகளோ' என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'மேலே' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'அவை' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மாலை' என்று தொடங்கி. இது, திருவிருத்தம், 35.

3. 'வாயுந்திரையுகளில் ஆழ்வார் அன்றோ' என்றது, 'வாயுந் திரையுகளும்' என்ற திருவாய்மொழியைப் பாடிய ஆழ்வார் அல்லரோ?' என்றபடி.

ஈடு: ஏழாம் பாட்டு. [1]'இவை அவள் முன்னே நிற்க வல்லனவோ? இவற்றுக்கெல்லாம் நாம் நெற்றிக்கை அன்றோ?' என்று திருநுதலில் அழகு வந்து நலிகிறபடியை அருளிச் செய்கிறார்.

அன்னையர்காள்! 'காண்மின்கள்' என்று காட்டும் வகை அறியேன் - [2]'இது நலியாநின்றது என்று சொல்லாநின்றாய்; எங்களுக்கு இது தெரிகிறது இல்லை: எங்களுக்கும் தெரியும்படி சொல்லிக்காணாய்' என்ன, 'நீங்களும் இதனைக் காணுங்கோள்' என்று, உங்களுக்குக் காட்டும் பிரகாரம் அறிகின்றிலேன். [3]என் கைக்குப் பிடி தருதல், உங்களுக்கு உருவு வெளிப்பாடு உண்டாதல் செய்யில் அன்றோ என்றால் காட்டலாவது? [4]ஆண்களுக்குக் காட்டில் அன்றோ பருவம் நிரம்பின உங்களுக்குக் காட்டலாவது?' என்பாள், '**அன்னையர்காள்**' என்கிறாள். நாள் மன்னு வெண்திங்கள் கொல் - சுக்கிலபக்கத்து எட்டாம் நாள் சந்திரனோ? [5]இளகிப் பதித்திருக்கைக்கும், 'காட்டு, காட்டு' என்று வளருகைக்கும்; காட்சிக்கு இனியதாய் இருக்கைக்கும். நயந்தார்கட்கு [6]நச்சு இலை கொல்-ஆசைப்பட்டார்க்கு நச்சுப்பூண்டோ?' என்னுதல்; அன்றிக்கே, 'தன்னை ஆசைப்பட்டார்க்கு ஆசைப்பட வேண்டாதிருக்கிறதோ?'

---

1. 'திருநுதலே' என்றதனைத் திருவுள்ளம் பற்றி ரசோக்தியாக அவதாரிகை அருளிச்செய்கிறார். நெற்றிக்கை - 'முன்னே நிற்கின்ற வியூகம்' என்பதும், 'பிரதானம்' என்பதும் பொருள். 'எதிர் சேனை' என்றுமாம்.

2. 'மேல் திருப்பாசுரத்தில் 'காண்மின்களே' என்று கூறிவைத்து, இத்திருப்பாசுரத்தில் 'காட்டும் வகை அறியேன்' என்பது என்?' என்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார், 'இது நலியாநின்றது' என்று தொடங்கி.

3. வகை அறியாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'என் கைக்கு' என்று தொடங்கி.

4. 'அன்னையர்காள்' என்ற விளிக்கு பாவம் அருளிச்செய்கிறார். 'ஆண்களுக்கு' என்று தொடங்கி.

5. சுக்கிலபக்ஷத்து எட்டாம் நாள் சந்திரன் என்பதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'இளகிப் பதித்து' என்று தொடங்கி. காட்டு காட்டு என்று வளருகை - மேன்மேலென வளருகை.

6. 'நச்சிலைகொல்' என்பதற்கு இரண்டு பொருள் அருளிச்செய் கிறார்: 'ஆசைப்பட்டார்க்கு ஆசைப்பட வேண்டாதிருக்கிறதோ?' என்பது இரண்டாவது பொருள்.

என்னுதல். [1] 'நச்சு மா மருந்தம்' என்னுமவர் அன்றோ இப்போது கண்ணுஞ்சுழலை இட்டு இவ்வார்த்தை சொல்லுகிறார்? 'இன்ன மலையிலே உண்டு' என்று அங்கே சென்று தேடி வருந்தவேண்டாமல், ஆசைப்படுவதுமாய் மேல் காற்றிலே காட்டப் பரிகாரமுமாம் மருந்தாயிற்று இது. அபத்தியத்தையும் பொறுத்துக்கொள்ளும் மருந்தாதலின். 'மாமருந்தம்' என்கிறது. இவன் தலையிலே பழி இட்டுக் கைவிடும் மருந்து அன்று; [2] வானமாமலையில் தலையான மருந்து அன்றோ, இப்போது இவளுக்கு நச்சுப் பூண்டு ஆகிறது?

சேண் மன்னும் நால் தடம் தோள் பெருமான்தன் திருநுதலே - ஓக்கத்தையுடைத்தாய், கற்பகத்தரு பணைத்தாற்போலேயாய்ச் சுற்றுடைத்தாய் இருக்கிற திருத்தோள்களில் அழகாலே என்னைத் தனக்கே உரியவளாகும்படி ஆக்கினவனுடைய திருநெற்றியே. 'நீண்டு உருண்டு கணையங்கள் போன்ற அழகிய திருத்தோள்கள் அணிகளால் ஏன் மறைக்கப்படாமல் இருக்கின்றன?' என்னும்படியே திருவடி அகப்பட்ட துறையிலேகாணும் இவளும் அகப்பட்டது. [3] கொடியேன் உயிர் கோள் இழைத்துக் கோள் மன்னி ஆவி அடும் - என் உயிரினுடைய அழகை அழித்துக்கொள்கையிலே விருப்பத்தைச்செய்து முடியாநின்றது. அன்றிக்கே, 'அழகு பாதகமாம்படி பாவத்தைச் செய்த என்னுடைய உயிரை முடிக்கையிலே துணிந்து, அதிலே விருப்பத்தை வைத்து, உயிரை முடியாநின்றது,' என்றுமாம். (7)

---

1. வியாக்கியாதாவின் ஈடுபாடு, 'நச்சுமாமருந்தம்' என்று தொடங்கும் வாக்கியம். 'நச்சுமாமருந்தம்' என்பது, திருவாய். 3. 4. : 5. 'நச்சுமா மருந்தம்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'இன்ன மலையிலே' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார், 'இவன் தலையிலே' என்று தொடங்கி.

2. பரமபதநாதனுடைய நெற்றி இவளுக்கு விஷப்பூண்டு ஆகிறது, பிரிவின் முறுகுதலாலே என்கிறார், 'வானமாமலையில்' என்று தொடங்கி. தோள் அழகிலே தோற்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நீண்டு உருண்டு' என்று தொடங்கி.

'ஆயதாஸ்ச ஸுவ்ருத்தாஸ்ச பாஹவ: பரிகோபமா:
ஸர்வபூஷண பூஷார்ஹா, கிமர்த்தம் ந விபூஷிதா:'

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 3 : 14.

3. கொடியேன் உயிரினுடைய, கோள் உண்டு - அழகு அதனை இழைத்துக்கொள்கையிலே - அழித்துக்கொள்கையிலே, மன்னி - விருப்பத்தைச்செய்து, ஆவி அடும்-'உயிரை முடிக்கின்றது' என்பது பொருள்.

736

கோளிழைத் தாமரையும் கொடியும்
பவளமும் வில்லும்
கோளிழைத் தண்முத்த மும்தளி
ரும்குளிர் வான்பிறையும்
கோளிழை யாவுடைய கொழுஞ்சோதி
வட்டங்கொல்? கண்ணன்
கோளிழை வாண்முக மாய்க்கொடி
யேன்உயிர் கொள்கின்றதே.

பொ - ரை: தன் ஒளியையே தனக்கு ஆபரணமாகவுடைய தாமரையும் கொடியும் பவளமும் வில்லும் தன் ஒளியையே தனக்கு ஆபரணமாகவுடைய குளிர்ந்த முத்தமும் தளிரும் குளிர்ந்த பெரிய எட்டாம் பிறையுமாகிய இவற்றையெல்லாம் தன்னகத்தேயுடைய, கொள்ளப்பட்ட ஆபரணத்தையுடைய சோதி மண்டலமோ? கண்ண பிரானுடைய, தன்னழகே தனக்கு ஆபரணமாய் ஒளியையுடைத்தான முகமாய்க்கொண்டு கொடியேனுடைய உயிரைக் கொள்ளை கொள்ளுகின்றது.

வி - கு: 'கண்ணன் கோள் இழை வாள்முகம், தாமரையும் கொடியும் பவளமும் வில்லும் தண்முத்தமும் தளிரும் பிறையும் ஆகிய இவற்றைத் தன்னகத்தேயுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல்? அத்தகைய சோதி வட்டமானது, வாண்முகமாய்க் கொடியேன் உயிர் கொள்கின்றது?' என்று சொற்களைக் கொணர்ந்து கூட்டி முடித்துக் கொள்க.

ஈடு: எட்டாம் பாட்டு. [1]'தலையான பேரை நெற்றிக்கையிலே விட்டுக் காட்டிக்கொடுக்க ஒண்ணாது' என்று, மேலே நலிந்தவை எல்லாம் சேர ஒருமுகமாய் வந்து நலிகிறபடி சொல்லுகிறது. அங்கும் இங்கும் சிதறிக் கிடந்த படையைப் பகைவர்கள் வந்து முடுகினவாறே ஒன்றாகத் திரட்டி ஒரு காலே தள்ளுவாரைப் போலே, தனித்தனியே நலிந்த அழகுகள் எல்லாம் திரள வந்து நலிகிறபடியைச் சொல்லுகிறாள்.

கோள் இழைத் தாமரையும்-சாதி ஒன்றாய் இருக்கச்செய்தேயும், 'பொற்கால் தாமரை, நூற்கால் தாமரை' என்பனவாகத் தாமரையில் சில பேதங்கள் உள அன்றோ? அதில் நூற்கால் தாமரை என்னுதல்;

1. மேலே கூறிய அழகுகள் எல்லாவற்றினுடைய விருப்பத்தையும் ரசோக்தியாலே அருளிச்செய்கிறார், 'தலையான' என்று தொடங்கி. தலையான பேரை - நெற்றி என்பது நேர்ப்பொருள். 'பிரதாநரை' என்பது வேறும் ஒரு பொருள். நெற்றிக் கை - முன் தூசி. மேலே கூறியதனைத் திருஷ்டாந்தத்தோடு விவரணம் செய்கிறார், 'அங்கும் இங்கும்' என்று தொடங்கி.

அன்றிக்கே, 'கொள்கையிலே துணிந்திருக்கிற தாமரை' என்னுதல்; அன்றிக்கே, 'தன்னழகே தனக்கு ஆபரணமாகவுடைய தாமரை' என்னுதல்; அன்றிக்கே, 'ஒளியே ஆபரணமான தாமரை' என்னுதல். திருக்கண்ணும்-திருக்கண்களும், கொடியும்-திருமூக்கும். பவளமும்-திரு அதரமும், வில்லும் - திருப்புருவமும், கோள் இழைத் தண் முத்தமும் - தன் ஒளியே ஆபரணமாகவுடைய குளிர்ந்த பற்களின் நிரையும். அன்றிக்கே, 'இழையிலே கோப்புண்ட முத்துப்போலே இருக்கிற குளிர்ந்த பற்கள்' என்னுதல். தளிரும் - திருக்காதும். குளிர் வான் பிறையும்-திருநெற்றியும். [1]'ஆக, நேத்திரமானவரும், 'மூக்கு வலியோம்' என்றவரும், வாய்சொல்லிப் போனவரும், 'கீழ் மேல் ஆயிற்று' என்று வளைத்துக்கொடுபோனவரும், வாய்க் கரையிலே இருந்தவரும், தாம் செவிப்பட்டவாறே போனவரும், 'இவற்றுக்கு நெற்றி நாம்' என்று போனவரும் எல்லாம் ஒருமுக மாய்த் திரண்டு வந்து' என்றபடி.

கோள் இழையாவுடைய கொழுஞ்சோதி வட்டம்கொல் - கொள்ளப்பட்ட ஆபரணத்தையுடைத்தான ஜோதி மண்டலமோ உருவகம் இருக்கிறபடி? அன்றிக்கே, 'தன்னழகே தனக்கு ஆபரண மாய் இருப்பது ஒரு ஜோதி மண்டலமோ?' என்னுதல். கண்ணன் கோள் இழை வாண்முகமாய்-கண்ணனுடைய, தன்னழகே தனக்கு ஆபரணமாய் ஒளியையுடைத்தான முகம் என்று ஒரு வியாஜத்தை இட்டு. கொடியேன் உயிர் கொள்கின்றதே - வாழுங்காலத்தில் கெடும்படியான பாவத்தைச் செய்த என்னுடைய உயிரைக் கொள் கின்றது, கோள் இழையாவுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல்? 'உயிர் பெறுங்காலத்திலே உயிர் இழக்கும்படியான பாபத்தைச் செய்தேன்' என்பாள், 'கொடியேன்' என்கிறாள். (8)

737

*கொள்கின்ற கோள்இரு ளைச்சுகிர்ந்*
*திட்ட கொழுஞ்சுருளின்*
*உள்கொண்ட நீலநன் னூல்தழை*
*கொல்? அன்று மாயன்குழல்*
*விள்கின்ற பூந்தண் துழாய்விரை*
*நாறவந்து என்னுயிரைக்*
*கள்கின்ற வாறுஅறி யீர்அன்னை*
*மீர்!கழ றாநிற்றிரே.*

---

1. மேலே போந்த ஏழு திருப்பாசுரங்களிலும் கூறியவற்றையெல்லாம் தொகுத்து முறையே அருளிச்செய்கிறார், 'ஆக' என்று தொடங்கி.

**பொ - ரை :** உலகத்தை எல்லாம் கொள்ளக்கூடியதான வலிய இருளை எஃகிய செறிந்த இருளின் உள்ளே கொள்ளப்பட்ட நீல நிறத்தையுடைத்தான அழகிய நூலின் திரளோ? அன்று; மாயனுடைய திருக்குழல், மலர்கின்ற பூக்களையுடைய குளிர்ந்த திருத்துழாயினது வாசனையானது பரவும்படி என் உயிரைக் கொள்கின்றவாற்றை அறியீர்கோள் ; தாய்மார்களே ! இடித்துக் கூறுகின்றீர்கோள்.

**வி - கு :** 'அன்னைமீர்! மாயன் குழல், உள் கொண்ட நீல நன்னூல் தழைகொல்? அன்று ; மாயன் குழல் என் உயிரைக் கள்கின்றவாறு அறியீர் ; கழறுநிற்றீர்,' என்க

**ஈடு :** ஒன்பதாம் பாட்டு. [1] 'இச்சமயத்துக்கு அன்றோ நமக்குப் பூவும் புழுகும் இட்டுச் சிரஸாவஹித்துக்கொடு போந்தது ?' என்று 'திருக்குழற்கற்றையில் அழகு வந்து நலியாநின்றது' என்கிருள்.

கொள்கின்ற கோள் இருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உள் கொண்ட நீல நன்னூல் தழைகொல்-[2] திருக்குழலில் அழகுக்கு ஓர் உவமானம் சொல்லப்புக்கு, அழகுக்கு அதுதான் நேர்கொடு நேர் உபமானமாகப் போராமையாலே அதனைக் கிடந்து சிக்ஷிக்கிறது. 'பிரளயகாலத்தில் பகல் இரவு என்னும் வேறுபாடு அற எங்கும் ஒக்கத் தானேயாம்படி பரந்து நின்றுள்ள, கோட்பாட்டையுடைய இருள்' என்னுதல். 'கோள்' என்று மிடுக்காய், 'மிடுக்கையுடைய இருள்' என்னுதல். அந்த இருட்டினைச் சுகிருவது - எஃகுவது : இப்படி எஃகி அதிலே கொழுவிதான அமிசத்தைத் திரட்டுவது, அது தன்னிலும் உண்டான புற இதழைக் கழிக்க, அகவாயில் வயிரமாய் நீலமான நிறத்தையுடைத்தாய் நன்ருய் இருந்துள்ள நூல் திரளோ ? அன்று மாயன் குழல் - [3] இவள் நெஞ்சிலே அழகிதாக மயிர்பட்டது

1. 'மாயன் குழல்' என்பதனைத் திருவுள்ளம் பற்றி ரசோக்தியாக அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. திருக்குழலின் அழகுக்கு உபமானமான இருளை அடைமொழிகளால் விசேடித்ததற்கு, பாவம் அருளிச்செய்கிருர், 'திருக்குழலில்' என்று தொடங்கி. சிக்ஷித்தல்-அடைகொடுத்து ஓதல். கோட்பாட்டையுடைய-எங்கும் பரந்திருத்தலை இயல்பாகவேயுடைய. அன்றிக்கே, 'அழகையுடைய' என்னுதல். எஃகுவது-பன்னுவது. கொழுவிதான-சாராம்ஸமான.

3. இப்படி வர்ணிப்பதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'இவள்' என்று தொடங்கி.

காணும். [1] இத்தனை அடைமொழி கொடுத்துக் கூறினால் ஆயிற்று உபமானமாகப் போராது என்னலாவது. பின்னையும், ஆச்சரியத்தை யுடையனான அவனுடைய திருக்குழல் என்னுமித்தனை. இத்தனை [2] இடு சிவப்பானது அவனுடைய இயல்பிலேயே அமைந்ததான திருக்குழலுக்கு ஒப்பாகுமோ ?

விள்கின்ற பூந்தண்துழாய் விரை நாற வந்து - அலராநிற்பதாய் அழகிதாய்க் குளிர்ந்திருந்துள்ள திருத்துழாயில் பரிமளமானது [3] முகத்திலே அலை எறியவாயிற்று வந்து தோற்றுகிறது. [4] திருக் குழலில் அழகுக்குத் திருத்துழாயில் பரிமளமானது தூசி ஏறி நடக்க ஆயிற்று வந்து பாதகம் ஆகிறது. என் உயிரைக் கள்கின்றவாறு அறியீர் - [5] நீங்கள் எல்லாரும் சுகமே இருக்கச்செய்தே, என் ஒருத்தி யுடைய ஆத்துமாவை வந்து களவு காண்கிற பிரகாரத்தை அறி கின்றிலீர்கோள். கள்கின்ற - களவு காண்கின்ற. [6] 'களவு காண்கை யாவது என்?' என்னில், இத்தலையில் இசைவு இன்றிக்கே இருக்கக் கைக்கொள்ளுதல். [7] 'அவன் அன்றோ களவு காண்கிறான் ?'

---

1. 'அன்று' என்பதற்குப் பாவம் அருளிச்செய்கிறார், இத்தனை' என்று தொடங்கி.

2. 'இடு சிவப்பானது' என்றது, 'இயல்பு அன்றிக்கே ஆரோபிக்கப் பட்ட சிவப்பானது' என்றபடி.

3. முகத்திலே - தலைவியின் முகத்திலே.

4. 'விள்கின்ற பூந்தண் துழாய் விரை நாற வந்து' என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'திருக்குழலில்' என்று தொடங்கி. தூசி - சேனையின் முகம்.

5. 'என் உயிரை' என்று விசேடிக்கின்றவளுடைய கருத்தை அருளிச்செய்கிறார், 'நீங்கள்' என்று தொடங்கி.

6. சுவாபதேசத்திலே சங்கித்துப் பரிகரிக்கிறார், 'களவு காண்கை யாவது' என்று தொடங்கி.

7. ''சோரேண ஆத்மா அபஹாரிணா' என்கிறபடியே, இவன் கள்ளனாய் இருக்க, அவன் செயலைக் களவு என்கிறது என்?' என்ன, 'அவன் அன்றோ' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, 'இவன் ஆத்துமாவை அபகரித்ததன் பிராபல்யம், ஈசுவரன், தனக்கு உரிய பொருளையும் இவன் அறியாதபடி அபகரிக்கும்படியாயிற்று' என்றபடி.

[1] இத்தலை அத்தலையானபடி. [2] சம்பந்தம் இல்லாதவன் அபகரித்தால் அதனைப் போக்கலாம்; சம்பந்தமுள்ளவன் அபகரித்தால் பரிகாரம் இல்லை அன்றோ? [3] இது கைப்பட்டவாறே ஒரு பிரமாணம் கொடு நின்று வழக்குப் பேசத் தொடங்கும் அன்றோ அவன்? அன்னைமீர் கழறுநிற்றிரே - நீங்கள் வருந்தி இக்களவுக்கு நானும் [4] பெருநிலை நின்று கூட்டுப் பட்டேனாகப் பொடியாநின்றீர்கோள். [5] இந்த உருவு வெளிப்பாட்டைத் தடை செய்தலும் வேண்டாவோ? ஒரு நியமித்தல் நியமிக்கப்படுதல் என்னும் தன்மையேயோ வேண்டுவது பொடிகைக்கு? கழறல் - நோவச்சொல்லுதல். (9)

738

நிற்றிமுற் றத்துள் என்று நெரித்த
கையராய் என்னை நீர்
சுற்றியும் சூழ்ந்தும் வைதிர்
சுடர்ச்சோதி மணிநிறமாய்
முற்றஇம் மூவுல கும்விரி
கின்ற சுடர்முடிக்கே
ஒற்றுமை கொண்டதுஉள் ளம்அன்னை
மீர்!நசை என்நுங்கட்கே?

---

1. அதனாற்பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'இத்தலை அத்தலையானபடி' என்று.

'பண்டேஉன் தொண்டாம் பழவுயிரை என்னதென்று
கொண்டேனைக் கள்வன்என்று கூறாதே—மண்டலத்தோர்
புள்வாய் பிளந்த புயலே! உனைக்'கச்சிக்
கள்வா!'என்று ஓதுவதுஎன் கண்டு?'

என்பது, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

2. 'ஆனால், அவன் களவு காணாதவாறு விலக்கினாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சம்பந்தம் இல்லாதவன்' என்று தொடங்கி.

3. 'பரிகாரம் இல்லாமைக்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இது கைப்பட்டவாறே' என்று தொடங்கி. இங்கே,

'த்வம்மே ஹம்மே குதஸ்தத் தத்பிகுத:
இதம் வேத மூல ப்ரமாணாத்
ஏதச்சாநாதி ஸித்தாத் அநுபவவிபவாத்
ஸோபி ஸாக்ரோஶ ஏவ
க்வாக்ரோஶ: கஸ்ய கீதாதிஷு மமவிதித:
கோத்ர ஸாக்ஷீ ஸுதீ: ஸ்யாத்
ஹந்த த்வத் பக்ஷபாதீ ஸஇதி
ந்ருகலஹே ம்ருக்ய மத்யஸ்த் தவத்வம்'

என்று பட்டர் அருளிச்செய்த சுலோகம் அநுசந்தேயம்.

4. பெருநிலை - சகாயம்.

5. 'அன்னைமீர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இந்த உருவு வெளிப்பாட்டை' என்று தொடங்கி.

பொ–ரை: ‘முற்றத்திலே நிற்கின்றாய்’ என்று நெரித்த கையினை யுடையவர்களாய்ச் சுற்றிலும் நின்றுகொண்டும், உங்களிலே விசாரித்துக்கொண்டும் என்னை நீங்கள் வைகின்றீர்கள்; மூன்று உலகங்கள் முழுதும் சுடர்ச்சோதி மணி நிறமாய் விரிகின்ற சுடர் முடிக்கே என் உள்ளம் ஒருப்பட்டது; ‘அதுவாயிற்று’ என்றபடி. தாய்மார்களே! உங்களுக்கு என் பக்கல் விருப்பம் எதற்கு?

வி–கு: ‘அன்னைமீர்! நீர் நெரித்த கையராய் என்னை வைதிர்; மூவுலகும் மணி நிறமாய் விரிகின்ற சுடர் முடிக்கே என் உள்ளம் ஒற்றுமை கொண்டது; நுங்கட்கு நசை என்?’ என்க.

ஈடு: பத்தாம் பாட்டு. [1]‘திருமகள் கேள்வனுங்கூட நம்மைத் தலைமேல் கொண்டு போருகிறது இவ்வவஸ்தைக்கு அன்றோ?’ என்று திருமுடியில் அழகு வந்து நலிகிறபடியைச் சொல்லுகிறாள்.

நிற்றி முற்றத்துள் என்று.......நுங்கட்கு நசை என் - [2]இத்தனையும் நசை அறச் சொல்லாவிடில் அவர்கள் விடார்கள் போலே. நிற்றி முற்றத்துள் என்று - ‘முற்றத்துள் நிற்றி’ என்பர்கள். [3]படுக்கையினின்றும் எழுந்திருந்து எல்லாரும் காணும்படி முற்றத்திலே நிற்கைக்கு மேற்படப் பழி இல்லையாக நினைத்திராநின்றார்கள். [4]‘எவள் முன்பு ஆகாசசாரிகளான பிராணிகளாலும் பார்க்கப் படாதவளாய் இருந்தாளோ, அத்தகைய சீதையைப் பெருந்தெருவில் செல்லும் மக்களும் கண்டார்கள்,’ என்றதைப்போன்று நினைத்திரா நின்றார்களாயிற்று இதனை. முற்றத்திலே புறப்பட்டு நிற்கும்படி

---

1. ‘சுடர் முடிக்கே’ என்றதனைக் கடாட்சித்து ரசோக்தியாக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ‘‘நசை என் நுங்கட்கே?’ என்று ஆசை அறச் சொல்லுவான் என்?’ என்ன, ‘இத்தனையும்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

3. ‘முற்றத்துள் நிற்றல் பழியோ?’ என்ன, ‘படுக்கையில்’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. புறப்பட்டு முற்றத்திலே நிற்பதனைத் தெருவிலே புறப்பட்டது போல நினைத்து, அப்படிப் புறப்பட்டதற்குப் பிரமாணம் காட்டுகிறார், ‘எவள்’ என்று தொடங்கி.

‘யாந ஶக்யா புரா த்ரஷ்டும் பூதை: ஆகாஶகைரபி
தாமத்ய ஸீதாம் பஶ்யந்தி ராஜமார்க்ககதா ஜநா:’

என்பது ஸ்ரீ ராமா. அயோத். 33 : 7.

பிறந்த ஸாஹஸத்துக்கு நெரித்த கையராய். என்னை நீர் - [1] உருவு வெளிப்பாடு புறப்பட விடுவித்து நிறுத்த நிற்கிற என்னை, இதனால் நலிவு வாராதபடி புண்ணியம் செய்த நீங்கள். என்றது, 'அவன் புறப்பட விடுவித்து நிறுத்த நிற்கிற என்னை, இதுகொண்டு காரியம் இல்லாத நீங்கள்' என்றபடி. [2] சுற்றியும் சூழ்ந்தும் வைதிர் -'இவளைத் தப்புவித்தோமாம் விரகு என்?' என்று நெஞ்சிலே விசாரிக்கையும், கால்வாங்கிப் பேர நிற்கவும் ஒண்ணாதபடி சூழநின்றும் பொடியா நின்றீர்கோள். அன்றிக்கே, 'போயும் வந்தும் பொடியாநின்றீர்கோள்' என்னுதல்.

சுடர்ச்சோதி மணி நிறமாய் இம்மூவுலகும் முற்ற விரிகின்ற சுடர் முடிக்கே என் உள்ளம் [3] ஒற்றுமை கொண்டது - மிக்க புகரை யுடைத்தான இரத்தினத்தினுடைய ஒளியையுடைத்தாய்க்கொண்டு கண்ட இடம் எங்கும் பரம்பாநின்றுள்ள ஒளியையுடைய திரு முடியிலே ஒருமைப்பட்டது என்னுடைய உள்ளம். அன்றிக்கே, 'அங்கே விலை செய்து கொடுத்தது' என்னுதல். என்றது, 'தப்பு விக்கைக்கு வார்த்தை சொல்லுகிற இவர்களைப் போலே ஓர் இடத்தில் அன்று அன்றே, அகப்படுத்தி நலியக் கோலுகிற அது நிற்கும்படி?' என்பதனைத் தெரிவித்தபடி. அன்னைமீர் நசை என் நுங்கட்கே - தாய்மாரான நீங்கள் என் பக்கல் நசை அற அமையும். [4] தாய்மா ராவார், பெற்று வளர்த்துப் போகத்திற்குத் தக்க பருவம் பிறந்தவாறே கைப்பிடித்தவன் கையிலே காட்டிக்கொடுத்துக் கடக்க நிற்குமத்தனை

---

1. 'என்னை நீர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'உருவு வெளிப்பாடு' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'அவன் புறப்பட' என்று தொடங்கி.

2. 'சுற்றியும் சூழ்ந்தும்' என்பதற்கு இரு வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார்: முதற்பொருள், மனத்தின் செயலையும் சரீரத்தின் செயலையும் சொல்லுகிறது; இரண்டாவது பொருள், சரீரத்தின் செயல் மாத்திரம் சொல்லுகிறது.

3. 'ஒற்றுமை கொண்டது' என்பதற்கு அருளிச்செய்யும் இரு வகைப் பொருள்களுள் இரண்டாவது பொருள், 'விலை செய்து கொடுத்தது' என்றபடி. ஒற்றுமை – விலையும், ஒருமைப்பாடும்.

4. 'அன்னைமீர்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'தாய்மா ராவார்' என்று தொடங்கி.

போக்கி, பொடியக் கடவர்களோ? [1] தக்க வயது வந்தவர்களையும் பெற்ற சம்பந்தம் கொண்டு ஹிதம் சொல்லி மீட்கப் பார்க்கக் கடவதோ? (10)

739

**கட்குஅரிய பிரமன் சிவன்இந் திரன்என்ற இவர்க்கும்**
**கட்குஅரிய கண்ணனைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன**
**உட்குஉடை ஆயிரத்துள் இவையும் ஒருபத்தும் வல்லார்**
**உட்குஉடை வானவ ரோடுஉட னாய்என்றும் மாயாரே.**

பொ - ரை: மக்கள் கண்களால் காண அரிய பிரமன் என்ன, சிவன் என்ன, இந்திரன் என்ன, ஆகிய இவர்கட்கும் காண அரிய கண்ணபிரானைத் திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர் அருளிச் செய்த மிடுக்கையுடைய ஆயிரம் திருப்பாசுரங்களுள் ஒப்பற்ற இந்தப் பத்துத் திருப்பாசுரங்களையும் வல்லவர்கள், ஆற்றலையுடையவரான நித்தியசூரிகளோடு ஒரு கோவையாய் எப்பொழுதும் பேரின்பத்தை அனுபவிக்கப் பெறுவர்கள்.

வி – கு: உட்கு - அச்சமுமாம். மாயார் – அழியார்; என்றது, 'நித்தியானுபவத்தை அனுபவிக்கப்பெறுவர்' என்றபடி.

ஈடு: முடிவில், [2] 'இத்திருவாய்மொழியைக் கற்றவர்கள், பகவானுடைய பிரிவால் வருந்தாமல், நித்தியசூரிகளோடே கூடி நித்தியானுபவம் பண்ணப் பெறுவர்கள்,' என்கிறார்.

கட்கு அரிய பிரமன் சிவன் இந்திரன் என்ற இவர்க்கும் கட்கு அரிய கண்ணனை - மக்களுடைய கண்களுக்குப் புலப்படாதபடி இருக்கிற பிரமன் சிவன் இந்திரன் என்னும் இவர்களுக்கும் கண் களுக்குப் புலப்படாதபடி இருக்கிற கிருஷ்ணனை. [3] பிரமன் முதலானோர்களுடைய கண்களுக்குக் காண முடியாதவனாய் இருக்கிற கிருஷ்ணன், மறக்க ஒண்ணாதபடி உருவு வெளிப்பாடாய்த் தோன்ற, அதனாலே நலிவு பட்டு, போன போன இடம் எங்கும் சூழ்ந்து

---

1. 'அன்னைமீர்' என்பதற்கு, வேறும் ஒரு பாவம் அருளிச் செய்கிறார், 'தக்க' என்று தொடங்கி.

2. திருப்பாசுரத்தின் பின்னிரண்டு அடிகளைத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. 'கட்கு அரிய பிரமன் சிவன் இந்திரன் என்ற இவர்க்கும் கட்கு அரிய கண்ணன்' என்றதனால், பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'பிரமன்' என்று தொடங்கி.

கொண்டது என்னும்படி ஆயிற்று இவர்க்குப் பிரகாசித்தபடி. [1] அவர்கள் கண்களுக்கு அரியன் ஆனாற்போலே ஆயிற்று, இவர் கண்களுக்குச் 'சூழவுந் தாமரை நாண்மலர் போல் வந்து தோன்றும்' என்னும்படி பிரகாசித்தபடி. குருகூர்ச்சடகோபன் சொன்ன - ஆழ்வார் அருளிச்செய்த. உட்கு உடை ஆயிரத்துள் இவையும் ஒருபத்தும் வல்லார் உட்கு உடை வானவரோடு உடனாய் என்றும் மாயாரே - [2] சொல்லப்படுகின்ற பொருளை உள்ளபடி சொல்லவல்ல ஆற்றலையுடைத்தான ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப் பத்தையும் கற்க வல்லவர்கள், [3] நித்தியானுபவம் பண்ணாநின்றாலும் மேன்மேலெனப் பகவத்குணங்களைப் பூர்ணமாக அனுபவிக்கைக்குத் தகுதியான யோக்கியதையுடைய நித்தியசூரிகளோடு ஒரு கோவையாய் உருவு வெளிப்பாட்டாலே நோவுபடாமல் அடியார்கள் குழாங்களை உடன் கூடி நித்தியானுபவம் பண்ணப்பெறுவர். மாய்கையும் உருவு வெளிப்பாடும் பரியாயம் என்று இருக்கிறார்காணும்.

அன்றிக்கே, 'மாயார்' என்பதற்கு, 'பிரியார்' என்னுதல். [4] பகவத் அபசாரம் பாகவத அபசாரம் உண்டானால் வருமது போல அன்றே, பகவானுடைய அங்கீகாரம் உண்டாய் அது நிலை நில்லாமையால் படும் கிலேசம்? [5] பிரளயம் கோத்தாற்போலே, கண்ணைக்

---

1. அப்பொருளை விவரணம் செய்கிறார், 'அவர்கள் கண்களுக்கு' என்று தொடங்கி.

2. ஆயிரத்துக்கு 'உட்கு' இன்னது என்று அருளிச்செய்கிறார், 'சொல்லப்படுகின்ற' என்று தொடங்கி.

3. நித்தியசூரிகளுக்கு 'உட்கு' இன்னது என்று அருளிச்செய்கிறார் 'நித்தியானுபவம்' என்று தொடங்கி. என்றது, 'பகவானை அனுபவிக்கின்ற தன்மையில் சத்தி. மாயார் - பிரிந்து உருவு வெளிப்பாட்டாலே துக்கப்படார்.

4. 'நன்று! பகவத் அபசாரம் முதலாயின அல்லவோ துன்பத்தை உண்டாக்குவன? உருவு வெளிப்பாடு துன்பத்தை உண்டாக்குமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பகவத் அபசாரம்' என்று தொடங்கி. பகவானுடைய அங்கீகாரம் - பகவத் அனுபவம்.

5. 'உருவு வெளிப்பாடு துக்கத்தைக் கொடுப்பதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பிரளயம்' என்று தொடங்கி. கண்ணைக்கண் கோத்துக் கிடக்கையாவது, தம்முடைய கண்ணை அவனுடைய கண் கோத்துக் கிடக்கிறது என்றபடி.

கண் கோத்து அன்றோ கிடக்கிறது ? சூழவும் - [1] இவை எல்லாம் அவன் கழுத்துக்கு மேலே படுத்தின கிலேசம் அன்றோ ? (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

ஏழையர்கள் நெஞ்சை இளகுவிக்கு மாலழகு
சூழவந்து தோன்றித் துயர்விளைக்க—ஆழுமனந்
தன்னுடனே அவ்வழகைத் தானுரைத்த மாறன்பால்
மன்னுமவர் தீவினைபோம் மாய்ந்து. (67)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. ரசோக்தியாக அருளிச்செய்கிறார், 'இவை எல்லாம்' என்று தொடங்கி. என்றது, 'முகத்தில் உள்ள அவயவங்கள் இப்படிப் படுத்தும்படி கண்டால், மற்றை எல்லா அவயவங்களும் கூடினால் என் படுத்துமோ ?' என்றபடி. 'கழுத்துக்கு மேலே' என்றது, 'திருமுகத்தில் அழகு ஆகையாலே' என்றபடி.

# எட்டாந்திருவாய்மொழி—‘மாயா’

## முன்னுரை

ஈடு: [1] மேல் திருவாய்மொழி, உருவு வெளிப்பாடாய்ச் சென்றது. [2] கைக்கு எட்டாமையாலே உருவு வெளிப்பாடு என்று அறிவர் அன்றோ? [3] இனி, சர்வேஸ்வரன் தான் நினைத்த காரியம் செய்து தலைக்கட்டிக்கொள்ளுமளவும் நம்மை இங்கே வைத்திருப்பான் என்னும் இடமும் அறிவரன்றோ? ஆகிலும், அவனை ஒழியத் தரிக்க மாட்டாதவர் ஆகையாலே, இதனை நினைத்து ஆறி இருக்கவும் மாட்டாரே! [4] ‘விரோதியைப் போக்கித் தரவேணும்’ என்று இவர் விரும்பினாலும், அவனும் இவரைக்கொண்டு தான் நினைத்த பிரபந்தங்களைத் தலைக்கட்டிக்கொள்ளுமளவும் இவர் விரும்பியதைச் செய்யானே! [5] இவர் விரும்பியதைச் செய்யாதிருக்கச்செய்தேயும், இவரை இங்கே வைத்து வாழ்விக்கும் உபாயங்களும் அறிந்திருக்குமே! [6] ஆகையாலே, சில பொருள்களை உயிர் போகாதபடி

---

1. *மேல் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்கிறார், ‘மேல் திருவாய்மொழி’ என்று தொடங்கி.*

2. *‘உருவு வெளிப்பாடு என்று அறியும்படி என்?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘கைக்கு எட்டாமையாலே’ என்று தொடங்கி.*

3. *‘இவர் தம்மைச் சர்வேஸ்வரன் இங்கே வைத்திருப்பதற்குரிய காரியத்தை இவர்தாம் அறிந்திருக்க, விரைவதற்குக் காரணம் என்?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘இனி, சர்வேஸ்வரன்’ என்று தொடங்கி.*

4. *‘‘இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை’ என்று வேண்டிய போதே விரோதியைப் போக்காதிருப்பான் என்?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘விரோதியை’ என்று தொடங்கி.*

5. *‘இவர் விரும்பியதனை அவன் செய்யாவிட்டால் இவர் முடியாரோ?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘இவர் விரும்பியதை’ என்று தொடங்கி.*

6. *‘மேலே கூறியவற்றை எல்லாம் முடித்துக் காட்டுதல் முன்னாக, ஆச்சரியம் இருந்தபடி என்?’ என்று கேட்கும் பிரகாரத்தை அருளிச்செய்கிறார், ‘ஆகையாலே’ என்று தொடங்கி. இத்திருவாய்மொழியில் வருகிற ‘பாசங்கள் நீக்கி’ என்னும் திருப்பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி, ‘ஆகையாலே’ என்றது முதல் ‘அருளிச்செய்யவேணும்’ என்றது முடிய அருளிச்செய்கிறார். ‘சில பொருள்கள்’ என்றது, மீன் முதலாயினவற்றை.*

ஒன்றிலே கோத்திட்டு வைக்குமாறு போலே, முடியவும் ஒட்டாதே வாழவும் ஒட்டாதே நடுவே இருத்தி நலிகிறபடியை நினைத்து, 'எனக்கு இதில் பொருந்தாமை உண்டாய் இருக்கச் செய்தேயும் இச்சம்சாரத்திலே வைத்து என்னை நடத்திக்கொடு போருகிற இவ் வாச்சரியத்தை எனக்கு அருளிச்செய்ய வேண்டும்,' என்ன ஒன்றைக் கேட்க, வேறே சிலவற்றைச் சொல்லுவாரைப் போலே, 'இது ஒன்று கண்டோ நீர் ஆச்சரியப்படுகிறது? இவ்வளவு அல்லாத நம்முடைய விசித்திர உலக உருவமாய் இருக்குந் தன்மை யைப் பாரீர்!' என்று தன்னுடைய ஆச்சரியமான உலக உருவமாய் இருக்குந் தன்மையைக் காட்டிக்கொடுத்தான். அங்ஙனம் காட்டிக் கொடுத்த [1] அதுதானும் இவர் நினைத்தது அன்றேயாகிலும், அவன் காட்டிக்கொடுத்தது ஆகையாலே, அதுவும் இவருடைய பிரீதிக்குக் காரணமாக இருக்கும் அன்றோ? ஆக, இவர் ஒன்றைக் கேட்க, அவன் பல ஆச்சரியங்களைக் காட்டிப் பரிகரித்தான்.

[2] அக்குரூரன், யமுனையிலே புக்கு முழுகினவாறே பிள்ளைகளை நீருக்குள்ளே கண்டு அஞ்சிக் கரையிலே பார்த்தான்: அங்கேயும் கண்டான்; கண்டு, [3] 'ஓ கிருஷ்ணனே! இந்த உலகமானது, மஹாத்துமாவான எவனுடைய மிகப்பெரிய ஆச்சரிய சொரூபமா யிருக்கிறதோ, அப்படிப்பட்ட மிகப்பெரிய ஆச்சரியச் செயலை யுடைய உன்னோடு சேர்ந்தேன்,' என்று கொண்டு அவன் ஆச்சரியப்

---

1. 'இவர் விரும்பாதனவற்றை அவன் காட்டினால், இவர் மனம் நிறைவு பெற்றது ஆகுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அதுதானும்' என்று தொடங்கி.

2. உலக உருவமாய் இருக்குந்தன்மை ஆச்சரியம் என்னுமதற்கு உதாரணம் காட்டுகிறார், 'அக்குரூரன்' என்று தொடங்கி. இங்கே,

> 'நீரிற் புகுங்கண்டு தேரினைப் பார்க்கும் நிறுத்தியபொன்
> தேரில் தொழும்பின்னை நீரினில் காணும் சிறந்தபச்சைக்
> காரில் திறம்மெய் யரங்கனும் சேடனும் கஞ்சவஞ்சன்
> ஊரிற் செலஉடன் போம்அக்கு ரூரன்தன் உண்மகிழ்ந்தே.'

என்ற திருவரங்கத்துமாலைச் செய்யுள் நினைத்தல் தகும்.

3. 'ஜகத் ஏதத் மஹாஸ்சர்யம் ரூபம் யஸ்ய மஹாத்மந:
தேந ஆஸ்சர்யவரேண அஹம் பவதா க்ருஷ்ண ஸங்கத:'

என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 19 : 7.

'புகழும்நல் ஒருவன்' என்ற திருவாய்மொழியும், 'நல்குரவும் செல்வும்' என்ற திருவாய்மொழியும், இத்திருவாய்மொழியும் பொதுவாக நோக்க ஒன்றாக இருந்தனவேயாகிலும் ஒவ்வொன்றற்கும் வேறுபாடு சிறிது உண்டு என்க. 'புகழும் நல் ஒருவன்' என்ற திருவாய்மொழி ஐயத்திலே

பட்டாற்போலே, இவரும் அவனுடைய விசித்திரமான உலக உருவமாய் இருக்குந்தன்மையை அருளிச்செய்து ஆச்சரியமடைந்தவராகிறார்.

740

*மாயா! வாமன னே!மது சூதா! நீஅருளாய்*
*தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய்க் காலாய்த்*
*தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்*
*நீயாய் நீநின்ற வாறுஇவை என்ன நியாயங்களே!*

பொ - ரை: மாயவனே! வாமனனே! மதுசூதனனே! தீயாகி நீராகி நிலனாகி ஆகாசமாகிக் காற்றாகித் தாயாகித் தந்தையாகி மக்களாகி மற்றைய உறவினர்களாகி மேலும் சொல்லப்படாத பொருள்களுமாகி உனது உருவுமாகி நீ நின்றபடிகள் தாம் இவை என்ன படிகள்?

இத்திருவாய்மொழி, **கலிநிலைத்துறை.**

ஈடு: முதற்பாட்டு. [1] விசித்திரமான காரிய காரணங்களை எல்லாம் விபூதியாகவுடையனாய் இருக்கிற இருப்பை அநுசந்தித்து, 'இவை என்ன படிகள்!' என்று ஆச்சரியப்படுகிறார்.

மாயா - 'மாயா!' என்கிற இது, இத்திருவாய்மொழிக்காகச் சுருக்கமாய் இருக்கிறது. வாமனனே - [2] 'மாயன் என்கிற பதத்திற் சொல்லுகிற ஆச்சரியத்தினை அறிகிற இடமாய் இருக்கிறது. என்றது, [3] அன்றே பிறந்து அன்றே வளர்ந்து மஹாபலி பக்கலிலே சென்று, அவன் முன்னே நின்று, தான் சொன்னவை எல்லாம் செய்ய வேண்டும்படி வார்த்தை அருளிச்செய்து, சிற்றடியைக் காட்டிப் பெரிய அடியாலே அளந்துகொண்டு, இப்படிச்செய்த

---

நோக்கு. 'நல்குரவும் செல்வும்' என்ற திருவாய்மொழி மாறுபட்ட ஐஸ்வர்யத்திலே நோக்கு. இத்திருவாய்மொழி ஆச்சரியமாக உலக உருவமாய் இருக்குந்தன்மையிலே நோக்கு.

1. பின் மூன்று அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மாயன் – ஆச்சரியத்தையுடையவன். 'வாமனன்' என்ற பதம், 'ஆச்சரியத்தினை அறிதற்கு இடமாய் இருக்கிறது என்றபடி.'

3. 'வாமனன் இடத்தில் ஆச்சரியம் யாது?' என்ன, அதற்கு அருளிச்செய்கிறார், 'அன்றே பிறந்து' என்று தொடங்கி. 'அன்றே' என்பது, பெரியதிருவந்தாதி. முன்னோட்டுக் கொண்ட - மேலே எண்ணிக் கொண்ட.

செயல்கள் அனைத்தையும் முன்னேட்டுக்கொண்ட வாமனனே !' என்கிருர் என்றபடி. மதுசூதா - ஆச்சரியமான செயல்களுக்கு எல்லாம் ஸ்ரீ வாமனனைப் போலேயாயிற்று, பகைவர்களை அழிப்பதற்கு மதுசூதனன் என்கிறது. மதுசூதா நீ அருளாய் - [1] மது என்னும் அசுரனை அழித்தாற்போலே, எனக்கு ஓடுகிற ஐயத்தையும் நீயே போக்கித்தந்தருள வேணும். தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய்க் காலாய் - [2] காரியத்தைப்பற்றி இருக்கிற விசித்திரத் தன்மை கார ணத்திலேயும் உண்டாய் இருக்கும் அன்றோ ? [3] மேலும், ஒன்றின் படியாய் இராதே அன்றோ மற்றையது ? இப்படி வேறுபட்ட பிரகாரங் களையுடையனவான ஐம்பெரும்பூதங்களுக்கும் நிர்வாஹகனாய். தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் - [4] காரியவர்க்கத்திலும் தாய் செய்தது தமப்பன் செய்யமாட்டான் ; தமப்பன் செய்யும் உபகா ரங்கள் மக்கள் செய்யமாட்டார்கள் ; மக்கள் செய்யும் உபகாரம் உறவினர்கள் செய்யமாட்டார்கள் ; இப்படி எல்லாவிதமான உறவி னர்களுமாய். முற்றுமாய் - சொல்லப்படாத தொடர்பு பெற்றவை களாயுள்ள சேதன அசேதனங்கள் எல்லாவற்றிற்கும் நிர்வாஹகன் ஆனவனே !

நீயாய் - [5] உலக உருவமாய் இருக்கும் அளவு அன்றே தனக்கே உரியதான விக்கிரகத்தோடு கூடி இருக்கும் இருப்பு ?

---

1. *விரோதி அழித்தலைக் கூறுதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'மது என்னும்' என்று தொடங்கி.*

2. *'ஒரு தன்மையதான காரணத்திலே விசித்திரம் ஏது ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'காரியத்தைப் பற்றி' என்று தொடங்கி. என்றது, 'காரியம் விசித்திரமான போதே காரணமும் அதற்குத் தகுதியாய் இருக்க வேண்டும் என்பது அநுமானத்தால் சித்திக்கும்' என்றபடி.*

3. *மேலதற்கே வேறும் ஒரு பரிகாரம் அருளிச்செய்கிருர், 'மேலும்' என்று தொடங்கி. என்றது, 'காரணங்கள் பரஸ்பரம் விசித்திரங்கள்' என்றபடி.*

4. *காரியவர்க்கத்திலும் விசித்திரமான தன்மையை அருளிச்செய் கிருர், 'காரியவர்க்கத்திலும்' என்று தொடங்கி. என்றது, 'ஒருவனே எல்லாவிதமான உறவு ஆகிறதும் ஆச்சரியம்' என்றபடி.*

5. *'நீயாய்' என்பதற்கு 'அசாதாரண விக்கிரகத்தோடு கூடியவன்' என்று பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி, 'இதிலே ஆச்சரியம் யாது ?' என்னும் சங்கைக்குப் பரிகாரம் அருளிச்செய்கிருர், 'உலக உருவமாக' என்று தொடங்கி.*

[1] இவர்க்குப் பரமபதத்திலே நித்தியசூரிகளுக்கு இனியனாய் இருக்கும் இருப்போடு, உலக உருவமாக நிற்கும் நிலையோடு வாசி அறப் போக்கியமாம்படி அன்றோ இவர்க்குப் பிறந்த ஞானத்தின் தெளிவு இருக்கிறபடி ? நீ நின்றவாறு-இப்படி இவை எல்லாமாய்க்கொண்டு நீ நின்ற பிரகாரம். இவை என்ன நியாயங்கள் - இவை என்ன படிகள்தாம் ? [2] முதல் திருவாய்மொழியிலே இவனுடைய இறைமைத் தன்மையை அனுபவித்திருக்கச்செய்தேயும், இதற்கு முன்பு கண்டறி யாதாரைப் போலே புதியராய் அனுபவிக்கிறாராயிற்று. [3] குணானு பவத்தில் கணந்தோறும் புதுமை பிறந்து அப்பொழுதைக்கு அப் பொழுது என் ஆராவமுதமாய் அனுபவிக்குமாறு போலேயாயிற்று, விபூதி அனுபவத்திலும் புதியராய் அனுபவிக்க வல்ல படி. இவை என்ன நியாயங்கள் நீ அருளாய் - இதனை அருளிச்செய்யவேணும். [4] 'ஏ கிருஷ்ணனே ! என் சந்தேகத்தை அடியோடு போக்குதற்கு நீதான் தக்கவன் ; இந்தச் சந்தேகத்தை நீக்குகின்றவன் உன்னை ஒழிய வேறு ஒருவன் இலன்,' என்கிறபடியே, அருச்சுனனுடைய சந்தேகத்தைத் தீர்த்தாற்போலே, என்னுடைய ஐயத்தையும் தீர்த் தருள வேணும். (1)

---

1. 'அழுக்குப் பதித்த உடம்பையும், 'நீயாய்' என்று பரஞ்சுடர் உடம்பையும் ஒக்க அருளிச்செய்வான் என் ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இவர்க்கு' என்று தொடங்கி.

2. 'மேலே இவனுடைய விபூதி யோகத்தை அனுபவித்திருக்க, இப்போதும் முன் போலே ஆச்சரியப்படுவான் என் ?' என்ன, 'முதல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய் கிறார். 'முதல் திருவாய்மொழியிலே' என்றது, 'உயர்வற உயர்நல முடையவன் யவன் ?' என்று தொடங்கும் திருப்பதிகத்தை.

3. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'குணானுபவத்தில்' என்று தொடங்கி. 'அப்பொழுதைக்கு அப்போது' என்பது திருவாய். 2. 5 : 4.

4. 'உமக்குத் தோன்றுகிற பொருத்தமில்லாத ஐயங்களை என்னால் தீர்க்கப் போமோ ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஏ கிருஷ்ணனே' என்று தொடங்கி.

'ஏதம் மே ஸம்ஶயம் க்ருஷ்ண சேத்தும் அர்ஹஸி அஶேஷத:
த்வத் அந்ய: ஸம்ஶயஸ்ய அஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே '

என்பது, ஸ்ரீ கீதை, 6 : 39.

741

அங்கண் மலர்த்தண் துழாய்முடி அச்சுத னே!அருளாய்
திங்களும் ஞாயிறு மாய்ச்செழும் பல்சுட ராய்இருளாய்ப்
பொங்கு பொழிமழை யாய்ப்புக ழாய்ப்பழி யாய்ப்பின்னும் நீ
வெங்கண்[1]வெங் கூற்றமு மாம்இவை என்ன விசித்திரமே!

பொ - ரை : அழகிய தேனோடு கூடிய மலர்களையுடைய குளிர்ந்த திருத்துழாயை முடியிலேயுடைய அச்சுதனே ! சந்திரனும் சூரியனுமாகி அழகிய பல வகையான நக்ஷத்திரங்களாகி இருளாகியும், மிகுதியாகப் பெய்கின்ற மழையாகிப் புகழாகிப் பழியாகி, அதற்கு மேலே தறு கண்மையும் கொடுமையு முடைய யமனுமாய் இருக்கின்ற இவை என்ன ஆச்சரியம் ! அருளிச்செய்வாய்.

ஈடு : இரண்டாம் பாட்டு. [2]சந்திரன் சூரியன் முதலான பொருள்கள் முழுதும் தனக்கு விபூதியாகவுடையனாய் இருக்கிற படியை அருளிச்செய்கிறார்.

அம் கள் மலர்த் தண் துழாய் முடி அச்சுதனே - அழகிதாய்த் தேனோடு கூடின மலரையுடைத்தாய்க் குளிர்ந்திருந்துள்ள திருத் துழாயைத் திருமுடியிலேயுடையையாய், [3]அந்த ஒப்பனையால் வந்த அழகுக்கு ஒரு நாளும் ஒரு வேறுபாடு இன்றிக்கே என்றும் ஒக்க நித்தியமாம்படி இருக்கிறவனே ! [4]வைத்த வளையத்தைப் போன்றும் போக்கியமாகிறதாயிற்று விபூதி அனுபவம் இவர்க்கு. [5]'மேல் திருவாய்மொழியிலே 'விள்கின்ற பூந்தண் துழாய் விரை நாற வந்து' என்று சொன்னதை நினைக்கிறார்' என்று பிள்ளான்

---

1. 'கூற்றமுமாய்' என்பதும் பாடம்.

2. பின் மூன்று அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

3. 'அச்சுதன்' என்பதன் பொருள், 'அந்த ஒப்பனையால்' என்று தொடங்கும் வாக்கியம். அச்சுதன் - அழியாதவன்.

4. 'விபூதியைப்பற்றிச் சொல்லுகிற இவ்விடத்திலே ஒப்பனை அழகினைச் சொல்லுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார், 'வைத்த வளையத்தைப் போன்றும்' என்று தொடங்கி.

5. மேலதற்கே வேறும் ஒரு பரிகாரம் அருளிச்செய்கிறார், 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி.

பணிப்பர். [1] மாயன் குழல் விள்கின்ற பூந்தண் துழாய் உருவு வெளிப்பாடாய்த் துன்புறுத்தல் தவிர்ந்து, நேரே கண்டு அனுபவிக்கிறார் அன்றோ? திங்களும் ஞாயிறுமாய் - [2] 'சூரியகிரணங்களால் உண்டான தாபத்தைச் சந்திரன் நீக்கினான்,' என்கிறபடியே, சூரியனுடைய கிரணங்களாற்பிறந்த வெப்பம் எல்லாம் போம்படி குளிர்ச்சியைச் செய்யக்கூடியதான சந்திரனும் அவனால் வந்த குளிர்ச்சியை அறுத்துக்கொடுக்கும் சூரியனுமாய். [3] செழும் பல் சுடராய் - சேதநர்க்கு வரும் லாபாலாபங்களை அறிதற்குத் தகுதியான சஞ்சாரத்தையுடைய நக்ஷத்திரங்களுமாய்.

இருளாய் - சேதநர்கட்கு இன்ப நுகர்ச்சிக்கு உரியதான இருளாய். பொங்கு பொழி மழையாய் - எல்லாப் பிராணிகளும் உயிர் வாழலாம்படி பயிர்களை உண்டாக்கும் மழையுமாய். புகழாய் - எல்லாரும் ஆசைப்படும் கீர்த்தியாய். பழியாய்-எல்லாரும் வருந்தியும் நீக்கக் கூடியதான பழியாய். பின்னும்-அதற்கு மேலே. வெங்கண் வெங் கூற்றமுமாம் - [4] 'முன்னே இளகின மனத்தையுடையவரும் புலன்களை அடக்கியவரும் எல்லாப் பிராணிகளுக்கும் நலத்தைச் செய்வதில் விருப்பமுடையவருமாய் இருந்துவிட்டு இப்போது சீற்றத்தை அடைந்து இயல்பான தன்மையை விடத் தக்கவர் அல்லர்' என்கிறபடியே, இவை மிகுதியுற்றவாறே குளிர நோக்குமது தவிர்ந்து, வெவ்விதான நோக்கினையுடையையாய். அன்றிக்கே,

1. 'மேல் திருவாய்மொழியிலே துன்பத்தைச் செய்வனவாக அருளிச்செய்த பொருள்களை, தாரகமாக அனுபவிக்கிற இத்திருவாய்மொழியிலே நினைத்தல் தகுமோ?' என்ன, 'மாயன் குழல்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. சூரிய சந்திரர்களுக்குரிய விசித்திரத் தன்மையை அருளிச்செய்கிறார், 'சூரிய கிரணங்களால்' என்று தொடங்கி.

'ஸூர்யாம்ஸு ஜநிதம் தாபம் நிந்யே தாராபதி: ஸ்மம்
அஹம் மாநோத்பவம் துக்கம் விவேக: ஸுமஹாந் இவ'

என்பது ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 10 : 13.

3. 'செழுமை' என்பது, ஈண்டு அழகினைக் குறிக்கின்றது. 'நக்ஷத்திரங்களுக்கு அழகாவது யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சேதநர்க்கு' என்று தொடங்கி.

4. 'வெங்கண்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'முன்னே' என்று தொடங்கி.

'புரா பூத்வா ம்ருது: தாந்த: ஸர்வபூத ஹிதேரத:
ந க்ரோதவஸம் ஆபந்ந: ப்ரக்ருதிம் ஹாதும் அர்ஹஸி'

என்பது, ஸ்ரீ ராமா. ஆரண். 65 : 4.

வெங்கூற்றம்-அந்தகன் 'தண்ணீர்' என்னும்படி வெவ்விய கூற்றமுமாம். என்றது, அழித்தல் தொழிலில் [2] உருத்திரனுக்கு அந்தர்யாமியாய் இருக்கும் தன்மையைச் சொன்னபடி. இவை என்ன விசித்திர்மே - இவை என்ன ஆச்சரியந்தான்! அருளாய். (2)

742

*சித்திரத் தேர்வல வா!திருச் சக்கரத் தாய்!அருளாய்*
*எத்தனை யோர்உக மும்அவை யாய்அவற் றுள் இயலும்*
*ஒத்தஒண் பல்பொருள் கள்உலப் பில்லன வாய்வியவாய்*
*[1]வித்தகத் தாய்நிற்றி நீஇவை என்ன விடமங்களே!*

**பொ - ரை :** 'அழகிய தேரை நடத்தியவனே! அழகிய சக்கரத்தையுடையவனே! யுகங்கள் அவையுமாகி, அவற்றுள் நடக்கின்ற ஒத்தனவாயும் ஒள்ளியவாயும் எல்லையில்லாதனவாயும் இருக்கின்றனவாகிய பல பொருள்களாகியும் அவற்றின் வேறுபாடுகளாகியும் ஆச்சரியப் படத்தக்கவனுய் நீ நிற்கின்ருய்; இவை என்ன வேறுபாடுகள்! அருளிச்செய்ய வேண்டும்,' என்கிருர்.

**வி – கு :** 'எத்தனையோர் உகம் அவையுமாய்' எனப் பிரித்துக் கூட்டுக. 'ஒத்த ஒண் உலப்பு இல்லன பல்பொருள்களாய்' என்க. வியவு – வேறுபாடு, விடமம் – வேறுபாடு.

ஈடு: மூன்றும் பாட்டு. [2] 'கிருதயுகம் முதலான யுகங்களையும், அந்த அந்தக் காலங்களில் உண்டான தேவர் மனிதர் முதலான பொருள்களையும் விபூதியாகவுடையவன்,' என்கிருர்.

சித்திரம் தேர் வலவா - விசித்திரமாம்படியாகத் தேரை நடத்த வல்லவனே! [3] விசித்திரமாவது, துரோணன் கையும் அணியும் வகுத்து வாசலைப் பற்றி நிற்க, அவனை வளைந்து அவனுக்கு அவ்வருகே தேரைக் கொடுபோய் நிறுத்தி, அவன் போர் செய்தற்கு இடம் அறுத்தல். அன்றிக்கே, 'வீடுமன் கையில் அம்பு தூரப்போய்

---

1. 'வித்தகத்தால்' என்பதும் பாடம்.

2. பின் மூன்று அடிகளையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிருர்.

3. விசித்திரத்தை இரண்டு வகையாக அருளிச்செய்கிருர், 'விசித்திரமாவது' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும். கையும் அணியும் வகுத்து - போரிலே வியூகம் வியூகமாகப் பிரித்து.

விழும்; அருச்சுனன் கையில் அம்பு இவ்வருகே விழும்; ஆகையாலே, அவன் அம்பு விடப் புக்கவாறே தேரைப் பின்னே கழலக் கொடு போயும், இவன் அம்பு விடப் புக்கவாறே தேரைக் கிட்ட நிறுத்தியும், இப்படித் தேரை நடத்தும்படியை நோக்கி' என்னவுமாம். திருச்சக்க ரத்தாய்-[1] பகலை இரவாக்கும் பரிகரத்தையுடையவனே! எத்தனையோ உலகுமவையாய் - கிருத்யுகம் முதலான யுகங்களுக்கெல்லாம் நிர்வாககனாய். அவற்றுள் இயலும் - அவற்றுக்குள்ளே வாழ்கிற. [2]ஒத்த வியவாய் ஒண்பல் பொருள்கள் உலப்பில்லனவாய் - ஓர் ஆகாரத்தாலே ஒத்தும், வேறு ஆகாரத்தாலே வேறுபட்டும் இருப்பனவுமாய், விலட்சணமுமான பல வகைப்பட்ட பொருள்கள் பலவற்றையுடையையாய். என்றது, 'தேவர் மனிதர் முதலிய சாதியாலே ஒத்தும், வடிவு வேறுபாட்டாலே வேறுபட்டும் இருக்கிற பல பொருள்களுமாய்' என்றபடி. அன்றிக்கே, எல்லா ஆத்து மாக்களும் ஞானத்தாலே ஒத்திருக்கச் செய்தேயும் நான் நீ முதலிய வேறுபாட்டாலே வேறுபட்டவர்களாய் இருப்பர்கள் அன்றோ? அவற்றைத் தெரிவித்தபடி ஆகலுமாம். வித்தகத்தாய் நிற்றி நீ - இப்படி ஆச்சரியப்படத் தக்கவனாய்க் கொண்டு நில்லாநின்றாய் நீ. இவை என்ன விடமங்களே - இவை என்ன சேராச் சேர்த்தியான செயல்கள்தாம்? (3)

743

*கள்ளவிழ் தாமரைக் கண்கண்ண*
*னே!எனக்கு ஒன்றுஅருளாய்*
*உள்ளதும் இல்லதும் மாய்உலப்*
*பில்லன வாய்வியவாய்*
*வெள்ளத் தடங்கட லுள்விட*
*நாகணை மேன்மருவி*
*உள்ளப் பல்யோகு செய்தி*
*இவைஎன்ன உபாயங்களே!*

பொ - ரை: 'தேனோடு மலர்கின்ற தாமரை போன்ற திருக்கண் களையுடைய கண்ணனே! அழிதல் இல்லாததாய் இருக்கின்ற சித்து ஆகியும், அதினின்றும் வேறுபட்டதாய் இருக்கின்ற அழிந்து

1. 'சித்திரத்தேர் வலவா' என்றதன் பின், 'திருச்சக்கரத்தாய்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'பகலை இரவாக்கும்' என்று தொடங்கி. இதுவும் ஒரு விசித்திரம் என்பது கருத்து.

2. பின் இரண்டு அடிகட்குக் கருத்து, 'ஒத்திருப்பனவுமாய், வியவாயிருப்பனவுமாய், உலப்பு இல்லனவுமான ஒண்பல் பொருள்களை யுடையையாய்க் கொண்டு வித்தகத்தாய் நிற்றி நீ' என்பதாம். வியவாய் - வேறுபட்டனவாய்.

போகின்ற அசித்தாகியும், திருப்பாற்கடலில் விஷம் பொருந்திய ஆதி சேஷ சயனத்தின்மேல் பொருந்தித் திருவுள்ளத்திலே பல விதமான காக்கும் உபாயங்களைச் சிந்தனை செய்கிறாய்; இவை என்ன விரகுகள் தாம்! எனக்கு ஒன்று அருளிச்செய்யவேண்டும்,' என்கிறார்.

வி—கு: 'உலப்பு இல்லன உள்ளதுமாய், வியவாய் இல்லதுமாய்' என்க. உள்ளது - ஆத்துமா. இல்லது - அசித்து.

ஈடு: நான்காம் பாட்டு. [1] உலகத்தில் நித்திய அநித்தியமான பொருள்களை விபூதியாகவுடையனாய் இருக்கிறபடியை அருளிச் செய்கிறார்.

கள் அவிழ் தாமரைக்கண் கண்ணனே - அப்போது அலர்ந்த தாமரைப்பூப்போலே இருக்கின்ற திருக்கண்களையுடையவனாய்ப் பவ்யனாய் இருக்கிறவனே! [2] அவனுடைய திருக்கண்கள் போலே ஆயிற்று, இவர்க்கு விபூதியும கவர்ச்சியாய் இருக்கிறபடி. அன்றிக்கே, 'திருக்கண்களைப் போன்று துன்பத்தைச் செய்வதாகா நின்றது ஆயிற்று விபூதி அனுபவமும் இவர்க்கு,' என்னுதல். [3] 'துன்பத்தைச் செய்வதாவது என்?' என்னில், 'இன்னது' என்று நிச்சயிக்கமாட்டாதே ஐயுற்றுப் பட்டது ஒரு துக்கம் உண்டே அன்றோ? அதுவும் துன்பத்தைச் செய்வதாக இருக்குமே? அதனைச் சொல்லுகிறது. அன்றிக்கே, 'மேல் திருவாய்மொழியிலே, 'சூழவும் தாமரை நாண்மலர்போல் வந்து தோன்றும்' என்றதனை நினைக் கிறார்,' என்று **பிள்ளான்** பணிக்கும். [4] அதனைச் **சீயர்** கேட்டருளி, 'மேலே ஓடுகிறரீதியின்படியே இதுவும் ஆகப்பெற்றதாகில் அழகிது!

---

1. *'உள்ளதும் இல்லதுமாய்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

2. *'உலகத்தைப் பற்றிப் பேசும் இவ்விடத்தில் கண் அழகினைச் சொல்லுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவனுடைய' என்று தொடங்கி.*

3. *'பிரிந்திருக்கும் நிலையிலே அன்றோ உலக அனுபவம் துன்பத்தைச் செய்வதாக இருப்பது? இப்போது துன்பத்தைச் செய்வதாகிறபடி என்?' என்கிற சங்கையை அநுவதித்துப் பரிகரிக்கிறார், 'துன்பத்தைச் செய்வதாவது' என்று தொடங்கி. என்றது, 'முடிச்சோதியாய்' என்ற திருவாய்மொழியிற் கூறியபடியே சந்தேகமாய்க்கொண்டு பாதகமாகிறது என்றபடி.*

4. *பிள்ளான் நிர்வாகத்துக்கு, நஞ்சீயர் அருளிச்செய்யும் படியை அருளிச்செய்கிறார், 'அதனை' என்று தொடங்கி.*

அங்ஙன் அன்றிக்கே, இது வேறு ரசமாய் அறிவுண்டான பின்பு இவ்விடத்தோடு பொருந்தமாட்டாது' என்று அருளிச்செய்தாராம். உள்ளதும் இல்லதுமாய் உலப்பு இல்லனவாய் வியவாய் - [1] உலப்பு இல்லனவாய்க் கொண்டு உள்ளதுமாய், வியவாய்க்கொண்டு இல்லதுமாய் இருக்கின்ற சேதந அசேதநங்களுக்கு நிர்வாஹகனுய். 'அரசனே! எது எந்தக் காலத்திலும் வளர்தல் குறைதல் முதலிய வேறுபாடுகளை அடைவது இல்லையோ, அதுதான் வஸ்து; 'அது எது?' என்று ஆராய்ந்து பார்,' என்கிறபடியே, அசித்து அழிந்து போவதாய் இருக்கையாலே '**இல்லது**' என்று சொல்லலாய் இருக்கும்; ஆத்துமவஸ்து ஒரே தன்மையதாக இருக்கையாலே '**உள்ளது**' என்கிறது.

வெள்ளம் தடம் கடலுள் விடம் நாகணைமேல் மருவி - திருப்பாற் கடலில், பிரதிகூலர்க்குக் கிட்ட ஒண்ணுதபடி விஷத்தை உமிழா நின்றுள்ள திருவனந்தாழ்வான்மேலே பொருந்தி. [2]'ஆங்கு ஆர வாரமது கேட்டு அழல் உமிழும், பூங்கார் அரவணையான்' என்கிற படியே, இடம் அல்லாத இடததிலும் அச்சத்தாலே சங்கைகொண்டு அழல் உமிழுமவன் அன்றே? உள்ளப்பல் யோகு செய்தி - திரு வுள்ளத்திலே இரட்சணசிந்தை பல செய்யாநிற்றி. ஆத்துமாக்கள் பல்வேறு வகைப்பட்டிருத்தலைப்போலும் போருமாயிற்று, அவன் செய்யும் இரட்சண சிந்தையில் பரப்பு. [3] இப்போது இது முன்னும்

---

1. 'உலப்பு இல்லனவாய்' என்றது, 'நாசம் இல்லாதனவாய்' என்றபடி. இது, 'உள்ளதும்' என்றதற்கு அடைமொழி. 'வியவாய்' என்றது, 'அழிந்துபோவனவாய்' என்றபடி. இது, 'இல்லறம்' என்ற தற்கு அடைமொழி. 'வியவாய்' என்பது, 'வீயவாய்' என்றதன் திரிபு. வீ – அழிவு.

ஒரே தன்மையவாய் இருத்தலையும், வேறுபாடும் தன்மையவாய் இருத்தலையும் நோக்கிச் சேதந அசேதநங்களை 'உள்ளதும் இல்லதும்' என்கிறுர். திருவாய்மொழி. 1, 2 : 4 வியாக். பார்க்க. இதனைப்பிரமாண முகத்தாலே விளக்குகிறுர், 'அரசனே' என்று தொடங்கி.

'யத்து காலாந்தரேணுபி ந அந்ய ஸம்ஜ்ஞாம் உபைதி வை
பரிணுமாதி ஸம்பூதாம் தத்வஸ்து ந்ருப தச்ச கிம்'

என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 2. 13 : 96.

2. அப்படி விஷத்தை உமிழுமவன் என்பதற்குப் பிரமாணம் காட்டு கிறுர், 'ஆங்காரவாரம்' என்று தொடங்கி. இது, நான்முகன் திருவந். 10.

3. 'முன்னும் பின்னும் விபூதி யோகத்தைச் சொல்லாநிற்க, நடுவே உபாய சிந்தையைச சொல்லுவான் என்?' என்ன, சேதந அசேதனங்களைப் பற்றிச் சொல்லுமிடத்தில் உபாயசிந்தை இடைப்பிறவரலாக (பிரா சங்கிகம்) வந்தது என்கிறுர், 'இப்போது' என்று தொடங்கி.

பின்னும் சேருமாறு யாங்ஙனம்?' எனின், அசித்தாவது, அழிவதாய்க் கொண்டு விடக்கூடியதாக இருக்கும்; ஆத்துமவஸ்து ஒரே தன்மைய தாய்க்கொண்டு கொள்ளக்கூடியதாக இருக்கும்; இவை இரண்டையும் நியமிப்பவனுய் இருப்பான் ஈஸ்வரன்; 'இச்சேதனன்தானும், தான் செய்தது ஒரு கர்மமும் தனக்கு என்ன ஒரு ருசியுமாய் இருக்கையாலே, இவன், தனக்கு என்ன ஓர் இச்சை பிறக்கில் அல்லது நம்மைப் பெற விரகு அற்று இருந்தது; இவனுக்கோ, அது இல்லையாய் இருந்தது; இனிச் செய்யும்படி என்?' என்று, இவன், 'இங்ஙின்ற நீர்மை இனி யாம் உருமை' என்ருல் செய்யுமதனை, இவன் தலையிலே இசைவு இன்றிக்கே இருக்கச் செய்தே, 'இவன் நம்மைக் கிட்டிஞனும் விரகு ஏதோ?' என்று அதற்கு உறுப்பாக உபாய சிந்தை செய்து திருக்கண்வளர்ந்தருளுகிறபடி' என்க. இவை என்ன உபாயங்களே - [1]சேதநர் பலராஞல் அவ்வவருடைய இரட்சணங்களும் பலவாயே அன்றே இருப்பன? அதற்குத் தகுதியாக உபாயங்களையும் அறியுமே முற்றறிவினன் ஆகையாலே. இவை என்ன விரகுகளே! (4)

744

***பாசங்கள் நீக்கிஎன் னைஉனக் கேஅறக் கொண்டிட்டுநீ***
***வாச மலர்த்தண் துழாய்முடி மாயவ னே!அருளாய்***
***காயமும் சீவனு மாய்க்கழி வாய்ப்பிறப் பாய்ப்பின்னும்நீ***
***மாயங்கள் செய்துவைத் தி;இவை என்ன மயக்குகளே.***

பொ - ரை: 'சரீரமும் ஆத்துமாவுமாகியும், இறப்பாகிப் பிறப்பாகியும் இருக்கின்ற வாசனை பொருந்திய மலர்களையுடைய குளிர்ந்த திருத்துழாயினைத் தரித்த திருமுடியையுடைய மாயவனே! நீ என்னுடைய பாசங்களை எல்லாம் நீக்கி என்னை உனக்கே அடிமையாகக் கொண்டும், அதற்கு மேலே நீ இச்சரீரத்தோடே பொருத்தி வைத்திருக்கின்ருய்; இவை என்ன மயக்கங்கள்? அருளிச்செய்ய வேண்டும்' என்கிருர்.

வி - கு: 'கழிவாய்ப் பிறப்பாய் இருக்கின்ற முடி மாயவனே!' எனக் கூட்டுக. 'நீக்கி அறக்கொண்டிட்டும் பின்னும் வைத்தி,' என்க.

---

1. 'உபாயங்களே' என்ற பன்மைக்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'சேதநர் பலராஞல்' என்று தொடங்கி.

ஈடு: ஐந்தாம் பாட்டு. இத்திருவாய்மொழிக்கு [1] நிதானமான பாட்டாயிற்று இது. அதாவது, 'மயர்வற மதிநலம் அருளி, பின்னையும் எனக்குப் பொருந்தாததான சம்சாரத்திலே என்னை வைத்து வாழ் வித்துக்கொடு போகிற இவ்வாச்சரியம் இருந்தபடியை எனக்கு அருளிச்செய்ய வேணும்,' என்கிறார்.

பாசங்கள் நீக்கி - மயர்வை அறுத்து; என்றது, 'அவித்தியை முதலானவைகளைப் போக்கி' என்றபடி. [2] பல செய்வினை வன் கயிற்றால் சூழ்த்துக்கொண்டதனை நீக்கி. என்னை - வேறு விஷயங் களிலே கால் தாழ்ந்திருக்கிற என்னை. உனக்கே அறக்கொண்டிட்டு- துயர் அறு சுடர் அடி தொழும்படியாகச் செய்து. 'பாசங்கள் நீக்கிற்றும் தனக்கே அறக்கொண்டதும் எதனைக்காட்டி?' என்னில், வாசம் மலர்த் தண்துழாய் முடி மாயவனே - வைத்த வளையத்தில் அழகைக் காட்டியாயிற்று, [3] புறம்பு உண்டான பற்று அறுத்ததும், தனக்கேயாம்படியாகச் செய்ததும். அருளாய் - இவ்வளவு புகுரநின்ற என்னை இங்கே இட்டுவைத்து நலியவோ? காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய் - சரீரமும் ஆத்துமாவுமாய், பிறப்பு இறப்பு களுமாய். பின்னும் நீ மாயங்கள் செய்து வைத்தி - உன் பக்கலிலே அறிவைப் பிறப்பித்து, பின்னையும் இதிலே பொருந்தாதபடியான என்னைச் சம்சாரத்திலே வையாநின்றாய். இவை என்ன மயக்குகளே- இவை என்ன தெரியாத செயல்கள்தாம்! புறம்பு உண்டான பற்றை அறுத்து உன் பக்கலிலே அன்பைப் பிறப்பிக்கையாலே நீ அங்கீகரித் தாயோ என்று இராநின்றேன்; பின்னையும் இச்சம்சாரத்திலே வைக்கையாலே கைவிட நினைத்தாயோ என்று இராநின்றேன்; இது என்ன மயக்கம்! (5)

---

1. உலக உருவமாக இருக்கிற ஆச்சரியமான தன்மையை அனுபவிப் பிக்கைக்குக் காரணம் சொல்லுகிறது ஆகையாலே, இதனை 'நிதானமான பாட்டு' என்கிறார். அதனை விவரணம் செய்கிறார், 'அதாவது' என்று தொடங்கி.

2. 'அவித்தியை முதலானவைகள் பாசங்களாமோ?' என்ன, 'ஆம்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பலசெய்வினை' என்று தொடங்கி. இது, திருவாய். 5. 1 : 5.

3. மேலதனை விவரணம் செய்கிறார், 'புறம்பு உண்டான' என்று தொடங்கி.

745

**மயக்கா! வாமனனே! மதியாம் வண்ணம் ஒன்றருளாய்**
**அயர்ப்பாய்த் தேற்றமுமாய் அழலாய்க் குளிராய் வியவாய்**
**வியப்பாய் வென்றிகளாய் வினையாய்ப் பயனாய்ப் பின்னுநீ**
**[1] துயக்கா நீநின்ற வாறுஇவை என்ன துயரங்களே.**

பொ - ரை : 'மயக்குகின்றவனே ! வாமனனே ! நான் தெளியும்படி ஒன்று அருளிச்செய்ய வேண்டும் ; மறப்பு ஆகித் தெளிவு ஆகி வெப்பமாகிக் குளிர்ச்சியாகி ஆச்சரியமாகி ஆச்சரியப்படத்தக்க பொருள்களுமாகி வெற்றிகளுமாகி இரு வினைகளாகி இருவினைப் பயன்களுமாகி அதற்கு மேலே உன்னை அடைந்த அடியவர்களும் மதி மயங்கும்படி நீ செய்துகொண்டு நின்ற விதம் எங்களுக்குத் துக்கத்தைத் தருகின்றனவாய் இராநின்றன,' என்றவாறு.

ஈடு : ஆறும் பாட்டு. [2] மறதி தொடக்கமான மாறுபட்ட பொருள்களை விபூதியாக உடையனாய் இருக்கிறபடியை அருளிச்செய்கிறார்.

மயக்கா - இன்னார் என்று இன்றிக்கே, யாரேனுமாகக் கிட்டினாரை மயங்கச் செய்யுமவனே ! 'அது எங்கே கண்டோம் ?' என்னில், வாமனனே - காரியம் செய்யப்போந்த நீ, அந்தத் தேவர்களை நெருக்கின மஹாபலி தானே நெஞ்சு நெகிழ்ந்து உன் கையிலே நீரை வார்த்துத் தானே இசைந்து தரும்படி மயங்கச் செய்தவனே ! [3] 'மன்னை மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி' என்கிறபடியே. மதியாம் வண்ணம் ஒன்று அருளாய் - அநுகூலர் பிரதிகூலர் என்ற வேற்றுமை இல்லாமல் மயங்கச் செய்யாதே, நான் தெளிவையுடையேனாம்படி செய்தருளவேணும். அயர்ப்பாய்த் தேற்றமுமாய் - [4] 'நினைவும் ஞானமும் மறப்பும் என்னிடமிருந்து உண்டாயின'

---

1. 'துயக்காய்' என்பதும் பாடம்.

2. பின் மூன்று அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. மகாபலியை மயங்கச் செய்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மன்னை' என்று தொடங்கி. இது, பெரிய திருமடல், 109.

4. 'மறப்பும் தெளிவும் அவனாகக் கூடுமோ?' என்ன, 'கூடும்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நினைவும்' என்று தொடங்கி.

'ஸர்வஸ்யச அஹம் ஹ்ருதி ஸந்நி விஷ்ட:
மத்த: ஸ்மிருதி: ஜ்ஞானம் அபோஹநம் ச'

என்பது, ஸ்ரீகீதை, 15 :15.

என்ருன் அன்ரே தானே, மறதியும் தெளிவுமாய்? [1] இவ்விடத்தில் மாறுபட்ட தன்மையைச் சொல்லுகிறது அன்று, விசித்திரமான தன்மையைச் சொல்லுகிறது. அழலாய்க் குளிராய் - சீத உஷ்ணங்களாய். வியவாய் வியப்பாய் - ஆச்சரியமும் ஆச்சரியப் படத்தக்க பொருள்களுமாகி. வென்றிகளாய் - வெற்றிகளாய். வினையாய்ப் பயனாய் - புண்ணிய பாப கர்மங்களாய் அவற்றினுடைய பலங்களுமாகி. பின்னும் நீ துயக்கா - அதற்கு மேலே, உன்னை அடைந்தவர்களும் மதி கலங்கும்படி, அந்யதா ஞானம் விபரீத ஞானம் இவற்றை உண்டாக்கி. நீ நின்றவாறு - நீ நின்ற பிரகாரம். இவை என்ன துயரங்களே - [2] உனக்கு இவற்றில் அருமை இன்றியே விளையாட்டாய் இராநின்றது; எங்களுக்கு அவைதாம் துக்கத்தைக் கொடுக்கக் கூடியவையாய் இராநின்றன. (6)

746

*துயரங்கள் செய்யும்கண் ணா!சுடர்*
*நீள்முடி யாய்!அருளாய்*
*துயரஞ்செய் மானங்க ளாய்மத*
*னாகி உகவைகளாய்த்*
*துயரஞ்செய் காமங்க ளாய்த்துலை*
*யாய்நிலை யாய்நடையாய்த்*
*துயரங்கள் செய்துவைத் தி;இவை*
*என்னசுண் டாயங்களே.*

பொ - ரை: *துன்பங்களைச் செய்கின்ற கண்ணனே! பிரகாசம் பொருந்திய நீண்ட திருமுடியையுடையவனே! துன்பங்களைச் செய்கிற சாதி முதலானவை பற்றி வருகின்ற மானங்களாகியும், செருக்காகியும், மகிழ்ச்சிகளாகியும், துன்பங்களைச் செய்கின்ற காமங்களாகியும், அளவாகியும், நிற்றலாகியும், நடத்தலாகியும் துன்பங்களைச் செய்து வைத்தாய்; இவை என்ன சுயநலக்காரியங்கள்? அருளிச்செய்ய வேண்டும்.*

ஈடு: ஏழாம் பாட்டு. [3] துக்கத்திற்குக் காரணமான அபிமானம் தொடக்கமான விசித்திரமான பொருள்களை விபூதியாக வுடையனாய் இருக்கிறபடியை அருளிச்செய்கிருர்.

1. *'நல்குரவும்' என்ற திருவாய்மொழியிற்கூறிய பொருள் போலே இருத்தலின், 'அது அன்று' என்று பரிகரிக்கிருர், 'இவ்விடத்தில்' என்று தொடங்கி.*

2. *'இவை என்ன துயரங்களே?' என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிருர், 'உனக்கு' என்று தொடங்கி.*

3. *பின் மூன்று அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.*

துயரங்கள் செய்யும் கண்ணு-துக்கங்களைச்செயக்கூடிய கிருஷ்ணனே! 'எதனாலே நலிவது?' என்னில், 'முடிச்சோதி' என்ற திருவாய்மொழியிற்கூறியபடியே திருமுடியில் அழகைக் காட்டியாயிற்று. சுடர் நீள் முடியாய் - [1] விபூதியைச் சொல்லுவதும் திருமுடியைப் போன்று பாதகம் ஆகாநின்றதாயிற்று. அன்றிக்கே, ''முற்ற இம்மூவுலகும் விரிகின்ற சுடர்முடிக்கே ஒற்றுமை கொண்டது' என்றது, 'பின்னாட்டுகிறது,' என்று பிள்ளான் பணிப்பர். அருளாய் - [2] அவனைக் கேட்டு அறிய வேண்டுகையாலே பாதகமாம் அன்றோ? துயரம் செய் மானங்களாய் - [3] 'அடியவனை நான்' என்கிற அபிமானம் அடிக்கழஞ்சு பெற்றிருக்கும். அங்ஙனன்றிக்கே, 'ஸோஹம் - அந்த நான்' என்று துக்கங்களைச் செய்யும் அபிமானங்களாய். மதனாகி உகவைகளாய் - களிப்பும் அதற்கு அடியான உகவையுமாய். துயரம் செய் காமங்களாய்-[4] 'பொருளின் தொடர்பினால் அப்பொருளில் விருப்பம் முதலியன உண்டாய்ப் புத்தி கெட்டுக் கெடுகின்றான்' என்கிறபடியே, கேட்டினை எல்லையாகவுடைய காமங்களாய். [5] அங்ஙன் அன்றே, பகவத் காமம்? துலையாய் - பிரமாணமாய்; [6] நிறுக்குமதாய். நிலையாய் நடையாய் - தாவரங்களும் சங்கமங்களும். அன்றிக்கே, நிற்றல் நடத்தல்களைச் சொல்லுதலுமாம். துயரஙகள் செய்து வைததி - இப்படித் துக்கங்

1. உலகைப்பற்றிச் சொல்லுகிற இடத்தில் திருமுடியைச் சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'விபூதியைச் சொல்லுவதும்' என்று தொடங்கி. விபூதி-உலகம்; ஐஸ்வர்யம். 'திருமுடியைப் போன்று' என்றது, 'நிற்றி முற்றத்துள்' (7. 7 :10.) என்ற திருப்பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி.

2. 'விபூதி அனுசந்தானமும் திருமுடியும் பாதகம் ஆகைக்குக் காரணம் என்?' என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவனை' என்று தொடங்கி. என்றது, 'முடிச்சோதி' என்ற திருவாய்மொழியிற்படியே அவனைக் கேட்டறிய வேண்டுகையாலே என்றபடி.

3. 'துயரம் செய்யாத மானமும் உண்டோ? இப்படி விசேடிக்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அடியவனை நான்' என்று தொடங்கி.

4. 'ஸங்காத் ஸம்ஜாயதே காம: புத்திநாஶாத்ப்ரணஶ்யதி' என்பன, ஸ்ரீகீதை, 2. 62 : 63.

5. 'துயரம் செய்யாத காமம் உண்டோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அங்ஙன் அன்றே' என்று தொடங்கி.

6. 'துலை' என்ற சொல் பிரமாணத்தைக் காட்டுமோ?' என்ன 'நிறுக்குமதாய்' என்கிறார். துலை-நிறைகோல்.

களைச் செய்வியாநின்றாய். இவை என்ன [1] சுண்டாயங்கள்-உனக்கு விளையாட்டாக இராநின்றது, எங்களுக்குத் துக்கத்திற்குக் காரண மாக இராநின்றது. (7)

747

*என்னசுண் டாயங்க ளால்[2]நின் றிட்*
*டாய்என்னை ஆளுங்கண்ணா!*
*இன்னதோர் தன்மையை என்றுஉன்னை*
*யாவர்க்குந் தேற்றரியை*
*முன்னிய மூவுல கும்மவை*
*யாய்அவற் றைப்படைத்தும்*
*பின்னும்உள் ளாய்!புறத் தாய்!இவை*
*என்ன இயற்கைகளே.*

பொ-ரை: என்னை ஆளுகின்ற கண்ணனே! என்ன விளையாட்டு களையுடையையாய் நிற்கிறாய்? இப்படிப்பட்ட தன்மையையுடையை என்று உன்னைத் தெளிந்துகோடற்கு எத்தகைய ஞானிகட்கும் அரியவனாய் இருக்கின்றாய்; பழைமையான மூன்று உலகங்களுமாகியும் அவற்றைப் படைத்தும் அதற்கு மேலே பொருள்கட்கு உள்ளும் இருக் கின்றாய்; புறத்தும் இருக்கின்றாய்; இவை என்ன தன்மைகள்? அருளிச் செய்ய வேண்டும்.

வி — கு: தேற அரியை-தேற்றரியை. முன்னிய-பழைமையான.

ஈடு: எட்டாம் பாட்டு. [3] 'எல்லா உலகங்களையும் படைத்து உள்ளும் புறம்பும் பரந்து இப்படி நிர்வகித்து வைத்து அறிய முடியாத வனாய் இருக்கிற இது என்ன ஆச்சரியம்!' என்கிறார்.

என்ன சுண்டாயங்களால் நின்றிட்டாய் என்னை ஆளும் கண்ணா - என்ன விளையாட்டுகளையுடையையாய் நிற்கிறாய், என்னை அடிமை கொள்ளுகிற கிருஷ்ணனே! இன்னது ஓர் தன்மையை என்று உன்னை யாவர்க்கும் தேற அரியை - இன்ன படிப்பட்ட தன்மையையுடையை என்று, எல்லாப் பொருள்களுக்கும் காரணனாய் இருக்கிற உன்னை, எத்தனையேனும் மிகுதியுற்ற ஞானத்தையுடையவர் களாலும் அறிய ஒண்ணாதபடி நிற்புதி: [4] 'பிரமனும் அவனுடைய தன்மையை மிக வருந்தியும் சிறிதும் அறியமாட்டான்,' என்கிற படியே.

---

1. சுண்டாயங்கள் விளையாட்டும் தன்பொருட்டுச் செய்யும் காரியமும்.

2. 'எங்ஙனே நின்றிட்டாய் என் கண்ணா!' என்பதும் பாடம்.

3. திருப்பாசுரமுழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

4. அறிய ஒண்ணாமைக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பிரமனும்' என்று தொடங்கி.

'ப்ரஹ்மாபி நவேத்தி அல்பம் ப்ரயத்நத:' என்பது.

[1] முன்னிய மூவுலகும் அவையாய்-பிரவாஹ ரூபத்தாலே பழைய தாகப் போருகிற மூவுலகுக்கும் கடவையாய். மூவுலகு - மூன்று வகைப்பட்ட ஆத்துமாக்கள்; அல்லது, மூன்று உலகங்கள். அவற்றைப் படைத்து - 'உலகமான போது, அவற்றை உண்டாக்கி' என்கிறது. 'ஆத்துமாக்களான போது, அவர்களுக்கு ஞானத்தின் மலர்ச்சியை உண்டாக்கி' என்னுதல். பின்னும் உள்ளாய் புறத்தாய்-உள்ளும் புறம்பும் பரந்திருக்கின்றாய்! இவை என்ன இயற்கைகளே-உனக்கு இவைதாம் விளையாட்டாக இராநின்றன; எங்களுக்கு இவைதாம் ஆச்சரியமாக இராநின்றன. (8)

748

*என்ன இயற்கைக ளால்எங்ங*
*னேநின் றிட் டாய்என்கண்ணா!*
*துன்னு கரசர ணம்முத*
*லாகஎல் லாஉறுப்பும்*
*[2]உன்னு சுவைஒளி ஊறுஒலி*
*நாற்றம் முற்றும் நீயே*
*உன்னை உணர உறில்உலப்*
*பில்லை நுணுக்கங்களே.*

பொ - ரை: 'என் கண்ணா! எவ்வகையான இயற்கைகளோடு கூடி என்ன பிரகாரத்தால் நிற்கிறாய்? செறிந்திருக்கின்ற கை கால் முதலான எல்லா அவயவங்களும் நீயே; நினைக்கப்படுகின்ற சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று சொல்லப்படுகிற புலன்கள் முழுதும் நீயே; உன்னை அறியல் உற்றால் நுணுக்கங்கள் எல்லை இல்லாதனவாய் இருக்கின்றன,' என்க.

ஈடு: ஒன்பதாம் பாட்டு. [3] ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் ஐம்புலன்களும் அவனுக்கு விபூதியாக இருக்கிற இருப்பை அருளிச்செய்கிறார்.

என்ன இயற்கைகளால் எங்ஙனே நின்றிட்டாய் என் கண்ணா - என்ன தன்மைகளையுடையையாய்க்கொண்டு என்ன பிரகாரத்தாலே நிற்கிறாய்? எனக்குப் பவ்யனான கிருஷ்ணனே! துன்னு கர சரண

1. 'முன்னிய' என்றது, 'பிரவாகரூபத்தால் நித்தியம்' என்றபடி. பிரவாகம்-வெள்ளம்.

2. 'சுவைஒளி ஊறு ஓசை நாற்றமென் றைந்தின்' என்பது, திருக்குறள்.

3. திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

முதலாக எல்லா உறுப்பும் - நெருங்கி இருந்துள்ள கைகள் கால்கள் தொடக்கமான எல்லா அவயவங்களுக்கும், [1] நினைக்கப்படுவனவாய் ஆசைப்படப்படுவனவாய் இருக்கின்ற ஐம்புலன்களுக்கும் கடவையாய் இருந்தாய். உன்னை உணர உறில் - உன்னை அறியப்புகில். உலப்பு இல்லை [2] நுணுக்கங்களே - உன் வைலக்ஷண்யங்களுக்கு முடிவு இல்லை, 'நுண்பொருளாய் உள்ளவனை' என்கிறபடியே, 'அசித் வஸ்துவான சரீரத்தில் சூக்கும ரூபத்தாலே எங்கும் புக்குப் பரந்திருக்கும் ஆத்துமவஸ்து, இவ்விரண்டிலும் சூக்கும ரூபத்தோடு பரந்திருப்பாய் நீ' என்றபடி. (9)

749

இல்லை நுணுக்கங்க ளேஇத
னிற்பிறி தென்னும்வண்ணம்
தொல்லைநன் னூலிற் சொன்ன
உருவும் அருவும்நீயே
அல்லித் துழாய்அலங் கல்அணி
மார்ப!என் அச்சுதனே!
வல்லதோர் வண்ணம்சொன் னால்அது
வேஉனக் காம்வண்ணமே.

பொ - ரை : 'இதனைக்காட்டிலும் வேறு நுணுக்கங்கள் இல்லை,' என்னும் வண்ணம் பழையதான சிறந்த வேதத்திலே சொல்லப்பட்ட அசித்தும் சித்தும் நீயே; அகவிதழையுடைய திருத்துழாய் மாலையை அணிந்த திருமார்பினையுடையவனே! என் அச்சுதனே! வல்லது ஒரு வண்ணம் சொன்னால் உனக்கு ஆம் வண்ணம் அதுவேயாம்.

வி - கு : 'இதனில் நுணுக்கங்கள் பிறிது இல்லை என்னும் வண்ணம்' என்று மாற்றுக. அல்லி - பூந்தாதுவுமாம்.

---

1. 'உன்னு' என்றதன் பொருள், 'நினைக்கப்படுவனவாய்' என்பது. 'நினைக்கப்படுவனவாய்' என்றதனை விவரணம் செய்கிறார், 'ஆசைப்படப்படுவனவாய் இருக்கின்ற' என்று.

2. நுணுக்கம்-சூக்குமத் தன்மையால் வந்த வைலக்ஷண்யம். 'வைலக்ஷண்யம் யாது?' என்ன, 'நுண்பொருள்களுக்கும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

'நாராயணம் அசேஷாணும் அணியாம்ஸம் அணீயஸாம்'

ன்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 1. 8 : 40.

'ப்ரஸாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸம் அணீயஸாம்'

என்பது, மனு தர்மம், 1 : 22.

ஈடு: பத்தாம் பாட்டு. [1]வேதங்களாலேயே அறியப்படுமவனுய்க் காரணமாய் அதிசூக்ஷ்மமாயிருந்துள்ள சேதனங்களையும் அசேதனங்களையும் விபூதியாகவுடையவனுய் இருக்கிறபடியை அருளிச்செய்கிருர்.

இதனின் பிறிது நுணுக்கங்கள் இல்லை என்னும் வண்ணம் - இதனைக்காட்டிலும் வேறு சூக்ஷ்மமாய் இருப்பது இல்லை என்னும்படி. அதாவது, இவற்றுக்குத் தனக்கு என்று ஒரு நாமமும் உருவமும் இன்றிக்கே பிரமத்தினுடைய நாமத்தையும் உருவத்தையும் இட்டுப் பேச வேண்டும்படி, காரண நிலையிலே இருக்கிற சேதனங்களும் அசேதனங்களும் நீ இட்ட வழக்கு. தொல்லை நன்னூலில் சொன்ன உருவும் அருவும் நீயே - [2]'முதன்முதலில் 'சத்' என்ற ஒன்றே இருந்தது' என்றது அன்றே? ஆக, உலகமே உருவமாய் இருக்கும் இருப்பைச் சொல்லிற்று. அல்லித் துழாய் அலங்கல் அணி மார்ப- பரமபதத்தையுடையனுய் இருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. அல்லியையுடைத்தான திருத்துழாய் மாலையாலே அலங்கரிக்கப் பட்ட திருமார்பினையுடையவனே! அச்சுதனே - அவ்விருப்புக்கு ஒரு நாளும் அழிவில்லாதபடி பரமபதத்திலே எழுந்தருளியிருக்கிற இருப்பை எனக்குப் பிரகாசிப்பிக்கிறவனே!

வல்லது ஓர் வண்ணம் சொன்னல் அதுவே உனக்கு ஆம் வண்ணம் - இதற்கு இரண்டு படியாக அருளிச்செய்வர்: 'இவன், தனக்கு உள்ள அளவு எல்லாம் கொண்டு பேசினுல், உன் பக்கல் சொல்லிற்றுமத்தனை போக்கியல்லது, உனக்கு ஓர் அளவு இல்லையே அன்றே?' என்னுதல்; அப்போதைக்கு, [3]அதுவே உனக்கு ஆம் வண்ணம்? - [4]'அது அன்று என்கிறது' என்னுதல். அன்றிக்கே, உன் பக்கல் அன்புள்ளவர்களாய் இருப்பார் எத்தனையேனும் அளவு

---

1. 'தொல்லை நன்னூலில் சொன்ன, இல்லை அணுக்கங்களே, இதனில் பிறிது என்னும் வண்ணம், உருவும் நீயே' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. 'வேதத்தில் எங்கே சொல்லிற்று?' என்ன, முதன்முதலில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

'ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்'

என்பது, சாந்தோக்யம், 6. 2 : 1.

3. முதற்பொருளில் 'அதுவே' என்றதிலுள்ள 'ஏகாரம்' எதிர் மறை. இரண்டாவது பொருளில் 'ஏகாரம்' தோற்றம்.

இன்றிக்கே, இருந்தார்களாகிலும், அவர்கள் ஒன்றைச்சொன்னால், 'ஸ்ரீ வைகுண்டத்திலே நித்தியசூரிகள் நடுவே அவர்களுக்குங்கூடப் பேச்சுக்கு நிலம் அன்றிக்கே இருக்கிற நம்மைச் சம்சாரத்திலே மிகத் தாழ்ந்தவனாய் இருக்கிற இவன் அறிந்தானாகச் சொல்லுவதே?' என்று சீறுகை அன்றிக்கே, இவன் சொன்னதுவே தனக்கு அளவாக நினைத்திருக்கும் என்னுதல். (10)

750

*ஆம்வண்ணம் இன்னது ஒன்றுஎன்று*
*அறிவது அரியஅரியை*
*ஆம்வண்ணத் தால்குரு கூர்ச்சட*
*கோபன் அறிந்துஉரைத்த*
*ஆம்வண்ண ஒண்தமிழ் கள்இவை*
*ஆயிரத் துள்இப்பத்தும்*
*ஆம்வண்ணத் தால்உரைப் பார்அமைந்*
*தார்தமக்கு என்றைக்குமே.*

பொ - ரை: 'உண்டான பிரகாரம் இன்னபடிப்பட்டது ஒன்று,' என்று அறிதற்கு அரிய சர்வேஸ்வரனை, ஆகின்ற தகுதியால் திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர் அறிந்து அருளிச்செய்த பொருந்திய ஓசையையுடைய அழகிய தமிழ்ப் பாசுரங்கள் ஆயிரத்துள் இப்பத்துப் பாசுரங்களையும் தங்களுக்குத் தகுந்த முறையால் சொல்ல வல்லவர்கள், தாங்கள் என்றைக்கும் ஈஸ்வரனுடைய அனுபவத்துக்குச் சமைந்தார்கள் ஆவார்கள்.

ஈடு: முடிவில், [1]'அங்குத்தைக்குத் தகுதியாக ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரம் திருவாய்மொழிகளிலும் தங்கள் தகுதிக்குத் தக்கவாறு சொல்ல வல்லார் என்றைக்கும் கிருதக் கிருத்தியர்,' என்கிறார்.

ஆம் வண்ணம் இன்னது ஒன்று என்று அறிவது அரிய அரியை - இன்னபடிப்பட்டது ஒரு தன்மையையுடையவன் என்று கொண்டு யாவராலும் அறிய அரியனாய் இருக்கிற சர்வேஸ்வரனை ஆயிற்றுக் கவி பாடிற்று. [2]'அந்த ஆனந்த குணத்தினின்றும் வேத வாக்குகள் மீண்டனவோ?' என்கிறபடியே, வேதங்களும்

1. பின் மூன்று அடிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. அப்படி அறியப் போகாமைக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அந்த' என்று தொடங்கி.

'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ' என்பது, தைத்திரீய. ஆனந். 9 : 1.

மீண்டவனை ஆயிற்றுப் பேசிற்று. ஆம் வண்ணத்தால் குருகூர்ச் சடகோபன் அறிந்து உரைத்த- அவனுக்குத் தகுதியாம்படி ஆழ்வார் அருளிச்செய்த. 'அறிவது அரிய அரியை' என்றதாகில், 'ஆம் வண்ணத்தால் உரைக்கையாவது என்? முரண் அன்றோ?' என்னில், 'அறிந்து உரைத்த' என்கிறார்; என்றது, [1]'அவன் மயர்வற மதிநலம் அருள ஆயிற்று இவர் பேசிற்று. தன் முயற்சியால் அறியப் பார்க்கில் அன்றோ அரிது?' என்றது, அவன் கொடுத்த அறிவு கொண்டு அறிவார்க்குக் குறை இல்லை அன்றோ? [2]'நெறிவாசல் தானேயாய் நின்றானை ஐந்து, பொறி வாசல் போர்க்கதவம் சார்த்தி அறிவானும்' என்று ஆக்ஷேபிப்பது, தம் முயற்சியாலே அறியப் பார்ப்பாரை அன்றோ?

ஆம் வண்ணம் ஒண் தமிழ்கள் - 'அவனுக்குத் தகுதியாம்படி இருக்கிற அழகிய தமிழ்' என்னுதல்; 'தகுதியாக இருக்கிற பாசுரங்களையுடைத்தாய், சர்வாதிகாரமாகிற நன்மையையுடைத்தான தமிழ்' என்னுதல். வண்ணம் - பா. அன்றிக்கே, வண்ணம் என்று ஓசையாய், 'நல்ல ஓசையையுடைய செந்தமிழ்' என்னுதல். தமிழ்கள் இவை ஆயிரத்துள் இப்பத்தும் - தமிழாக இருந்துள்ள இவை ஆயிரத்துள் இப்பத்தையும். ஆம் வண்ணத்தால் உரைப்பார் - 'பின்னை, இதனைச் சொல்லுமவர்களுக்கும் மயர்வு அற மதி நலம் அருளப்பெற்று அவனுக்குத் தகுதியான சொல்லாலே சொல்ல வேணுமோ?' என்னில், அத்தேவை எல்லாம் ஆழ்வார்தம்மோடே; இவர்களுக்குத் தாங்கள் வல்ல அளவும் சொல்ல அமையும். அமைந்தார்தமக்கு என்றைக்கும் - அவர்களுக்கு இவ்வாத்துமா உள்ள தனையும், [3]ஈஶ்வரன் முழங்கைத் தண்ணீர் வேண்டா; ஆழ்வார்

---

1. 'ஆம் வண்ணத்தால் அறிந்துரைத்தா ரேயானால், 'அறிவது அரிய' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன் மயர்வற' என்று தொடங்கி.

2. தன் முயற்சியால் அறியப்போகாமைக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'நெறிவாசல்' என்று தொடங்கி. இது, நான்முகன் திருவந்தாதி.

3. 'ஈஶ்வரன் முழங்கைத் தண்ணீர் வேண்டா' என்றது, ஈஶ்வரனுகிய முழங்கைத் தண்ணீர் வேண்டா' என்றபடி. முழங்கைத்தண்ணீராவது, ஒருவன் தண்ணீர் குடித்தால் அவன் முழங்கையிலே ஒழுகுகிற தண்ணீரைக் குடித்தல்.

அங்கீகாரத்துக்கு விஷயமானதுவே போரும். என்றைக்கும் தந்தாமுக்குத் தாமே அமைந்தார்களாய் இருப்பர்கள். (11)

## திருவாய்மொழி நூற்றந்தாதி

*மாயாமல் தன்னைவைத்த வைசித் திரியாலே*
*தீயா விசித்திரமாச் சேர்பொருளோடு—[1] ஆயாமல்*
*வாய்ந்துநிற்கு மாயன் வளமுரைத்த மாறனைநாம்*
*ஏய்ந்துரைத்து வாழுநாள் என்று?* (68)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

1. 'ஓயாமல்' என்பதும் பாடம்.

# ஒன்பதாந்திருவாய்மொழி—‘என்றைக்கும்’

## முன்னுரை

ஈடு: [1] மேலே பலகாலும், ‘சர்வேஸ்வரன், தன்னைப் பெறுவார்க்குத் தடைகள் உண்டாய் இருந்தாலும் தானே தன்னைத் தரப் பார்க்கும் அன்று தகைய வல்லது ஒரு தடை இன்றிக்கே இருக்க, ‘தன்னாலே பேறு’ என்று இருக்கிற என்னை இங்கே வைத்தது என்?’ என்று கேட்டுப் போருவார் ஒருவர். அவனும், இதற்கு நேரான பரிகாரத்தைப் பண்ணாதே ஏதேனும் ஒரு குணத்தைப் பிரகாசப்படுத்தி வேறொன்றிலே நோக்கைப் பண்ணுவிப்பான் ஒருவன், இவர்க்கு இதிலே நெஞ்சு செல்லாதபடி. இனி, மேல் திருவாய்மொழியிலும் ‘சம்சாரத்திலே பொருந்தாமை உண்டாய், உன்னை ஒழியச் செல்லாமை உண்டாய், நீயே உபாயமாய் இருக்க, பின்னையும் என்னை இங்கே வைத்து ஜீவிப்பித்துக் கொடுபோருகிற ஆச்சரியம் இருந்தபடி என்? இதனை எனக்கு அருளிச்செய்ய வேணும்,’ என்ன, ‘கண்டீரேதான் இது ஓர் ஆச்சரியம் இருந்தபடி?’ என்று அவ்வழியாலே தன்னுடைய ஆச்சரியமான உலகமே உருவமாக இருக்கும் தன்மையைக் காட்டிக்கொடுத்து அதனோடே பணி போரும்படி செய்தான். இவரும் அப்போது அத்தனையும் அதனைச் சொல்லி, அது தலைக்கட்டினவாறே பின்பு பழையபடியே கேட்கத் தொடங்குமவர் அல்லரோ?

[2] இச்சம்சாரத்திலே பொருந்தாது இருக்கிற என்னை இங்கு வைத்ததற்குக் காரணம் என்?’ என்ன, ‘நம்மை இதற்கு ஒரு காரணத்தை நிர்ப்பந்தித்துக் கேட்கவேணுமோ? கண்டன எல்லாவற்றிலும் நாக்கு நீட்டி அவற்றிலே ருசி பண்ணிப் போந்தீராகில்,

---

1. *சர்வேஸ்வரனுடைய தன்மையை அருளிச்செய்துகொண்டு, மேல் திருவாய்மொழியோடு இத்திருவாய்மொழிக்கு இயைபு அருளிச்செய்கிறார் ‘மேலே’ என்று தொடங்கி. ‘பலகாலும்’ என்றது, ‘உண்ணிலாவிய’ என்ற திருவாய்மொழி முதலிய பல திருவாய்மொழிகளிலும் என்றபடி.*

2. *கேட்கும்படியைக் காட்டுகிறார், ‘இச்சம்சாரத்திலே’ என்று தொடங்கி. ‘பாசங்கள்’ என்றதனைத் திருவுள்ளம் பற்றிக் ‘கண்ட எல்லாவற்றிலும் நாக்கு நீட்டி’ என்கிறார்.*

அதற்கு அடியான கர்மம் கிடந்ததாகில், வாசனை ருசி கிடந்தனவாகில், அவற்றாலே இருந்தால் ஆகாதோ?' என்ன, 'அவையும் கிடக்கச்செய்தே, அவற்றையும் பாராதே எனக்கு மயர்வு அற மதி நலம் அருளிப் பாசங்கள் நீக்கி என்னை உனக்கே அறக் கொண்ட பின்பு நீ சொல்லுகிற இது பரிகாரம் அன்று; ஆகையாலே, என்னை இங்கு வைக்கிறது என்?' என்று [1] வடிம்பிட்டுக் கேட்க, [2] 'நீர்தாம் உம்மை நமக்காக ஒக்கி வைத்ததாகச் சொன்னீரே, 'தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே' என்று! ஆன பின்பு நாம் வேண்டினபடி உம்மைக் காரியங் கொள்ளக்கடவோம் அன்றோ? ஆன பின்பு, நமக்கு அதிசயத்தைப் பிறப்பிக்கை உமக்குச் சொரூபமாய் இருக்குமன்றோ? ஆன பின்பு, உம்மைக்கொண்டு, ஸ்ரீ வீடுமரைப் பாணங்களாகிய படுக்கையிலே இட்டு வைத்து நாட்டுக்கு வெளிச்சிறப்பைப் பண்ணிக்கொடுத்தாற்போலே, நமக்கும் [3] நம்முடையார்க்கும் போது போக்காகச் சில பிரபந்தங்களைப் பண்ணுவிக்கப் பார்த்தோம்: அது தலைக்கட்டுந்தனையுங்காணும் உம்மை இங்கு வைப்பது,' என்று நேரான பரிகாரத்தை அருளிச்செய்தான்.

அருளிச்செய்ய, இவரும் அதனை அநுசந்தித்து, சர்வேஸ்வரனாய் அவாப்த சமஸ்தகாமனாய்ச் சர்வ பிரகார பரிபூரணனாய் இருக்கிற அவன், தனக்கு ஒரு குறை உண்டாய் அக்குறை பின்னைத் தம்மைக் கொண்டு தீர்ப்பதாகச்சொன்ன வார்த்தையைப் [4] பொறுக்க மாட்டிற்றிலர். [5] 'தனக்குச் சில பிரபந்தங்கள் வேண்டினால், அதற்குத்

---

1. வடிம்பிட்டு-நிர்ப்பந்தித்து.

2. 'பிரபந்தங்களைப் பண்ணுவிக்கப் பார்த்தோம்' என்று உத்தரம் சொல்லப் பார்த்து, 'ஆனால், என் ஆற்றாமை எல்லாம் கிடக்கத் தன் காரியம் ஒன்றுமே பார்க்குமத்தனையோ?' என்கிற சங்கையையும் பரிகரிக்கிறார், 'நீர்தாம்' என்று தொடங்கி. ஒக்கி வைக்க-ஆக்கி வைக்க. 'தனக்கேயாக' என்பது, திருவாய். 2. 9 : 4. வெளிச்சிறப்பை-ஞானப் பிரகாசத்தை.

3. 'கண்டு கொண்டுஎன் கண்ணிணை ஆரக்களித்துப்
பண்டை வினையாயின பற்றோடு அறுத்துத்
தொண்டர்க்கு அமுதுஉண்ணச் சொன்மாலைகள்சொன்னேன்
அண்டத் தமரர் பெருமான் அடியேனே.'
என்பது, திருவாய். 9. 4 : 9.

4. 'பொறுக்கமாட்டிற்றிலர்' என்றது, இத்திருவாய்மொழியில் வருகின்ற 'என்சொல்லி நிற்பன்?' என்பது போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றி.

5. 'இன்கவி பாடும் பரம கவிகள்,' 'ஒப்பிலாத் தீவினையேனை' 'எதுவும் ஒன்றும் இல்லை செய்வது' என்பன போன்றவைகளைக் கடாட்சித்துத் தனக்குச் சில பிரபந்தங்கள்' என்று தொடங்கி அருளிச் செய்கிறார்.

தகுதியான ஞானத்தாலும் சத்தியாலும் குறைவற்ற ஸ்ரீவேதவியாச பகவான், ஸ்ரீவால்மீகி பகவான் ஸ்ரீபராசர பகவான் தொடக்கமானார், [1]'செந்தமிழ் பாடுவார்' என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்கள், இவர்கள் எல்லாரும் உண்டாயிருக்க, அநாதிகாலம் சம்சாரத்திலே பழகி ஐம்புல இன்பங்களிலே ஈடுபட்டவனாய், [2]'அவன் இல்லாதவன் ஆகவே ஆகிறான்' என்கிறபடியே அசத்தைப் போன்றவனாய் உருமாய்ந்து போன என்னைக்கொண்டு தனக்குத் தகுதியாகக் கவி பாடுவித்துக்கொள்ளுவதாகச் சொன்ன வார்த்தை என்ன வார்த்தை! இது ஒரு நீர்மை இருக்கும்படியே! இது என்ன நீர்மை!' என்று, சர்வேஸ்வரன் தம் திறத்தில் செய்த உபகாரத்தை அநுசந்தித்து, அதற்கு ஒரு பிரதியுபகாரம் காணாமையாலே தடுமாறிச் சொல்லுகிறது.

751

*என்றைக்கும் என்னைஉய் யக்கொண்டு போகிய*
*அன்றைக்குஅன்று என்னைத்தன் னாக்கிஎன் னால்தன்னை*
*இன்தமிழ் பாடிய ஈசனை ஆதியாய்*
*நின்றஎன் சோதியை என்சொல்லி நிற்பனோ?*

**பொ - ரை:** காலம் என்னும் ஒரு பொருள் உள்ள வரையிலும் உஜ்ஜீவிக்கத் தகுதியாம்படி அங்கீகரித்துக் கழிகிற நாள்கள்தோறும் என்னைத் தனக்கு அடிமை ஆக்கி, என்னால் தன்னை இனிய தமிழ்ப் பாசுரங்களைப் பாடுவித்துக்கொண்ட ஈசனை, காரணமாய் நின்ற என் சோதியை என்ன என்று சொல்லித் தரிப்பேன்?

**வி - கு:** பாடிய-பாடுவித்துக்கொண்ட. இத்திருவாய்மொழி, கலி விருத்தம்.

**ஈடு:** முதற்பாட்டு. [3]'மிகச்சிறியேனான என்னை ஞானம் சத்தி முதலியவைகளையுடையேனாம்படி செய்து, என்னையிட்டுத்

---

1. *'செந்தமிழ் பாடுவார்' என்பது*, பெரிய திருமொழி, 2. 8 : 2.

2. *இத்திருவாய்மொழியில் வருகிற 'என் இன்னுயிர் இன்று ஒன்றாய்' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'அவன்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'அஸந்நேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேத சேத்' என்பது*, தைத்திரீய. ஆன. 6.

3. *'என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை இன்தமிழ் பாடிய ஈசனை, என்சொல்லி நிற்பன்?' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.*

திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட உபகாரத்தைச் சொல்லித் தரிக்க மாட்டுகின்றிலேன்,' என்கிறார்.

[1]'இப்படி நீர் படுகைக்கு அவன் செய்த நன்மைதான் யாது?' என்ன, 'இது' என்கிறார்: போகிய அன்றைக்கு அன்று என்றைக்கும் என்னை உய்யக்கொண்டு - சர்வேஸ்வரன் ஒரு நாள் ஒருவனை அங்கீகரித்தால், பின்னர் அவ்வங்கீகாரந்தன்னையே காலம் என்னும் ஒரு பொருள் உள்ளதனையும் சொல்லி உஜ்ஜீவிக்கலாயிற்று இருப்பது. [2]'கண்ணபிரானுடைய அந்த விஸ்வரூபத்தையும் நினைக்க எனக்கு வியப்பானது அதிகமாய் உண்டாகிறது! பின்னும் பின்னும் சந்தோஷம் அடைகிறேன்!' என்கிறபடியே, பின்னர் என்றும் ஒக்க அதனை நினைத்துத் தரிக்கலாம்படியாயிற்று இருப்பது. [3]'ஸ்ரீராம பிரானுடைய பாணங்களை நினைத்துக்கொண்டு வருத்தம் உற்றான்' என்கிறபடியே, அம்புக்கு இலக்கானார் அலற்றுமாறுபோலேயாயிற்று, குணத்துக்கு இலக்கு ஆனாரும் அலற்றும்படி. [4]அம்பு பட்ட புண் மருந்து இட்டு ஆற்றலாம்; குணத்தால் வந்த புண்ணுக்கு மாற்று இல்லை அன்றோ? [5]ஆக, சர்வேஸ்வரன் ஒரு நாள் ஒருவனை அங்கீ

---

1. பதத்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'இப்படி' என்று தொடங்கி.

2. 'ஒரு நாள் விஷயீகரித்தால் என்றும் ஒக்க அதனை அநுசந்தித்துத் தரிக்கலாய் இருக்கும், என்னுமதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'கண்ணபிரானுடைய' என்று தொடங்கி.

> 'தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபம் அத்யத்புதம் ஹரே:
> விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந: புந:'

என்பது, ஸ்ரீ கீதை, 18 : 77.

3. அவனுடைய குணங்கள் இப்படி ஈடுபடுத்தும் என்பதற்கு வியதிரேகத்தால் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'ஸ்ரீ ராமனுடைய' என்று தொடங்கி.

> 'ப்ரஹ்மதண்ட ப்ரகாசாநாம் வித்யுத் ஸத்ருச வர்ச்சஸாம்
> ஸ்மரந் ராகவ பாணாநாம் விவ்யதே ராக்ஷஸேஸ்வர:'

என்பது, ஸ்ரீ ராமா. யுத். 60 : 3.

இங்கே, கம்பராமாயணம், யுத்தகாண்டம், கும்பகர்ணன் வதைப் படலம், 19 முதல் 23 முடிய உள்ள செய்யுள்களைப் படித்தறிதல் தகும்.

4. 'அம்பு போன்று குணங்கள் பாதகமாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அம்பு பட்ட புண்' என்று தொடங்கி.

5. மேலே கூறியவற்றை எல்லாம் முடிக்கிறார், 'ஆக' என்று தொடங்கி.

கரித்தால், அது தன்னையே என்றும் ஒக்க நினைக்கலாம்படி இருக்குமாயிற்று. 'இப்படிப்பட்ட அங்கீகாரத்தை ஒருகால் செய்துவிட்ட இத்தனையோ?' என்னில், போகிய அன்றைக்கு அன்று - கழிகிற நாள்தோறும் நாள்தோறும் இப்படியே ஆயிற்று அங்கீகரித்தது. [1] இதுதான் இருவர் படிகளாலும் ஆற்றப்போகாது. [2] அவனுடைய அங்கீகாரத்துக்கு இலக்கான இவர் படியைப் பார்த்தால், அதனை இவர் தாம் பொறுக்க வல்லர் அல்லர்: அவனோ என்னில், தன்னை நம்பி உடனே கிடந்தவனை மடி தடவினவன் 'என் செய்தோமானோம்!' என்று வருந்துமாறு போலே, எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யாதானாய் 'இவனுக்கு என் செய்வோம்!' என்று இருக்கும் ஒருவன்.

என்னைத் தன்னாக்கி - [3] 'அறிவிலேன்' என்கிறபடியே அறிவின்மை, ஆற்றல் இன்மை இவைகளுக்கு இலக்காய் இருக்கிற என்னை, தன்னோடு ஒக்க ஞானம் சத்தி முதலானவைகளையுடையேனும்படி செய்து. அன்றிக்கே, 'என்னைத் தன்னுடையேனும்படி செய்து' என்னுதல். என்னால் தன்னை - தன்னாலே சத்தியைப் பெற்றவனான என்னாலே, வேதங்கள் ஸ்மிருதிகள் இதிகாசங்கள் முதலானவைகட்கும் அறிய முடியாதவனாய் இருக்கிற தன்னை. [4] 'அந்த ஆனந்த குணம் ஒன்றினின்றும் எந்த வேத வாக்குகள்

---

1. 'மேலே போந்த இரண்டு பதங்களாலும் பலித்த அர்த்தம், இவருடைய ஆதரமும் அவனுடைய வியாமோகமும்' என்று அருளிச்செய்கிறார், 'இதுதான்' என்று தொடங்கி. இதுதான்-உய்யக்கொண்ட இந்த விஷயீகாரந்தான்.

2. இதனை விவரணம் செய்கிறார், 'அவனுடைய' என்று தொடங்கி. என்றது, 'இவர் செய்ந்நன்றி அறியுமவராகையாலும், அவன் 'உன் அடியார்க்கு என்செய்வான்?' (பெரிய திருவந். 53) என்று இருக்கும் தன்மையனாகையாலும், இவராலும் ஆற்றப்போகாது என்றபடி. 'பொறுக்க வல்லர் அல்லர்' என்றது, 'கைம்மாறு தேடித் தடுமாறுவர்' என்றபடி. மடி தடவுகை-மடியிலுள்ள பொருளைக் களவு காணுதல்.

3. 'அறிவிலேன்' என்பது, திருவாய். 5. 7 : 1. தன்னுடையேனும்படி-தனக்குச் சேஷமாம்படி.

4. வேதங்கள் ஸ்மிருதிகள் முதலானவைகளால் அறியமுடியாதவன் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அந்த ஆநந்த குணம்' என்று தொடங்கியும், 'என்னால்' என்று தொடங்கியும்.

'யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ'

என்பது, தைத்திரீய. ஆன. 9.

திரும்பினவோ?' [1]'என்றால் அறிய முடியாது என்று இருக்கு மவனுக்கு அறியப்படுமது, அறிந்தேன் என்று இருக்குமவர்கட்கு அறியப்படாதது' என்கிறபடியே, பிரமாணங்களால் அறியமுடியாமல் இருக்கிற தன்னை. இன் தமிழ் பாடிய - [2]இதுதன்னில் ஓடுகிற அர்த்தமும் பரிமாற்றமும் கிடக்கச் செய்தே, சொல்லில் இனிமை தானே கவர்ச்சிகரமாய் இருக்கிறபடி. பாடிய - 'என்னைக் கொண்டு பாடுவித்தான்' என்னுதல்; [3]பாடினான் என்னுதல். [4]'இந்த ஸாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்' என்று முத்தன் ஸாமகானம் பண்ணுமாறு போலே, அவனும் இவருடைய அனுபவத்தால் வந்த உவகைக்குப் போக்கு விட்டுத் 'தென்னா' என்று பாடுமாயிற்று.

[5]'இப்படி இனிய இது உண்டானபடி எங்ஙனே?' என்னில், ஈசனை - சொல்ல வேணுமோ? சர்வேஸ்வரன் செய்யமாட்டாதது உண்டோ? அரிதோ அவனுக்கு? [6]'கவி பாடினது நீராய் இரா நின்றீர்; அவனைப் பாடினாகச் சொல்லாநின்றீர்; இதுதான் செய்தபடி என்?' என்ன, ஆதியாய் நின்ற-'நான் கவி பாடுகைக்குக் காரணமாய் நின்றான், அவன் அடியாக நான் கவி பாடினேன்,'

---

1. 'யஸ்யாமதம் தஸ்யமதம் அவிஜ்ஞாதம் விஜாநதாம்' என்பது, கௌஷீதகீ உபநிடதம்.

2. 'இன்' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'இதுதன்னில்' என்று தொடங்கி. இதுதன்னில் - இத்திருவாய்மொழிதன்னில். ஓடுகிற அர்த்தமாவது, திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ளுதல். பரிமாற்றமாவது, சர்வேஸ்வரனுடைய வியாமோஹம்.

3. 'பாடினான்' என்றது, 'என் முன் சொல்லும்' என்கிறபடியே, முன்னே சந்தை சொன்னான் என்றபடி.

4. 'சொன்ன' என்னாது, 'பாடிய' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'இந்த ஸாமத்தை' என்று தொடங்கி. 'ஏதத் ஸாமகாயந் நாஸ்தே' என்பது, தைத். பிரு. 10. 'தென்னா' என்பது, திருவாய். 10. 7 : 5.

5. 'இப்படி இனிமை உண்டானது அவன் சர்வசக்தி ஆகையாலே' என்னுமதனைச் சங்கை முன்னாக அருளிச்செய்கிறார், 'இப்படி' என்று தொடங்கி.

6. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'கவி பாடினது' என்று தொடங்கி.

7. 'பாசுரத்துக்குக் காரணபூதன் இவன்,' என்கிறார், நான் கவி பாடுகைக்கு' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார், 'அவன் அடியாக' என்று தொடங்கி.

என்றபடி. [1] 'காரணமானபடிதான் என்?' என்னில், என் சோதியை-[2] பிடாத்தை விழவிட்டுத் தன் வடிவழகைக் காட்டினுன். 'திருத்திரை எடுத்தாற் கூப்பிடுமாறு போலே கூப்பிட்டேன்; அது கவியாய்த் தலைக்கட்டிற்று. அன்றிக்கே, [3] தன் வடிவழகைக் காட்டியாயிற்றுக் கவிக்கு உள்ளுறை கொடுத்தது,' என்னுதல். 'நீரும் கவி பாடினீராகில் பின்னை இப்படிக் கிடந்து படுகிறது என்?' என்ன, என் சொல்லி நிற்பனே - [4] 'நானும் பாதி வழி வந்து அவனாலே அங்கீகரிக்கப்பட்டவனாய் இருக்கிறேனே? அன்றிக்கே, பெற்ற பேறுதான் அளவுபட்டு ஆறி இருக்கிறேனே?' என்றது, [5] 'ஒரு சாதனத்தைச் செய்தார்க்குப் பலம் தப்பாமையாலே, நானும் இப்பேற்றுக்குச் சில செய்தேனாய் இது தக்கது என்று இருக்கிறேனே? பெற்ற பேறுதான் பொறுக்குமதாய் ஆறி இருக்கிறேனே? எதனைச் சொல்லித் தரிப்பது?' என்றபடி. [6] 'கிருஷ்ணத்வைபாயநர் என்னும் பெயரையுடைய வியாசரைச் சுவாமியான நாராயணன் என்று தெரிந்துகொள்; செந்தாமரைக் கண்ணனை அவனைத் தவிர வேறு யார்தான் மஹாபாரதம் செய்தவர் ஆவார்?' என்றாற்போலே இருக்கிறதாயிற்று.

---

1. 'காரணமானபடிதான் என்?' என்னில் என்றது, 'சொரூபத்தாலேயோ, குணத்தாலேயோ, விக்கிரஹத்தாலேயோ?' என்றபடி.

2. 'வடிவழகைக் காட்டி' என்று, காரணமான பிரகாரத்தை அருளிச்செய்கிறார், 'பிடாத்தை' என்று தொடங்கி. பிடாத்தை-போர்வையை.

3. கவிக்குக் காரணம் வடிவழகு,' என்று மேலே அருளிச்செய்தார். 'கவிக்கு விஷயமாக' என்று வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'தன் வடிவழகை' என்று தொடங்கி. உள்ளுறை கொடுத்தது-விஷயமாக்கினது.

4. 'என்சொல்லி நிற்பனே?' என்கிறது என்? ஆறி இருக்கப் போகாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நானும்' என்று தொடங்கி.

5. அவற்றை விவரணம் செய்கிறார், 'ஒரு சாதனத்தை' என்று தொடங்கி.

6. 'என்னால் தன்னை இன்தமிழ் பாடிய' என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'கிருஷ்ணத்வைபாயகர்' என்று தொடங்கி. என்றது, 'வேதவியாசரைக் கருவியாகக் கொண்டு மஹாபாரதம் செய்தாற்போலே' என்றபடி.

'க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்
கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாத் மஹாபாரதக்ருத் பவேத்'

என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 3. 4 : 4.

[1] இதற்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி : 'சர்வேஸ்வரன் செய்யப் புக்கால் அரியதும் ஒன்று உண்டோ?' என்றும். அங்ஙன் அன்றிக்கே, எம்பெருமானுர், 'இவர் தாம் சொன்னுராகிலும் ஒரு படி போகச் சொல்லித் தலைக்கட்டுவர்: அவனும் தானே சொன்னுகில் ஒரு குற்றமும் இல்லாதபடி தலைக்கட்டுவான் : சிறு குழந்தை எழுத்திடப் புக்கால் தானே ஏதேனும் ஒருபடி இட்டுத் தலைக்கட்டும் ; தந்தையாதல் உபாத்யாயனுதல் இடப்புக்கால்தானே எழுத்தாய் இருக்கும்? அங்ஙன் அன்றிக்கே, இவன் கையைப் பிடித்து இடுவிக்கப் புக்கவாறே, இவன் ஓரிடத்தே இழுக்க அவன் ஓரிடத்தே இழுக்கக் குதறிக் கொட்டியாய் உருவம் அழிந்து சிதறிப்போம் ; அப்படியே, என்னை உபகரணமாகக் கொண்டு கவி பாடாநிற்கச் செய்தேயும், என்னுல் வரும் குற்றம் தன் பக்கல் தீண்டாதபடி பாடுவித்தான் என்கிறுர்' என்று அருளிச்செய்வர். (1)

752

**என்சொல்லி நிற்பன்?என் இன்னுயிர் இன்றுஒன்றுய்**
**என்சொல்லால் யான்சொன்ன இன்கவி என்பித்துத்**
**தன்சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன்என்**
**முன்சொல் லும்மூ வுருவாம் முதல்வனே.**

**பொ - ரை :** என்னுடைய இனிய உயிரானது இன்று ஒரு பொருளாகும்படி, என் சொல்லால் யான் சொன்ன இனிய கவி என்பதாகப் பிரசித்தமாக்கித் தன் சொல்லால் தானே தன்னைப் புகழ்ந்து பாடிய ஆச்சரியத்தையுடையவனும், எனக்கு முன்னே சொல்லுகின்ற, மும்மூர்த்திகளின் உருவமாய் இருக்கிற முதல்வனுமான எம்பெருமானை எந்தக் காரணத்தைச் சொல்லித் தரித்திருப்பேன்?

**வி – கு :** 'ஒன்றுய் இன் கவி என்பித்துத் தன்னைக் கீர்த்தித்த மாயன், என்முன் சொல்லும் மூவுருவாம் முதல்வனை என் சொல்லி நிற்பன்?' என்க. ஒன்றுய் – ஒன்றுகும்படி.

---

1. இதற்கு-இத்திருப்பாசுரத்துக்கு. ஸ்ரீ ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு, 'இன்தமிழ் பாடிய ஈசன்' என்றதிலே நோக்கு. ஈசன் - 'சமர்த்தன்' என்றபடி. எம்பெருமானுர் நிர்வாஹத்துக்கு 'என்னுல் தன்னை இன்தமிழ் பாடிய ஈசனை' என்றதிலே நோக்கு. ஈசன் - குற்றங்கட்கு எல்லாம் எதிர்த்தட்டானவன். மேலே காட்டிய 'கிருஷ்ணத்வைபாயநம்' என்ற திருஷ்டாந்தம், ஸ்ரீஆளவந்தார் நிர்வாஹத்திற்கு.

ஈடு : இரண்டாம் பாட்டு. [1] 'தான் தன்னைக் கவிபாடி, நான் பாடினேன் என்று உலகத்தில் பிரசித்தம் ஆக்குவதே! ஒருவனுடையபடி இருந்தபடி என்!' என்று அவனுடைய ஆச்சரியத்தைக் கண்டு ஆச்சரியப்படுகிருர். 'அநாதிகாலம் யான் எனது என்னும் செருக்காலே, இல்லாதவனுக்குச் சமமாய்த் தன் பக்கல் முகம் பாராதே போந்த என்னை, நான் ஆபிமுக்கியம் பண்ணும்படி நிர்ஹேதுகமாக அவன் அங்கீகரித்தபடியை அநுசந்தித்தால் எதனைச் சொல்லி நான் தரையில் கால் பாவுவது?' என்கிருர்.

[2] என் சொல்லி நிற்பன் - [3] 'அவன் என்னை அங்கீகரித்த அங்கீகாரம் காரணம் இல்லாதது என்னவோ, காரணத்தோடு கூடியது என்னவோ? [4] இத்தலையை ஆராய்ந்து பார்த்த இடத்து ஒரு காரணத்தைக் காண்கின்றிலர்; அத்தலையை அநுசந்தித்துப் பார்த்த இடத்து ஒரு காரணத்தைக் காண்கின்றிலர்; [5] அநாதிகாலம் கைவிட்டதற்கும் ஒரு காரணத்தைக் காண்கின்றிலர்; இன்று

---

1. 'என் சொல்லால் யான் சொன்ன இன்கவி என்பித்துத் தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிருர். 'என் இன் உயிர் இன்று ஒன்ருய்' என்றதனைக் கடாட்சித்து வேறும் ஓர் அவதாரிகை அருளிச்செய்கிருர், 'அநாதி காலம்' என்று தொடங்கி.

2. என் சொல்லி நிற்பன்-'எந்தக் காரணத்தைச் சொல்லித் தரித்திருப்பேன்?' என்பது பொருள்; 'ஒரு வழியாலும் தரித்திருப்பதற்குப் பற்றுக்கோடு இல்லை,' என்பது கருத்து.

3. தமக்குப் பற்றுக்கோடு இல்லாமையைப் பரக்க எடுத்து அருளிச்செய்கிருர், 'அவன் என்னை' என்றது முதல் 'ஊற்றங்கோல் காண்கின்றிலர்' என்றது முடிய.

4. மேல் இரண்டு வாக்கியங்களை விவரணம் செய்கிருர், 'இத்தலையை' என்று தொடங்கி.

5. 'இத்தலையை' என்று தொடங்கி அருளிச்செய்த வாக்கியங்கள் இரண்டனையும் விவரணம் செய்கிருர், 'அநாதிகாலம்' என்று தொடங்கி. என்றது, 'அநாதிகாலம் உபேக்ஷித்து உத்கட யாத்ருச்சிகம் அடியான திருப்த விஷயீகாரம்போலே நிர்ஹேதுகம் என்னவும் போகாது; இத்தலையில் ஒரு காரணம் காணுமையாலே உபாஸக விஷயீகாரம்போலே காரணத்தையுடையது என்னவும் போகாது,' என்றபடி. உத்கடம்-அதிகம். யாத்ருச்சிகம்-எதிர்பாராமல் உண்டாவது.

கைக்கொண்டதற்கும் ஒரு காரணத்தைக் காண்கின்றிலர். [1]'என்றிய, அது என்? உடையவன் ஆகையாலே தன் உடைமையை வேண்டின போது அங்கீகரித்தான் ஆனாலோ?' என்னில், அங்ஙனே செய்யப் போகிறது இல்லை; தன் உடைமையைத் தான் அங்கீகரித்தானாய் இருக்கை அன்றிக்கே, இவர் திருவாக்காலே தன்னைக் கவி பாட, தானும் உளனாய்த் தன் விபூதியும் உண்டாயிற்றாக நினைத்திரா நின்றான் அவன்; ஆகையாலே தான் தரிக்கைக்கு ஓர் ஊற்றங் கோல் காண்கின்றிலர். என் இன் உயிர் [2]இன்று ஒன்றாய் - [3]பகவானுடைய அபிப்பிராயத்தாலே '**இன் உயிர்**' என்கிறார்; அன்றிக்கே, அவனுடைய அங்கீகாரத்துக்கு இலக்கானபடியாலே சொல்லுகிறாராதல்; அன்றிக்கே, 'விபரீத லக்ஷணையாலே பொல்லாது என்கிறார்' என்னுதல். [4]இற்றைக்கு முன்பு இதனை ஒன்றாக நினைத்து இருந்திலர் ஆதலின், '**இன்று ஒன்றாய்**' என்கிறார். 'இன்றாயிற்று ஒரு வஸ்துவாயிற்றது,' என்றபடி.

[5]'இப்படி உம்மை அங்கீகரித்து அவன் தான் கொண்ட காரியந்தான் யாது?' என்ன, என் சொல்லால் யான் சொன்ன இன்கவி என்பித்து-'சொல்லும் என்னதாய், சொன்னேனும் நானாய், அதுதான் இனிய கவியாம்படி நாட்டிலே பிரசித்தம் ஆக்கினான். [6]சொல்லாகில், சர்வ சுவாமியான சர்வேஶ்வரனதாய் இருக்கு மத்தனை போக்கிச் சிறியவனான சம்சாரிக்கு இல்லை அன்றோ?

---

1. 'சுவாமியானவன் தன் சொத்தை விரும்பிய போது அங்கீகரிப்பன்; விருப்பம் இல்லாத போது விட்டு வைப்பன்; ஆகையாலே, நிர்ஹேதுகம் என்ன ஒண்ணுதோ?' என்கிற சங்கையை அநுவதித்துப் பரிகரிக்கிறார் 'என்றிய' என்று தொடங்கி. என்றிய-எதற்காக. அது என்-அது ஏது?

2. இன்று-மயர்வற மதிநலம் அருளின இன்று.

3. 'மேல் 'ஒன்றாய்' என்கிறவர், இங்கு 'இன் உயிர்' என்று சிவாகிக்கலாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பகவானுடைய' என்று தொடங்கி.

4. 'இன்று ஒன்றாய்' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இற்றைக்கு' என்று தொடங்கி.

5. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'இப்படி' என்று தொடங்கி.

6. 'அவன் பிரசித்தமாக்கினான் என்பது என்? இயல்பாகவே சொற்கள் உம்மவை அன்றோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சொல்லாகில்' என்று தொடங்கி.

[1]இனி, சேதனனுக்குத் தனித்து ஒரு காரியத்தைச் செய்தலுக்கும் செய்யாமைக்கும் யோக்கியதை இல்லை அன்றோ, சொரூபம் ஸ்திதி முதலானவைகள் அவன் அதீனமாய் இருக்கையாலே? [2]இதனை இனிய கவி என்று நாட்டிலே பிரசித்தம் ஆக்கினான். [3]'பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்' என்கிறபடியே. [4]தான் வென்று மற்றையாரோடு ஒருசேர நின்று அருச்சுனனைப் புகழுமாறு போலே. [5]'செங்கண் அலவலை' - 'உரையாடாதவன் விருப்ப மற்றவன்' என்று இருக்கக்கூடிய அவன், அது முழுதும் அழிந்து ஏத்தத் தொடங்கினான் ஆயிற்று. [6]'இன்கவி என்பித்து' என்னா நின்றீர்; இங்ஙன் அன்றோ?' என்னில், அன்று; 'பின்னைச் செய்தபடி என்?' என்னில், தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த - சொல்லும் தன்னது: சொன்னவனும் தான்; சொல்லிற்றும் தன்னை. [7]கவிபாட்டுண்டேன் நானாகில் அன்றோ கவிபாடினேன் நானாவது?

---

1. 'சொன்னவர் நீர் அல்லீரோ?' என்ன, 'இனி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'சொரூபம்' என்று தொடங்கி.

2. 'இன் கவி என்பித்து' என்றதற்குப் பதப்பொருள் அருளிச் செய்கிறார், 'இதனை' என்று தொடங்கி.

3. நாட்டிலே பிரசித்தமாக்கினமைக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'பாலேய்' என்று தொடங்கி.

4. தானே செய்து வேறு ஒருவர் பக்கலிலே பிரசித்தமாக்கினதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'தான் வென்று' என்று தொடங்கி.

5. தானே வென்று அவனைப் புகழ்ந்தமைக்குப் பிரமாணம் காட்டுகிறார், 'செங்கண் அலவலை' என்று.

'மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும்
பலர்குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன்
சிலைவளையத் திண்தேர்மேல் முன்னின்ற செங்கண்
அலவலைவந்து அப்பூச்சி காட்டு கின்றான்;
அம்மனே அப்பூச்சி காட்டு கின்றான்.'

என்பது, பெரியாழ்வார் திருமொழி. அலவலை-பலவாறாகப் பேசுகின்றவன். 'அலவலை' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'உரையாடாதவன்' என்று தொடங்கி. 'அவாக்யநாதர:' என்பது, சாந்தோக். உப. 3 : 14.

6. பொதுவான சங்கையை எழுப்புகிறார், 'இன்கவி' என்று தொடங்கி.

7. 'என்சொல்லால் யான் சொன்ன' என்றதற்கு மறுதலையாக, தன் சொல்லால் தான் கீர்த்தித்த என்னாமல், 'தன்னை' என்று விசேடிக்கிறது என்?' என்ன, 'திருஷ்டாந்தத்திற்காக,' என்கிறார், 'கவி பாட்டுண்டேன்' என்று தொடங்கி. கவி பாட்டுண்கை - கவிக்கு விஷயமாகை.

தான் தன்னைக் கவி பாடிஞைகில், நீர் கவி பாடினீர் என்று நாட்டிலே பிரசித்தமாக்கினபடி எங்ஙனே?' என்னில், மாயன் - சொல்ல வேணுமோ? ஆச்சரியமான சத்தியோடு கூடினவன் அன்றோ?

[1] என்னைக் கருவியாகக் கொண்டு தானே கவி பாடினன். 'உம்மைக் கருவியாகக் கொண்டு கவி பாடினபடி எங்ஙனே?' என்ன, என் முன் சொல்லும்-அவன் முன்னே சந்தையிடப் பின்னே நான் சொன்னேன். [2] தான் சொன்னன் ஆகில் ஸ்ரீ கீதையைப் போன்று வறமுறுகலாய்ப் போம் அன்றோ? [3] **நம்பி திருவழுதிநாடு தாசர்**, 'ஸ்ரீகீதை போவான் ஒருவன் சந்தியா சதஸ்ஸிலே வந்து கண்டால், பின்னை இவனுக்கு உழக்கு அரிசியைக் கொடுப்பித்துவிடு மத்தனைபோக்கி அங்கு அவர்கள் உள்ளிடம் கொடார்கள்; திருவாய் மொழி கற்றவன் ஒரு விண்ணப்பம் செய்வான் சென்றால், சர்வேஸ்வரனும் கிராமத்திலுள்ளாரும் புறப்பட்டு எதிர்கொண்டு தங்கள் இருப்பிடத்தை ஒழித்து அவனுக்குக் கொடுத்து ஆதரியாநிற்பர்கள்,' என்று அருளிச்செய்வர். [4] 'அதுதான் என் போல?' என்றால், 'மூவுருவாம் முதல்வனே-பிரமனைப் படைத்து அவனை அத்தியயனம் செய்வித்துத் தேவர்களுக்கு வெளிச்சிறப்பைச் செய்வித்து அது தன்னைப் 'பிரமன் செய்தான்,' என்று அவன் தலையிலே ஏறிட்டும், [5] சிவனுக்கு அந்தராத்துமாவாய்ப் புக்கு நின்று முப்புரங்களை எரிவித்துச் 'சிவன் செய்தான்' என்று அவன் தலையிலே ஏறிட்டும்

---

1. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'என்னை' என்று தொடங்கி.

2. 'இவரைக் கொண்டு சொல்ல வேண்டுமோ? தானே சொல்ல ஒண்ணாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தான் சொன்னைகில்' என்று தொடங்கி. வறமுறுகல் - கருகிப்போதல்.

3. ஸ்ரீகீதைக்கும் திருவாய்மொழிக்கும் உள்ள வாசியை ஆப்த சம்வாதத்தாலே விளக்குகிறார், 'நம்பி திருவழுதிநாடு தாஸர்' என்று தொடங்கி. சந்தியா சதஸ்ஸு-ஊர்ப் பொதுச்சாவடி.

4. 'அதுதான் என் போல என்றால்' என்றது, 'தான் கவி பாடி ஆழ்வார் மேலே ஏறிடுகிறதுதான் என்போலே என்றால்' என்றபடி.

5. "பணிவில்சீர்ச்,
செல்விடைப் பாகன் திரிபுரம் செற்றுழிக்
கல்லுயர் சென்னி இமயவில் நாணுகித்
தொல்புகழ் தந்தாரும் தாம்."
என்பது, பரிபாடல்.

விருது பிடிக்கப் பண்ணினாற்போலே, தானே பிரபந்தத்தைச் செய்து, நான் செய்தேன் என்று என் தலையிலே ஏறிட்டு எனக்கு ஒரு பிரசித்தியைத் தந்தான்.

[1] தானே காரியம் செய்து பிறர் தலையிலே ஏறிடுதல் அவனுக்குப் பண்டே சுபாவங் கண்டீர்! 'எந்த ஸ்ரீமந் நாராயணன் உலகங்களைப் படைப்பதற்கு முன்னே நான்முகனைப் படைத்தான்? எவன் அவனுக்கு வேதங்களையும் உபதேசம் செய்தான்?' என்பது உபநிடதம். 'அளவிட முடியாத ஆற்றலையுடையவனும் பூசிக்கத் தக்கவனுமான சிவனுக்கு விஷ்ணு அந்தராத்துமாவாய் இருக்கிறார்; அப்படி விஷ்ணு சிவனுக்கு அந்தராத்துமாவாய் இருப்பதனாலே அந்தச் சிவன் வில்லை வளைத்து நாண் ஏற்றுதலாகிற அந்தக் காரியத்தைப் பொறுத்துக்கொண்டான்' என்பது பாரதம். [2] 'இப்போது தானே நடத்திக்கொண்டது என்?' என்றால், தன் உருவமாக இருந்து காரியம் செய்யுமாறு போலே, பிரமன் சிவன் முதலானோர்களைத் தனக்குச் சரீரமாகக் கொண்டு நின்று படைத்தல் அழித்தல்களைச் செய்து அவர்கள்மேலே ஏறிட்டாற்போலே கண்டீர், என்மேலே ஏறிட்டுக் கவிபாடினேன் நானாகச் சொல்லித் தலைக்கட்டினபடியும்,' என்கைக்காகச் சொல்லிற்று. (2)

---

1. *பிரமனுக்கு வேதத்தைக் கொடுத்ததும், முப்புரங்களை அழித்ததும் சர்வேஸ்வரனே என்பதற்குப் பிரமாணம் காட்டுவதற்குத் திருவுள்ளம் பற்றி அதற்கு அருளிச்செய்கிறார், 'தானே காரியம் செய்து' என்று தொடங்கி. பிரமாணங்களைக் காட்டுகிறார், 'எந்த' என்று தொடங்கியும், 'அளவிட முடியாத' என்று தொடங்கியும்.*

*'யோபிரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை*
*வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை'*

*என்பது, ஸ்வேதாஸ்வதரம்.*

*'விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்ய அமிததேஜஸ:*
*தஸ்மாத் தநுர்ஜ்யா ஸம்ஸ்பர்ஸம் ஸவிஷேஹே மஹேஸ்வர:'*

*என்பது, பாரதம், கர்ணபர்வம்.*

2. *''மூவுருவாம் முதல்வன்' என்று தன் செயலுக்குக் காரணம் என்பான் என்?' என்ன, தான் செய்த காரியம் தன் அதீனமானாற்போலே இவர்கள் காரியமும் தன் அதீனம் என்கைக்காகச் சொல்லுகிறது என்கிறார் 'இப்போது தானே' என்று தொடங்கி.*

753

ஆமுதல் வன்இவன் என்றுதன் தேற்றிஎன்
நாமுதல் வந்து புகுந்துநல் இன்கவி
தூமுதல் பத்தர்க்குத் தான்தன்னைச் சொன்னஎன்
வாய்முதல் அப்பனை என்று மறப்பனோ!

பொ—ரை: 'கவி பாடுகைக்கு முதல்வன் ஆவான் இவன் என்று தன்னை நான் தெளியும்படி செய்து, முதலிலே என் நாவிலே வந்து புகுந்து நல்ல இனிய கவிகளை, முதன்மை பெற்ற பரிசுத்தரான அடியார்கட்குத் தானே தன்னைச் சொன்ன என் வாக்கிற்குக் காரணனான அப்பனை இனி ஒருநாளும் மறக்க உபாயம் இல்லை,' என்றபடி.

வி - கு: 'இவன் ஆம் முதல்வன் என்று தன் தேற்றி, வந்து புகுந்து, இன் கவி பத்தர்க்குச் சொன்ன வாய் முதல் அப்பன்' என்க.

ஈடு: மூன்றாம் பாட்டு. [1]'கைம்மாறு செய்யாதொழியவுமாம் கண்டீர், நான் மறந்து பிழைக்கப் பெற்றேனாகில்!' என்கிறார்.

ஆம் முதல்வன் இவன் என்று தன் தேற்றி - 'முதல்வன் ஆம் இவன்,' என்று தன் பக்கலிலே எனக்குத் தெளிவு உண்டாம் படியாகச் செய்து: என்றது, 'காரண வாக்கியங்களில் உபாசிக்கத் தக்கவனாகச் சொல்லப்படுகிறான் தானே என்று தன் பக்கலிலே நான் தெளியச்செய்து,' என்றபடி. அன்றிக்கே, 'பரமபதத்தைப் போன்று, சம்சாரத்தையும் திருத்த நினைத்தோம். அதற்கு அடி ஆம் இவன், என்று என்பக்கலிலே தன் சொரூபம் முதலானவைகளைத் தெளியச் செய்து என்னுதல். [2] இங்கே அருளிச்செய்யும் வார்த்தை: 'திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் படிக் கட்டிலிலே ஆளவந்தார் எழுந்தருளியிருக்க, உடையவர்

---

1. 'வாய்முதல் அப்பனை என்று மறப்பான்' என்றதனைக்கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'தன் தேற்றி' என்பதற்கு, 'தன் சொரூபம் முதலானவைகளை என் பக்கலிலே தெளியச்செய்து' என்பது இரண்டாவது பொருள். அதாவது, 'உலகத்தைத் திருத்தத் தக்க ஞானம் உண்டாகும்படி மயர்வற மதிநலம் அருளினன்,' என்றபடி.

2. பிராசங்கிகமாக ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார், 'இங்கே' என்று தொடங்கி. 'இங்கே' என்றது, 'உலகைத் திருத்துகைக்கு இவன் அடி ஆம் என்று சொன்ன இவ்விடத்தில்' என்றபடி.

திருப்புற்றுக்குக் கிழக்காக எழுந்தருளி நிற்கிறவரைக் கண்டு, '**ஆம் முதல்வன் இவன்**' என்று அருளிச்செய்தாராம்' என்பது. என் நா முதல் வந்து புகுந்து - [1] சர்வேஶ்வரன் பிரமனுக்குத் திருவருள் செய்ய, அவன் பின்னர் [2] 'முனிவரே! இந்தச் சரஸ்வதியானது என்னுடைய அருளாலேயே உமக்கு உண்டாயிற்று; நீர் இராம சரிதம் முழுதினையும் செய்யும்,' என்கிறபடியே அவன் சரஸ்வதியை ஏவி, இப்படி நாலிரண்டு நிலை நின்றே அன்றோ ஸ்ரீ வால்மீகி பகவானைப் பேசுவித்தது? அங்ஙனம் ஓர் இடையீடு இன்றிக்கே, என்னுடைய நாக்கிலே முற்பாடனாய் வந்து புகுந்து. அன்றிக்கே, [3] 'என் நாவுக்கு அடியாய் வந்து புகுந்து' என்னுதல்.

நல் இன் கவி - இலக்கணங்கள் எல்லாம் நிறைந்தனவாய், அந்த இலக்கணங்கள் கிடக்கச்செய்தே, சொல்லில் இனிமை தானே கவர்ச்சிகரமாம்படி இனியவான கவிகளை. தூ முதல் பத்தர்க்கு - சம்சார சம்பந்தம் சிறிதும் இல்லாத நித்தியசூரிகளுக்கு, [4] 'கேட்டு ஆரார் வானவர்கள்' என்கிறபடியே அவர்கள் கொண்டாடும்படி சொன்ன. அன்றிக்கே, 'சம்சாரத்திலே தலை நின்ற முமுக்ஷுக்களுக்கு' என்னுதல். தான் தன்னைச் சொன்ன - தானே சொல்லுதல், நானே ஒருபடி சொல்லுதல் செய்கை அன்றிக்கே, என் நா முதல் வந்து புகுந்து தான் தன்னைச் சொன்னான் ஆயிற்று. என் வாய் முதல் அப்பனை - எனக்கு வாய்த்த காரணனான மஹோபகாரகனை. அன்றிக்கே, 'என் நா முதல்' என்றதுதன்னையே பின் மொழிந்து, 'என் வாக்குக்கு முதலான அப்பனை' என்கிறார்

---

1. 'என் நா முதல் வந்து புகுந்து' என்பதற்கு, 'என் நாவிலே முற்பாடனாய் வந்து பிரவேசித்து' என்றும், 'என் நாவுக்கு முதலான காரணமாய் வந்து புகுந்து' என்றும் பொருள் கொள்க. இவ்விரண்டு பொருளையும் முறையே அருளிச்செய்கிறார், 'சர்வேஶ்வரன்' என்று தொடங்கியும், 'அன்றிக்கே,' என்று தொடங்கியும்.

2. 'மச்சந்தாதேவ தே ப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ
ராமஸ்ய சரிதம் ஸர்வம் குரு த்வம் ரிஷிஸத்தம'

என்பது, ஸ்ரீராமா. பால. 2. :31.

3. 'என் நாவுக்கு அடியாய்' என்றது, 'என் நாவின் செயலுக்கு அடியாய்' என்றபடி.

4. 'கேட்டு ஆரார்' என்பது, திருவாய். 10. 7 : 11.

என்னுதல். என்று மறப்பனே - [1]'முன்பு அநாதி காலம் மறந்து போந்ததாகில் இனிமேல் நினைக்கைக்குக் காரணமான காலத்தை எல்லாம் மறக்கைக்கு உடலாக்கினால்தான் மறப்பனே?' என்றது, 'முன்பு நினைக்கையில் உள்ள அருமையோபாதியும் போரும் இனி மறக்கையில் உள்ள அருமையும்: இனி ஏதேனும் ஒரு நாள் தான் என்னாலே மறக்கப்போமோ?' என்றபடி. (3)

754

*அப்பனை என்று மறப்பன்என் ஆகியே*
*தப்புதல் இன்றித் தனைக்கவி தான்சொல்லி*
*ஒப்பிலாத் தீவினை யேனை உயக்கொண்டு*
*செப்பமே செய்து திரிகின்ற சீர்கண்டே.*

**பொ-ரை:** 'என்னைக் கருவியாகக்கொண்டு தவறுதல் இல்லாமல் தன்னையே தான் கவி சொல்லி, ஒப்பு இல்லாத தீய வினைகளையுடையேனை நான் உய்யும்படி அங்கீகரித்து, செவ்வையான காரியங்களையே செய்து போகின்ற சீலத்தைக் கண்டு வைத்தும், என் அப்பனை மறக்கப்போமோ?' என்றபடி.

**வி - கு:** 'தீவினையேனை உய்யக் கொண்டு என்னாகித் தனைக் கவி தான் சொல்லிச் செப்பமே செய்து திரிகின்ற சீர் கண்டும் அப்பனை மறக்கப்போமோ?' என்க.

**ஈடு:** நான்காம் பாட்டு. [2]'தானே தன்னைக் கவிபாடிக் கொண்டானாகில், ஓர் ஆச்சரியம் இல்லை; அதற்குத் தகுதி இன்றிக்கே இருக்கிற என்னைக்கொண்டு தப்பாமே கவிபாடின இந்த உபகாரத்தை இனி மறக்க உபாயம் இல்லை,' என்கிறார்.

அப்பனை என்று மறப்பன் - உபகாரகன் ஆனவனை நான் என்று மறப்பன்? [3]இனி, அவன் அபகாரம் செய்தால் தான் மறக்கப் போமோ? 'நீர் மறக்க ஒண்ணாதபடி அவன் செய்த உபகாரம் யாது?'

---

1. 'என்று மறப்பனே' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'முன்பு' என்று தொடங்கி. அதனை விவரணம் செய்கிறார், 'முன்பு நினைக்கையில்' என்று தொடங்கி. அருமையோபாதி - அருமையைப் போல.

2. திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

3. மறக்கப் போகாமையின் உறைப்பை அருளிச்செய்கிறார், 'இனி, அவன்' என்று தொடங்கி.

எனின், என் ஆகியே தப்புதல் இன்றித் தனைக்கவி தான் சொல்லி - என்னைக் கருவியாகக்கொண்டு கவி பாடுகிற இடத்து, என்னுடைய சம்பந்தத்தால் வந்த குற்றம் தட்டாதபடி கவி பாடினன். என் ஆகியே - 'என் பக்கலிலே தானாய்' என்றவாறு. [1] இவ்விடத்தில் 'தான் பாடினனாகில் ஒரு குற்றமும் இல்லாமல் தலைக்கட்டும்; நான் பாடினேனாகிலும் வருந்தி ஒருபடி தலைக்கட்டுவேன்; என்னைக் கருவியாகக கொண்டு கவி பாடாநிற்கச்செய்தேயும் என்னுடைய சம்பந்தத்தால் வந்த குற்றம் தட்டாதபடி கவி பாடித் தலைக்கட்டினன்' என்று **எம்பார்** அருளிச்செய்வர். விஷயத்துக்குத் தகுதியாகக் கவி பாடினன் ஆதலின், '**தனைக் கவி தான் சொல்லி**' என்கிறார்.

ஒப்பு இலாத் தீவினையேனை உய்யக்கொண்டு - என்னைக் கருவியாகக் கொண்டு இப்படிக் கவி பாடுவித்தது, முன்பு நின்ற நிலையைக்காட்டிலும் நான் எவ்வளவு புகுர நின்றேனாக; நான் முன்புற்றையிற்காட்டில் ஓர் அடி வர நின்றது உண்டோ? முற்றறிவு, வரம்பில் ஆற்றலுடைமை முதலானவைகளுக்கு ஒப்பு இல்லாதவாறு போலே ஆயிற்று, அறிவின்மை ஆற்றலின்மை இவைகளுக்கு எனக்கு ஒப்பு இல்லாதபடியும்; ஆதலின், நானும் அவனுக்கு ஒப்பன் என்கிறார் என்றபடி. உய்யக்கொண்டு - [2] 'இருக்கிறவன் என்று இவனை அதனால் அறிகிறார்கள்' என்கிறபடியே, நான் உஜ்ஜீவிக்கும் படி என்னைக்கைக்கொண்டு. [3] செப்பமே செய்து திரிகின்ற - வஞ்சனை பொருந்திய மனத்தையுடையேனாய் இருக்கிற என்னோடே, சம்சார சம்பந்தம் சிறிதும் இல்லாதவரான நித்தியசூரிகளோடு பரிமாறுமாறு போலே, என்னுடனே செவ்வையே பரிமாறினன். அன்றிக்கே, 'எனக்குக் காப்பினைச் செய்துகொண்டு போருகிற' என்னுதல். சீர் கண்டே - இப்படி இருக்கிற சீலம் முதலான குணங்களை அநுசந்தித்து. அப்பனை என்று மறப்பன்? (4)

---

1. *கூறிய பொருளுக்குச் சம்வாதம் காட்டுகிறார், 'இவ்விடத்தில்' என்று தொடங்கி.*

2. *'ஸந்தம் ஏனம் ததோவிது:' என்பது,* தைத்திரீய. ஆன. 6.

3. *செப்பம் - சௌசீல்யமும், பாதுகாத்தலும்.*

755

சீர்கண்டு கொண்டு திருந்துநல் இன்கவி
நேர்பட யான்சொல்லும் நீர்மை இலாமையில்
ஏர்வுஇலா என்னைத்தன் ஆக்கிஎன் ஞல்தன்னைப்
பார்பரவு இன்கவி பாடும் பரமரே.

பொ - ரை : 'தன்னுடைய கல்யாண குணங்களைக் கண்டு கொண்டு. திருந்திய நல்ல இனிய கவிகளைத் தகுதியாக யான் சொல்லும் ஞானம் எனக்கு இல்லாமையினுல், தகுதி இல்லாத என்னைத் தன் பக்கலிலே பத்தியுடையேனும்படி செய்து. என்னுல் தன்னைப் பூவுலக மெல்லாம் துதிக்கத் தக்க கவிகளைப் பாடுகின்ற பரமன் ஆவான்,' என்கிருர்.

வி - கு : 'சீர் கண்டு கொண்டு சொல்லும் நீர்மை இலாமையின்' என்க. 'ஆக்கி என்னுல் தன்னைப் பாடும் பரமர்' என்க.

ஈடு : ஐந்தாம் பாட்டு. [1] 'தன்னைக் கவி பாடுகைக்குத் தகுதி யான நீர்மையும் இன்றிக்கே இச்சையும் இன்றிக்கே இருக்கச் செய்தே, உலகம் எல்லாம் கொண்டாடும்படியான கவியை என்னைக் கொண்டு பாடுவதே ! என்ன சர்வேஶ்வரனே !' என்கிருர்.

சீர் கண்டுகொண்டு - கல்யாண குணங்களை நன்கு அறிந்து, திருந்து நல் இன்கவி - [2] கட்டளைப்பாட்டு எல்லா இலக்கணங்களும் நிறைந்தனவாய் இனியனவான கவிகளை. நேர்பட யான் சொல்லும் [3] நீர்மை இலாமையில் - இவை ஒன்றும் இல்லையாகிலும், சொல்லு கிறவனுடைய நன்மையாலே வருவது ஒரு நன்மையும் உண்டே அன்றே கவிக்கு ? அப்படி வாய்க்கச் சொல்லும் சுபாவத்தை நான் உடையேன் அல்லாமையில். ஏர்வு இலா என்னை - அழகு இல்லாத என்னை. [4] ஏர் - அழகு. தன் ஆக்கி - தன்னேடு ஒக்கச்செய்து. அன்றிக்கே, 'தனக்கு ஆக்கி' என்னுதல். என்னுல் தன்னைப் பார் பரவு இன் கவி பாடும் - என்னைக் கருவியாகக்கொண்டு பாரில்

---

1. 'நீர்மை இலாமையில் ஏர்வு இலா என்னைப் பார் பரவு இன்கவி பாடும் பரமரே' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. கட்டளைப்பட்டு—திருந்தப்பட்டு.

3. 'நீர்மை' என்பது, ஞானம் சத்தி முதலானவைகளைச் சொல்லுகிறது.

4. 'ஏர்' என்பது, அழகாய், இச்சையைச் சொல்லுகிறது.

உள்ளார் அனைவரும் தன்னைப் பரவும்படி இனிய கவிகளைப் பாடினன். என்றது, 'விசேஷஜ்ஞர், விசேஷஜ்ஞர் அல்லாதார் என்னும் வேற்றுமை இன்றியே எல்லாரும் கொண்டாடும்படி செய்தான்,' என்றபடி. பரமரே - [1] 'அவனோடு ஒத்தவர் இல்லை' என்கிற வாக்கியம்கொண்டு இவனுடைய உயர்வு அறியவேண்டா; என்னை இடுவித்துக் கவி பாடுவித்துக்கொண்ட இதுவே போரும் அவனுடைய உயர்வு அறிகைக்கு. (5)

756

*இன்கவி பாடும் பரம கவிகளால்*
*தன்கவி தான்தன்னைப் பாடுவி யாதுஇன்று*
*நன்குவந்து என்னுடன் ஆக்கிஎன் னால்தன்னை*
*வன்கவி பாடும்என் வைகுந்த நாதனே.*

**பொ - ரை:** *'இனிய கவிகளைப் பாடுகிற உயர்ந்த புலவர்களால் தனக்குத் தகுதியான கவிகளைத் தான் தன்னைப் பாடுவித்துக் கொள்ளாமல், என் வைகுந்தநாதன், இன்று வந்து, என்னைத் தன்னோடு ஒத்தவன் ஆக்கி, என்னால் தன்னைச் சொற்செறிவு பொருட்செறிவுள்ள கவிகளை நன்றாகப் பாடாநின்றான்,' என்கிறார்.*

**வி—கு:** *'என் வைகுந்தநாதன், பரம கவிகளால் தன்னைப் பாடுவியாது, இன்று வந்து என் உடன் ஆக்கி, என்னால் தன்னை வன்கவி நன்குபாடும்,' என்க.*

**ஈடு:** ஆறும் பாட்டு. [2] 'வியாசர் பராசரர் வால்மீகி முதலான கவிகளைக்கொண்டு கவி பாடுவித்துக்கொள்ளாமல், என்னைக் கருவியாகக் கொண்டு கவி பாடுவதே!' என்று பிரீதியையுடையராகிறார்.

இன் கவி பாடும் பரம கவிகளால்...என்னால் தன்னை வன்கவி பாடும் - 'பின்னைத் தான் தனக்குச் சில கவிகளைப் பாடவேண்டினால், அதற்குத் தகுதியாக இருப்பார் ஸ்ரீ வேதவியாசபகவான், ஸ்ரீ பராசர பகவான், ஸ்ரீ வால்மீகி பகவான் இவர்கள் உளராய் இருக்க, மற்றும்

---

1. *'நதத் ஸமஸ்ச' என்பது, ச்வேதா. உப. பரமன்-சர்வாதிகள்.*

2. *திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

வேணுமாகில், 'செந்தமிழ் பாடுவார்' என்று சொல்லப்படுகிற முதல் ஆழ்வார்கள் எல்லாரும் உளராய் இருக்க, என்னைக்கொண்டு கவி பாடுவித்துக்கொண்ட இதுவும் ஒரு நீர்மையே!' என்கிறார். [1] முதல் ஆழ்வார்களிலே ஒருவரை 'ஒரு கவி சொல்லிக் காணீர்' என்ன, 'பெருகு மதவேழம்......வான்கலந்த வண்ணன் வரை' என்றே அன்றோ அவர் பாடுவது? [2] 'பெருகு மத வேழம் - ஆற்றுப் பெருக்குப்போலே பெருகாநின்றுள்ள மதத்தையுடைய யானையானது, மாப்பிடிக்கு முன் நின்று - [3] மதித்து முன்னடி தோற்றாதே வருகிற இதனையும் தனக்குக் கையாள் ஆக்கிக்கொள்ளவற்றாய் ஆயிற்று இதனுடைய சீர்மை இருக்கிறபடி. 'நான் இங்குத்தைக்குச் செய்ய வேண்டுவது என்?' என்று ஏவிற்றுச் செய்கைக்குக் காலத்தை எதிர் நோக்கி நிற்கின்றதாதலின், 'முன்னின்று' என்கிறது. இரு கண் இள மூங்கில் வாங்கி - இரண்டு கண்ணேறி அதற்குத் தக்க முற்றனவும் இன்றிக்கே இருக்கிற மூங்கிற்குருத்தை வாங்கி; என்றது, தான் மதித்து முன்னடி தோற்றாதே திரியச்செய்தேயும் பிடியின் பக்கல் உண்டான அன்பின் மிகுதியாலே குறிக்கோளோடே ஆதரத்தோடு வாங்குதலைத் தெரிவித்தபடி. அருகு இருந்த தேன் கலந்து - [4] திருமஞ்சனத்துக்கு உபகரணங்கள் சமைந்திருக்குமாறு போலே, அருகே மலை முழைஞ்சுகளிலே நிரம்பியிருக்கிற தேன்களிலே வாங்கித் தோய்த்து. [5] மூங்கிற்குருத்தையும் நீர்ப்பண்டத்தைப்

---

1. முதலாழ்வார்கள் கவி இனிதாய் இருக்கும் என்பதற்குப் பிரமாணம் காட்டத் திருவுள்ளம் பற்றி, அதற்குச் சங்கதி அருளிச்செய்கிறார் 'முதலாழ்வார்களிலே' என்று தொடங்கி.

2. பிரமாணமாக எடுத்த திருப்பாசுரத்துக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பெருகு மதவேழம்' என்று தொடங்கி.

3. 'மாப்பிடிக்கு' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'மதித்து' என்று தொடங்கி.

4. 'திருமஞ்சனத்துக்கு உபகரணங்கள் சமைந்திருக்குமாறு போலே' என்றது, 'திருமஞ்சனம் கொண்டருளுகைக்குக் கலசங்கள் பூரித்திருக்குமாறு போலே' என்றபடி.

5. தோய்த்து என்னாமல், 'கலந்து' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'மூங்கிற்குருத்தையும்' என்று தொடங்கி.

போன்றதாக அருளிச்செய்கிறார். நீட்டும் - [1] இதுதான் இரந்து கொடாநிற்க, அதனை, அது 'உனக்கு வேண்டுவார்க்குக் கொடாய்' என்று நிற்குமாயிற்று. வான் கலந்த வண்ணன் வரை - [2] மூங்கிற் குருத்தும் தேனும் கலந்தாற்போலே ஆயிற்று, மேகமும் அவன் திருநிறமும் கலந்திருக்கும்படி.

தன் கவி தான் தன்னைப் பாடுவியாது - [3] கவியும் தன்னது; பாடினனும் தான்; கவிகட்குப் பொருளாயுள்ளவனும் தான். அவர் களைக்கொண்டு, தன்னுடையதான சொல்லாலே, அதற்குப் பொருளா யுள்ள தான் தன்னைப் பாடுவியாதே. இன்று நன்கு வந்து - இன்று நான் இங்ஙனே உஜ்ஜீவிக்கும்படிக்குத் தகுதியாக வந்து. அன்றிக்கே, 'நன்கு உவந்து' என்று பிரித்து, 'நன்றாக உவந்து' என்றும், 'இக் கவி பாடுகைதானே பிரயோஜனமாக உவந்து' என்றும் பொருள் கூறலுமாம். என் [4] உடன் ஆக்கி - என்னைப் பிரியாத கருவியாகக் கொண்டு. வன்கவி பாடும் - சொற்செறிவு இன்றி இருக்கை அன்றிக்கே, [5] 'மொய்ய சொல்லால்' என்கிறபடியே, சொற் செறிவையுடைத்தாய் இருக்கை. என் வைகுந்தநாதனே - அழியாத தான கலங்காப் பெருநகரத்தை இருப்பிடமாகவுடையோமாய் இருப்

---

1. கொடுக்கும் என்னுமல் 'நீட்டும்' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'இதுதான்' என்று தொடங்கி.

2. 'தேன் கலந்து' என்றும், 'வான் கலந்த' என்றும் வந்துள்ள சொற்களைத் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார், 'மூங்கிற்குருத்தும்' என்று தொடங்கி.

3. 'தன் கவி, தான், தன்னை' என்ற மூன்றுக்கும் வேற்றுமையை அருளிச்செய்கிறார், 'கவியும்' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார், 'அவர்களைக் கொண்டு' என்று தொடங்கி.

4. உடன்-பிரியாத கருவி.

5. 'மொய்ய சொல்லால்'-இது, திருவாய். 4. 5 : 2. இது, சொற் செறிவையுடைத்தாய் இருப்பதற்கு மேற்கோள்.

6. 'வைகுந்தநாதன்' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'அழியாததான' என்று தொடங்கி.

'சேரா தனஉள வோபெருஞ் செல்வர்க்கு வேதம்செப்பும்
பேரா யிரம்திண் பெரும்புய மாயிரம் பெய்துளவத்
தாரார் முடியா யிரம்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
ஆரா வமுதக் கவியா யிரம்அவ் வரியினுக்கே.'

என்பது, சடகோபரந்தாதி, 45.

பதைப்போன்று, அழியாத வேதம் போலே நித்தியமாய் இருக்கிற ஆயிரம் பாசுரங்களைப் பாடுவிக்க வேணும்' என்று பார்த்தான். அன்றிக்கே, 'பரமபதத்தை இருப்பிடமாகவுடையனுகையாலே வந்த ஏற்றத்தைப் போன்றதாக நினைத்திராநின்றுன் ஆயிற்று, இக்கவி பாட்டுடையன் ஆகையால் வந்த ஏற்றத்தையும்' என்னுதலுமாம். (6)

757

*வைகுந்த நாதன்என் வல்வினை மாய்ந்துஅறச்*
*செய்குந்தன் தன்னைஎன் ஞக்கிஎன் ஞல்தன்னை*
*வைகுந்த ஞகப் புகழவண் தீங்கவி*
*செய்குந்தன் தன்னைஎந் நாள்சிந்தித்து ஆர்வனே?*

பொ - ரை: ஸ்ரீ வைகுண்டத்திலே எழுந்தருளியிருப்பவனும், என்னுடைய வலிய கொடிய வினைகள் எல்லாம் அழிந்து அற்றுப் போகும்படியாகச் செய்கின்ற தூயோனும், என்னைத் தனக்கு உரிய வனுக்கி என்னுல் தன்னை வைகுந்தநாதனுகப் புகழ வளவிய இனிய கவிகளைச் செய்யும் குந்தன் என்னும் திருநாமத்தையுடையவனுமான எம்பெருமானை எத்தனை நாள் சிந்தித்தாலும் மனம் நிறைவு உண்டாகுமோ?

வி – கு: குந்தன் - முகுந்தன் என்ற திருநாமத்தின் சிதைவுமாம்; அன்றிக்கே, 'குந்தம் என்னும் ஆயுதத்தையுடையவன்' என்னவுமாம். 'தன்னை என்னுக்கி' என்ற இடத்தில் 'என்னைத் தன்னுக்கி' என்று பிரித்துக் கூட்டுக. 'புகழச் செய் குந்தன்' என்க.

ஈடு: ஏழாம் பாட்டு. [1]பரம உதாரமாய் எல்லை அற்ற இனியன வான கவிகளை என்னைக் கொண்டு பாடுவித்துக்கொண்ட மஹோப காரத்துக்கு, காலம் என்னும் ஒரு பொருள் உள்ளதனையும் இவனை அனுபவித்தாலும் நிறைவு பெற்றவன் ஆகின்றிலேன்,' என்கிறுர்.

வைகுந்தநாதன் - [2]உதவி செய்தவன் என்னோடு அணைய நின்றுன் ஒருவனுய் நான் ஆறி இருக்கிறேனே? அயர்வு அறும்

---

1. 'என்னுல் தன்னை வண் தீம் கவி செய் குந்தன் தன்னை எந்நாள் சிந்தித்து ஆர்வனே?' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறுர்.

2. 'வைகுந்தநாதன்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறுர், 'உதவி செய்தவன்' என்று தொடங்கி.

அமரர்கள் அதிபதி ஒரு சம்சாரி பக்கலிலே மேல் விழாநின்ருல் எங்ஙனே ஆறி இருக்கும்படி? [1]'முன்னே உலகங்களுக்கு எல்லாம் நாதனுய் இருந்தும், சுக்கிரீவனைத் தனக்கு நாதனுக இச்சிக்கிருர்,' என்கிற இதற்கும் அவ்வருகே இருக்கிறது அன்ருே இது? [2]ஸ்ரீசுக்கிரீவ மஹாராஜரை நாதராக உடையர் ஆகைக்கு யோக்கியதை சம்பாதித்தபடியாயிற்று, முன்பு உலகநாதரானது. [3]பெறுவார், பெருது ஒழிவார்: முன்னம் இச்சியாநின்ருர். கிடையாததிலே அன்ருே இச்சைதான் செல்லுவது? [4]'அப்படிப்பட்ட ஸ்ரீராமபிரான் சுக்கிரீவனுடைய அருளை நல்ல மனத்தோடு இச்சிக்கிருர்' என்றது போலே ஆயிற்று. [5]வல்வினை போக வேணும் என்று இராத என்னுடைய. [6]''மயர்வுஅற மதிநலம் அருளினன்' என்ற இத்தனை அன்ருே எனக்கு அருளினன்?' என்கைக்கு, [7]அருளுவதற்கு முன்பு

---

1. உலகநாதன் என்கிற மாத்திரம் அன்றிக்கே, 'வைகுந்தநாதன்' என்கையாலே மஹாராஜரைக்காட்டிலும், இவர்க்கு வேறுபாட்டினை அருளிச்செய்கிருர், 'முன்னே' என்று தொடங்கி.

> 'ஏஷ தத்வாச வித்தாநி ப்ராப்யச அநுத்தமம் யஶ:
> லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதம் இச்சதி'

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 4 : 18. இது, திருவடியைப் பார்த்து இளைய பெருமாள் கூறியது.

2. 'ஸ்நாத்வா-பீராடி' என்கிற வினையெச்சம் போலே, 'பூத்வா-இருந்து' என்கிற இதுவும், அங்கமாகக் கொள்ளத் தக்கது என்கிருர், 'ஸ்ரீ சுக்கிரீவ மஹாராஜரை' என்று தொடங்கி.

3. 'இச்சதி' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'பெறுவார்' என்று தொடங்கி. 'இச்சதி' என்ருல் இப்பொருளைக் காட்டுமோ?' என்ன, 'கிடையாததிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிருர்.

4. மேன்மையையுடையவன் தாழ நின்றதற்கு வேறும் ஒரு பிரமாணம் காட்டுகிருர், 'அப்படிப்பட்ட' என்று தொடங்கி.

> 'யஸ்ய ப்ரஸாதே ஸததம் ப்ரஸீதேயு: இமா: ப்ரஜா:
> ஸராமோ வாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதம் அபிகாங்க்ஷதே'

என்பது, ஸ்ரீராமா. கிஷ். 4 : 21.

5. 'என்' என்ற சொல்லிற்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'வல்வினை' என்று தொடங்கி.

6. இங்ஙனம் பொருள் கூறுவதற்குக் காரணத்தை அருளிச்செய்கிருர் 'மயர்வற' என்று தொடங்கி.

7. 'எனக்கு அருளினன்' என்னுது ஒழிந்தது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'அருளுவதற்கு முன்பு' என்று தொடங்கி.

தாம் ஒருவர் உளராகக் கண்டிலர் அன்றோ? [1] 'அவன் இல்லாதவன் ஆகவே ஆகிறான்' என்னும் நிலையன்றோ முன்பு? சர்வசத்தியான தன்னாலேதான் இது செய்யலாமோ என்பார், 'வல்வினை' என்கிறார்.

மாய்ந்து அறச் செய் குந்தன் -[2] என்னுடைய பிரபல விரோதியைப் போக்கின சுத்தியையுடையவன்; 'அடியார்க்குத் தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய் குந்தா' என்னக்கடவது அன்றோ? [3] அடியார்கள் பக்கல் அன்பு வைத்து அவர்கள் செய்த பாபங்களை அடியார் அல்லாதார் பக்கல் அசல் பிளந்தேறிடும்படியான் சுத்தி யோகத்தை அன்றோ அவ்விடத்திற்சொல்லுகிறது? அன்றிக்கே, 'முகுந்தன்' என்ற பெயர் 'குந்தன்' என்று முதற்குறையாய்க் கிடக்கிறது என்னவுமாம். அன்றிக்கே, 'குந்தன்' என்று திருநாமம் ஆகவுமாம்; [4] 'குமுத: குந்தர: குந்த:' என்று குந்தன் என்றே திருநாமம் ஆயிற்று அன்றோ? தன்னை என் ஆக்கி - என்னைத் தன்னோடு ஒக்கச் செய்து. அன்றிக்கே, 'தனக்கு ஆம்படி செய்து' என்னுதல். என்னால் தன்னை வைகுந்தனாகப் புகழ - [5] தந்தையானவன் மகனுக்கு ஒரு பசுவை நீர் வார்த்துக் கொடுத்து மீண்டு அவன் பக்கலிலே பசுவை நீர் ஏற்றுப் பெறுமாறு போலே இருப்பது ஒன்றாயிற்று இதுவும். [6] அது நித்திய விபூதி அன்றோ? இங்ஙனே இருக்கச் செய்தேயும் இவர் புகழ்ந்த இதனாலே தனக்கு அவ்விபூதி உண்டாயிற்றதாக நினைத்து இராநின்றான் ஆதலின், 'வைகுந்தனாகப் புகழ' என்கிறது.

---

1. *'தாம் உளரே அன்றோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன்' என்று தொடங்கி. அஸந்நேவஸபவதி' என்பது* தைத்திரீயம்.

2. *'குந்தம்' என்பது, குருந்தமாய், அதன் பூவெளுத்திருக்குமாகையாலே, அதனால் தூய்மையைச் சொல்லுகிறது என்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார், 'என்னுடைய' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அடியார்க்கு' என்று தொடங்கி. இது,* திருவாய். 2. 6 : 1.

3. *இத்திருப்பாசுரப் பகுதிக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'அடியார்கள் பக்கல்' என்று தொடங்கி. அசல் பிளந்தேறிடும்படியான வேறு ஒருவர் சரீரத்திலே பிரவேசிப்பித்து அனுபவிப்பிக்கும்படியான.*

4. *'குமுத: குந்தர: குந்த,' என்றது,* ஸஹஸ்ரநாமம்.

5. *'என்னாக்கி என்னால் தன்னைப் புகழ என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'தந்தையானவன்' என்று தொடங்கி.*

6. *'நித்தியமான விபூதி இவர் புகழ்ந்த பின் உண்டாயிற்று என்னக்கூடுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அது நித்திய விபூதியன்றோ?' என்று தொடங்கி. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'ஆத்துமவஸ்து' என்று தொடங்கி.*

ஆத்தும வஸ்து நித்தியமாக இருக்கச்செய்தே [1]'அவன் இல்லாத வனாகவே ஆகிறான்' என்றும், 'இவனை இருக்கிறவனாக அறிகிறார்கள்' என்றும் சொல்லாநிற்பதைப் போன்றது ஆயிற்று. [2]'இன்னான் வாக்காலே கவி பாடின பின்பு அவன் வாழ்ந்தான்' என்னக் கடவது அன்றோ? அப்படியே, புகழ்ந்த பின்பு தனக்கு அவ்விபூதியில் இருப்பு உண்டாயிற்றதாக நினைத்து இராநின்றான் அவன்.

வண் தீம் கவி செய் குந்தன் - வளவியனவாய் இனியனவாய் இருந்துள்ள கவிகளைப் பாடி, அதுதன்னைத் தன் பேறாக நினைத்திருக்கும் தூய்மையையுடையவன். என்றது, [3]'துயர் அறு சுடர் அடி' என்பது போன்று, இவரைக்கொண்டு கவி பாடின பின்பு தன் துயர் தீர்ந்தானாய் இருக்கிறபடியைத் தெரிவித்தவாறு. [4]இவர் துயர் போன பின்பு, தனக்கு ஒரு துயர் உண்டாய் அது போனாற் போலே நினைத்து இராநின்றானாயிற்று. [5]சரீரத்துக்கு வந்த வியாதி அனுபவிப்பான் சரீரி அன்றோ? 'வ்யஸநேஷு மநுஷ்யாணாம் -

---

1. 'அஸந்நேவ ஸபவதி அஸத்ப்ரஹ்மேதி வேதசேத்
அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத ஸந்தமேநம் ததோவிது:'
என்பது, தைத்திரீயம்.

2. 'அப்படி ஒருவன் கவி பாடினால் அதனால் மேன்மை உளதாமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இன்னான்' என்று தொடங்கி.

.................................'தாழாது,
செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்றுள னாயின் நன்றுமன் என்றநின்
ஆடுகொள் வரிசைக் கொப்பப்
பாடுவன் மன்னாற் பகைவரைக் கடப்பே'

'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை'

என்பன புறநானூறு, 53, 72.

3. 'தன்பேறாக நினைத்திருக்கும்' என மேலே அருளிச்செய்ததனை விவரணம் செய்கிறார், 'துயர் அறு' என்று தொடங்கி.

4. தன் துயர் தீர்ந்ததனுடைய உறைப்பை அருளிச்செய்கிறார், 'இவர் துயர்' என்று தொடங்கி.

5. 'தன்னதானபடி ஆமாறு யாங்ஙனம்?' என்ன, 'சரீரத்துக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இதற்கு அநுஷ்டானமும் காட்டுகிறார், 'வ்யஸநேஷு மநுஷ்யாணாம்' என்று தொடங்கி. 'மநுஷ்யாணாம்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'திவ்விய' என்று தொடங்கி.

திவ்விய அந்தப் புரத்திலுள்ளார்க்காதல் திருத்தாய்மார்க்காதல் ஒரு துன்பம் வந்தாலோ துக்கத்தையுடையவராவது? என்றால், மநுஷ்யாணும் ப்ருஶம் துக்கிதோ பவதி - துக்கத்தையுடையவனான அளவன்றிக்கே, யானை அளறுபட்டாற்போலே நோவுபடுவார் ஆயிற்று, இன்று ஒரு படியாய், பிற்றை நாள் ஒரு படியாய், பின்னர் ஆறிப் போம் இவர்களுக்கு; இவர்கள் துக்கத்தில் நாள்தோறும் புதியராய் இருப்பர் ஆதலின், 'துக்கிதோ பவதி' என்கிறது. [1] 'வியஸநம் இவனதானால் துக்கமும் இவனதாகவேண்டி இருக்க, இவர் துக்கத்தையுடையர் ஆதற்குக் காரணம் என்?' என்னில், 'இவன் படுகிற கிலேசம் இவன் காவற்சோர்வால் வந்தது ஒன்று அன்றே, நம் காவற்சோர்வாலே வந்தது ஒன்று அன்றோ?' என்று காவலர் ஆகையாலே நாள்தோறும் புதியராய் இருப்பர் என்க. [2] 'இது எனக்கு மிகவும் நாணமாய் இருக்கின்றது; நீங்கள் என் குற்றத்தைப் பொறுக்க வேண்டும்,' என்னுமவர் அன்றோ? இவன்

---

'வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி துக்கித:
உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி'

என்பது, ஸ்ரீராமா, அயோத். 2 : 40.

சுலோகத்திலே உள்ள 'ப்ருஶம்' என்றதற்குப் பொருள் அருளிச் செய்கிறார், 'துக்கத்தையுடையனான' என்று தொடங்கி. அளறுபடுதல் - சேற்றிலே அகப்படுதல். 'பவதி' என்ற நிகழ்காலத்துக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'இன்று ஒரு படியாய்' என்று தொடங்கி.

1. வியசனம் இவனது ஆனால் பெருமாள் துக்கத்தை அடைவதற்குரிய காரணத்தை வினா விடை மூலமாக அருளிச்செய்கிறார், 'வியசனம்' என்று தொடங்கி.

'மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ?'

(பெரிய புராணம், திருநகரச் சிறப்பு, 36.)

2. 'நோவுபட்டிருப்பர்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'இது எனக்கு' என்று தொடங்கி.

'ப்ரஸீதந்து பவந்த: மே ஹ்ரீ: ஏஷாஹி மம அதுலா
யத் ஈத்ருஶை: அஹம் விப்ரை: உபஸ்த்தேயை: உபஸ்தித:'

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 10 : 9.

இச்சுலோகத்திலுள்ள 'அதுலா' என்பதற்குப் பொருள் அருளிச் செய்கிறார், 'இவன் அளவு' என்று தொடங்கி.

அளவு அல்லவாயிற்று, பிற்பாட்டிற்கு அவன் நாணம் உறும்படி. எந்நாள் சிந்தித்து ஆர்வனோ - செய்த உபகாரம் கனத்து இரா நின்றது; உபகாரத்தை நினைப்பதற்குக் காலம் போருகிறது இல்லை' நான் என் செய்வேன்? [1] சரீரம் பிரிந்த பின்பு வாய்புகு நீர் ஆகை யாலே சொல்லுகைக்குக் காலம் இல்லை; இங்கு இருக்கும் நாள் காலம் போருகிறது இல்லை; செய்த உபகாரமோ, கனத்து இராநின்றது. நான் என் செய்கேன்? (7)

758

*ஆர்வனோ ஆழிஅங் கைஎம்பி ரான்புகழ்*
*பார்விண் நீர்முற் றும் கலந்து பருகிலும்*
*ஏர்விலா என்னைத்தன் ஆக்கிஎன் னால்தன்னைச்*
*சீர்பெற இன்கவி சொன்ன திறந்துக்கே?*

பொ - ரை: '*தகுதி இல்லாத என்னைத் தனக்கு உரியவனாக்கி என்னால் தன்னைச் சிறப்புப்பெற இனிய கவிகளைச் சொன்ன பிரகாரத் திற்கு, சக்கரத்தைத் தரித்த எம்பிரானுடைய கல்யாண குணங்களை, பூமியிலுள்ளார் ஆகாயத்திலுள்ளார் தண்ணீரிலுள்ளார் ஆகிய எல்லா ரோடும் கலந்து அனுபவித்தாலும் நிறைவு பெற்றவன் ஆவேனோ?*' *என்கிறார்.*

வி - கு: '*சொன்ன திறத்துக்கு, எம்பிரான் புகழைக் கலந்து பருகிலும் ஆர்வனோ?' என்க.*

ஈடு: எட்டாம் பாட்டு. [2] 'நான் ஒருவனும் இருந்து ஜீவிக்கும் நாள் உபகாரத்தை நினைப்பதற்குக் காலம் போராது என்று நோவு படுகிறேனோ? என்னுடைய செய்ந்நன்றியறிதலையும் விருப்பத்தையு முடையராய்க்கொண்டு புறம்பே வேறு விஷயங்களிலே நோக்குள்ள வர்களாகவும் பகவத் விஷயத்திலே நோக்கு இல்லாதவர்களாகவும் இருக்கிற எல்லா ஆத்துமாக்களும் என்னுடனே கூடி நெடுங்கால மெல்லாம் நானும் அவர்களும் கூடி நின்று அனுபவித்தால்தான் நிறைவு பெற்றவன் ஆவேனோ?' என்கிறார்.

---

1. *''எந்நாள்' என்பது என்? காலம் இல்லையோ?' என்ன, 'சரீரம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

2. *'பார் விண் நீர் முற்றும் கலந்து பருகிலும்' என்றதற்குப் 'பாரிலுள்ளார் விண்ணிலுள்ளார் நீரிலுள்ளார் இவர்கள் எல்லாரும் கூடி நின்று அவன் குணங்களை அனுபவித்தாலும் திருத்தி பிறவாது' என்று பொருள் அருளிச் செய்யத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச் செய்கிறார்.*

ஆழி அம் கை எம் பிரான் புகழ் பார் விண் நீர் முற்றும் கலந்து பருகிலும் ஆர்வனே - ஆழி அம் கை எம்பிரான் புகழைப் பாரிலுள்ளாரும் விண்ணிலுள்ளாரும் நீரிலே உள்ளாரும் பாதாள உலகத்திலுள்ளாரும் மற்றும் எல்லாரும் கலந்து பருகிலும் நான் ஆர்வனே? [1] தன்னுடைய சொரூப ரூப குண விபூதிகளை என்னுடைய கவிக்கு விஷயமாக்கின மஹோபகாரகனுடைய புகழை. [2] 'வாய் கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன்; ஆய்கொண்ட சீர் வள்ளல் ஆழிப்பிரான் எனக்கே உளன்,' என்றார் அன்றோ? அன்றிக்கே, [3] 'பாரிலுள்ளார், விண்ணிலுள்ளார், நீரிலுள்ளாரான இவர்கள் எல்லாருடைய வாக்கு முதலான கருவிகளையும் அனுபவிக்கின்ற சத்தி விசேடங்களையும் உடையேனாய்க்கொண்டு காலம் எல்லாம் நின்று அனுபவித்தாலுந்தான் நான் ஆர்வனோ?' என்னுதல். [4] கலக்கை - அவற்றோடே சேர்க்கை. அன்றிக்கே, 'பார் [5] விண் என்றதனால் உபயவிபூதிகளையும் சொல்லி, நீர் என்றதனால் தன்மையைச் சொல்லி, உபய விபூதிகளிலும் உள்ளோர் அனுபவிக்கும் சத்தி சுபாவத்தையுடையேனாய்க் கொண்டு அனுபவித்தாலும் ஆர்வனோ என்கிறார்,' என்னுதல். 'நீர் இப்படி எல்லாருடைய உபகரணங்களையும் உடையீராய்க் கொண்டு காலம் எல்லாம்

---

1. *'ஆழி அம் கை' என்றதனால் உருவமும், 'எம்பிரான்' என்கையாலே குணமும் சொல்லப்படுகையாலே, ஏனைய சொரூப விபூதிகளும் பொருள் ஆற்றலால் தாமே போதருமாதலின், அவற்றையும் சேர்த்துத் 'தன்னுடைய' என்று தொடங்கிப் பொருள் அருளிச்செய்கிறார்.*

2. *'கையும் திருவாழியுமான தன்னை இவர் கவிக்கு விஷயம் ஆக்கினனோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'வாய்கொண்டு' என்று தொடங்கி.* இது, திருவாய். 3. 9 : 9.

3. *'முற்றும் கலந்து' என்பதற்கு, 'பிறர் எல்லாரும் நானும் கலந்து செய்ந்நன்றி செலுத்தினும் மனம் நிறைவு பெற்றவன் ஆவனோ?' என்று மேலே பொருள் அருளிச்செய்தார்; இங்கு, 'அவர்களுடைய வாக்கு முதலான கருவிகளையும் அனுபவிக்கின்ற சத்தி விசேடங்களையும் உடையேனாய்க்கொண்டு செய்ந்நன்றி செலுத்தினும் மனம் நிறைவு பெற்றவன் ஆவனோ?' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'பாரிலுள்ளார்' என்று தொடங்கி.*

4. *''கலந்து' என்பது, இப்பொருளைக் காட்டுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கலக்கை' என்று தொடங்கி.*

5. *மூன்றாவது பொருளில், 'விண்' என்பது, பரமபதத்தைக் காட்டுகிறது. 'நீர்' என்பது நீர்மையாய், அனுபவிக்கும் சத்தியைச் சொல்லுகிறது. 'முற்றும்' என்றது, 'அனுபவிக்கிற சத்தி சுபாவம் எல்லாவற்றையும்' என்றபடி.*

அனுபவியாநின்றுலும் ஆராமைக்கு அவன் செய்த உபகாரந்தான் யாது?' எனின், அருளிச்செய்கிருர் மேல் :

ஏர்வு இலா என்னைத் தன் ஆக்கி - [1] மேலே, 'கவி பாடுகைக்கு இடமான இச்சையும் இல்லை' என்றுர்; இங்கு 'அவ்விச்சைக்கு அடியான தகுதியும் இல்லை' என்கிருர். இதனுல், நன்மை இல்லா மையைச் சொன்னபடி. [2] 'பிராமணர்கள் இந்தப் பிரமத்தை அறிய விரும்புகிருர்கள்,' என்றுநிற்கச்செய்தேயும், 'யாகத்தாலும் தானத்தாலும் தவத்தாலும் உபவாசத்தாலும்' என்று யோக்கியதை யைச் சொல்லிற்றே அன்றே? அதுவும் இன்றிக்கே இருக்கிற என்னை என்கை. என்னுல் தன்னைச் சீர் பெற - [3] எல்லாக் கல்யாண குணங்களையுமுடையவனுன சர்வேஶ்வரன், இக்கவிகளாலே தனக்கு நிறமாம்படியாகச் சொன்ன. '[4] நான் கவி சொல்லச் சர்வேஶ்வரனுன தனக்கு இதனுலே நிறமாம்படி நினைத்திராநின்றுன். [5] இச்சீர் இழக்க வரினும் விட ஒண்ணுதபடியாயிற்றுக் கவியின் இனிமை. இன்கவி சொன்ன திறத்துக்கு - இப்படி இனிய கவிகளைச் சொன்ன பிரகாரம் ஒன்றுக்கும். [6] மற்றைக் குணங்கள் குமர் இருந்து போமித்தனை. இப்பிரகாரம் ஒன்றுக்கும் ஆழி அம் கை எம் பிரான் புகழைப் பார் விண் நீர் முற்றுங்கலந்து பருகிலும் ஆர்வனே? (8)

---

1. *'மேலே' 'ஏர்விலா' என்று வைத்து, இங்கும் 'ஏர்விலா' என்பது, கூறியது கூறல் ஆகாதோ?' எனின், அதற்கு விடை அருளிச் செய்கிருர், 'மேலே' என்று தொடங்கி. தகுதியாவது, புண்ணியம்.*

2. *'இச்சைக்குப் புண்ணியம் வேண்டுமோ?' என்ன, 'பிரா மணர்கள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.*

*'தம் ஏதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணு விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸா அநாஶகேந'*

*என்பது, பிருக உபநிடதம், 6 : 4.*

3. *'சீர் பெற' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'எல்லாக் கல்யாண குணங்களையுமுடையவனுன' என்று தொடங்கி.*

4. *'நீர் கவி சொல்ல அவன் நிறம் பெறும்படி என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'நான் கவி சொல்ல' என்று தொடங்கி.*

5. *'இன்கவி' என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிருர், 'இச்சீர்' என்று தொடங்கி.*

6. *'திறத்துக்கே' என்ற ஏகாரத்துக்குப் பொருள் அருளிச்செய் கிருர் 'மற்றைக் குணங்கள்' என்று தொடங்கி. குமர் இருந்து போதல்- அனுபவயோக்கிய மின்றிக்கே இருத்தல்.*

759

திறத்துக்கே [1] துப்பர வாம்திரு மாலின்சீர்
இறப்பெதிர் காலம் பருகிலும் ஆர்வனே?
மறப்பிலா என்னைத்தன் ஆக்கினன் ஞல்தன்னை
உறப்பல இன்கவி சொன்ன உதவிக்கே?

பொ - ரை: 'மறப்பு இல்லாதவனுன என்னைத் தனக்கு உரியவனுக்கி என்னுல் தன்னைப் பொருந்தும்படி பல கவிகளைக் கூறிய உபகாரத்துக்கு எல்லா வகையாலும் வலியோனுன திருமாலினுடைய கல்யாணகுணங்களை மூன்று காலங்களிலும் அனுபவித்தாலும் நிறைவு பெற்றவன் ஆகேன்,' என்றவாறு.

வி - கு: 'தன்னை உறச் சொன்ன உதவிக்கு' என்க.

ஈடு: ஒன்பதாம் பாட்டு. [3] 'என்னைக்கொண்டு கவி பாடுவித்துக்கொண்ட மஹோபகாரகனை, எல்லாச் சேதனர்களுடைய அனுபவ சத்திகளையுடையேனுய்க்கொண்டு காலம் எல்லாம் அனுபவித்தாலும் ஆரேன்,' என்கிருர் இதில்.

திறத்துக்கே துப்பரவாம் திருமாலின் சீர் - ஏதேனும் ஓர் காரியத்தில் வந்தால், [3] ஒரு துரும்பைக் கொண்டு காரியம் கொள்ளப் பார்த்தால் அதனைக்கொண்டே காரியத்தை அப்படித் தலைக்கட்டிக் கொள்ளுதற்குத் தகுதியான ஆற்றலையுடையனுன. 'அதற்கு அடி என்?' என்னில், திருமகள் கேள்வன் ஆகையாலே, [4] நினைத்த காரியம் செய்து தலைக்கட்டுகைக்குத் தகுதியான ஆற்றலையுடையனுன திருமகள் கேள்வனுடைய கல்யாண குணங்களை. [5] ஒருவன் செய்தது வாய்த்து வரப் புக்கவாறே 'அவன் குப்பைக்

---

1. 'துப்புரவாம்' என்பதும் பாடம்.

2. திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

3. 'நாகம் ஒன்றிய நல்வரை யின்தலை மேனுள்
ஆகம் வந்தெனை அள்ளுகிர் வாளின் அளைந்த
காக மொன்றை முனிந்தயல் கல்எழு புல்லால்
வேக வெம்படை விட்டதும் மெல்ல விரிப்பாய்.'
என்ற கம்பராமாயணச் செய்யுளை இங்கு நினைவு கூர்க.

4. பதப்பொருள் அருளிச்செய்கிருர், 'நினைத்த காரியம்' என்று தொடங்கி.

5. 'திருமகள் கேள்வன் ஆனுல் துப்புரவு உண்டாமோ?' என்ன, 'ஒருவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர். குப்பைக் காலன்-நல்வழிக் காலன்.

காலன்காண், ஸ்ரீமான் செய்தன எல்லாம் நன்ருய் வருங்காண்' என்னக்கடவது அன்றே? இறப்பு எதிர்காலம் பருகிலும் ஆர்வனே- [1] 'எல்லாச் சேதநர்களுடையவும் வாக்கு முதலான கருவிகளையும் அனுபவித்தல் முதலான சத்திகளையும் நான் உடையேனாய் அனுபவிக்கப் புக்காலும் உயிர் வாழ்வதற்கு அடியான ஆயுள் அற்பமாகையாலே உபகாரத்தை நினைப்பதற்குக் காலம் போருகிறது இல்லை. 'எந்நாள் சிந்தித்து ஆர்வனே?' என்ன வேண்டாதே, அவ்வவர்களுடைய உபகரணங்களையுமுடையேனாய், போன காலமும் மேல் வரக்கூடிய காலமும் எல்லாம் அனுபவியாநின்ருலுந்தான் ஆர்வனே?

'எல்லாருடைய உபகரணங்களையும் கொண்டு காலம் எல்லாம் அனுபவித்தாலும் நீர் ஆராது ஒழிகிறது அவன் செய்த எந்த உபகாரத்தை நினைத்து?' என்ன, அருளிச்செய்கிருர் மேல்: மறப்பு இலா என்னைத் தன் ஆக்கி என்னுல் தன்னை உறப் பல இன்கவி சொன்ன உதவிக்கு - மறப்பு இல்லையான என்னை. [2] மறப்புக்கு முன் கணத்தில் நிகழக்கூடியதான நினைவும் எனக்கு இல்லை என் கைக்காக, '**மறப்பிலா**' என்ற சொல்லாலே அருளிச்செய்கிருர் [3] ''மறப்பு இலா' என்ன வேண்டுவான் என்?' என்னில், நினைவு உள்ள இடத்திலே அன்றே மறப்பு உள்ளது? [4] ஆக, ஏதேனும் ஒரு காலத்தில் உண்டாகிற நினைவுங்கூடத் தமக்கு இல்லை என்கிருர் என்றபடி. மறப்பு இலா என்னைத் தன்னுக்கி - ஏதேனும் ஒரு காலத்தில் நினைத்துப் பின்னை ஒருகால் மறப்பு உண்டாய், அதனைக் காணுக் கண்ணிட்டுதான் இப்படி அங்கீகரித்தானே? முதலிலே தன் பக்கலிலே நினைவு இன்றிக்கே இருக்கிற என்னைத் தன்னுக்கி. என்னுல் - 'மறந்தேன் உன்னை முன்னம்' என்கிற அநுதாபமுங்கூட

---

1. *மேல் இரண்டு திருப்பாசுரங்களில் கூறிய பொருளையும் கூட்டிக் கொண்டு அருளிச்செய்கிருர், 'எல்லாச் சேதநர்களுடையவும்' என்று தொடங்கி.*

2. *''மறப்பு இலா' என்று முற்றறிவுடைமை சொல்லுகிருரோ?' என்ன, 'அன்று' என்று அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'மறப்புக்கு' என்று தொடங்கி.*

3. *''மறப்பு இலா' என்ன வேண்டுவான் என் என்னில்' என்றது, 'நினைவு இல்லாத' என்ன வேண்டியிருக்க, 'மறப்பிலா' என்ன வேண்டுவான் என் என்னில்' என்றபடி.*

4. *அதனை விவரணம் செய்கிருர், 'ஆக' என்று தொடங்கி.*

5. *'மறந்தேன்' என்பது,* பெரிய திருமொழி, 6. 2 : 2.

இன்றிக்கே இருக்கிற என்னைக்கொண்டு. தன்னை உறப் பல இன்கவி சொன்ன - [1]'சொல்ல மாட்டாது அந்த ஆனந்த குணத்தினின்றும் எந்த வேத வாக்கியங்கள் மீண்டனவோ' என்கிறபடியே, [2]'வேதங்கள் மீண்ட விஷயத்தை மறுபாடு உருவச் சொன்ன' என்று சீயர் அருளிச்செய்வர். அன்றிக்கே, 'சர்வேஸ்வரனுக்குச் சால உற்றது என்கிறார்' என்று பிள்ளான் அருளிச்செய்வர். பல இன்கவி சொன்ன - [3]'வால்மீகி முனிவர் இருபத்து நாலாயிரம் சுலோகங்களையும், ஐந்நூறு சர்க்கங்களையும், ஆறு காண்டங்களையும், உத்தர காண்டத்தையும் சொன்னார்,' என்னுமாறு போலே, 'சம்சாரத்திலே இப்படி விலக்ஷணமாய் இருக்கும் பாசுரங்கள் ஆயிரம் பாடுவதே!' என்கிறார். உதவிக்கு - இனிய கவிகளைச் சொன்ன இந்த உபகாரத்துக்குத் திருமாலின் சீர் இறப்பு எதிர் காலம் பருகிலும் ஆர்வனோ? (9)

760

உதவிக்கைம் மாறுஎன் உயிர்என்ன உற்றுஎண்ணில்
அதுவும்மற்று ஆங்கவன் தன்னதுஎன் னால்தன்னைப்
பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு
எதுவும்ஒன் றும்இல்லை செய்வதுஇங் கும்அங்கே.

பொ - ரை: அவன் செய்த உபகாரத்துக்குப் பிரதி உபகாரமாக என்னுடைய உயிரை அவனுக்கு உரியது ஆக்கலாம் என்று பொருந்தி நினைத்தால் அந்த உயிரும் அவனுடையதே; ஆதலால், என்னைக் கொண்டு மிருதுவான இனிய கவிகளைத் தன்னைப் பாடிக்கொண்ட அப்பனுக்கு என்னால் செய்யத்தக்கது இவ்வுலகத்திலும் அந்த உலகத்திலும் யாது ஒன்றும் இல்லை.

---

1. 'உற' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'சொல்லமாட்டாது' என்று தொடங்கி. இந்த வேத வாக்கியத்தை முன்னர்க் காண்க.

2. 'உற' என்பதற்கு, 'மறுபாடுருவ' என்பதும், 'தகுதியாக' என்பதும் இருபொருள்; இவ்விரண்டு பொருளையும் முறையே அருளிச்செய்கிறார், 'வேதங்கள்' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும்.

3. 'பல இன்கவி' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'வால்மீகி முனிவர்' என்று தொடங்கியும், 'அன்றிக்கே' என்று தொடங்கியும்.

'சதுர்விம்ஸத் ஸஹஸ்ராணி ஸ்லோகாநாம் உக்தவாந் ரிஷி:
ததா ஸர்க்க ஸதாந்பஞ்ச ஷட்காண்டாநி ததோத்தரம்'
என்பது, ஸ்ரீராமா. பால. 4 : 2.

வி கு 'அப்பனுக்குச் செய்வது இங்கும் அங்கும் எதுவும் ஒன்றும் இல்லை' என்க. பதவிய - மிருதுவான ; 'திராக்ஷாபாகமான கவிகள்' என்றபடி.

ஈடு: பத்தாம் பாட்டு. [1]'உபகாரத்தை நினைப்பதற்குக் காலம் போருகிறது இல்லை என்று நீர் புண்படாநில்லாமல், உம்மதாய் இருப்பது ஒரு வஸ்துவை அவனுக்குப் பிரதியுபகாரமாகக் கொடுத்துப் பிழைத்துப் போக மாட்டீரோ ?' என்ன, 'அப்படிச் செய்யலாமே அன்றோ ஈஸ்வரனைப்போலே நானும் எனக்கு உடைமை யாய் இருப்பது ஒரு வஸ்துவைப் பெற்றேனாகில் ?' என்கிறார்.

உதவிக் கைம்மாறு - உபகாரத்துக்குப் பிரதியுபகாரமாக. என் உயிர் என்ன - [2]'நித்தியமாய் ஞான ஆனந்த லக்ஷணமாய்ச் சீர்மையையுடையதாய் இருப்பது ஒன்று உண்டே அன்றோ, ஆத்ம வஸ்து ? அதனைக் கொடுத்தாலோ ?' என்ன [3]அது செய்யலாமே அன்றோ, அடியிலே மயர்வுஅற மதிநலம் அருளிற்றிலன் ஆகில் ? முன்னரே அதனைக் கொடுத்து வைத்தானே ! [4]'மயங்கி இருக்குங் காலத்தில் ஆத்தும சமர்ப்பணம் போலே இருப்பது ஒன்றாயிற்று,

---

1. இத்திருப்பாசுரக் கருத்தோடு 'எனதாவியுள் கலந்த' (திருவாய். 2. 3 : 4.) என்ற திருப்பாசுரக் கருத்தை ஒப்பிட்டுக் காணல் தகும்.

திருப்பாசுரம் முழுதினையும் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

2. ஆத்துமாவைப் பிரதியுபகாரமாகச் சமர்ப்பிக்கலாம் என்கைக்கு உறுப்பாக, இதனுடைய உயர்வினை அருளிச்செய்கிறார், 'நித்தியமாய்' என்று தொடங்கி.

3. 'உற்ற எண்ணில்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அது செய்யலாமே' என்று தொடங்கி. 'அதனை' என்றது, மயர்வற மதிநலம் அருளினதை.

4. 'அறிவில்லாதவன் ஆனால் ஆத்தும சமர்ப்பணம் பண்ணுமது ஒழிய, ஞானம் உண்டானால் செய்ந்நன்றியறிதலாலே ஆத்துமாவைச் சமர்ப்பிக்கப் போகாதோ?' என்ன, 'மயங்கி இருக்கும் காலத்தில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'மயங்கியிருக்குங் காலத்தில்' என்றது, 'பிரபத்தி செய்கிற காலத்தில்' என்றபடி. ஆத்தும சமர்ப்பணமாவது, ஆத்மீய பரந்யாசம். பிரபத்தி செய்கிற காலத்தை, 'மயங்கியிருக்குங் காலத்தில்' என்றது, சமர்ப்பித்த பின்பு 'சமர்ப்பிக்கத் தான் நான் யார்?' என்று அநுதபிக்கும்படி இருக்கையாலே.

உபகாரத்தின் நினைவாலே [1] பிரதியுபகாரம் தேடிக் கலங்குகிற இது.' [2] மயங்கி இருக்குங்காலத்தில் ஆத்தும சமர்ப்பணந்தான் வேணும்: தெளிந்த பின்னர், 'என்னுடைய பொருளை அவனுக்குக் கொடுத்தேன்' என்று இருக்கக்கடவன் அல்லன்; [3] ஆத்துமா என்னுடையது என்று பல காலமாக எண்ணிப் போந்த அதிலும் கடையாயிற்று, தெளிந்த பின்னர் 'நான் என்னுடைய பொருளை அவனுக்குத் தந்தேன்' என்று இருக்குமாகில். [4] பின்னையும் பழைய அபகாரமே தொடர்ந்தது ஆகுமே! ஞானம் பிறந்தமை அன்றோ? [5] சர்வமுத்தி பிரசங்கம் வாராமைக்காக ஆத்தும சமர்ப்பணந்தான் வேண்டிவரும்; நெஞ்சிலே வெளிச்சிறப்பு உண்டானால் அவனுடைய பொருளினை அவனதாக இசைந்திருக்கக் கடவன். [6] 'என்னால் கொடுக்கப் பட்டது அன்றி, உனக்கு யாது கொடுக்கிறேன்?' என்னாநின்றது அன்றோ? [7] 'எனது ஆவி தந்தொழிந்தேன்' என்ன, 'எனது

---

1. *'பிரதியுபகாரம் தேடிக் கலங்குகிற இது' என்றது, 'ஆத்தும சமர்ப்பணம் பண்ணுகிறோம் என்று கலங்குகிற இது' என்றபடி.*

2. *'ஆனால், பிரபத்தி சமயத்தில் ஆத்தும சமர்ப்பணம் வேண்டாவோ?' என்ன, ஆத்தும சமர்ப்பணம் பண்ணும் பிரகாரத்தையும், பண்ணியவுடனே இவன் இருக்கக்கூடிய விதத்தையும் அருளிச்செய்கிறார், 'மயங்கி இருக்கும் காலத்தில்' என்று தொடங்கி.*

3. *'அப்படி இருந்தாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆத்துமா' என்று தொடங்கி.*

4. *இது கடையாய படியைக் காரணம் முன்னாக விவரணம் செய்கிறார், 'பின்னையும்' என்று தொடங்கி.*

5. *'ஆனால், செய்து அநுதபிக்க வேண்டுமோ? முதலிலே செய்யாதிருக்க ஒண்ணாதோ?' என்ன, இன்னதற்காகச் செய்யவேண்டும் என்னுமதனையும், செய்த பின்னர் இன்னபடி இருக்க வேண்டும் என்னுமதனையும் அருளிச்செய்கிறார், 'சர்வமுத்தி' என்று தொடங்கி. சர்வமுத்தி பிரசங்கம்-எல்லாரும் மோக்ஷத்தைப் பெற வேண்டியவர்கள் என்னும் தன்மை.*

6. *'அப்படிச் சமர்ப்பித்து அநுதபித்த பேர் உளரோ?' என்ன, 'என்னால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.*

*'வபுராதிஷு யோபி கோபி வா குணத: அஸாநி யதாததாவித:*
*ததயம் தவபாத பத்மயோ: அஹம் அத்யைவ மயா ஸமர்ப்பித:'*

*என்பது,* **ஸ்ரீ** *ஆளவந்தார் அருளிச்செய்த* **தோத்திரரத்நம், 52.**

7. *'எனதாவி' என்றது,* **திருவாய். 2. 3 : 4.** *ஆக, 'மயங்கி இருக்கும் காலத்தில் ஆத்தும சமர்ப்பணம்போலே' என்றதனை விரித்து அருளிச்செய்து, பின்னர், 'உபகாரத்தின் நினைவாலே பிரதி உபகாரம் தேடிக் கலங்குகிற இது' என்றதனை விரித்து அருளிச்செய்யக் கோலி, அப்படி உபகாரத்தின் நினைவாலே கலங்கி ஆத்துமாவைச் சமர்ப்பித்து, தெளிந்த பின்னர் அநுதபித்த இடம் உண்டோ?' என்னும் சங்கைக்கு விடை அருளிச்செய்கிறார், 'எனதாவி' என்று தொடங்கி.*

ஆவி யார் யான் ஆர்?' என்றார் அன்றோ? [1] சொரூப ஞானம் பிறந்தால் பேற்றின் அளவும் செல்ல, இவ்விரண்டு தன்மையும் தொடரக்கடவதாக இருக்கும். [2] ஆக, ஆத்தும சமர்ப்பணத்துக்கும் செய்ந்நன்றி அறிதலுக்கும் தனித்து இவனுக்குச் சம்பந்தம் இல்லாத படியான் இவனுடைய அத்தியந்த பாரதந்திரியத்தைச் சொல்லுகிறது.

உற்று எண்ணில் - [3] ஆராயாதே மேல் எழ நின்று கொடுக்கில் கொடுக்கலாம்; நெஞ்சிலே சிறிது வெளிச்சிறப்புப் பிறந்து இதனுடைய சொரூபத்தையும் ஆராய்ந்து பார்த்துக் கொடுக்கும் அன்று கொடுக்கத் தகுதி இல்லை. அதுவும் - ஆத்துமாவும். மற்று - அப்படிப்பட்ட ஆத்துமாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களும். ஆங்கு அவன் தன்னது - பிரதியுபகாரம் செய்து தரிக்கவேண்டும் நிலையில் அவனதாய் இராநின்றது. என்றால் தன்னை - செய்ந்நன்றி அறிதலுக்குங்கூடத் தகுதி இல்லாத என்னாலே மஹோபகாரகனாய் இருக்கிற தன்னை. [4] பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு - கவி பாட்டுண்கிறவனுக்கு இக்கவி பாட்டாலே பண்டு இல்லாத நீர்மை உண்டாம்படியாகக் கவி பாடின உபகாரகனுக்கு. எதுவும் ஒன்றும் இல்லை செய்வது-ஏதேனும் ஒன்றும் செய்யலாவது இல்லை. [5] 'இங்கு இருக்கும் நாள் ஞானக் குறைவினாலே செய்யலாவது ஒன்று

---

1. *இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'சொரூப ஞானம்' என்று தொடங்கி. 'இவ்விரண்டு தன்மையும்' என்றது, செய்நன்றியறிதலால் சமர்ப்பிக்கையும், பின்னர் அனுதபிக்கையுமாகிற இரண்டு தன்மையும் என்றபடி.*

2. *இத்திருப்பாசுரத்தால் 'ஆத்தும சமர்ப்பணம் செய்யப்போகாது' என்றதனால் பலித்த பொருள், அத்தியந்த பாரதந்திரியம் என்கிறார், 'ஆக' என்று தொடங்கி. அத்தியந்தம்-மிகவும்.*

3. *'உற்று எண்ணில் அதுவும் மற்று ஆங்கு அவன்தன்னது' என்கிற இதனால் பலித்த அர்த்தவிசேடத்தை அருளிச்செய்கிறார், 'ஆராயாதே' என்று தொடங்கி. 'தகுதி இல்லாத என்னாலே' என்றது, அத்தியந்த பரதந்திரனாகையாலே என்றபடி.*

4. *பதவிய-பதம் உண்டாகும்படியாக; நீர்மை உண்டாகும்படியாக. 'பதவிய இன் கவி' என்பதற்கு, 'மிருதுவாய் இனிதான கவி' என்பது பொருளாகையாலே, 'இதற்கு மிருதுத்தன்மை யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'கவி பாட்டுண்கிற' என்று தொடங்கி.*

5. *'இங்கும் அங்கும்' என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'இங்கு இருக்கும் நாள்' என்று தொடங்கி.*

48

இல்லையேயாகிலும், ஞானக்குறைவு அற்று முத்தனானால், பிரதியுப்காரம் செய்யத் தட்டு என் ?' என்னில், இங்கும் அங்கே - [1] 'இங்கு ஆனால், தேக ஆத்துமா அபிமானத்தாலே 'நான், என்னது' என்று போய்க் கால் கட்டித் திரிகையாலே, செய்யலாவது உண்டோ?' என்று பிரமிக்கவுமாய் இருக்கும்; அதுவும் இன்றிக்கே, 'ஞானக் குறைவு கழிந்த அளவிலே, தான் செய்யலாவது ஒன்று இல்லை என்னும் இடம் சொல்ல வேண்டா அன்றோ ? [2] 'தனது இயல்பான வடிவைப் பெறுகிறான்' என்கிறபடியே, சொரூப ஞானம் பிறந்த இடத்தில் சொரூபத்திற்கு விரோதியாகச் சொல்லப் போகாதே யன்றோ ? (10)

761

இங்கும்அங் கும்திரு மால்அன் றி இன்மைகண்டு
அங்ஙனே வண்குரு கூர்ச்சட கோபன்
இங்ஙனே சொன்னஓர் ஆயிரத்து இப்பத்து
எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமே.

பொ - ரை: 'இந்த உலகத்திலும் அந்த உலகமாகிய பரமபதத்திலும் திருமாலை அல்லாமல் இல்லாத தன்மையைப் பார்த்து, அந்தத் தன்மையையுடையராய் வண்மை பொருந்திய திருக்குருகூரிலே அவதரித்த ஸ்ரீசடகோபராலே இந்த வகையாலே அருளிச்செய்யப்பட்ட ஒப்பற்ற ஆயிரம் திருப்பாசுரங்களுள் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களையும் எந்த வகையில் சொன்னாலும் இன்பத்தைக் கொடுக்கும்,' என்றபடி.

வி - கு: 'கண்டு சொன்ன ஆயிரம்' என்க.

ஈடு: முடிவில், [3] 'இத்திருவாய்மொழி, ஏதேனும் ஒரு படி சொல்லிலும் ஆனந்தத்தை உண்டாக்கும்,' என்கிறார்.

---

1. மேலே எழுப்பிய சங்கைக்குப் பரிகாரம் அருளிச்செய்கிறார், 'இங்கு ஆனால்' என்று தொடங்கி.

2. 'ஞானக்குறைவு கழிந்த' என்னும் மேல் வாக்கியத்தை விவரணம் செய்கிறார் 'தனது இயல்பான' என்று தொடங்கி.

'ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே'

என்பது, சாந்தோக். உப.

3. 'எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்கும்' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

இங்கும் அங்கும் திருமால் அன்றி இன்மை கண்டு - [1] சாதனத்தைச் செய்கின்ற காலத்தோடு பேற்றினை அடைந்த சமயத்தோடு வாசி அற, இந்த உலகம் பரமபதம் என்ற இரண்டிலும் திருமகள் கேள்வன் அல்லது போக்கி, இவ்வாத்தும வஸ்துவுக்குத் தஞ்சமாக இருப்பார் வேறு இலர் என்னுமதனைச் சொல்லி; [2] 'பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு நின் கோயில் சீய்த்து' என்கிறபடியே, கைங்கரியம் செய்யுமிடத்திலும் அவள் முன்னாகச் செய்யவேணுமன்றோ? அவனைப் பற்றுகிற வேளையிலும் அவள் முன்னாக வேணுமன்றோ? ஆதலின், 'திருமால்' என்கிறது. [3] 'ஹதே தஸ்மிந் ந குர்யு: - அவன் கொல்லப்பட்ட பின் செய்ய மாட்டார்கள்' என்கிறபடியே, 'இராவணன் சொல்லுகையாலே அன்று இருந்து நலிந்தார்களாகில், இராவணன் பட்டுப் போன இப்போதும் நலிவர்களோ?' என்று அவர்கள் பக்கலிலும் குணத்தை ஏறிட்டுச் சொல்லும் நீர்மையையுடையவளாயிற்று. அங்ஙனே வண்குருகூர்ச் சடகோபன் -[4] நமக்கும் நல்லாசிரியன் அருகே இருந்து 'திருமகள் கேள்வன் ஒழிய இவ்வாத்துமாவுக்குத் தஞ்சமாய் இருப்பார் இலர்,' என்று உபதேசித்தால், அத்தனை போதும்

---

1. *'இம்மை மறுமை என்னும் இவ்விரண்டிலும் திருமாலே தஞ்சம்' என்றதற்கு பாவம் அருளிச்செய்யாநின்றுகொண்டு, பதப்பொருள் அருளிச் செய்கிறார், 'சாதனத்தை' என்று தொடங்கி.*

2. *'பல வேளையிலும் பற்றுகிற வேளையிலும் பிராட்டி சம்பந்தம் வேண்டுமோ?' என்ன, 'பண்டை நாளாலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது,* திருவாய் 9. 2 : 1.

3. *'பற்றுகிற காலத்தில் இவள் முன்னாகப் பற்ற வேண்டும்,' என்பதற்கு, 'இவன் குற்றத்தைப் பார்த்துச் சர்வேஸ்வரன் சீறுமளவில் அதனை மாற்றிச் சேர விடும்படியான நீர்மையையுடையவளோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஹதே தஸ்மிந்' என்று தொடங்கி.*

*'ஹதே தஸ்மிந் நகுர்யு: ஹி தர்ஜநம் வாநரோத்தம!'*

என்பது, ஸ்ரீரரமா. யுத். 116 : 41.

*'அன்னை அஞ்சன்மின் அஞ்சன்மின் நீரெனா*
*மன்னு மாருதி மாமுகம் நோக்கிவேறு*
*என்ன தீமை இவர்இழைத் தார்அவன்*
*சொன்ன சொல்வினது அல்லது தூய்மையோய்!'*

என்பது, **கம்பராமாயணம்.**

4. *'அங்ஙனே' என்றதற்கு மறுதலை முன்னாகப் பொருள் அருளிச் செய்கிறார், 'நமக்கும்' என்று தொடங்கி.*

'அப்படியே' என்று இருக்குமது உண்டே அன்றே? இவர் அங்ஙனம் அன்றிக்கே, அந்நினைவுக்குத் தகுதியான செயலையுமுடையவராய் இருப்பாராயிற்று.

'ஆனால், மனம் வாக்குக் காயங்கள் என்னும் [1] மூன்றும் ஒருபடிப்பட்டிருக்குமோ ?' என்னில், இங்ஙனே சொன்ன ஓர் ஆயிரத்து இப்பத்து - இந்த எண்ணத்தோடு சொல்லிற்றாயிற்று ஆயிரம் திருப்பாசுரங்களும். [2] 'நீர், மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றிலும் '**திருமகள் கேள்வனே இவ்வாத்தும வஸ்துவுக்குத் தஞ்சம்**' என்று அறுதியிட்டு அருளிச்செய்த இப்பாசுரங்களைக் கற்பார்க்கு, மனம் வாக்குக் காயம் என்னும் இம்மூன்றும் புறத்து விஷயங்களினின்றும் மீள வேணுமோ ? [3] நீர், சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவ பிரானையே தந்தை தாய் என்று அடைந்தவராய் இராநின்றீர்; இவர்களுக்கும் எல்லாம் பின்னை இப்படி வேணுமோ ?' என்னில், 'அத்தேவைகள் எல்லாம் நம்மோடே: இது கற்பார்க்கு அது வேண்டா,' என்கிறார் : எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்கும் - ஏதேனும் ஒரு படி சொல்லிலும் இன்பம் உண்டாம். [4] இவர்தம்முடைய பாசுரத்தைக் கற்றவர்கள் என்றே அன்றோ ஈஸ்வரன் இவர்களைக்கடாட்சிப்பது? [5] இல்லையாகில், இவர் தம்மைப்போலே மனம் வாக்குக் காயம் என்னும் இவற்றி னுடைய நியதி உண்டாய் அனுபவிக்கப்பெறில் அழகிது; அது இல்லாத போதும் பலம் தவறாது என்கைக்காகச் சொல்லிற்றத்தனை

---

1. 'மூன்றும் ஒருபடிப்பட்டிருக்குமோ?' என்றது, 'மனத்தின் தொழிலான உறுதியும், சரீரத்தின் தொழிலான அநுஷ்டானமும் போலே வார்த்தையும் ஒத்திருக்குமோ?' என்றபடி.

2. 'எங்ஙனே சொல்லிலும்' என்றதற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார், 'நீர், மனம் வாக்கு' என்று தொடங்கி.

3. மேலே அருளிச்செய்த வாக்கியத்தை விரவணம் செய்கிறார், 'நீர் சிந்தையாலும்' என்று தொடங்கி. 'சிந்தையாலும்' என்றது, திருவாய். 6. 5 : 11.

4. அதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'இவர்தம்முடைய' என்று தொடங்கி.

5. 'சொல்லிலும்' என்ற உம்மைக்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'இல்லையாகில்' என்று தொடங்கி.

இது. இன்பம் பயக்குமே - [1]'இந்த இறைவனே ஆனந்தத்தைக் கொடுக்கிறான்' என்கிறபடியே, எப்பொழுதும் பகவானுடைய அனுபவத்தாற்பிறக்கும் ஆனந்தமானது உண்டாம். (11)

திருவாய்மொழி நூற்றந்தாதி

'என்றனை நீ இங்குவைத்தது ஏதுக்கு?' எனமாலும்
'என்றனக்கும் என்தமர்க்கும் இன்பம்தா—நன்றுகவி
பாட' எனக் கைம்மா றிலாமைபகர் மாறன்
பாடணைவார்க்கு உண்டாம்இன் பம். (69)

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

1. 'ஏஷஹ்யேவ ஆநந்தயாதி' என்பது, தைத். ஆன.

# பத்தாந்திருவாய்மொழி—‘ இன்பம் ’

## முன்னுரை

ஈடு: [1] சர்வேஶ்வரன் தம்மைக் கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்துக்குப் பிரதியுபகாரம் தேடிக் காணுமை தடுமாறினர், மேல் திருவாய்மொழியிலே; [2] இவர்தாம் தம்முடைய மயக்கத்தாலே பிரதியுபகாரந்தேடித் தடுமாறினரத்தனை போக்கி இவர்தம்மால் கொடுக்கலாவது ஒன்றும் இல்லை; அவன் ஒன்று கொண்டு குறைதீரவேண்டும் விருப்பமுடையன் அல்லன்; இவர் தம்முடைய உபகார ஸ்மிருதி இருந்த இடத்தில் இருக்க ஒட்டாமையாலே செய்தது ஒன்றே அன்றோ? [3] ஆனுலும், ஆறி இருக்கமாட்டாரே! [4] இனி, நாமும் அவனுக்கு ஒன்று கொடுத்தோமாய், அவனும் நம் பக்கல் ஒன்று பெற்றானுகச் செய்யலாவது ஒன்று உண்டு. [5] அவன், தனக்கு வகுத்த கைங்கரியத்தைச் செய்யவே, அதனைத் தனக்குப் பிரதியுபகாரம் செய்ததாக நினைத்திருக்கும் தன்மையனாய் இருந்தான்; ஆன பின்பு, உம்முடைய சொரூபத்திற்குத் தகுந்ததான ஆத்துமா உள்ள அளவு உளதான அடிமையிலே அதிகரிப்போம்' என்று பார்த்தார்.

---

1. மேல் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்கிருர், ‘ சர்வேஶ்வரன் ’ என்று தொடங்கி.

2. ‘ஆயின், வாளா இருக்க ஒண்ணுதோ?’ என்ன, ‘செய்ந்நன்றி அறிதலாலே, வாளா இருக்கமாட்டாமல் தடுமாறினர்’ என்கிருர், ‘ இவர் தாம் ’ என்று தொடங்கி.

3. ‘இவருடைய ஆகிஞ்சந்யத்தாலும் அவனுடைய பூர்த்தியாலும் பிரதியுபகாரம் செய்ய விரகு இல்லையாகில் வாளா இருப்பதற்கு என்?’ என்ன, ‘ ஆனுலும் ’ என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிருர்.

4. ‘ ஆனல், பிரதியுபகாரம் செய்யும் விரகு யாது?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், ‘ இனி, நாமும் ’ என்று தொடங்கி.

5. ‘ அவ்விரகாவது யாது?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், ‘ அவன், தனக்கு ’ என்று தொடங்கி. ‘ அவன் ’ என்றதனை ‘தன்மையனுயிருந்தான் ’ என்றதனேடு கூட்டுக.

[1] இனித்தான் வேத வாக்கியங்களும் 'தனது இயல்பான வடிவினை அடைகிருன்' என்று சொரூபத்தினை அடைதல் அளவும் சொல்லவே, அதற்கு அப்பால் கைங்கரியமானது அவகாத ஸ்வேதம் போலே தன்னடையே வரும் என்று பிரஹ்மத்தினை அடைதல் அளவும் சொல்லிவிடும்.

[2] ஆழ்வார்கள் 'வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்' என்று அதுதன்னையே சொல்லாநிற்பர்கள்; [3] அடைந்ததன் பலமான கைங்கரியத்தில் ருசியாலே. [4] 'சம்சாரம் தியாஜ்யம்; சர்வேஸ்வரன் உத்தேசியன்' என்கிற ஞானம் பிறந்து, பகவானை அடைந்தவர்கள், [5] 'பகவானை அடைதல் (பிறவிப் பிணிக்கு) மருந்து' என்று பகவானை அடைதல் அளவிலே நின்ருர்கள்; [6] அவர்களைக்காட்டிலும் 'மயர்வற மதிநலம் அருளினன்' என்கிறபடியே, பகவானுடைய திருவருளாலே அடைந்த ஞானத்தையுடையரான இவர்களுக்கு வாசி இதுவாயிற்று.

---

1. 'நன்று; வேதங்களிலே 'பகவானை அடைதலே புருஷார்த்தம்' என்ருநிற்க, 'கைங்கரியம் புருஷார்த்தம்' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'இனித்தான்' என்று தொடங்கி.

'ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே'

என்பது, சுருதி. அவகாத ஸ்வேதம்-நெல் முதலியவற்றைக் குற்றும் போது சரீரத்தில் தோன்றும் வியர்வை.

2. 'ஆயின், ஆழ்வார்களும், வேதம் போன்று பிரஹ்மத்தினை அடைதல் மாத்திரத்தைச் சொல்லிவிட ஒண்ணுதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'ஆழ்வார்கள்' என்று தொடங்கி. 'வழுவிலா' என்பது, திருவாய். 3. 3 : 1. அதுதன்னையே - அந்தக் கைங்கரியத்தையே,

3. அப்படிச் சொல்லுகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிருர், 'அடைந்ததன்' என்று தொடங்கி.

4. 'நன்று; வேதங்களின் கருத்தை உபப்பிரும்ஹணம் மூலமாக வெளியிட்ட மஹரிஷிகள் சொல்லாமைக்குக் காரணம் என்?' என்ன, 'சொரூபயாதாத்மிய ஞானம் இல்லாமையாலே' என்கிருர், 'சம்சாரம்' என்று தொடங்கி.

5. 'பேஷஜம் பகவத்ப்ராப்தி:' என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 6. 5 : 59.

6. 'அவர்களைக்காட்டிலும் இவர்களுக்கு வாசி யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'அவர்களைக்காட்டிலும்' என்று தொடங்கி. 'இதுவாயிற்று' என்றது, 'கைங்கரியத்தில் ருசியுடையராகை ஆயிற்று' என்றபடி.

[1] இனி, அடிமை செய்யுமிடந்தன்னில் 'சரீர சம்பந்தம் அற்றுப் பரமபதத்தை அடைந்தால் பின்பு செய்கிறோம்' என்று அவ்வளவும் ஆறியிருக்கும்படியன்றே, செய்ந்நன்றி நினைவு இவரை நலிகிறபடி?

ஆகையாலே, 'ஸ்ரீவால்மீகி பகவான் பாடின ஸ்ரீராமாயணம் கேட்கைக்குத் திருவயோத்தியையிலே திருத்தம்பிமாரும் தாமுங் கூடப் பெருமாள் பேரோலக்கம் இருந்தாற்போலே, சர்வேஸ்வரனும் நாம் பாடின திருவாய்மொழி கேட்கைக்காகத் திருவாறன்விளையிலே [2] பரியங்க வித்தியையிற்சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வான் மேலே [3] நாய்ச்சிமாருடனே கூடி நித்திய பரிஜனங்களோடே கூட எழுந்தருளியிருந்தான்; அங்கே சென்று திருவாய்மொழி கேட்பித்து அடிமை செய்வோம்,' என்று எண்ணுகிறார். அங்ஙனம் எண்ணுமிடத்திலும், [4] சர்வேஸ்வரன் அடையத் தக்கவனுதல் அர்ச்சிராதி கதியோடு தேசவிசேடத்தோடு வாசி அற அடையத்தக்கதில் சேர்ந்ததேயாமன்றோ? [5] என்றது, 'முன்பு அடையப்படாதனவாய்ப் பின்பு உபாயத்துக்குப் பலமாய் வருவன யாவை சில? அவையெல்லாம் அடையத்தக்கதில் சேரக் கடவனவாம் அன்றோ?' என்றபடி.

---

1. 'பரமபதத்திலே போனால் அன்றோ அடிமை செய்யலாவது? இங்கே செய்யவேண்டும் என்று விரும்புகிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இனி, அடிமை' என்று தொடங்கி.

2. இத்திருவாய்மொழியில் வருகின்ற 'பாம்பணையப்பன்' என்பதனைத் திருவுள்ளம்பற்றிப் 'பரியங்க வித்தை' என்று தொடங்கி அருளிச் செய்கிறார். பரியங்கவித்தியையை 'அணைவது அரவணை' என்ற திருப் பாசுர வியாக்கியானத்திற்காண்க.

3. 'எழில் மலர் மாதர்', 'தேவபிரான்' என்பனவற்றைத் திருவுள்ளம் பற்றி, 'நாய்ச்சிமாருடனே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். அடிமை-வாசிகமான அடிமை.

4. 'ஆனால், அவனை ஒழிய அவன் இருந்த தேசம், தேசத்திற்குப் போகிற வழி, எல்லாவற்றையும் எண்ணுகிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சர்வேஸ்வரன்' என்று தொடங்கி.

5. 'அது யாங்ஙனம்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'என்றது' என்று தொடங்கி. 'பலம்' என்றது, இடையிலே வரும் பலத்தை.

அப்படியே, 'திருவாறன்விளையிலே எழுந்தருளியிருக்கிற சர்வேஶ்வரன் திருவடியிலே போய் அடிமை செய்யக் கடவோம். அதுதானும் வேண்டா; அந்தத் தேசத்தை அடைதல்தானே அமையும். அதுதானும வேணடா; [1] இங்கே, இருந்தே அங்கு ஏறப்பேர்வதாக எண்ணுகிற அவ்வெண்ணந்தானே அமையும். [2] இனி, நாம் அத்தேசம் அடையத் தக்கது என்று புத்தி பண்ணிப் போருவதைப் போன்று, அவனும் நாம் இருந்த தேசத்தைக் குறித்து வரக்கடவன்: அவ்வளவிலும் நாம் அவனைத் தொடர்ந்து சென்று விட்டு நாம் அத்தேசத்திலே போய்ப் புகக்கடவோம்; அத்தேசமே நமக்கு அடையத் தகுந்தது; [3] அங்கே போய்ப் புகவே, நம்முடைய கைங்கரிய விரோதிகள் அனைத்தும் கழியும். இனி, [4] நான் வேறு ஒன்றிலே இச்சை பண்ணினாலும், என் நெஞ்சமானது அத் தேசத்துக்கு ஒழிய ஒரு தேசத்துக்கு ஆளாக மாட்டாது; [5] 'என்னுடைய மனமானது வேறு ஒன்றிலும் செல்லுவது இல்லை' என்கிறபடியே.' [6] ஆக, திருவாறன்விளையிலே புக்கு அடிமை செயயக்கூடிய படிகளை எண்ணி இனியர் ஆகிறார்.

[7] ஸ்ரீ ராமாயணத்தைக்காட்டிலும் இதற்கு வாசி, பாடினாரே கேட்பிக்கையும், பாட்டுண்டாரே கேட்கையுமாயிற்று.

---

1. 'ஈங்கு நினைக்கப் பெற' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'இங்கே இருந்தே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. 'ஆடு பறவைமிசைக் கண்டு கைதொழுது அன்றி' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'இனி, நாம்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. 'ஒன்றி வலம்செய்ய ஒன்றுமோ தீவினை?' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'அங்கே போய்ப் புகவே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

4. 'கூடுங்கொல் என் சிந்தனை?' என்றதனைத் திருவுள்ளம் பற்றி, 'நான் வேறு ஒன்றிலே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

5. இதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'என்னுடைய' என்று தொடங்கி.

'பாவோ நாந்யத்ர கச்சதி'

என்பது, ஸ்ரீராமா. உத்தர. 40 : 15. இச்சுலோகத்தை முன்னே காண்க.

6. மேலே கூறியவற்றை எல்லாம் சேர்த்து முடிக்கிறார், 'ஆக' என்று தொடங்கி.

7. இதனால், ஸ்ரீராமாயணத்திற்கும் இதற்கும் உள்ள வேறுபாட்டினைக் காட்டுகிறார், 'ஸ்ரீ ராமாயணத்தை' என்று தொடங்கி.

[1]'சீதையின் மஹத்தான சரிதம்' என்றுநிற்கச்செய்தே, கவி பாட்டுண்டவனை ஒழியத் தானே அன்றோ கேட்டது? பாடினன் ஸ்ரீ வால்மீகி பகவான்; கேட்பித்தாரும் குசலவர்கள் அல்லரோ?

762

இன்பம் பயக்க எழில்மலர் மாதருந்
 தானும்இவ் வேழுலகை
இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து
 ஆள்கின்ற எங்கள்பிரான்
அன்புற் றமர்ந்துறை கின்ற அணிபொழில்
 சூழ்திரு வாறன்விளை
அன்புற் றமர்ந்து வலஞ்செய்து கைதொழும்
 நாள்களு மாகுங்கொலோ?

பொ - ரை: அழகிய தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற பெரிய பிராட்டியாரும் தானும் இன்பம் பிறக்கும்படியாக இனிதாக ஒரு சேர எழுந்தருளியிருந்து, இந்த ஏழ் உலகங்களை இன்பம் பிறக்கும்படியாக ஆள்கின்ற எங்கள் பிரானுனவர் அன்போடு மனம் பொருந்தி எழுந்தருளியிருக்கின்ற அழகிய சோலைகள் சூழ்ந்த திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்தை அன்போடு மனம் பொருந்தி வலம் செய்து கை தொழுகின்ற நாள்களும் உண்டாகுங் கொல்?

வி-கு: 'எழில் மலர் மாதரும் தானும் இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து இவ்வேழ் உலகை இன்பம் பயக்க ஆள்கின்ற எங்கள் பிரான் உறைகின்ற திருவாறன் விளையை வலஞ்செய்து கைதொழும் நாள்களும் ஆகுங்கொல்?' என்க. பிரான் - உபகாரகன்.

ஈடு: முதற்பாட்டு. [2]'திருவாறன்விளையிலே புக்கு உவகையினராய்க்கொண்டு அடிமை செய்யுங்காலமாகவற்றே?' என்று எண்ணுகிறுர்.

இன்பம் பயக்க - [3]எப்பொழுதும் துக்கத்தையே அடைந்துகொண்டிருக்கிற சம்சாரி சேதனனுக்குத் தன்னுடைய சேர்த்தியாலே

---

1. 'அங்கு இவ்விரண்டும் இல்லையோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர், 'சீதையின்' என்று தொடங்கி.

2. பின் இரண்டு அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறுர்.

3. 'எழில் மலர் மாதரும் தானும் இன்பம் பயக்க' என்று கூட்டி, 'எழில் மலர் மாதர்' என்று விசேடிக்கையாலே, 'ஈஸ்வரனுடைய ஆனந்தத்துக்குக் காரணம் இவள் சேர்த்தி' என்கிறுர், 'எப்பொழுதும்' என்று தொடங்கி.

ஆனந்தம் உண்டாமாறு போலே ஆயிற்று பிராட்டியுடைய சேர்த்தியாலே [1]'ஆநந்தமய:' என்கிற வஸ்துவான அவன் தனக்கும் ஆனந்தம் உண்டாம்படியும்; [2]'அல்லி மலர்மகள் போக மயக்குகளாகியும் நிற்கும் அம்மான்' என்று பிராட்டியுடைய சேர்த்தியாலே பிச்சு ஏறி இருக்குமாயிற்று. [3]'ராம: - ஸ்ரீ பரசுராமாழ்வானைச் செருக்கு வாட்டிப் படை வீட்டிலே வந்து புகுந்து சக்கரவர்த்தியையும் மஹரிஷிகளையும் பின் பற்றித் தர்மத்தையே மிகுதியாக நடத்திப் போந்தவர். து - தமப்பனுக்குச் செய்ய வேண்டிய குற்றேவல் முதலியவைகளைச் செய்து பின்பு பிராட்டியுடைய ரச தாரையிலே இழிந்த பின்பு, 'இதற்கு முன்பெல்லாம் [4]வாத்ஸ்யாயநம் கற்றுக் காம தந்திரமே நடத்திப் போந்தாரித்தனையோ!' என்னும்படி வேறுபட்டார். என்றது, 'முன்பு போருகிற நாளில் 'இவர் இதற்கு முன்பு காம ரசம் புதியது உண்டு அறியாரோ?' என்னும்படி போந்த இவர், இப்போது 'இதற்கு முன்பு தருமத்தின் உண்மையைப் புதியது உண்டு அறியாரோ?' என்னும்படி வேறுபட்டார்,' என்றபடி.

ஸீதயா ஸார்த்தம் - [5]அயோநிஜையாய்ப் பரமபதத்தில் தானும் அவனுமாய் இருந்து கலந்த போதைச் செவ்வியில் ஒன்றும் குறையாமல் இருந்தவள் அன்றோ பிராட்டி? இப்படி இருக்கச் செய்தேயும், தம்மை அழிய மாறி மற்றைச் சாதியினரோடு ஒத்தவராக அவதரித்தாரேயாகிலும், போகத்தில் வந்தால் அவளுங்

---

1. 'ஆநந்தமய:' என்பது, சுருதி.

2. பிராட்டியுடைய சேர்த்தியாலே ஆனந்தம் உண்டாவதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'அல்லி மலர் மகள்' என்று தொடங்கி. இது, திருவாய். 3. 10 : 8.

3. இருவருமான சேர்த்தியிலே ஆனந்தம் உண்டாம் என்னுமதற்குப் பிரமாணமும் பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார, 'ராம:' என்று தொடங்கி.

'ராமஸ்து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந் ருதூந்
மநஸ்வீ தத்கத: தஸ்யாநித்யம் ஹ்ருதி ஸமர்ப்பித:'

என்பது, ஸ்ரீ ராமா. பால. 77 : 25.

4. வாத்ஸ்யாயநம் – காமசாஸ்திரம்.

5. 'ஸீதயா' என்றதிலுள்ள மூன்றும் வேற்றுமையை அப்பிரதானமாகக் கொண்டு பொருள் அருளிச்செய்கிறார், 'அயோநிஜையாய்' என்று தொடங்கி. 'அயோநிஜை' என்றது, 'ஸிதா' என்ற சொல்லைத் திருவுள்ளம் பற்றி. அயோநிஜை - கருவிலே தங்கிப் பிறவாதவள்.

கூடப் பிரதானம் அற்றவளாம்படி அதில் தலைநின்றார்: [1]'அதற்கு அடி என்?' என்னில், இராசபுத்திரரான ரசிகத் தன்மையால் வந்த ஏற்றத்தாலே. விஜஹார - [2]பாரிப்பே ஒழியப் போகத்தில் இழியப் பெற்றிலர்; தொடக்கத்துக்கே பணி போந்ததித்தனை. என்றது, 'உபோத்காதத்துக்கே காலம் போந்ததித்தனை' என்றபடி. பஹூந் ருதூந் - [3]'ஸமாத்வாதஶ தத்ராஹம' என்கிறபடியே, பன்னிரண்டு ஆண்டு ஒரு படிப்பட அனுபவிக்கச்செய்தேயும், 'ருது' சப்தத்தாலே சொல்லுகிறான் ஆயிற்று, அவ்வவ காலங்களுக்கு அடைத்த மலர் முதலான உபகரணங்களைக்கொண்டு கால அவயவங்கள் தோறும் அனுபவித்துப் போந்தமை தோற்ற. என்றது, 'குளிர் காலத்துக்கு அடைத்தவைகொண்டு பரிமாறியும் வெயில் காலத்துக்கு அடைத்தவைகொண்டு பரிமாறியும் அனுபவித்தமை தோற்றச் சொல்லுகிறான்' என்றபடி. மநஸ்வீ - [4]பிரணயதாரையில் வந்தால், அவள் பாரித்த பாரிப்புக்கு எல்லாம் யானைக்குக் குதிரை வைக்கைக்கு ஈடான நெஞ்சில் அகலமுடையவராயிற்று.

தத்கத:-திரவியம் திரவியத்தோடு சேர்ந்தாற்போல அன்றிக்கே, சாதி குணங்கள் திரவியத்தோடு சேர்ந்தாற்போலே சேர்ந்தார்; [5]'நான் பெருமாளோடு கூடியே இருப்பவள்' என்றும், [6]'சீதை என்னோடு கூடியே உள்ளவளன்றோ?' என்றுமன்றோ இருவர்

---

1. அதற்கு அடி - தலை நிற்கைக்குக் காரணம்.

2. 'அநு பூவ' என்னாமல், 'விஜஹார' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'பாரிப்பே' என்று தொடங்கி.

3. 'வத்ஸரான்' என்னாமல், 'ருதூந்' என்றதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'ஸமாத்வாதஶ' என்று தொடங்கி.

'ஸமாத்வாதஶ தத்ராஹம்'

என்பது, ஸ்ரீராமா. சுந். 33 : 17. 'நான் அங்குப் பன்னிரண்டு வருடங்கள் முடிய' என்பது இதற்குப் பொருள். இது, பிராட்டியின் வார்த்தை. 'சொல்லுகிறான்' என்றது, ஸ்ரீ வால்மீகி பகவானை.

4. மிகுதிப் பொருளிலே இனி பிரத்தியயமாக்கிப் பொருள் அருளிச்செய்கிறார், 'பிரணயதாரையில்' என்று தொடங்கி. யானைக்குக் குதிரை வைக்கையாவது, பிடி கொடுக்குமாறு போலே இருந்து பிடி கொடாது ஒழிகை. பிரத்தியயம் - இடைச்சொல்.

5. அப்படிச் சேர்ந்தே இருப்பவர்கள் என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார், 'நான்' என்று தொடங்கியும், 'சீதை' என்று தொடங்கியும்.

'அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா'

என்பது, ஸ்ரீராமா. சுந். 21:16. இராவணனைப் பார்த்துப் பிராட்டி கூறியது.

6. 'அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா' ஸ்ரீராமா. யுத். 122 : 19. இது, இராவணவதத்தின் பின் வந்து கூடிய பிரமன் முதலிய தேவர்களைப் பார்த்து ஸ்ரீராமபிரான் கூறியது.

வார்த்தைகளும்? தஸ்யாநித்யம் ஹ்ருதி ஸமர்ப்பிதः - இதில் இழிவதற்கு முன்பு இவரை அறிந்திருக்குமவளாகையாலே, 'அப்படிப் பெரியவர் இப்போது என் பக்கலிலே தாழநிற்பதே இப்படி இது ஒரு நீர்மையே!' என்று எப்போதும் இந்த நினைவே செல்லுகை ஆகை யாலே, வேறு ஒன்றும் நெஞ்சிற்படாதே அவள், தன்னைத் தம் பக்கலிலே போகடும்படி ஆனுர். தத்கத: - என்கையாலே, இவர், தம்மை அவள் பக்கலிலே [1] ஒக்கினபடி சொல்லிற்று, 'நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பிதः' என்கையாலே, அவள், தன்னை இவர் பக்கலிலே ஒக்கினபடி சொல்லுகிறது. [2] இப்படி இருவருமான சேர்த்தியிலே, இதற்கு முன்பு ஆனந்தம் புதியது உண்டு அறியாதான் ஒருவனுக்கு ஆனந்தம் உண்டாமாறுபோலே ஆயிற்று, கணந்தோறும் ஆனந்தம் உண்டாம்படி.'

எழில் மலர் மாதரும் - [3] 'ராகவன் வைதேவியை ஒக்கின்ருன்' என்னுமாறு போலே ஆயிற்று இத்தலை. தானும் - 'எவனுக்குச் சீதை மனைவியாக ஆவாளோ' என்றும், 'ஜனகனுடைய பெண்ணுகிய சீதை எவனுடைய மனைவியோ' என்றும் சொல்லலாம்படி ஆயிற்று

---

1. ஒக்கினபடி-ஆக்கினபடி; பரதந்திரர் ஆக்கினபடி.

2. இந்தப் பிரமாணங்களை எடுத்ததற்குப் பிரயோஜனத்தை அருளிச் செய்கிருர், 'இப்படி' என்று தொடங்கி.

3. 'ராகவோர்ஹதி வைதேஹீம்'
என்பது, ஸ்ரீராமா. சுந். 16 : 5.
'யஸ்ய ஸீதா பவேத் பார்யா'
என்பது, ஸ்ரீராமா. ஆரண்ய. 34 : 18.
'யஸ்ய ஸா ஜநகாத்மஜா'
என்பது, ஸ்ரீராமா. ஆரண்ய. 37 : 18.

ஆக, 'ராகவோர்ஹதி' என்கையாலே, 'எழில் மலர் மாதர்' என்று பிராட்டி வைலக்ஷண்யமும், 'யஸ்ய ஸீதா பவேத் பார்யா' என்று 'பார்யா' என்கையாலும், 'யஸ்ய ஸா ஜநகாத்மஜா' என்பதில் 'யஸ்ய' என்பது, அடிமைப்பொருளில் ஆரும் வேற்றுமையாகையாலும், 'தானும்' என்று பெருமாள் வைலக்ஷண்யமும் சொல்லுகிறது என்றபடி. 'இத்தலை' என்றது, பிராட்டியை. 'அத்தலை' என்றது, பெருமாளை.

'நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்;
கொம்பினைக் காணுந் தோறும் குரிசிற்கும் அன்ன தேயாம்'

என்ற செய்யுளை இங்கு நினைவு கூர்க. கம்பரா.

அத்தலே. இவ்வேழ் உலகை இன்பம் பயக்க-[1] 'இராமர் சீதையைப் பெற்றுப் பின்னர் இராச்சியத்தையும் அடைந்தார்; உலகம் மிக்க உவகையை அடைந்தது' என்கிறபடியே, தந்தை தாயர் இருவரும் சேர இருந்து பரியப் புக்கால் குழந்தைகளுக்கு ஒரு குறையும் பிறவாதே அன்றோ? [2] ஆக, இருவருமான சேர்த்தியாலே தங்களுக்கு ஆனந்தம் உண்டாக, அச்சேர்த்தியைக் காண்கையாலே உலகத்துக்கு ஆனந்தம் உண்டாக, அதனைக் கண்டு குழந்தை பால் குடிக்கக் கண்டு உகக்கும் தாயைப்போலே இவர்களுக்கு உண்டான பிரீதியைக் கண்டு அதனாலே தாங்கள் இனியராய் இருப்பர்களாயிற்று. இனிது உடன் வீற்றிருந்து ஆள்கின்ற - தன் சந்நிதியாலே உலகம் அடையத் தளிரும் முறியுமாம்படி இருக்கிறவன், தான் பெரும்பேறு பெற்றாற்போலே, 'திருவாய்மொழி கேட்கைக்குத் தகுதியாக இருப்பது ஒரு தேசம் பெற்றோம்' என்று விரும்பி வசிக்கிற தேசமாயிற்று. எங்கள் பிரான் - [3] 'கேசவன்தமர்' என்ற திருவாய்மொழிக்குப் பின்பு இவர்தாம் தனியர் அல்லர் அன்றோ? என்னை இடுவித்துத் திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட உபகாரகன்.

அன்புற்று-'திருவாய்மொழி கேட்கலாய் இருப்பது ஒரு தேசம் பெறுவோமே!' என்று அங்கே அன்பினை வைத்து. அமர்ந்து - அந்தச் தேச வாசத்துக்கு மேற்பட ஒரு பிரயோஜனத்தைக் கணிசியாதே விரும்பி. உறைகின்ற - அவதாரங்கள் போலே தீர்த்தம் பிரசாதியாதே, நித்தியவாசம் செய்கிற. அணிபொழில் சூழ்

---

1. பெருமாள் பிராட்டி என்னும் இருவருடைய ஆனந்தத்தைச் சொன்ன பின்னர், உலகத்தாருடைய ஆனந்தத்தைச் சொல்லுவதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இராமன்' என்று தொடங்கி.

> 'ராம: ஸீதாம் அநுப்ராய ராஜ்யம் புந: அவாப்தவாந்
> ப்ரஹ்ருஷ்டமுதிதோ லோக: துஷ்ட: புஷ்ட: ஸுதார்மிக:'

என்பது, சங்க்ஷேப ராமா. 1 : 89.

2. கூறப்பட்ட மூவருடைய ஆனந்தத்தையும் முடித்துக்கொண்டு, 'இனிதுடன் வீற்றிருந்த' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'ஆக' என்று தொடங்கி.

3. 'எங்கள்' என்ற பன்மைக்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'கேசவன்தமர்' என்று தொடங்கி. 'பிரான்' என்றதற்குப் பொருள், 'என்னை' என்று தொடங்கும் வாக்கியம்.

திருவாறன்விளை - [1] 'பிராப்பிய பூமி' என்று தோற்றும்படி இருப்ப தாய், அவன் தனக்கும் உலகத்துள்ளார்க்கும் இருந்து திருவாய் மொழி கேட்கைக்குத் தகுதியான பரப்பையுடைத்தாய், காட்சிக்கு இனியதாய் இருக்கிற பொழிலாலே சூழப்பட்ட திருவாறன்விளையை. [2] 'அதனால் அந்த மக்கள் அவனைப் பின் தொடர்ந்தார்கள்' என்கிற படியே, அவனுக்கு உத்தேசியமான இடமும் இவனுக்கு உத்தேசிய மாகக் கடவது அன்றோ? அன்புற்று-'திருவாய்மொழி கேட்கைக்குத் தக்கதான தேசம் பெற்றோம்' என்று அவன் விருப்பத்தை வைத்தாற் போலே, 'திருவாய்மொழி கேட்பிக்கைக்குத் தக்கதாய் இருப்பது ஒரு தேசத்தைப் பெறுவோமே!' என்று அத்தேசத்திலே விருப்பத்தை வைத்து. அமர்ந்து - அத்தேச வாசத்துக்கு அப்பால் ஒரு பிரயோ ஜனத்தை விரும்பாமல். வலஞ்செய்து - வலம் வருதல் முதலான வற்றைச் செய்து. கைதொழும் நாள்களும் ஆகுங்கொலோ-[3] 'அந்தக் காலம் இந்த நாளாக வேண்டும்' என்றாரே ஸ்ரீகௌசல்யையார். 'போய் வருகை தவிராராகில் மீண்டு புகுரும் நாள் இன்று ஆயிற் றாகிலோ' என்றாற்போலே, [4] இந்த எண்ணத்திற்கு அடைத்த காலமே அனுபவத்துக்கு அடைத்த காலமாகப் பெற்றோம் ஆகிலோ?' என்கிறார். (1)

---

1. 'அணிபொழில் திருவாறன்விளை' என்று அடை கொடுத்து ஓதியதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'பிராப்பிய பூமி' என்று தொடங்கி.

2. நான்காம் அடியிலுள்ள 'அன்புற்று' என்றதற்கு, அவதாரிகை அருளிச்செய்கிறார், 'அதனால்' என்று தொடங்கி.

'ஸர்வேஷாம் ஹி ஸதர்மாத்மா வர்ணாநாம் குருதே தயாம்
சதுர்ணாம் ஹி வயஸ்தாநாம் தேநதே தம் அநுவ்ரதா:'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 17 : 15.

3. 'ஆகுங்கொல்' என்பதற்கு, 'இப்போது ஆகுங்கொல்' என்று பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, 'இப்படிச் சொன்ன பேர் உளரோ?' என்ற சங்கைக்கு உளர் என்று பரிஹாரம் அருளிச்செய்கிறார், 'அந்தக் காலம்' என்று தொடங்கி.

'அபீதாநீம் ஸகால: ஸ்யாத் வநாத் ப்ரத்யாகதம் புந:
யத்வா புத்ரக பஸ்யேயம் ஜடாமண்டல தாரிணம்'

என்பது, ஸ்ரீராமா. அயோத். 24 : 37.

இந்தச் சுலோகத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'போய் வருகை' என்று தொடங்கி.

4. திருஷ்டாந்தத்திலே சொன்ன அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தி கத்திலே பொருத்திக் காட்டுகிறார், 'இந்த எண்ணத்திற்கு' என்று தொடங்கி.

763

ஆகுங்கொல் ஐயம்ஒன்று இன்றி
அகலிடம் முற்றவும் ஈரடியே
ஆகும் பரிசு நிமிர்ந்த திருக்குற
ளப்பன் அமர்ந்துஉறையும்
மாகந் திகழ்கொடி மாடங்கள் நீடு
மதிள் திரு வாறன்விளை
மாகந்த நீர்கொண்டு தூவி வலஞ்செய்து
கைதொழக் கூடுங்கொலோ ?

பொ - ரை : 'ஆகுமோ !' என்ற சந்தேகம் ஒரு சிறிதும் இல்லாமல் அகன்ற உலகமனைத்தும் இரண்டு திருவடிகளுக்குள்ளே ஆகும்படி வளர்ந்த அழகிய வாமனனாகிய உபகாரகன் பொருந்தி எழுந்தருளி யிருக்கின்ற, பெரிய ஆகாசத்திலே விளங்குகின்ற கொடிகளையும் மாடங்களையும் நீண்ட மதிள்களையுமுடைய திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்தை, சிறந்த வாசனை பொருந்திய தண்ணீரைக்கொண்டு தூவி வலம் வந்து கையால் தொழுவதற்குக் கூடுமோ ?

வி - கு : 'அப்பன் உறையும் திருவாறன்விளை' என்க. '**திருக்குறள்**' என்னும் இவ்விடத்தில், திருவள்ளுவனார் தம்முடைய நூலுக்குத் '**திருக்குறள்**' என்று பெயர் வைத்திருத்தலை நினைவு கூர்தல் தகும்.

ஈடு : இரண்டாம் பாட்டு. [1] 'திருவாறன் விளையிலே மிக்க வாசனையையுடைத்தான நீரைக்கொண்டு திருநீர் விட்டு வலம் வந்து கையாலே தொழவும் கூடவற்றே !' என்கிறார்.

ஆகுங்கொல் ஐயம் ஒன்று இன்றி - [2] இது அநுபாஷணம் ஆகாநிற்கச்செய்தே, ஆதரத்தின் மிகுதிக்குச் சூசகமாயிருக்கிறது. ஒரு சந்தேகம் இன்றிக்கே நமக்கு இது கூடவற்றோ ? [3] 'அன்றிக்கே, ஆகுங்கொல் என்ற ஐயமுங்கூட இன்றிக்கே ஈரடியே ஆகும் பரிசு நிமிர்ந்தான்' என்று மேலே கூட்டவுமாம். [4] எல்லாம் செய்தாலும் 'நமக்கு இது கூடுமோ, கூடாதோ !' என்று இருந்தானாயிற்று

1. பின் இரண்டு அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'மீண்டும் 'ஆகுங்கொல்' என்கிறது என் ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இது அநுபாஷணம்' என்று தொடங்கி. அநுபாஷணம் - வழி மொழிதல். பதப்பொருள் அருளிச்செய்கிறார், 'ஒரு சந்தேகம்' என்று தொடங்கி. 'ஐயம் ஒன்று இன்றி ஆகுங்கொல்!' என்றபடி.

3. மேலதற்கே வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'அன்றிக்கே' என்று தொடங்கி.

4. 'சர்வ சத்தியான சர்வேஸ்வரனுக்கு ஐயத்துக்குக் காரணம் யாது?' என்ன, 'எல்லாம் செய்தாலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

இளமைப்பருவத்தாலே. அகல் இடம் முற்றவும்-பரப்பையுடைத்தான பூமியும், புவர்லோகம் முதலானவைகளும் எல்லாம். ஈர் அடியே ஆகும் பரிசு நிமிர்ந்த - இரண்டு அடியே ஆகும் பரிசு நிமிர்ந்த; என்றது,.[1] 'இரண்டு அடிகளாலே பூமியையும் மேல் உலகங்களையும் அளந்தானாயிற்று, ஓர் அடிக்கு இவனைச் சிறையிட்டுவைக்க நினைத்து' என்றதனைத் தெரிவித்தபடி. திருக்குறள் அப்பன் - ஸ்ரீ வாமனனான மஹோபகாரகன். அமர்ந்து உறையும்-இந்திரனுக்கு இராச்சியத்தை வாங்கிக் கொடுத்துத் திருப்பாற்கடலிலே போய்ச் சாய்கை அன்றிக்கே, அவன் வந்து நித்தியவாசம் செய்கிற. மாகம் திகழ் கொடி மாடங்கள் நீடு மதிள் திருவாறன்விளை - அவன் திருவடியால் அளந்த ஆகாசப்பரப்பு அடங்கலும் பரந்துள்ள கொடிகளையுடைத்தான மாடங்களை, ஓங்கியிருந்துள்ள மதிள்களையுமுடைத்தான திருவாறன்விளையை. மா கந்தம் நீர்கொண்டு தூவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொல் - [2] 'பூமியை அடங்கலும் பனி போன்ற குளிர் நீரால் நனைக்கட்டும்' என்று ஸ்ரீ நந்திக்கிராமம் தொடங்கி ஸ்ரீ பரத்துவாச பகவான் ஆஶ்ரமத்தளவும் வர, பனி நீராலே விடுவித்தான் ஸ்ரீ சத்துருக்நாழ்வான் என்றது அன்றோ? அப்படியே, மா கந்த நீர் கொண்டு தூவி அநுகூலமான காரியங்களைச் செய்து கைதொழக் கூடவற்றேயோ? (2)

764

கூடுங்கொல்? வைகலும் கோவித் தனைமது
 சூதனைக் கோளரியை
ஆடு பறவை மிசைக்கண்டு கைதொழுது
 அன்றி யவன்உறையும்
பாடும் பெரும்புகழ் நான்மறை வேள்வியைந்து
 ஆறங்கம் பன்னினர்வாழ்
நீடு பொழில்திரு வாறன் விளைதொழ
 வாய்க்குங்கொல் நிச்சலுமே?

**பொ—ரை:** நாள்தோறும் இப்படிக் கூடவற்றோ? கோவிந்தனும் மதுசூதனனும் மிடுக்கையுடைய நரசிங்கமானவனுமான எம்பெருமானை,

1. 'மூன்று அடியை இரந்து இரண்டு அடியாலே அளப்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இரண்டு அடிகளாலே' என்று தொடங்கி.

2. 'ஸிஞ்சந்து வஸுதாம் க்ருத்ஸ்நாம் ஹிமஶீதேந வாரிணா' என்பது, ஸ்ரீராமா. யுத். 130 : 6.

சுலோகத்திலேயுள்ள 'க்ருத்ஸ்நாம்' என்றதன் பொருளை அருளிச்செய்கிறார், 'ஸ்ரீ நந்திக்கிராமம்' என்று தொடங்கி.

வெற்றி பொருந்திய கருடப்பறவையின்மேலே கண்டு கைகூப்பித் தொழுதலே அல்லாமல், அவன் எழுந்தருளியிருக்கின்ற, பேசப்படுகிற பெரிய புகழையுடைய நான்கு மறைகளையும் ஐந்து யாகங்களையும் ஆறு அங்கங்களையும் நன்கு கற்று ஓம்புகின்றவர்களான அந்தணர்கள் வாழ்கின்ற, நீண்ட சோலைகள் சூழ்ந்த திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்தைத் தொழுவதற்கு எப்பொழுதும் வாய்க்குமோ?

வி - கு : 'அவன் உறையும் திருவாறன்விளை; பன்னினர் வாழ் திருவாறன்விளை' என்க. 'புகழ்' என்பதனை, 'பன்னினர்'க்கு அடையாக்கலுமாம்.

ஈடு : மூன்றும் பாட்டு. [1] 'திருவாறன்விளையில் எம்பெருமான் பெரிய திருவடிமேல் ஏறி எழுந்தருளக்கண்டாலும், அதனைத் தவிர்ந்து திருவாறன்விளையைத் தொழக் கூடவற்றே?' என்கிறார்.

கூடுங்கொல் வைகலும் - இதுவும் அநுபாஷணமாய், 'நாள் தோறும் நமக்கு இது கூடவற்றேயோ?' என்கிறார். கோவிந்தனை மதுசூதனைக் கோள் அரியை - [2] அங்கு நிற்கிறவனைக் கண்டால் மூன்று படி தொடை கொள்ளலாய் இருக்கும். ஆஸ்ரித வாத்சல்யம், ஆஸ்ரித விரோதி நிரசனசீலதை, அடியார் அல்லார்க்குக் கிட்டுதற்கும் அரியன் என்னும் இவை. 'ஜ்வலந்தம்-விளங்குகின்றவனை' என்கிற படியே, 'கோளரி' என்கிறார். ஆடுபறவை மிசைக்கண்டு - வெற்றிப் புள்ளின்மேலே கண்டு. ஆடு - வெற்றி. அன்றிக்கே, சர்வேஸ்வரன் வாகனம் என்கிற உவகையின் மிகுதியாலே கட்குடியர் போன்று களித்து ஆடாநின்றுள்ள திருவடி திருத் தோளிலே கண்டு என்னுதல். [3] நாம் திருவாறன்விளையைப் பிராப்பியம் என்று போகிறதைப் போன்று, அவனும் 'திருநகரியை'

---

1. 'ஆடு பறவைமிசைக்கண்டு கைதொழுது அன்றி அவன் உறையும் திருவாறன்விளை தொழ வாய்க்குங்கொல்?' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மூன்று திருப்பெயர்களைச் சொன்னதற்கு, பாவம் அருளிச்செய்கிறார், 'அங்கு நிற்கிறவனை' என்று தொடங்கி. தொடை கொள்ளுதல்-தோன்றுதல். 'கோள் அரி' என்பதற்கு, 'ஒளியையுடைய சிங்கம்' என்று பொருள் கொண்டு, அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'ஜ்வலந்தம்' என்று. இது, நரசிம்மம்.

3. 'பெரியதிருவடிமேலே காண்கைக்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'நாம்' என்று தொடங்கி.

உத்தேசியமாம் என்று வாராநிற்கும் அன்றோ ? கண்டு-நடுவழியிலே கண்டால். கைதொழுது - [1] காரியங் கொண்டிலோமே ஆகிலும், கிட்டினால் கைதொழுகைக்குத் சம்பந்தம் உண்டே அன்றோ ? ஆகையாலே, முறை தப்பாமல் பணிதல் செய்து. அன்றி-அவனை விட்டு, அவன் உறையும் - [2] அவன் இராத் தங்கும் ஊரிலே போய்ப் புகக்கடவோம்; [3] சர்வேஶ்வரன் பிராப்பியன் ஆகாநிற்கச் செய்தே ஒரு தேச விசேடத்திலே போய் அனுபவிப்பதாக ஒரு நியதி உண்டு அன்றோ ?

பாடும் பெரும்புகழ் நான்மறை - [4] அவனுடைய கல்யாண குணங்களைப் பாடாநின்றுள்ள நான்கு வகைப்பட்ட வேதங்கள். வேள்வி ஐந்து-ஐந்து பெரிய யாகங்கள். ஆறு அங்கம்-அங்கங்கள் ஆறும். இவற்றைப் பன்னினவர்கள் - எஃகிக்கரை கண்டு இருக்குமவர்கள். [5] 'ஒருவர்க்கு ஒருவர் உணர்த்திக்கொண்டு' என்னும்படி, அவ்வூரிலுள்ளாரோடு சென்று கூடவேணும். வாழ் - [6] வேத தாத்பரியனானவனைக் கண்களாலே கண்டு அனுபவித்து வாழாநின்றுள்ள. நீடு பொழில் திருவாறன்விளை தொழ - ஓக்கத்தையுடைத்தான பொழிலையுடைய திருவாறன்விளையைத் தொழ. வாய்க்குங்கொல் நிச்சலுமே - அங்குத்தை ஸ்ரீவைஷ்ணவர்களோடே கூடி நித்தியானுபவம் பண்ணக் கூடவற்றேயோ ? (3)

---

1. *'அவனை விட்டு அத்தேசத்திற்குச் சொல்லுகிற ஆழ்வார்க்கு அவனைத் தொழ வேண்டுவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'காரியம்' என்று தொடங்கி. இதனால், 'சரமபர்வ நிஷ்டர்க்கும் ஈஶ்வரன் உத்தேசியம்' என்றபடி.*

2. *'அவன் இங்கே வந்தால் திருநகரி பிராப்பியமாக இருக்க, அங்கே போவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன்' என்று தொடங்கி.*

3. *'எதிரே வந்தவனை விட்டு அங்கே போவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'சர்வேஶ்வரன்' என்று தொடங்கி.*

4. *'பெரும்புகழ் பாடும் நான்மறை' என்று கூட்டுக.*

5. *இப்போது இவர்களைச் சொல்லுதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'ஒருவர்க்கு ஒருவர்' என்று தொடங்கி. 'போதயந்த: பரஸ்பரம்' என்பது, ஸ்ரீகீதை. 10 : 9.*

6. *'வாழ்' என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார், 'வேததாத்பரியனானவனை' என்று தொடங்கி.*

765

வாய்க்குங்கொல் நிச்சலும் எப்பொழு
 தும்மனத் தீங்கு நினைக்கப்பெற
வாய்க்குங் கரும்பும் பெருஞ்செந்
 நெலும்வயல் சூழ்திரு வாறன்விளை
வாய்க்கும் பெரும்புகழ் மூவுல
 கீசன் வடமது ரைப்பிறந்த
வாய்க்கும் மணிநிறக் கண்ண
 பிரான்தன் மலரடிப் போதுகளே?

பொ - ரை: தகுதியான கரும்புகளும் பெரிய செந்நெற்பயிர்களும் பொருந்திய வயல்கள் சூழ்ந்த திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற, பொருந்திய பெரிய புகழையுடைய மூன்று உலகங்கட்கும் தலைவனும், வடமதுரையிலே அவதரித்த, பொருந்திய நீலமணி போன்ற நிறத்தையுடைய கண்ணபிரானுமான எம்பெருமானது தாமரை மலர் போன்ற திருவடிகளை, இங்கே இருந்து கொண்டே மனத்திலே நினைப்பதற்கு எல்லா நேரத்திலும் நாடோறும் வாய்க்குமோ?

வி - கு: 'மலர் அடிப் போதுகளை ஈங்கு மனத்து நினைக்கப்பெற எப்பொழுதும் நிச்சலும் வாய்க்குங்கொல்?' என்க.

ஈடு: நான்காம் பாட்டு. [1] இதில் 'அங்குச் சென்று அனுபவிக்க வேண்டா, இங்கே இருந்து அங்குத்தைப் பரிமாற்றங்களை என்னுகின்ற எண்ணம் நமக்குக் கூடுவதுகாண்!' என்கிறார்.

வாய்க்குங்கொல் நிச்சலும் - நமக்கு இப்பேறு நாள்தோறும் கூடவேணும். எப்பொழுதும் - [2] அதுதன்னிலும், நித்திய அக்நி ஹோத்திரம் போலே ஒரு காலவிசேடத்திலேயாய்ப் போக ஒண்ணாது, எல்லா நிலைகளிலும் உண்டாக வேணும். மனத்து ஈங்கு நினைக்கப் பெற - அங்குச் சென்று அனுபவிக்க வேண்டா, இங்கே இருந்து நெஞ்சாலே அங்குத்தைப் பரிமாற்றங்களை நினைக்கப்பெற அமையும். 'பெற' என்கையாலே, இந்த எண்ணத்துக்கு அவ்வருகு ஒரு பேறு இல்லை என்று இருக்கிறார் ஆயிற்று இவர். [3] 'துர்க்கதாவபி -

1. முதலடியைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'நிச்சலும்' என்று கூறினவர், மீண்டும் 'எப்பொழுதும்' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அது தன்னிலும்' என்று தொடங்கி.

3. 'அப்படி எண்ணமாத்திரமே புருஷார்த்தமாமோ?' என்ன, அதுவே புருஷார்த்தமாம் என்பதற்குப் பிரமாணமும் பிரமாணத்திற்குப் பொருளும் அருளிச்செய்கிறார், 'துர்க்கதாவபி' என்று தொடங்கி.

மரண தசையிலே வருவது ஒரு துர்க்கதி உண்டு, அதனைப் போக்கித் தரவேணும் என்று பிரார்த்திக்கிறேன் அல்லேன்; [1]ஐயார் கண்டம் அடைக்கிலும் நின்கழல் எய்யாது ஏத்தும்படி செய்தருள வேணும். த்வத் கதோ மே மநோரத: - எனக்கு இது கூடும் என்று தோற்றி இருந்ததோ உனக்கு? யதிநாசம் நவிந்தேத - இப்படி இருக்கிற இந்த எண்ணத்திற்கு அழிவு வாராதாகில். தாவதாஸ்மி க்ருதீஸதா - உலகத்தார், எண்ணம் என்றும் அனுபவம் என்றும் இரண்டாக அன்றோ சொல்லிப் போருவது? எனக்கு இவை எல்லாம் வேண்டா; இந்த எண்ணம் மாத்திரத்தாலே கிருத கிருத்தியன் நான். ஸதா - சரீர சம்பந்தம் அற்றுப் பரமபதத்திலே சென்று ஏற்றமாக அனுபவிக்குமதனைக்காட்டில், நான் பேறாக நினைத்து இருப்பது இதனையே" என்பது, ஜிதந்தா.

[2]முற்காலத்தில் இடையாற்றுக்குடி நம்பி என்பார் ஒருவர் இருந்தனர்; அவர் திருநாள்கள்தோறும் வந்து பெருமாளைச் சேவித்துப் போனால், மறித்துத் திருநாள் வருந்தனையும் அதனையே போது போக்காக நினைத்துக்கொண்டு இருப்பாராயிற்று; [3]ஒருநாள் ஒரு திருநாளின் வைபவத்தை நினைத்திராநிற்கச்செய்தே, 'அமுது செய்கைக்குப் போது வைகிற்று' என்றார்களாக, 'ஆகில் வருகிற திருநாள் அணித்தாகிறது' என்றாராம். [4]அவர் நூறு வயதும் புகுகையாலே வலிமை குன்றித் திருமுளைத்திருநாளில் பெருமாள்

---

'துர்க்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத:
யதி நாஸம் நவிந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா'

என்பது, ஜிதந்தா.

1. 'ஐயார் கண்டம்' என்பது, திருவாய். 2. 9 : 3.

2. 'அப்படி மனோரதமே புருஷார்த்தமாய் அனுபவித்த பேர் உளரோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'முற்காலத்தில்' என்று தொடங்கி.

3. 'இப்படி இருப்பர் என்பதற்குக் காரணம் யாது?' என்ன, 'ஒருநாள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். வைகிற்று-கழிந்தது, வருகிற திருநாள் - இரண்டாம் திருநாள். இதனால், இப்போது அநுசந்திக்கிற திருநாள் முடிந்தது; 'வருகிறேன்' என்றபடி.

4. இடைப்பிற வரலாக அவர் வைபவத்தை அருளிச்செய்கிறார், 'அவர்' என்று தொடங்கி.

புறப்பட்டருளுகைக்கு உதவ வந்து புகுரப்பெற்றிலர் : பெருமாளும் தேடியருளிககாணுமல், 'நம் இடையாற்றுக்குடியான் வந்திலன், நங்கண்ணுலம் அல்லவோ !' என்று திருவுள்ளமானுராம். அவர்தாம் ஆருந்திருநாளிலே சேவித்திருக்கச் செய்தே, 'நாம் உனக்குச் செய்ய வேண்டுவது என் ?' என்று கேட்டருள, 'தேவரீர் தந்தருளின சரீரத்தைக் கொண்டு போரக் காரியம் கொண்டேன் ; இனிப் போக்கு வரத்துக்குத் தகுதி இல்லாதபடி போர இளைத்தது' என்ன, 'வாராய், மெய்யே இளைத்தாயாகில் இங்ஙனே இரு' என்று அருளிச்செய்தார்; பெருமாள் நடுவில் திருவாசலுக்கு அவ்வருகே எழுந்தருளுங் காட்டில் அவர் திருநாட்டுக்கு எழுந்தருளினுர்.

வாய்க்கும் கரும்பும் பெருஞ்செந்நெலும் வயல் சூழ் திருவாறன் விளை - இட்டவை முழுதும் நிறைந்து இருப்பதான தேசமாயிற்று. வாய்த்த கரும்பும், அதற்கு நிழல் செய்யும்படியாக வளர்ந்த செந் நெலுமான வயலாலே சூழப்பட்ட திருவாறன் விளையிலே. வாய்க்கும் பெரும்புகழ் - இட்டவை முழுதும் நிறைந்து இருப்பதான தேசமாகை யாலே அத்தேசத்தை விரும்பி இருப்பவனுக்கும் கல்யாண குணங்களும் நிறைந்து இருக்குமாயிற்று. மூன்று உலகு ஈசன் வடமதுரைப் பிறந்த-[1] எல்லா உலகங்களுக்கும் ஈஸ்வரனுய் இருந்து வைத்து, நல்லார்களை நலம் புரிந்து காத்தல் நிமித்தமாக ஸ்ரீமதுரையிலே வந்து அவதரித்த. வாய்க்கும் மணி நிறம் கண்ண பிரான் - தன் [2] பிரகிருதி சம்பந்தம் இல்லாத திவ்விய திருமேனியை அன்றோ இதர ஸஜாதீயம் ஆக்கிற்று ? ஆகையாலே, அழகிய நீலமணி போன்ற திருநிறத்தையுடைய உபகாரத் தன்மையனுன கிருஷ்ணனுடைய மலர்ச்சி பொருந்திய திருவடிகளாகிற செவ்விப் பூக்களை ஈங்கு மனத்து நினைக்கப்பெற வாய்க்குங்கொல். நிச்சலும் எப்பொழுதும். (4)

1. 'மூவுலகு' என்றதனை, எல்லா உலகங்களுக்கும் உபலக்ஷண மாக்கிப் பொருள் அருளிச்செய்கிறுர், 'எல்லா உலகங்களுக்கும்' என்று தொடங்கி.

2. 'இதர சஜாதீயனுய் அவதரித்த இடத்தே வாய்க்கும் மணி நிறம் உண்டோ ?' என்ன, 'பிரகிருதி சம்பந்தம் இல்லாத' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர். 'வாய்க்கும்' என்பது, ஈண்டு அழகினைக் குறிக்கிறது.

766

மலரடிப் போதுகள் என்நெஞ்சத்து
எப்பொழுதும் இருத்தி வணங்கப்
பலரடி யார்முன்பு அருளிய
பாம்பணை யப்பன் அமர்ந்துறையும்
மலரின் மணிநெடு மாடங்கள்
நீடு மதிள்திரு வாறன்விளை
உலக மலிபுகழ் பாடநம்மேல்
வினைஒன்றும் நில்லா கெடுமே.

**பொ - ரை:** மலர்ந்த திருவடித் தாமரைகளை என்னுடைய நெஞ்சத்திலே இருத்தி எப்பொழுதும் வணங்கும்படியாக, அடியார் பலர் முன்பு திருவருள் செய்த ஆதிசேஷ சயனத்தையுடைய எம்பெருமான் மனம் பொருந்தி எழுந்தருளியிருக்கின்ற பூக்கள் நிறைந்த அழகிய நீண்ட மாடங்களையும் நீண்ட மதிள்களையுமுடைய திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்தினது உலகம் எங்கும் நிறைந்த புகழை நாம் பாட, நம்மிடத்துள்ள வினைகள் ஒன்றும் நில்லாமல் கெட்டுவிடும்.

**வி - கு:** 'வணங்க அருளிய அப்பன்' என்க. 'அப்பன் உறையும் திருவாறன் விளை' என்க.

**ஈடு:** ஐந்தாம் பாட்டு. [1] திருவாறன்விளையிலே புக்கு அடிமை செய்கைக்கு விரோதியானவை எல்லாம் அவனுடைய மிக்க புகழைப் பாடப் பறந்துபோம்' என்கிறார்.

மலர் அடிப்போதுகள் என் நெஞ்சத்து எப்பொழுதும் இருத்தி வணங்க - மலர்ந்திருந்துள்ள திருவடிகளாகிற செவ்விப்பூக்களை என்னுடைய மனத்திலே எப்போதும் இருத்தி, அந்நினைவு [2] போய்க் கனக்க அதனாலே செருக்கு அற்றவனாய்க்கொண்டு திருவடிகளிலே விழும்படியாக. பலர் அடியார் முன்பு அருளிய - ஸ்ரீ வேதவியாச பகவான், ஸ்ரீ வால்மீகி பகவான், ஸ்ரீ பராசர பகவான், 'இன்கவி பாடும் பரமகவிகள்' என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்கள்

---

1. 'மலி புகழ் பாட நம்மேல் வினை ஒன்றும் நில்லாகெடுமே' என்றதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. போய்க்கனக்க - மிகவும் அதிகரிக்க.

எல்லாரும் உளராயிருக்க, என் பக்கல் [1]விசேட கடாட்சம் செய்வதே! [2]'பின்பு ஸ்ரீ ராகவர் சந்தோஷத்தினால் இன்புற்றவராய்க் கொண்டு அனுமானை மிக்க பெருமையோடு பார்த்தார்' என்கிற படியே, முதலிகள் எல்லாரும் இருக்கச்செய்தே திருவடி பக்கலிலே விசேஷ கடாட்சம் செய்தாற்போலேயாயிற்று, பலரும் உளராய் இருக்க இவரை அங்கீகரித்தபடி. '[3]**கிழக்குத்தை இராசாக்கள்** பொல்லாங்காலே இங்கே நலிவு பிறக்குமளவிற்செய்வது என்?' என்று **எம்பெருமானார்** அதனை நினைந்தருளி, 'இத்தேசத்தை விடாதே நோக்கிக்கொண்டு கிடந்தோம்; இவ்விடத்துக்கும் அழிவு வரும்படி ஆசுரவர்க்கம் மேலிடாநின்றது; மேல் செய்ய அடுப்பது என்?' என்று **பெரிய நம்பிக்கு** அறிவிக்க, 'நான் பெருமாளுடைய திரு எல்லையிலே ஒரு பிரதக்ஷணம் வரும்படியாக உம்முடைய சிஷ்யர்களிலே ஒருவரைப் போர விடுவது' என்ன, 'அதற்கு ஆவார் ஆர்?' என்ன, 'என் பின்னே போராநின்றால் 'ஒருவன் பின்னே போகாநின்றேன்' என்று தன் நெஞ்சிற்படாதே சாயை போலே என்னைப் பின் செல்வான் ஒருவனாக வேணும்' என்ன, 'அதற்கு ஆவார் ஆர்?' என்ன, '**ஆழ்வானைப் போக விடலாகாதோ?**' என்றாராம். ஆக, பல முதலிகள் இருக்க, ஆழ்வானைக் கொடுத்தாற் போலே என்றபடி.

பாம்பு **அணை** அப்பன் அமர்ந்து உறையும் - பரியங்க வித்தியையிற்சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடைய சர்வேஸ்வரன், அப்படுக்கையைக்காட்டிலும் விரும்பி வசிக்கும் தேசமாயிற்று. மலரின் மணி நெடுமாடங்கள் - தேவர்கள் பெய்த மலர்களோடே கூடி, மணிமயமான மாடங்களின் ஓக்கத்தை யுடைத்தாய், ஓங்கின மதிளையுமுடைத்தான திருவாறன்விளை.

---

1. *விசேஷ கடாட்சம் செய்வதாவது, திருவாய்மொழி பாடுவித்துக் கொள்ளுகை.*

2. *பலர் அடியார் முன்பு விசேஷ கடாட்சம் செய்தமைக்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'பின்பு' என்று தொடங்கி.*

*'ப்ரீத்யா ச ரமமாண: அத ராகவ: பரவீரஹா*
*பஹுமாநேந மஹதா ஸநுமந்தம் அவைக்ஷத'*

*என்பது*, ஸ்ரீராமா. சுந். 64 : 39.

3. *பலர் அடியார் முன்பு அருளினதற்கு வேறும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'கிழக்குத்தை' என்று தொடங்கி. கிழக்குத்தை இராசாக்கள் - கிருமி கண்ட சோழன்; இரண்டாங்குலோத்துங்கன்.*

உலகம் மலி புகழ் பாட - [1] ஈண்டின இடத்தில் வெள்ளம் போலே உலகத்தில் அடங்காதபடியான அவனுடைய கல்யாணகுணங்களைப் பிரீதியினாலே தூண்டப்பட்டவராய்க்கொண்டு பாட. நம் மேல் வினை ஒன்றும் நில்லா கெடும் - [2] பாபம் போகைக்காகத் தனித்து ஒரு முயற்சி செய்ய வேண்டா ; பால் குடிக்க நோய் தீருமாறு போலே நம்முடைய பாபங்கள் தாமே நசித்துப் போம். (5)

767

ஒன்றும்நில் லாகெடும் முற்றவும்தீவினை
உள்ளித் தொழுமின் தொண்டீர்!
அன்றங்கு அமர்வென்று உருப்பிணி
நங்கை அணிநெடுந் தோள்புணர்ந்தான்
என்றும் எப்போதும் என்நெஞ்சம்
துதிப்ப உள்ளேஇருக் கின்றபிரான்
நின்ற அணிதிரு வாறன்விளை
என்னும் நீணக ரமதுவே.

பொ - ரை : உருக்குமிணிப்பிராட்டி காரணமாகச் சிசுபாலன் போருக்கு வந்த அக்காலத்தில் போரிலே அவனை வென்று உருக்குமிணிப் பிராட்டியினது அழகிய நீண்ட தோள்களைச் சேர்ந்தவனும், எல்லாக் காலத்திலும் எல்லா நேரத்திலும் என் நெஞ்சமானது துதிக்க என் மனத்திற்குள்ளே எழுந்தருளியிருக்கின்ற உபகாரகனுமான எம் பெருமான் நின்ற திருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்ற அழகிய திருவாறன் விளை என்னும் பெரிய நகரத்தைத் தொண்டீர் ! நினைத்து வணங்குங்கோள் ; தீவினைகள் ஒன்றும் நில்லாவாய் முழுவதும் அழிந்துவிடும்.

வி - கு : 'நீள் நகரமது தொண்டீர், தொழுமின் ; தீவினை முற்றவும் கெடும்,' என்க.

---

1. 'மலி' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'ஈண்டின' என்று தொடங்கி. ஈண்டின இடத்தில் - குறுகிய இடத்தில்.

2. 'புகழ் பாடுதல் பாவத்தைப் போக்குவதற்குச் சாதகமாகவோ?' என்ன, 'அன்று' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பாபம்' என்று தொடங்கி.

ஈடு: ஆறும் பாட்டு. [1] 'எம்பெருமான் பக்கல் ஆசையுடையீர்! உங்களுடைய எல்லாத்துக்கங்களும் போம்படி திருவாறன் விளையை நெஞ்சாலே நினையுங்கோள்,' என்கிறுர்.

ஒன்றும் நில்லா கெடும் முற்றவும் தீவினை - [2] இவன் தான் போக்கப் பார்க்கும் அன்று அன்றே, புதுப்புடைவை அழுக்குக் கழற்றுமாறு போலே சிறிது கிடக்கச் சிறிது போவது? அங்ஙன் அன்றிக்கே, வரம்பில் ஆற்றலையுடைய இறைவன் போக்கும் அன்று வாசனையோடே போமே அன்றே? [3] 'மேரு மந்தரமாத்ரோபி - மேருவையும் அதன்மேலே மந்தரத்தையும் வைத்தாற்போலே இருக்கிற கனத்த பாவங்கள், உண்மையாக, மருத்துவனைக் கிட்டின கெட்ட வியாதிகள் நசிக்குமாறு போலே, மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணனைக் கிட்டின பாபங்கள் நசிக்கும்,' என்னுநின்றது அன்றே? [4] 'எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கிறேன்' என்றான் அன்றே? [5] 'எல்லாப் பாபங்களும் நாசம் அடைகின்றன' என்னுநின்றதே அன்றே? [6] இது தேசத்துக்கும் உபலக்ஷணம். உள்ளித் தொழுமின் தொண்டீர் - அதனை நினைத்துப் பற்றப் பாருங்கோள், பகவத் விஷயத்தில் ஆசையுடையீர்! அன்று - சிசுபாலன் சுயம்வரத்திலே

---

1. 'தொண்டீர், தீவினை முற்றவும் ஒன்றும் நில்லா கெடும்' என்பனவற்றைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறுர்.

2. 'தீவினை முற்றவும் போகக் கூடுமோ?' என்ன, 'இவன்தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர்.

3. வாசனையோடே போம் என்றதற்குப் பிரமாணமும் காட்டுகிறுர், 'மேருமந்தர மாத்ரோபி' என்று தொடங்கி.

'மேரு மந்தரமாத்ரோபி ராசி: பாபஸ்ய கர்மண:
கேசவம் வைத்யம் ஆஸாத்ய துர்வியாதிரிவ நச்யதி'

என்பது, விஷ்ணு தர்மம், 78.

4. 'ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி'
என்பது, ஸ்ரீகீதை, 18 : 66.

5. 'ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே'
என்பது, சாந் உப. 5 : 24.

6. ''திருவாறன்விளையை உள்ளித் தொழுதால் பாபங்கள் போம்' என்றதற்கு, ஈஸ்வரன் பாபத்தைப் போக்குவான் என்பதற்குரிய பிரமாணங்களை எடுத்துக்காட்டுவான் என்?' என்ன, 'இது' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர்.

முடுகி இருக்கிற அன்று. அங்கு - இவன் விரையாநின்ருன், உடையவன் வந்து கைக்கொள்ளாஞே என்று இருக்கிற அளவிலே, தூணிலே தோற்றிஞற்போலே தோற்றிஞன் ஆயிற்று. அமர் வென்று-அவளுக்காக மார்விலே அம்பு ஏற்று. உருப்பிணி நங்கை- எல்லாம் படவேண்டும்படி ஆத்தும குணங்களாலே நிறைந்தவளாய் இருக்கும்படி. அணி நெடுந்தோள் புணர்ந்தான் - தனக்குத்தானே ஆபரணமாய், இனிமை அளவு இறந்துள்ள தோள்களோடே கலந்தவன். இதஞல், 'விரும்பினவர்கள் விரும்பும் சமயத்திலே வந்து தோன்றுமவன்' என்பதனைத் தெரிவித்தபடி.

என்றும் எப்போதும் என் நெஞ்சம் துதிப்ப உள்ளே இருக்கின்ற பிரான் - எல்லாக் காலத்திலும் எல்லா நிலைகளிலும் என்னுடைய மனமானது துதிக்கும்படி என் நெஞ்சிலே இருக்கிற உபகாரகன். [1] உருக்குமிணிப்பிராட்டியினுடைய கல்யாண குணங்களைகாணும் இவர் நெஞ்சிலே பட்டுக் கிடப்பன. நின்ற அணி திருவாறன்விளை என்னும் நீள் நகரமது - [2] பிரகாசியாநிற்கச்செய்தேயும் கண்களுக்கு இலக்கு ஆகாதபடி இருக்கை அன்றிக்கே, 'இவன் நமக்கு உளன்' என்று அச்சந்தீரும்படி கண்களாலே கண்டு அனுபவிக்கும்படி நிற்கிற அழகிய திருவாறன்விளையாகிற மஹா நகரத்தை. உள்ளித் தொழுமின் தொண்டீர்! - [3] 'தாம் அடிமை செய்ய நினைக்கிறராகில் 'உள்ளித் தொழுமின்' என்கிற பரோபதேசத்துக்குக் கருத்து என்?' என்னில், இவர்க்குச் சுவானுபவந்தான் பரோபதேசத்தை ஒழிந்து இராது; [4] நெஞ்சினை விளித்ததோடு 'தொண்டீர்' என்றதனோடு வாசி இல்லை. (6)

---

1. 'தோள் புணர்ந்தான், உள்ளே இருக்கின்ற' என்றதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'உருக்குமிணிப் பிராட்டியினுடைய' என்று தொடங்கி.

2. 'நின்ற' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிருர், 'பிரகாசியா நிற்கச்செய்தேயும்' என்று தொடங்கி.

3. 'மனோரதிக்கும் இவ்விடத்தில் பரோபதேசம் பொருந்தும்படி யாங்ஙனம்?' என்று சங்கித்துப் பரிகரிக்கிருர், 'தாம் அடிமை செய்ய' என்று தொடங்கி.

4. 'ஆனுல், 'என் மனனே' என்றது போன்று, தம் திருவுள்ளத் துக்கு அருளிச்செய்தாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர், 'நெஞ்சினை' என்று தொடங்கி.

768

நீணக ரமது வேமலர்ச்
சோலைகள் சூழ்திரு வாறன்விளை
நீணக ரத்துறை கின்றபிரான்
நெடுமால் கண்ணன் விண்ணவர்கோன்
வாணபுரம் புக்குமுக் கட்பிரானைத்
தொலையவெம் போர்கள் செய்து
வாணனை ஆயிரம் தோள் துணித்தான்
சரண்அன்றி மற்றென்று இலமே.

**பொ -ரை :** நீண்ட நகரம் அதுவே என்னும்படி மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த திருவாறன்விளை என்னும் பெரிய நகரத்திலே நின்ற திருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்ற உபகாரகனும், நெடுமாலும், விண்ணவர்கோனும், வாணாசுரனுடைய நகரத்திலே புக்கு, சிவபெருமான் தோற்கும்படி கொடிய போர்களைச் செய்து வாணாசுரனுடைய ஆயிரம் தோள்களையும் துணித்தவனுமான கண்ணன் திருவடிகள் அல்லாமல் வேறு ஒரு கதியுடையோம் அல்லோம்.

**வி - கு :** 'தொலையப் போர்கள் செய்து துணித்தானாகிய கண்ணனுடைய சரண்' என்க.

**ஈடு:** ஏழாம் பாட்டு. [1]'திருவாறன்விளையே பிராப்பியம் என்றுநின்றீர்; அவன் அன்றோ பிராப்பியன்?' என்ன, 'அன்று என்ன வல்லேனோ? என் சித்தாந்தம் இருக்கும்படி கேட்கலாகாதோ?' என்கிறார். 'உபாசனத்தின் பலமாய் வருமவையெல்லாம் பிராப்பியத்திலே சேர்ந்தனவாகக் கடவன; அன்றிக்கே, [2]'சாத்தியத்தின்

---

1. ''நீள் நகரம் அதுவே' என்றவதனால் பலித்த பொருள், திருவாறன் விளை இனியது என்னுமதுவே அன்றோ? அதனைத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார். 'என்றுநின்றீர்' என்றது, 'மேல் திருப்பாசுரங்களிலே அருளிச்செய்தீர்' என்றபடி. உம்முடைய சித்தாந்தமானாலும் பொருத்தமாக இருக்க வேண்டாவோ?' என்ன, 'உபாசனத்தின் பலமாய்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். என்றது, பிராப்பியனான சர்வேஸ்வரனை ஒரு தேச விசேஷத்திலே போய் அனுபவிக்க வேண்டுகையாலே அத்தேசமும் பிராப்பியம் என்றபடி.

உபாசன பலமாய் வருமவையாவன: ஆஸ்ரயணத்தின் பலமான அர்ச்சிராதிகதி, திவ்யதேசப் பிராப்தி முதலாயின.

2. மேலதற்கே வேறும் ஒருவகையில் பரிகாரம் அருளிச்செய்கிறார், 'சாத்தியத்தின்' என்று தொடங்கி. என்றது, 'சாத்தியத்திற்கு முதல்

விளர்ச்சிக்கு உடலாய் வருமவையெல்லாம் பலத்துக்கு உடலாகக் கடவன,' என்னுதல். ஆகையாலே, பிராப்பிய பூமி அந்தத் தேசமே; அங்கே கொடு போய்ச் சேர்க்கும் கடகன் அவன்; இது என் சிந்தாந்தம் இருக்கும்படி' என்கிறார்.

நீள் நகரம் அதுவே - [1] கலங்காப் பெருநகரமாய், புக்கார்க்கு 'மீண்டு வருதல் இல்லை' என்கிறபடியே ஒரு நாளும் மீட்சி இல்லாதபடி எப்பொழுதும் அனுபவம் பண்ணும் பிராப்பிய தேசம் அதுவே. மலர்ச்சோலைகள் சூழ் திருவாறன்விளை நீள் நகரத்து உறைகின்ற பிரான் - [2] 'அவனுக்குக்கூடப் பிராப்பிய பூமி' என்று தோற்றும்படி இருக்குமாயிற்று. நித்திய வசந்தமான பொழிலாலே சூழப்பட்ட திருவாறன்விளையாகிற மஹா நகரத்திலே வந்து வசிக்கின்ற உபகாரகன். நெடுமால் கண்ணன் விண்ணவர்கோன் வாணபுரம் புக்கு முக்கட்பிரானைத் தொலைய வெம்போர்கள் செய்து - [3] அயர்வறும் அமரர்கள் அதிபதியாய் இருந்து வைத்து, சம்சாரத்தில் தன்பக்கல் ருசியுடையரானவர்கள் பக்கல் வியாமோகத்தாலே கிருஷ்ணனாய் வந்து அவதரித்து, ஒரு கடலினின்றும் ஒரு கடலிலே எடுத்துவிட்டு, [4] ஈஸ்வரன் என்ற எண்ணமுடையவனாய்

---

எல்லை பகவத் கைங்கரியமாய், அந்தப் பகவத் கைங்கரியத்திற்குக் காரணமாகையாலே, அதற்குச் சரமாவதி தேசமாக இருக்கிறது,' என்றபடி. சாதனத்தாலே சாதித்துக்கொள்வது எதுவோ, அது சாத்தியம். 'கடகன்' என்றது, 'உபாயம்' என்றபடி.

1. திருவாறன்விளையே பிராப்பியம் என்னுமதற்கு வாசகம், 'நீள் நகரம்' என்கிற இது என்னும் இடம் தோற்ற அருளிச்செய்கிறார், 'கலங்காப் பெருநகரம்' என்று தொடங்கி. கலங்காப் பெருநகரம் - பரமபதம். 'அதுவே' என்றது, திருவாறன்விளையை.

2. 'உறைகின்ற' என்றதனைக் கடாட்சித்து பாவம் அருளிச்செய்கிறார், 'அவனுக்கும்' என்று தொடங்கி.

3. 'விண்ணவர்கோன் நெடுமால் கண்ணன்' என்று கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார், 'அயர்வறும் அமரர்கள்' என்று தொடங்கி. 'ஒரு கடலினின்றும் ஒரு கடலிலே எடுத்துவிட்டு' என்றது, துவாரகை மேலைக் கடலிலேயும், சோணிதபுரம் கீழைக்கடற்கரையிலேயும் உள்ளன ஆகையாலே அதனைத் திருவுள்ளம் பற்றி என்க.

4. 'முக்கட்பிரானைத் தொலைய வெம்போர்கள் செய்து' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'ஈஸ்வரன்' என்று தொடங்கி. இவன் வாணாசுரன்.

'இவன் காரியத்துக்கு எல்லாம் நானே கடவன்' என்று இருக்கிறவனுடைய செருக்கு எல்லாம் தொலைந்து, 'நான் இனி ஒரு தேவதையாய் ஒருவன் காரியத்துக்குச் செருக்குற்று இரேன்' என்னும்படி கொடிய போர்களைச் செய்து. [1]'கிருஷ்ண கிருஷ்ண மஹா பாஹோ - [2]'யானைக்கும் தனக்குத் தக்க வாதம்' என்னுமாறு போலே, தேவதைகளுக்கு நம்மைக்காட்டிலும் அறிவு கேடு விஞ்சியிருக்கும். [3]ஒரு வில்லை முரித்த போதாக 'விஷ்ணுவை அதிகனாக எண்ணினர்' என்கிறபடியே இருப்பர்களாயிற்று, தேவ சாதியாக. வாணனை ஆயிரம் தோள் துணித்தான் - [4]'உஷை தந்தை இல்லாதவள் ஆகவொண்ணாது,' என்று பார்த்து, உயிர் இருக்கத் தோளைக் கழித்துவிட்டானாயிற்று. சரண் - அவன் கடகன்; திருவாறன்விளையே பிராப்பியம். [5]பிராப்பியனானவன் வந்து எழுந்தருளியிருக்கும் தேசம் ஆகையாலே அவனுடைய சம்பந்தத்தாலே அத்தேசமும் பிராப்பியம் என்கைக்குத் தட்டு இல்லை. [6]ஓர் அறப்பெரியவன் உபாயமாய்ப் பலத்தைக் கொடுக்

---

1. 'அவன் அப்படித் தோற்றானோ?' என்ன, தோற்றதனால் 'அன்றோ துதி செய்தான்?' என்கிறார் 'கிருஷ்ண' என்று தொடங்கி.

'க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்
பரேஶம் பரமாத்மாநம் அநாதி நிதநம் பரம்'

என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 5. 33 : 41.

2. 'ஈஶ்வராத் ஜ்ஞாநம் அந்விச்சேத்-சிவபெருமானிடத்தினின்றும் ஞானத்தை விரும்பக்கடவன்' என்னும்படியான ஞானவானை சிவனுக்கும் அஜ்ஞாநம் உண்டோ? இந்தச் சுலோகத்தில் 'ஜாநே-அறிவேன்' என்பான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'யானைக்கும்' என்று தொடங்கி.

3. மேற்கூறியதனை விளக்குகிறார், 'ஒரு வில்லை' என்று தொடங்கி.

'அதிகம் மேநிரே விஷ்ணும்'

என்பது, ஸ்ரீராமா. பால. 75 : 19.

4. தலையை அறுக்காமல் தோள்களைக் கழித்ததற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'உஷை' என்று தொடங்கி.

5. 'உபாசன பலமாய் வருமது ஆகையாலே பரமபதம் அன்றோ பிராப்பியம்? திருவாறன்விளை பிராப்பியமாகக் கூடுமோ?' என்ன, பிராப்பியனானவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. 'உபாயமும் திருவாறன்விளை ஆனாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஓர் அறப்பெரியவன்' என்று தொடங்கி,

கிறவனாக வேணுமே : ஆகையாலே, அவன் உபாயம் ; அத்தேசம் பிராப்பியம். அன்றி மற்று ஒன்று இலமே - இங்ஙன் அல்லது உபேய உபாயங்கள் மாறாடக்கடவோம் அல்லோம். (7)

769

அன்றிமற்று ஒன்றுஇலம் நின்சரணே
என்றுஅக லிரும்பொய்கை யின்வாய்
நின்றுதன் நீள்கழல் ஏத்திய
ஆனையின் நெஞ்சிடர் தீர்த்தபிரான்
சென்றுஅங்கு இனிதுறை கின்ற
செழும்பொழில் சூழ்திரு வாறன்விளை
ஒன்றி வலஞ்செய ஒன்றுமோ?
தீவினை உள்ளத்தின் சார்வல்லவே.

பொ - ரை : 'உன்னுடைய திருவடிகளை அல்லாமல் வேறு ஒரு உபாயத்தையுடையோம் அல்லோம்' என்று, அகன்ற பெரிய பொய்கையிலே தன்னுடைய நீண்ட திருவடிகளைத் துதித்த யானையினது மனத்தின்கண் இருந்த துன்பத்தை நீக்கிய உபகாரகனானவன் அங்குச் சென்று எழுந்தருளியிருக்கின்ற வளப்பம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்தைப் பொருந்தி வலம் வருதல் கூடுமோ? கூடுமாயின், தீவினைகள் உள்ளத்தின் பொருத்தத்தையுடையன அல்லவாம்.

வி - கு : 'சென்று' என்றது, 'அடியார்களுக்குத் திருவருள் செய்வதற்காகச் சென்று' என்றபடி.

ஈடு : எட்டாம் பாட்டு. [1] 'திருவாறன்விளையிலே புக நம்முடைய எல்லாத் துக்கங்களும் போம்,' என்கிறார்.

நின் சரணே அன்றி மற்று ஒன்று இலம் என்று - உன் திருவடிகளை அல்லது வேறு ஒரு பற்று உடையேன் அல்லேன் என்று. என்றது, [2] புறம்பே சிலர் இரட்சகராக மயங்கி இருக்கு

---

1. *திருவாறன்விளை ஒன்றி வலஞ்செய்ய, தீவினை உள்ளத்தின் சார்வு அல்லவே?' என்ற பதங்களைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.*

2. *'மற்று ஒன்று இலம்' என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார், 'புறம்பே' என்று தொடங்கி.*

மதுவும் தவிர்ந்து, [1] ‘யானை கரையில் இழுக்கின்றது; முதலை நீரில் இழுக்கின்றது’ என்கையாலே, தான் தன்னை இரட்சகமாக நினைத்திருக்குமதுவும் தவிர்ந்து. [2] ‘மனத்தால் எண்ணிற்று’ என்கையாலே, ‘கூப்பிடுங்காரியகரமாம் எல்லையுங்கழிந்தது’ என்றபடி. [3] அவனைப் பார்த்தால் தானும் அல்லாதாரைப் போன்று புறம்பாய்க் கடக்க நிற்கும்படியாய் அன்றோ சம்பந்தம் இருக்கும்படி? [4] ஆகைச் சுட்டி அன்றோ பிரணவத்தில் நடுப்பதம் கிடக்கச்செய்தே அன்றோ திருமந்திரத்தில் நடுப்பதம் ஜீவிக்கிறதும்?

அகல் இரும்பொய்கையின்வாய்-அகலத்தையும் ஆழத்தையும் சொல்ல வேண்டுமளவிலே, அகலத்தைச் சொல்லி ‘இருமை’யைச் சொல்லுகையாலே அது ஆழத்தைச் சொல்லிற்றாகக் கடவது. ‘இப்போது அகலமும் ஆழமும் சொல்லுகிறதற்குக் கருத்து என்?’ என்னில், அவன் உபாயமாய்க் காத்தல் இல்லையாகில் முடிதல்

---

1. *‘கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே’* என்பது, **விஷ்ணு தர்மம், 68.**

2. *‘பரமாபதம் ஆபந்ந: மநஸாசிந்தயத் ஹரிம்*
*ஸது நாகவர: ஸ்ரீமாந் நாராயண பாராயண:’*
என்பது, **விஷ்ணு தர்மம், 68.**

3. *‘‘மற்று’ என்றால், பிறரைக் காட்டுமேயன்றித் தன்னையும் காட்டுமோ?’ என்ன அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘அவனைப் பார்த்தால்’ என்று தொடங்கி.*

4. *‘நன்று; தன்னுடைய இரட்சணத்தில் தனக்குச் சம்பந்தம் இல்லை என்னும் இடம் எங்கே சொல்லிற்று?’ என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், ‘ஆகைச்சுட்டி’ என்று தொடங்கி. ‘ஆகைச்சுட்டி’ என்றது, ‘தன்னுடைய இரட்சணத்தில் தனக்குச் சம்பந்தம் இல்லாமையாலே அன்றோ?’ என்றபடி. பிரணவத்தில் நடுப்பதம், உகாரம். திருமந்திரத்தில் நடுப்பதம் ‘நம:’ என்பது. ‘இத்தால் (உகாரத்தால்) தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று என்கிறது.’ 65. ‘நமஸ்ஸு, ந என்றும், ம: என்றும் இரண்டு பதம்.’ ‘ம: என்கிற இத்தால் தனக்கு உரியன் என்கிறது. ‘ந’ என்று அத்தைத் தவிர்க்கிறது.’ ‘ஆக, நம: என்கிற இத்தால், தனக்குரியன் அன்று என்கிறது.’ 78-80. ஈஸ்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்துமா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்னும் முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே அசித்துப்போலே தனக்கேயாக எனைக் கொள்ளவேணும் என்கிறது நமஸ்ஸால்’ 91. என்பன போன்ற சூத்திரங்களை இங்கு அநுசந்திக்கத் தகும்.* முமுக்ஷுப்படி, **திருமந்திரப் பிரகரணம்.**

செய்யுமித்தனை போக்கி, தான் வேறு ஒரு கரை காண மாட்டான் ஆகாதே. அகல் இரும்பொய்கையின்வாய் நின்று - [1] அச்சமுள்ள இடத்தே அச்சமில்லாத இடத்திற்போலே நிற்கும்படியாயிற்றுச் செயல் மாட்சி. [2] முதலை நீரிலே இழுக்க, யானை கரையிலே இழுக்க, இரண்டனுடைய செயலுமாய்ச் செல்லுகை தவிர்ந்து ஒன்றனுடைய செயலேயாய் நிற்கை. தன் நீள் கழல் - [3] எதிர்த்தலையின் செயல் மாட்சியே எல்லையாக வளரும் திருவடிகள். அன்றிக்கே, [4] 'முதலை வாயிலே அகப்பட்டு நிற்கச் செய்தேயும், அவனை நினைத்தால் அச்சங் கெட்டு இருக்கலாம்படி அன்றோ தான் இருப்பது?' என்னுதல். [5] 'இறைவனுடைய ஆனந்தத்தை அறிந்தவன் அஞ்சுகிறான் இலன்' என்னக் கடவது அன்றோ? [6] 'குதஸ்சந' - பிராமாதிகத்துக்கு அன்றியே புத்தி பூர்வகமாகப் பண்ணினதற்கும் அஞ்சவேண்டாத படியாயிருக்கும். 'செய்தாரேல் நன்று செய்தார்' என்றால், இவன் எதற்கு அஞ்ச வேண்டும்? [7] புத்தி பூர்வகமாகச் செய்வனவற்றிற்கு அஞ்சவேண்டாவிட்டால் பிராமாதிகத்துக்கு அஞ்சவேண்டா என்னு

---

1. 'நின்று' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'அச்சமுள்ள இடத்தே' என்று தொடங்கி. 'செயல் மாட்சி' என்றது, செயல் அற்று நின்ற நிலையை.

2. 'செயல் மாட்சியை' விளக்குகிறார், 'முதலை' என்று தொடங்கி. ஒன்றனுடைய - முதலையினுடைய.

3. 'நீள்கழல்' என்பதிலே 'நீள்' என்ற சொல்லின் பொருளை விளக்குகிறார், 'எதிர்த்தலையின்' என்று தொடங்கி. 'எதிர்த்தலை' என்றது, இத்தலையை.

4. 'நீள்' என்பதற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'முதலை வாயிலே' என்று தொடங்கி.

5. 'அப்படி அச்சம் கெட்டு இருக்கலாமோ?' என்ன, 'கெட்டு இருக்கலாம்' என்பதற்குப் பிரமாணம் அருளிச்செய்கிறார், 'இறைவனுடைய' என்று தொடங்கி.

'ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி,' என்பது, தைத். உப. ஆனந்.

6. 'குதஸ்சந' என்பது, தைத். உப. ஆனந்.

பிராமாதிகம் - தன்னை அறியாமலே வருவது. புத்திபூர்வகமாகப் பண்ணினதற்கும் அஞ்சவேண்டாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார், 'செய்தாரேல்' என்று தொடங்கி. இது, பெரியாழ்வார் திருமொழி, 4. 9 : 2.

7. 'ஆனால், பிரமாதிகத்துக்கு எப்படி?' என்ன, 'புத்தி பூர்வகமாக' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

மிடம் சொல்லவேண்டுமோ? [1] பிராமாதிகத்துக்கு அஞ் சவேண்டாமை பத்தி யோகத்துக்கும் உண்டு அன்றோ ?

ஏத்திய - [2] முட் பாய்ந்தால் 'அம்மே!' என்பாரைப்போலே, வாசனையாலே சொன்ன இத்தனை. ஆனையின் நெஞ்சு இடர் தீர்த்த பிரான் - [3] துதிக்கை முழுத்தின இடரே அன்றோ? நீண்ட கை குறுகும் அளவுமன்றோ பார்த்து நின்றது ? இவன் கை விட்டால் கைக்கொள்ளாநின்றானித்தனை அன்றோ? அன்றிக்கே, [4] 'இந்தப் பூவின் செவ்வி மாறுவதற்கு முன்னே திருவடிகளிலே சார்த்தப் பெறுகின்றிலோம்!' என்னும் இடரைப் போக்கினன் ஆயிற்று. அன்றிக்கே, 'நம் காரணமாகச் சர்வேஸ்வரனுக்கு ஒரு தாழ்வு வருகிறதோ?' என்னும் இடராதல். என்றது, 'இவன் இப்படி வருந்த அவன் காத்தபடி அழகியதாய் இருந்தது! இவனையோ நாம் இப்படிக் காப்பவன் என்று நினைத்திருந்தது?' என்று உலகத்தார் இவனை இப்படி நினைக்கின் செய்வது என்?' என்று துன்புற்ற துன்பத்தைத் தெரிவித்தபடி. [5] 'இரண்டும் போய் இரண்டின் வீடு' என்கிறபடியே இரண்டற்கும் இடர் வாராதபடி ஒன்றுக்கே இடர் வரும்படி கரையிலே கொண்டு ஏறி, பின்னர் முதலை வாயினைக்

---

1. *'பிராமாதிகத்துக்கு ஒழிய, புத்தி பூர்வகத்துக்கும் அஞ்ச வேண்டா என்கிறது என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'பிராமாதிகத்துக்கு' என்று தொடங்கி. என்றது, பக்தி நிஷ்டரினின்றும் வேறுபடுத்தியபடி.*

2. *'நினைக்கவும் சத்தி இல்லாத யானை ஏத்துதல் எப்படி?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'முட்பாய்ந்தால்' என்று தொடங்கி.*

3. *'இந்தச் சமயத்தில் யானையின் இடரைப் போக்குகிறவன் தொடக்கத்திலேயே போக்க ஒண்ணாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'துதிக்கை' என்று தொடங்கி.*

4. *யானையின் நெஞ்சு இடர் இன்னது என்றும், அதனை நீக்கிய பிரகாரமும் அருளிச்செய்கிறார், 'இந்தப் பூவின்' என்று தொடங்கி. ஆக, 'நெஞ்சு இடர்' என்பதற்கு மூன்று வகையாகப்பொருள் அருளிச் செய்தபடி.*

5. *நெஞ்சு இடர் தீர்த்ததற்குப் பிரமாணம் அருளிச்செய்கிறார், 'இரண்டும் போய்' என்று தொடங்கி. என்றது, 'முதலையும் யானையு மாகிற இரண்டும் ஒன்றை ஒன்று விட்டுப் போய் இரண்டற்கும் சாப மோக்ஷமும் சாக்ஷாத் மோக்ஷமும் உண்டாம்படி திருவுள்ளம் பற்றி யருளினாய்' என்றபடி, இது, நான்முகன் திருவந். 12.*

கிழித்து யானையின் இடரை நீக்கினானாயிற்று. இங்கே, [1]'இராச புத்திரனைச் சிறையிலே இட்டு வைத்தால், கைக்கூட்டனுக்கும் பாலுஞ்சோறும் இடுவாரைப்போலேகாண்,' என்று இதற்குப் **பட்டர்.** அருளிச்செய்வர். [2]இரண்டும் மோட்சத்தைப் பெற்றதே! முதலை சாப மோட்சமும், ஸ்ரீகஜேந்திராழ்வான் சாக்ஷாத் மோட்சமும் பெற்றமையைத் தெரிவித்தபடி.

பிரான் - யானையின் இடரைப் போக்கின இதுவும், அதற்கு அன்றித் தமக்கு உதவி செய்தானாக நினைத்திருக்கிறார்காணும் இவர். [3]**இவ்வெண்ணத்தை உடையவனாகை அன்றோ ஒருவன் வைஷ்ணவன் ஆகையாவது?** என்றது, 'அநுகூலரிலே ஒருவனுக்கு ஒரு நன்மை உண்டானால் அது தன்னதாக நினைத்திருக்கையும், கேடு வந்தால் அதனைத் தனக்கு வந்ததாக நினைத்திருக்கையுமாகிற இவ்விரண்டும் உண்டானால் அன்றோ வைஷ்ணவத்துவம் உண்டாயிற்றாவது?' என்றபடி. சென்று அங்கு இனிது உறைகின்ற செழும் பொழில் சூழ் திருவாறன்விளை ஒன்றி வலஞ்செய ஒன்றுமோ - [4]இவன் உதவாத அன்று அவ்யானைக்கு உள்ள இடரைப் போன்று போருமாயிற்று. அத்தேசத்தை அடையாத போது சர்வேஶ்வரனுக்கு உண்டான இடரும். அவன் வந்து தன் ஆதரம் எல்லாம் தோன்ற வசிக்கின்ற அழகிய பொழிலாலே சூழப்பட்ட திருவாறன்விளையைக் கிட்டி வலஞ்செய்தல் முதலானவற்றைச் செய்யக் கிட்டுமோ? தீவினை உள்ளத்தின் சார்வு அல்லவே - [5]அப்போது தீவினை

---

1. 'இரண்டற்கும் மோட்சம் வருவான் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இராசபுத்திரனை' என்று தொடங்கி. கைக்கூட்டன் - காவற்காரன். இதற்கு - 'இரண்டின் வீடு' என்றதற்கு.

2. 'முதலையும் மோட்சத்தைப் பெற்றதோ?' என்ன, 'ஆம்' என்று அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'இரண்டு' என்று தொடங்கி. பெற்ற விதத்தை அருளிச்செய்கிறார், 'முதலை' என்று தொடங்கி. சாபமோட்சம்- சாபம் நீங்குதல்.

3. இதனால் சொரூபத்தின் ஓர் அர்த்தத்தை அருளிச்செய்கிறார், 'இவ்வெண்ணத்தை' என்று தொடங்கி. இதனை விவரணம் செய்கிறார், 'அநுகூலரிலே' என்று தொடங்கி.

4. 'சென்று' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இவன் உதவாத' என்று தொடங்கி.

5. அப்போது - கிட்டின போது.

உள்ளத்தின் சார்வு ஆகாது. [1] 'ஒளியும் இருளும் சேர்ந்து இருத்தல் உண்டோ?' என்றது, 'அவன் வந்து நித்தியவாசம் செய்யத் தீவினை ஒதுங்க இடம் உண்டோ?' என்றபடி. (8)

770

'தீவினை உள்ளத்தின் சார்வல்ல
வாகித் தெளிவிசும்பு ஏறலுற்றால்
நாவினுள் ளும்உள்ளத் துள்ளும்
அமைந்த தொழிலினுள் ளும்நவின்று
யாவரும் வந்து வணங்கும்
பொழில்திரு வாறன் விளையதனை
மேவி வலஞ்செய்து கைதொழக்
கூடுங்கொல்?' என்னுமென் சிந்தனையே.

**பொ - ரை:** 'தீய வினைகள் ஆத்துமாவைத் தீண்டாதனவாகி நீங்க, பரமபதத்தை அடையலுற்றாலும், நாவாலும் மனத்தாலும் பொருந்திய தொழிலாலும் பயின்று யாவரும் வந்து வணங்குகின்ற சோலைகள் சூழ்ந்த திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்தைப் பொருந்தி வலம் வந்து கையால் தொழுவதற்குக் கிட்டுமோ?' என்று நினையாநின்றது என் மனமானது.

**வி - கு:** 'என் சிந்தனை, 'தீவினை உள்ளத்தின் சார்வு அல்லவாகத் தெளிவிசும்பு ஏறல் உற்றால், திருவாறன்விளையதனை மேவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொல்?' என்னும்,' என்க. தெளிவிசும்பு - பரமபதம். 'நாவினுள்ளும் உள்ளத்துள்ளும் அமைந்த தொழிலினுள்ளும்' என்றது, மனம் வாக்குக் காயங்களைக் குறித்தபடி.

**ஈடு:** ஒன்பதாம் பாட்டு. [2] 'எனக்கு ஸ்ரீ வைகுண்டமும் திருவாறன்விளையும் இரண்டும் கிடைப்பதானால், ஸ்ரீவைகுண்டத்தை விட்டுத் திருவாறன்விளையே அமையும் என்னும் என் நெஞ்சம்' என்கிறார்.

---

1. 'வலஞ்செய்தல் முதலியவற்றைச் செய்தால் பாபம் தீண்டாமைக்குக் காரணம் யாது?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'ஒளியும் இருளும்' என்று தொடங்கி.

2. 'தெளிவிசும்பு ஏறல் உற்றால், திருவாறன்விளையதனை மேவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொல்?' என்னும் என் சிந்தனை,' என்பதனைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

[1] 'இங்கு இருந்த நாள் உண்டான சங்கோசத்தாலே 'திருவாறன் விளையே பிராப்பியம்' என்று சொல்லுகிறீர் : சங்கோசம் கழிந்த வாறே பரமபதத்திலே தோள் மாறுகிறீர்,' என்ன, 'அது வேண்டா; சங்கோசம் கழிந்தால் நான் இருக்கும்படியைக் கேட்கல் ஆகாதோ?' என்கிறார் : தீவினை உள்ளத்தின் சார்வு அல்லவாகி - பண்டு செய்த அவித்தியை கர்மம் வாசனை ருசி என்னும் இவைகள், ஆத்துமாவைத் தீண்டாதனவாய்க் கொண்டு. தெளிவிசும்பு ஏறல் உற்றால்-திருநாடு ஏறப்போக உத்தேசித்தால். யாவரும் வந்து உள்ளத்தினுள்ளும் நாவினுள்ளும் அமைந்த தொழிலினுள்ளும் [2] நவின்று வணங்கு பொழில் சூழ் திருவாறன்விளையதனை - எத்தனையேனும் உயர்ந்த ஞானத்தையுடையரான திருநாட்டிலுள்ளாரும் வந்து மனம் வாக்குக் காயம் என்னும் இவற்றாலே பயின்று அடையும்படி எல்லையற்ற இனிய பொருளான திருவாறன்விளையை. மேவி வலஞ்செய்து - அத்தலத்தை நான் சென்று அடைந்து அநுகூலமான கைங்கரியத்தைச் செய்து. கைதொழக் கூடுங்கொல் என்னும் என் சிந்தனை - [3] என் நெஞ்சு எனக்கு அடங்கியது அன்று; [4] 'வேறு ஒன்றிலும் என் மனம் செல்லுவது இல்லை,' என்கிறபடியே. (9)

771

*சிந்தைமற்று ஒன்றின் திறத்ததுஅல்*
*லாத்தன்மை தேவபி ரான்அறியும்*
*சிந்தையி னால்செய்வ தானறி*
*யாதன மாயங்கள் ஒன்றும்இல்லை*
*சிந்தையி னால்சொல்லி னால்செய்கை*
*யால்நிலத் தேவர் குழுவணங்கும்*
*சிந்தை மகிழ்திரு வாறன்*
*விளையுறை தீர்த்தனுக்கு அற்றபின்னே.*

---

1. 'தெளிவிசும்பு ஏறலுற்றால்' என்ன அமைந்திருக்க, 'தீவினை உள்ளத்தின் சார்வு அல்லவாகி' என்று விசேடித்ததற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'இங்கு இருந்த நாள்' என்று தொடங்கி. சங்கோசம் - தீய வினைகளால் கட்டுப்பட்டு ஞானம் குறைவுபட்டிருத்தல்.

2. நவின்று - கிட்டி.

3. 'என் சிந்தனை' என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'என் நெஞ்சு' என்று தொடங்கி.

4. இதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'வேறு ஒன்றிலும்' என்று தொடங்கி. இப்பொருளையுடைய சுலோகத்தை மேலே காண்க.

பொ - ரை: 'பூதேவர்களான பாகவதர்களாலே சிந்தையாலும் சொல்லாலும் செயலாலும் வணங்கப்படுகின்ற, சிந்தையை மகிழச் செய்கின்ற திருவாறன்விளை என்னும் திவ்விய தேசத்திலே எழுந்தருளியிருக்கின்ற பரிசுத்தனை சர்வேஸ்வரனுக்கே அடிமை என்று அறுதியிட்ட பின்பு, என் மனமானது வேறு ஒன்றனை உத்தேசியமாக நினைத்திராத தன்மையைச் சர்வேஸ்வரன் அறிவான்; சிந்தையினால் நினைக்கப்படுவனவான வஞ்சனைகள் அவன் அறியாதன ஒன்றும் இல்லை ஆதலால்,' என்றவாறு.

வி - கு: 'நிலத்தேவர் குழு, சிந்தையினால் சொல்லினால் செய்கையால் வணங்கும் திருவாறன்விளை' என்க. இதனால், மூன்று கரணங்களாலும் வணங்குதலைக் குறித்தபடி. குழு - கூட்டம். 'திருவாறன்விளை உறை தீர்த்தனுக்கு அற்ற பின் சிந்தை மற்று ஒன்றின் திறத்தது அல்லாமை தேவபிரான் அறியும்' என்க 'சிந்தையினால் செய்வ மாயங்கள் தான் அறியாதன ஒன்றும் இல்லை,' என்க. நினைத்தலும் செய்கையோடு ஒக்குமாதலின், 'செய்வ' என்கிறார்.

ஈடு: பத்தாம் பாட்டு. [1]'இதுதான் ஒரு வார்த்தை மாத்திரமேயாய் உம்முடைய நெஞ்சு பரமபதத்தை விரும்பினாலோ?' என்ன, 'அதனை, என் நினைவிற்கு வாய்த்தலையிலே இருக்கிற சர்வேஸ்வரனைக் கேட்டுக்கொள்வது' என்று இங்ஙனே அருளிச்செய்வர் சீயர். அன்றிக்கே, 'நீர் திருவாறன்விளையே பிராப்பியம் என்று இருக்கிறீர்; ஈஸ்வரன் சுவதந்திரன் அல்லனோ? அவன் பரமபதத்தைத் தரிலோ?' என்ன, 'அவன் முற்றறிவினன் அல்லனோ? அறியானோ?' என்கிறார் என்று பிள்ளான் பணிப்பர்; [2]புருஷார்த்தத்தைக் கொடுப்பவன் அல்லனோ? புருஷன் விரும்பியதனையன்றோ கொடுப்பது?

சிந்தை மற்று ஒன்றின் திறத்தது அல்லாத் தன்மை தேவபிரான் அறியும் - நெஞ்சானது பரமபதம் என்ற பேச்சுதன்னையும் நினையாதது சர்வேஸ்வரன் அறியும். தன்மை - சுபாவம். பரமபதம் என்ற பெயர் சொல்லுதலுங்கூடத் தமக்கு விருப்பமின்மையின், 'மற்று

1. முன் இரண்டு அடிகளைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'அறியும்' என்கையாலே 'கேட்டுக்கொள்வது' என்கிறார். வாய்த்தலை-மூலம். 'இவ்வர்த்தத்திற்குச் சாக்ஷியாக அவனைக் கேட்டுக் கொள்ளுங்கோள்,' என்பது நஞ்சீயர் திருவுள்ளம்.

2. 'அறிந்தாலோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'புருஷார்த்தத்தை' என்று தொடங்கி.

ஒன்று' என்கிறார். [1] 'உம்மைக் கேட்கச் சர்வேச்வரனைச் சான்றாகச் சொல்லுவதற்குக் கருத்து என்?' என்னில், சிந்தையினால் செய்வ தான் அறியாதன மாயங்கள் ஒன்றும் இல்லை - [2] அவன் நினைத்தால் இவன் பின்னர் நினைக்க வேண்டியிருக்க, அவன் அறியாதது உண்டோ? உள்ளுவார் உள்ளத்தெல்லாம் உடனிருந்து அறியுமவன் அன்றோ? [3] அவன் நினைப்பிட்டால் அன்றோ இவனுக்கு நினைக்க லாவது? [4] நெஞ்சால் செய்யப்படுவனவற்றில் அவன் அறியாத வஞ்சனங்கள் ஒன்றும் இல்லை.

சிந்தையினால் செய்கையால் நிலத்தேவர் குழு வணங்கும் - [5] நித்தியசூரிகளைப் போன்று முமுக்ஷுக்களும் வந்து அடையும் படியான தேசமாயிற்று. மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றாலும் பூதேவரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரண்டு வந்து அடையும்படியான தேசமாயிற்று. சிந்தை மகிழ் திருவாறன்விளை உறை-[6] திருவாறன் விளையிலே வந்து வசிக்கிற சர்வேஸ்வரனைக் கேட்டுக்கொள்வது.

---

1. மேலே அருளிச்செய்த அவதாரிகை இரண்டனுள் முதல் அவதாரிகையைத் திருவுள்ளத்திலே கொண்டு அருளிச்செய்கிறார், 'உம்மைக் கேட்க' என்று தொடங்கி.

2. 'அவன் அறியாதே இவன் நினைக்க ஒண்ணாதோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'அவன் நினைத்தால்' என்று தொடங்கி. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'உள்ளுவார்' என்று தொடங்கி.

'உள்ளத்தே உறையும் மாலை உள்ளுவான் உணர்வொன் றில்லாக்
கள்ளத்தேன் நானும் தொண்டாய்த் தொண்டுக்கே கோலம் பூண்டு
உள்ளுவார் உள்ளிற் றெல்லாம் உடனிருந் தறிதி என்று
வெள்கிப்போய் என்னுள் ளேநான் விலவறச் சிரித்திட் டேனே.'

என்பது, திருமாலை, 34.

'கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியே னாகி நின்று தேடினேன் நாடிக் கொண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும் விலவறச் சிரித்திட் டேனே.'

என்னும் அப்பர் தேவாரமும் இக்கருத்தே பற்றி வந்தது.

3. 'அவன் நினைத்த பின்புதான் இவன் நினைக்க வேண்டுமோ?' என்ன, 'அவன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. பதப்பொருள் அருளிச்செய்கிறார், 'நெஞ்சால்' என்று தொடங்கி.

5. மேல் திருப்பாசுரத்தில் நித்தியசூரிகள் ஆச்ரயித்தபடி சொல்லி, இங்கு முமுக்ஷுக்கள் ஆச்ரயிக்கிறபடியைச் சொன்னதற்கு பாவம் அருளிச் செய்கிறார், 'நித்தியசூரிகளைப் போன்று' என்று தொடங்கி.

6. 'பரமபதத்தை நினையாதிருக்கிற இவர், 'தேவபிரான்' என்று பரமபத நிலயனைச் சொல்லுவான் என்?' என்கிற சங்கையிலே, 'தேவ பிரான்' என்றதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், 'திருவாறன் விளையிலே' என்று தொடங்கி.

[1] யாரேனுமாகப் புக்காரை எல்லை இல்லாத ஆனந்தத்தையுடையவர்களாகச் செய்யும் தேசம் ஆதலின், 'சிந்தை மகிழ் திருவாறன் விளை' என்கிறார். இதனால், 'பிராப்பிய பூமி' என்று தோற்றும்படி இருக்கும் என்பதனைத் தெரிவித்தபடி. 'உமக்கு இத்தெளிவுதான் என்று தொடங்கி வந்தது ?' என்ன, தீர்த்தனுக்கு அற்றபின்-அவன் தன்னுடைய இனிமையின் மிகுதியாலே எனக்குப் புறம்பு உண்டான பற்றைத் தவிர்த்துத் தனக்கே அநந்யார்ஹனும்படி செய்துகொண்ட அன்று தொடங்கி; [2] உஜ்ஜீவிக்கப் பண்ணின அன்று தொடங்கி; [3] நடுவே உஜ்ஜீவியாதே கிடந்து போந்ததே பல காலம். (10)

772

*தீர்த்தனுக்கு அற்றபின் மற்றுஓர்*
*சரணில்லை என்றுஎண்ணித் தீர்த்தனுக்கே*
*தீர்த்த மனத்தன னாகிச்*
*செழுங்குரு கூர்ச்சட கோபன்சொன்ன*
*தீர்த்தங்கள் ஆயிரத்துள் இவைபத்தும்*
*வல்லார்களைத் தேவர் வைகல்*
*தீர்த்தங் களேஎன்று பூசித்து*
*நல்கி யுரைப்பர்தம் தேவியர்க்கே.*

பொ - ரை : 'தூயோனான சர்வேஸ்வரனுக்கே அடிமை,' என்று அறுதியிட்ட பின்பு வேறு ஓர் உபாயம் இல்லை என்று நினைத்து, அந்தச் சர்வேஸ்வரனுக்கே அறுதியிட்ட மனத்தையுடையவராகி, செழுமை பொருந்திய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபராலே சொல்லப்பட்ட ஆயிரம் திருப்பாசுரங்களுள் இப்பத்துத் திருப்பாசுரங்களையும்

---

1. இன்னார் சிந்தை என்னுமையாலே அருளிச்செய்கிறார், யாரேனுமாக' என்று தொடங்கி. இதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'பிராப்பிய பூமி' என்று தொடங்கி.

2. 'உஜ்ஜீவிக்கப் பண்ணின அன்று தொடங்கி' என்றது, பிரணவத்தில் நடுவெழுத்தின் பொருளை எனக்குத் தெளிவித்த அன்று தொடங்கி என்றபடி.

3. இதன் மறுதலையால் போதருகின்ற பொருளை அருளிச்செய்கிறார் 'நடுவே' என்று தொடங்கி. 'நடுவே' என்றது, விசேஷ கடாட்சத்திற்கு முன்புள்ள காலத்தை.

றற்று வல்லவர்களைத் தேவர்கள் எப்பொழுதும் பூசித்துத் தங்களுடைய தேவிமார்கட்கு 'இவர்கள் பரிசுத்தர்கள்' என்று விரும்பிச் சொல்லா நிற்பர்கள்' என்றவாறு.

**வி — கு:** 'தேவர் தம் தேவியர்க்கு இவை பத்தும் வல்லார்களைப் பூசித்து நல்கித் தீர்த்தங்களே என்று உரைப்பர்,' என்க.

ஈடு: முடிவில், [1]'இத்திருவாய்மொழி கற்றவர்கள் அயர்வறும் அமரர்களுக்குச் சிலாகிக்கத் தக்கவர்கள்,' என்கிறார்.

தீர்த்தன் - இன்னார்க்குத் தீர்த்தன் என்னாமையாலே தன்னினின்றும் வேறுபட்டவர்க்கு எல்லாம் தீர்த்தன் ஆயிற்று. [2]தீர்த்தமாவது, தான் பரிசுத்தமுமாய், தன்னைத் தீண்டினாரையும் பரிசுத்தராம்படி செய்யுமதாயிற்று. [3]தீர்த்தன் உலகளந்த சேவடியைப் பிரமன் விளக்க, அந்தத் தீர்த்தத்தைப் பரிசுத்தத்தின்பொருட்டுச் சடையின் மத்தியில் தரித்தான் சிவன். [4]'ஆறு பொதி சடையோன்' என்னக்கடவது அன்றோ? 'கங்காதரன்' என்றே பெயர் அவனுக்கு. [5]அந்தக் கங்கைக்கு அடியை ஆராய்ந்து கொள்ளுகை அன்றோ இனி உள்ளது? ஆராய்ந்தவாறே அது அடிப்பட்டு இருக்குமே; [6]கங்கை போதரக் கால் நிமிர்த்தருளிய கண்ணன் அன்றோ?

---

1. *ஈற்றடியைக் கடாட்சித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.*

2. *''தீர்த்தன்' என்றால் பரிசுத்தன் என்னும் பொருளைக் காட்டுமே ஒழிய, 'தன்னினின்றும் வேறுபட்டவர்க்கு எல்லாம் பரிசுத்தத்தைக் கொடுக்குமவன்' என்னும் பொருளைக் காட்டுமோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தீர்த்தமாவது' என்று தொடங்கி.*

3. *'அப்படித் தன்னைத் தீண்டினாரையும் பரிசுத்தம் ஆக்கினானோ?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'தீர்த்தன்' என்று தொடங்கி.*

4. *அப்படித் தரித்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'ஆறு பொதி சடையோன்' என்று தொடங்கி.* இது, திருவெழுகூற்றிருக்கை.

5. *'கங்காதரன் என்ற மாத்திரத்திலே அவன் திருவடி விளக்கின நீரைத் தரித்தான் என்னுமது தோற்றுமோ?' என்ன, அதற்குக் காரணத்தை விசாரித்துக்கொள்ள வேண்டும் என்னுமதனையும் அப்படி விசாரித்தால் திருவடியிலே பிறந்ததாய் இருக்கும் என்னுமதனையும் அருளிச்செய்கிறார், 'அந்தக் கங்கைக்கு' என்று தொடங்கி. 'அடிப்பட்டிருக்குமே' என்பதற்கு, காரணமாயிருக்கும் என்பதும், திருவடியிலே பட்டிருக்கும் என்பதும் பொருள்.*

6. *'அங்கை யால்அடி மூன்றுநீர் ஏற்றுஅயன்*
*அலர்கொடு தொழுதேத்தக்*
*கங்கை போதரக் கால்நிமிர்த் தருளிய*
*கண்ணன்வந் துறைகோயில்'*

*என்பது*, பெரிய திருமொழி, 4. 2 : 6.

அன்றிக்கே, தீர்த்தனுக்கு அற்றபின் - [1] 'தன்னுடைய இனிமையின் மிகுதியாலே தன்னை ஒழிந்த விஷயங்களில் உண்டான ருசியைக் கழித்தவனுக்கு அற்ற பின்' என்றுமாம். மற்று ஓர் சரண் இல்லை என்று எண்ணி - அவனை ஒழிய இரட்சகர் இலர் என்று தெளிந்தார் ஆயிற்று. தீர்த்தனுக்கே தீர்த்த மனத்தனன் ஆகி-[2] புறம்பு உண்டான விஷயங்களிலே ருசியைப் போக்கினவனுக்கே அறுதியாக எழுதிக் கொடுத்த நெஞ்சினையுடையராய். [3] 'உனை நினைந்து எள்கல் தந்த எந்தாய்' என்றுரே மேல்: 'மாற்பால் மனம் சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு' என்றும், 'பரமாத்துமா விஷயத்தில் அன்புடையர் அன்னிய விஷயத்தில் அன்பிலர் ஆவர்,' என்றும் சொல்லுகிற படியே, தன் பக்கல் நெஞ்சினை வைத்தால் பின்பு புறம் போக ஒட்டாதே அழகு; [4] 'மனைப்பால், பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பம் எல்லாம், துறந்தார் தொழுதார்அத் தோள்,' என்கிறபடியே, மனைப்பால் பேரின்பத்திலே கைகழிய ஒட்டாதே.

---

'அண்ட கோளகைப் புறத்ததாய் அகிலமன் றளந்த
புண்ட ரீகமென் பதத்திடைப் பிறந்துபூ மகனார்
கொண்ட தீர்த்தமாய் அரன்கொளப் பகிரதன் கொணர
மண்ட லத்துவந் தடைந்ததிம் மாநதி மைந்த!'

என்பது, கம்பராமாயணம், அகலிகைப்பட. 60.

1. 'தீர்த்தனுக்கு' என்ற பதத்திற்கு, 'இனியன்' என்று வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார், 'தன்னுடைய' என்று தொடங்கி.

2. 'இனியனானவனுக்கு' என்றதனால் பலித்த பாவத்தை அருளிச் செய்கிறார், 'புறம்பு உண்டான' என்று தொடங்கி.

3. புறம்பு உண்டான விஷயங்களிலே ருசியைப் போக்கினான் என்பதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார், 'உனைநினைந்து' என்று தொடங்கி.

'உனைநினைந்து' என்பது, திருவாய். 2. 6 : 4.

'மாற்பால்' என்பது, மூன்றுந்திருவந். 14.

'பரமாத்மநி யோரக்த: விரக்த:அபரமாத்மநி' என்பது, பார்ஹஸ்பத்ய ஸ்மிருதி.

4. 'அவனுடைய அழகு புறம் போக ஒட்டாது,' என்னுமதற்குப் பிரமாணம் காட்டுகிறார், 'மனைப்பால்' என்று தொடங்கி. இது, இரண்டாந்திருவந். 42.

செழுங்குருகூர்ச் சடகோபன் சொன்ன - [1] அதற்கு அடியான ஜன்மபூமியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. தீர்த்தங்கள் ஆயிரம் - ஆயிரம் பாசுரங்களும் ஆயிரம் தீர்த்தங்கள் ஆயின. இவை பத்தும் வல்லார்களை - இந்தப் பத்தைக் கற்க வல்லவர்களை. தேவர் தீர்த் தங்களே என்று தம் தேவியர்க்குப் பூசித்து நல்கி உரைப்பர் -[3] திருவடி, திருவனந்தாழ்வான், சேனை முதலியார் தொடக்கமானார், இவர்களை 'நாள்தோறும் தூயர் ஆவார்' என்று ஆதரித்துக்கொண்டு போந்து, தங்கள் மனைவிமார்களைச் சினேகித்துக் கொண்டாடும் தசையிலே சொல்லுவார்கள். நல்கி உரைப்பர் தம் தேவியர்க்கே - [4] மனைவி மார்களும் தாங்களுமாக ஸ்ரீ வைகுண்டநாதனுக்கு அடிமை செய்து, மனைவிமார்கள் எடுத்துக் கை நீட்டின பிரீதியின் மிகுதியாலே ஓடம் ஏற்றிக் கூலி கொள்ளுமளவானவாறே, அவர்களுக்கு எல்லா வற்றையும் கொடுத்துக் கனக்கத் தங்கள் பிரபாவத்தைச் சொல்லும் படியாகப் பெறுவர். ஓடம் ஏற்றிக் கூலி கொள்ளும் தசையாகிறது, பகவத் விஷயத்தில் கைங்கரியம் செய்யும் போது எடுத்துக் கை நீட்டுகை அன்றோ? [5] 'சரமஶ்லோகம் இரட்சித்துக்கொண்ட அளவு போலே இருக்கும் அளவுகளிலே,' என்றபடி. 'பருவம் அல்லாத மற்றைக் காலங்களில் கடல் தீண்டலாகாது,' என்றாற்போலே, அதற்கு ஒரு நியதி இல்லை ஆதலின், 'வைகலும் பூசிந்து

1. 'அதற்கு அடியான' என்றது, 'புறம்பு உண்டான விஷயப் பிராவண்யம் தவிரும்படி பிறந்த மன உறுதிக்கு அடியான' என்றபடி.

2. 'ஆயிரம் திருப்பாசுரங்களும் தீர்த்தம் போன்று பரம பரிசுத்த மானவை,' என்றபடி.

3. 'தேவர் பூசித்து' என்று கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார் 'திருவடி' என்று தொடங்கி.

4. 'தேவியர்க்கு நல்கி உரைப்பதற்குக் காரணம் என்?' என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார், 'மனைவிமார்களும்' என்று தொடங்கி. ஓடம் ஏற்றிக் கூலிகொள்ளுமளவாவது, 'ஓடத்தில் ஏற்றின பின்பு நட்டாற்றில் கூலி கேட்கில் கொடாதிருக்க ஒண்ணாத நிலை' என்றபடி. 'தங்கள்' என்றது, இதனைக் கற்றவர்களை.

5. 'ஓடம் ஏற்றிக் கூலி கொள்ளும் அளவானவாறே' என்றதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார், 'சரமஶ்லோகம்' என்று தொடங்கி. என்றது, மிகமிக இரகசியமாகப் பேணிக்கொண்டு போந்த சரமஶ்லோகத்தைத் திரௌபதி குழல் முடிக்கைக்காக, வியாமோகத்தாலே அருச்சுனனுக்கு வெளியிட வேண்டும்படியான அளவு போலே இருக்கிற அளவுகளிலே' என்றபடி.

என்கிறார். வைகல் - காலம். 'ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி' என்று அவன் விஷயத்தில் இவர் பிரார்த்தித்ததை இது கற்ற அடியார் விஷயத்திலே நித்தியசூரிகள் அடிமை செய்வார்கள் என்றபடி. (11)

திருவாய்மொழி நூற்றந்தாதி

இன்பக் கவிபாடு வித்தோனை இந்திரையோடு
அன்புற்று வாழ்திருவா றன்விளையில்—துன்பமறக்
கண்டடிமை செய்யக் கருதியமா றன்கழலே
திண்திறலோர் யாவர்க்கும் தேவு. (70)

ஏழாம்பத்து ஈட்டின் தமிழாக்கம்

முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

நம்பிள்ளை நற்றாள் வாழ்க!

வடக்குத் திருவீதிப் பிள்ளை மலரடி வாழ்க!

மாறன் மலரடி வாழ்க!



---

1. 'வைகலும்' என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார், 'ஒழிவில்' என்று தொடங்கி. இது, திருவாய். 3. 3 : 1.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

*வியாக்கியானத்தில் வந்துள்ள*

# ஐதிஹ்யங்கள்

ஆண்டாள் ஒருநாள் ஆழ்வானுக்குப் ' பிள்ளைகள் விவாகம் செய்வதற்குத் தக்க பருவத்தை அடைந்தார்கள் ; இவ்விடையாட்டம் ஒன்றும் ஆராயாது இருக்கிறது என் ?' என்ன, ' பகவத் குடும்பத்துக்கு என்னை இன்று இருந்து கரையச் சொல்லுகிறீரோ ? நாளை நான் வாசித்துச் சமையக்கொள்ள அங்கே வரக் காட்டு,' என்ன, பட்டரையும் சீராமப் பிள்ளையையும் கொடுத்துப் போகவிட, வாசித்துச் சமைந்து பெருமாள் திருவடிகளிலே நிற்க, ' ஒன்று சொல்லுவாய் போலே இருந்தாயே !' என்று திருவுள்ளமாக, ' இவர்கள் விவாகம் செய்வதற்குத் தக்க பருவத்தை அடைந்தார்கள் என்னாநின்றார்கள்,' என்று விண்ணப்பம் செய்ய, ' எல்லாம் செய்கிறோம்,' என்று திருவுள்ளமானார் ; பிற்றை நாளே மன்னியைக் கொடு வந்து கொடுத்தார்கள். ப. 52.

அகளங்க பிரஹ்மராயர் அடையவளைந்தான் செய்யா நிற்கச் செய்தே மதிள் போக்குகைக்காக இளையாழ்வான் அகத்தை வாங்கப் புக, பட்டர் அதனைக் கேட்டருளி, ' வாரீர் பிள்ளாய் ! நீர் செய்கிற மதிள் பெருமாளுக்கு இரட்சகம் என்று இராதே கொள்ளீர் ; இங்குக் கிடக்கும் நான்கு குடிகளுங்காணும் பெருமாளுக்குக் காவல் ; ஆனபின்பு நீர் செய்கிறவை எல்லாம் அழகிய ! இவை எல்லாம் நாம் செய்கிறோம் என்று இராதே, பெருமாள் செய்விக்கிறார் என்று இரீர்; உமக்கு நல்வழி போக உடலாங்காணும்,' என்று அருளிச் செய்தார். ப. 52.

அனந்தாழ்வான் தான் பெண் பிள்ளையை ' என் திருமகள் ' என்று திருநாமம் சாத்தினான். பட்டர் பெருமாளிடத்தில் 'அடியேனை ஸ்திரீதனமாகப் பிராட்டிக்கு வந்தவன் ' என்று திருவுள்ளம் பற்றவும், நானும், ' இவர் எங்கள் நாய்ச்சியார்க்கு நல்லர் ' என்று அவ்வழியே ' அழகிய மணவாளப்பெருமாள் ' என்று நினைத்திருக்கவும் வேணும்,' என்று வேண்டிக்கொண்டார். ப. 91.

பெருமாளுக்கு விண்ணப்பம் செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரை அழைத்தருளித் தாம் அமுதுசெய்யாநிற்க, இப்பாட்டளவிலே வந்தவாறே 'என்திருமகள் சேர் மார்பனே! என்னும்; என்னுடை ஆவியே! என்னும்,' என்று இயலைச் சேர்த்து அருளிச்செய்ய, அதனைக் கேட்டுக் கையை உதறி, 'ஸ்ரீ ரங்கநாத' என்று அணையிலே சாய்ந்தருளினார் பட்டர் என்று அருளிச்செய்வர். அப்போது திருமேனியிலே பிறந்த வேறுபாட்டினைக் கண்டு, 'இவர்க்குப் பகவானை அடைகிறது அணித்தாகிறதோ?' என்று அஞ்சி இருந்தேன்' என்று சீயர் அருளிச்செய்வர். ப. 92.

நஞ்சீயர் கோயிலுக்கு எழுந்தருளாநிற்க, வழியிலே திருக்குருகைப்பிரான் பிள்ளானைக் கண்டு, 'ஈஸ்வரனுக்குச் சொரூப வியாப்தியோ, விக்கிரஹ வியாப்தியும் உண்டோ?' என்று கேட்க, 'பாஷ்யகாரர் தோற்ற அருளிச்செய்துகொண்டு போந்தது சொரூப வியாப்தியாய் இருக்கும்; ஆகிலும், எம்பார் ஒரு நாள், 'உபாசகர்கட்கு அநுக்கிரஹம் செய்தற்பொருட்டு அடியார்களுடைய நெஞ்சிலே விக்கிரஹத்தோடே வியாபித்திருக்கும்,' என்று அருளிச்செய்யக் கேட்டேன்,' என்று பணித்தார். ப. 108.

பிள்ளைதாம், பெருமாள் எழுந்தருளும் போது 'எங்கேனும் ஒரு சலனம் பிறக்கில் நம் பிராணனை விடுமத்தனை' என்று சொட்டையை உருவிப் பிடித்துக்கொண்டு சேவிப்பராம். நம் முதலிகள் அதனைக் கண்டு, இவரை 'மஹாமதிகள்' என்று அழைப்பர்கள். ப. 163.

'பட்டர் இராமாவதாரத்தில் போர பக்ஷபதித்திருப்பர்,' என்று அவர் அருளிச்செய்யுமது கேட்கைக்காகச் சிறியாத்தான் ஒருநாள், 'பெருமாளுக்கு எல்லா நன்மைகளும் உளவாகிலும், கழுத்திலே ஓலை கட்டித் 'தூது போ' என்ன, தூது சென்ற கிருஷ்ணன் நீர்மை இல்லையே!' என்ன, 'அது அங்ஙன் அன்றுகாண்; கழுத்திலே ஓலை கட்டித் 'தூது போ' என்பார் இல்லாமையாலே தவிர்ந்தாரத்தனை காண்,' என்று அருளிச்செய்தார். ப. 191.

ஆளவந்தார் 'சிசுபாலன் பெற்றிலன்காண்' என்று அருளிச்செய்வர்; 'அது என்?' என்னில், 'இதற்கு அடியாகச் சொல்லலாவது ஒரு சாதனம் இவன் கையில் இல்லாமையாலே, நாட்டை நலியாமைக்குக் கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றி எறிந்தானத்தனைகாண்,' என்று அருளிச்செய்வர். ப. 221.

'அருச்சுனன் தான் எம்பெருமானைப் பெற்றானே, இல்லையோ?' என்று நம்பிள்ளை சீயரைக் கேட்க, 'உமக்கு அதுகொண்டு காரியம் என்? இது சொன்னவன் எல்லார்க்கும் பொதுவானவனாகில், பகவானுடைய வார்த்தை என்னுமிடம் நிச்சயமாகில், தங்கள் தங்களுடைய கர்மங்கட்குத் தகுதியாகவும் ருசிக்குத் தகுதியாகவும் பெறுகிறார்கள்; பெற்றவர்களை ஆராய்ந்து பார்த்து அதனாலே அன்றோ நாம் பற்றப் பார்க்கிறது?' என்று அருளிச்செய்தார். ப. 246.

அம்மங்கி அம்மாள், 'இத்திருவாய்மொழி பாடக் கேட்டு அனுபவித்துப் போருமிதற்கு மேற்பட, இதில் ஓடுகிற ஆர்த்திக்கு நம்மாற்பாசுரம் இட்டுச் சொல்லப் போகாது என்று பணிக்கும்,' என்று அருளிச்செய்வர். ப. 248.

நம்பி திருவழுதிநாடு தாசர், ஸ்ரீ கீதை போவான் ஒருவன் சந்நியா சதஸ்ஸிலே வந்து கண்டால், பின்னை இவனுக்கு உழக்கு அரிசியைக் கொடுப்பித்து விடுமத்தனை போக்கி அங்கு அவர்கள் உள்ளிடம் கொடார்கள்; திருவாய்மொழி கற்றவன் ஒரு விண்ணப்பம் செய்வான் சென்றால், சர்வேஶ்வரனும் கிராமத்தில் உள்ளாரும் புறப்பட்டு எதிர்கொண்டு தங்கள் இருப்பிடத்தை ஒழித்து அவனுக்குக் கொடுத்து ஆதரியாநிற்பர்கள்,' என்று அருளிச் செய்வர். ப. 354.

திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் படிக்கட்டிலிலே ஆளவந்தார் எழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக எழுந்தருளி நிற்கிறவரைக் கண்டு, 'ஆம் முதல்வன் இவன்' என்று அருளிச்செய்தாராம். ப. 356.

# பெரியோர்கள் உரைத்த உரை நயங்கள்

## வந்துள்ள இடங்கள்

# வியாக்கியானத்தில் வந்துள்ள உவமைகள்

சரணம் புக்கார் மேலே வேல்காரரை ஏவித் துன்புறுத்தும் அருள் அற்றவரைப் போலே. பக். 3.

உதங்கன் கிருஷ்ணன் பக்கலிலே வந்து, 'உனக்கு இரு திறத்தாரோடும் சம்பந்தம் ஒத்திருக்கச்செய்தே, பாண்டவர்களை அழிக்காமல் துரியோதனுதியர்களை அழித்தாய்; இப்படிச் சார்வு செய்யப்போமோ?' என்றுற்போலே. பக். 7.

முதலிகள் அடங்கலும் அரக்கர்கள் வாயிலே கிடந்து பெருமாளைச் சரணம் புக்காற்போலே. பக். 9.

புலியின் வாயிலே அகப்பட்ட குழந்தை தாய்முகத்திலே விழித்துக்கொண்டு புலியின் வாயிலே கிடந்து நோவுபடுமாறு போலே. பக். 10.

விடுநகம் கட்டுவாரை 'நெகிழக் கட்டினுய்!' என்று உறுக்கிக் கட்டுவிப்பாரைப் போலே. பக். 12.

திரிசங்குவினுடைய ஓலக்கம் கிளர்ந்தாற்போலே. பக். 15.

கலகத்தில் பள்ளிகள் போலே. பக். 17.

ஸ்ரீ பிரஹ்லாதனைப் பாம்புகளைக் கூடவிட்டுக் கட்டி நலிந்தாற் போலே. பக். 18.

உன்னை அனுபவிக்க வேணும் என்று போந்த பிராட்டியை மாயமானைக் காட்டிப் பிரித்து, ஒற்றைக்கண்ணன் ஒற்றைக்காதள் இவர்கள் கைகளிலே காட்டிக்கொடுத்து, உன்னைக் கொண்டு அகன்றுற்போலே. பக். 19.

மயிர் கழுவி இருக்கிறவனைச் செவ்விப்பூச்சூடாமல் தடுப் பாரைப் போலே. பக். 24.

'கூட இருக்கில் கண்ணோட்டம் பிறக்கும்,' என்று கடக்கப் போவாரைப் போலே. 25.

ஒருவன் சிறை இருக்க, தாயும் தந்தையும் உடன் பிறந்தார் களுமாய்க் கலியாணம் செய்யக் கண்டு தான் கூடப்பெருதே நோவு படுமாறு போலே. பக். 28.

அவன் தான் அவதரித்துச் சோகிப்பது மோகிப்பதானாற்போலே. பக். 30.

மஹாராஜர் வாலியை வென்றாற்போலே. பக். 31.

இராசபுத்திரன் தலையில் முடியை வாங்கிச் சும்மாட்டைக் கொண்டு வழியிலே நின்றால், அடி அறியாதார் சுமை எடுத்துக் கொண்டு போமாறு போலே. பக். 41.

வலி இல்லாதான் ஒருவன் தலையிலே மிக்க பாரத்தைச் சுமத்திச் சுற்றும் நின்று தந்தாம் வழியே இழுத்துக்கொண்டு போகத் தேடுமாறு போலே. பக். 42.

தாபத்தாலே வருந்தினவன் மடுவிலே தாழ இழியுமாறு போலே. பக். 45.

குழந்தைகளைப் பட்டினி இட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப் போலே. பக். 48.

'பிள்ளாய்! நீ நிர்ப்பந்திக்கக் கடவை அல்லை; உன்னைச் சுவதந்திரனாக்கி வார்த்தை சொன்னார் எதிரே, உன் சொரூபத்திற்குத் தகுதியான பாரதந்திரியத்தைப் பெற்று நீ போ' என்று சொன்னாற்போலே. பக். 49.

கிண்ணகம் பெருகி ஓடாநின்றால் இரு கரையும் ஆறுகளாகப் பெருகிப் போகாநிற்கச்செய்தேயும் கடலிற்புகும் பாகம் குறையாமல் போய்ப் புகுமாறு போலே. பக். 51.

பெருமாளுடைய இரட்சணத்துக்காக இளைய பெருமாள் உணர்ந்திருக்குமாறு போலே. பக். 51.

சிறைக்கூடத்திலே பிறந்து வளர்ந்தாரைப் போலே. பக். 55.

விடாயன் கையை மடுத்துத் தண்ணீரை வேண்டுமாறு போலே. பக். 57.

இராக்கதர்கள் தின்ற உடம்பைக் காட்டினாற்போலே. பக். 59.

ஒலி வழியே ஸ்ரீகஜேந்திராழ்வானுக்கு வந்து தோன்றினாற்போலே. பக். 66.

ஒரு நீர்ச்சாவியிலே ஒரு பாட்டம் மழை விழுந்தாற்போலே. பக். 69.

அவியும் விளக்குக் கிளர்ந்து எரியுமாறு போலே. பக். 72.

கடல் எல்லாப்பொருள்களேயும் தன்னுள்ளே அடக்கி, ஒன்றை ஒன்று நலியாதபடி நோக்குமாறு போலே. பக. 72.

பிரஹ்மஹத்திகளைச் செய்து பூணூலை வெளுக்க விட்டுக் கையிலே பவித்திரத்தையும் இட்டு ஒத்துச் சொல்லித் திரிவாரைப் போலே. பக். 74.

தண்ணீர்ப் பந்தலிலே கொலைஞர் தங்கினதைப் போன்றது. பக். 74.

புழுகூற்றிச் சட்டம் போகடுவாரைப் போலே. பக். 79.

திவ்விய ஆயுதங்கள் பகைவரை அழிப்பதற்கு உடலாக இருக்குமாறு போலே. பக். 80.

தசை முறுகினல் வைத்தியர்கள் முகம் பாராதவாறு போலே. பக். 86.

சமந்தகமணி கைப்பட்ட பின்பு அக்குரூரன் அடுத்து அடுத்து அஶ்வமேதம் செய்தாற்போலே. பக். 112.

சம்சாரிகள் ஐம்புல இன்பங்களினின்றும் மீளமாட்டாதவாறு போலே. பக். 119.

கிண்ணகத்தில் ஒரு சுழியிலே அகப்படுவாரைப் போலே. பக். 121.

திருப்பாற்கடல் கடைகிற காலத்தில் தான் எட்டு வடிவு கொண்டாற்போலே. பக். 123.

வினைத்தலையிலே படை அறுக்குமாறு போலே. பக். 127.

முத்தர் சாமகானம் பண்ணி அப்பிரீதிக்குப் போக்கு விடுமாறு போலே. பக். 131.

செந்நெலுக்குத் தண்ணீர் தாரகமாய் இருக்குமாறு போலே. பக். 139.

மலைகளின் சிகரங்களைக் கொடுவந்து வைத்தாற்போலே. பக். 150.

மலரும் போது எங்கும் ஒக்கப் பிறக்கும் மலர்ச்சி போலே. பக். 157.

பரிகரம் நிற்க மஹாராஜர் இராவணன்மேல் பாய்ந்தாற்போலே. பக். 161.

'ஆயிரக் காதம் பறப்பதன் குட்டி ஐந்நூற்றுக் காதம் சிறகடிக்கொள்ளும்' என்னுமாறு போலே. பக். 162.

தூசி ஏறினவர்கள் பொரப் புக்கவாறே நின்ற இளவணி கலங்கி மேலே நடக்குமாறு போலே. பக். 164.

நின்ற பேரணியும் குலைந்து மேல் விழுமாறு போலே. பக். 166.

கிடாய்ப்பாய்ச்சல் போலே. பக். 169.

பசுங்கலம் நெறித்தாற்போலே. பக். 175.

புருடோத்தமனைப் பற்றி இருப்பாரைப் போலே. பக். 182.

'கழுத்திலே கயிறு இட்ட பின்புகாண் நான் பூனை என்று அறிந்தேன்,' என்பாரைப் போலே. பக். 184.

நிறைகுடத்தைக் கவிழப் பிடித்தாற்போலே. பக். 186.

முற்றத்திலே பொற்குவியில் குவிந்து கிடக்க, அதனை அறியாதே, மேலே சஞ்சரித்துப் புறங்கால் வீங்குவாரைப்போலே. பக். 190.

வெள்ளமானது தாழ்ந்த இடத்திலே ஓடுமாறு போலே. பக். 200.

அரசன் தன்னுடையான் ஒருவனுக்கு ஒரு நாட்டைக்கொடுத்தால் அவனுடைய ஆணையும் ஆஜ்ஞையுமாக அவனுடைய சுவாதந்திரியமே நடக்கும்படி செய்து கொடுக்குமாறு போலே. பக். 204.

'ஒருவன் சோற்றை உண்டவர்கள் அவனை ஒழிய வேறு ஒருவர்க்குக் காரியம் செய்வர்களோ?' என்னுமாறு போலே. பக். 207.

எறும்பு வளையைப் போன்றது. பக். 215.

ஒவ்வொரு குணத்தை அனுபவிக்கப் புக்கால் வேறு குணங்களில் கால் வாங்கமாட்டாதவாறு போலே. பக். 217.

பயிர் செய்கிறவன் விளைநிலம் உவர் கழியும்படி நீரைத்தேக்கி வைக்குமாறு போலே. பக். 224.

உதாரராய் இருப்பார், நாற்பது பேருக்குச் சோறிட நினைத்து, நூறு பேருக்குச் சோறு சமைக்குமாறு போலே. 227.

பரணி கூடு வரிந்தாற்போலே. பக். 242.

விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாறு போலே. பக். 242.

மண் தின்ன வேணும் என்று அழுத குழந்தைக்கு அதனை இட்டு அதற்குப் பரிகாரம் பண்ணுமாறு போலே. பக். 244.

கிரந்தி கிடக்கச் செய்யும் பரிகாரம் போலே. பக்: 244.

புண் இல்லாதபடி அறுத்து நோக்குவாரைப் போலே. பக். 244.

கூளமும் பலாப்பிசினும் போலே. பக் 247.

ஆர்த்தியாலே நிரம்பிற்று ஒரு கூடல் கை எடுத்துக் கூப்பிடுமாறு போலே. பக். 249.

படுகொலைக்காரர் கையிலே அகப்பட்டால் தப்பவேணும் என்று பார்க்குமாறு போலே. பக். 250.

'இன்ன மலையிற்பொன்' என்றவாறே விலை போமாறு போலே. பக். 250.

'என் தாயே' என்பாரைப் போலே. பக். 252.

பெற்ற தாய் வளர்க்குமாறு போலே. பக். 252.

பருந்து இருஞ்சினாற்போலே. பக். 253.

குழந்தையைப் பெறவேணும் என்று ஏற்கவே வருந்தும் தாயைப் போலே. பக். 257.

பாண்டவர்களுடைய கோவலன் ஆனாற்போலே. பக். 265.

அனுபவிக்கப்படாத இரத்தினம் போலே. பக். 266.

காலப்பூ அலர்ந்தாற்போலே. பக். 268.

புற்றுகள் எப்போதும் ஒக்கப் பாம்பு பற்று அறுதவாறு போலே. பக். 274.

தாயையும் தமப்பனையும் இரண்டு இடங்களிலே ஆக்குவாரைப் போலே. பக். 276.

பசுக்களின் கூட்டத்தின் நடுவே ஓர் இடபம் செருக்கித் திரியுமாறு போலே. பக். 279.

இராசத் துரோகிகளைக் கொல்லும் போது இராச சின்னங்களை வாங்கிக் கொல்லுவாரைப் போலே. பக். 282.

மூலபலத்தின் அன்று பார்த்த பார்த்த இடமெல்லாம் பெருமாளே ஆனாற்போலே. பக். 291.

பாம்பைக் கண்ட அச்சம் போலே. பக். 291.

ஹிதத்திலே நடக்கும் தமப்பனைப் போலே. ப. 294.

யானை அணி செய்து வந்து தோன்றினுற்போலே. பக். 304.

பிரளயம் கோத்தாற்போலே. பக். 318.

ஒன்றைக் கேட்க வேறே சிலவற்றைச் சொல்லுவாரைப் போலே. பக். 321.

ஸ்ரீ வீடுமரைப் பாணங்களாகிய படுக்கையிலே இட்டு வைத்து நாட்டுக்கு வெளிச்சிறப்பைப் பண்ணிக் கொடுத்தாற்போலே. பக். 344.

திருத்திரை எடுத்தாற் கூப்பிடுமாறு போலே. பக். 349.

தான் வென்று மற்றையாரோடு ஒருசேர நின்று அருச்சுனனைப் புகழுமாறு போலே. பக். 353.

திருமஞ்சனத்திற்கு உபகரணங்கள் சமைந்திருக்குமாறு போலே. பக். 362.

தந்தையானவன் மகனுக்கு ஒரு பசுவை நீர் வார்த்துக் கொடுத்து மீண்டு அவன் பக்கலிலே பசுவை நீர் ஏற்றுப் பெறுமாறு போலே. பக். 366.

ஸ்ரீ வால்மீகி பகவான் பாடின ஸ்ரீ ராமாயணம் கேட்கைக்குத் திருவயோத்தியையிலே திருத்தம்பிமாரும் தாமுங்கூடப் பெருமாள் பேரோலக்கம் இருந்தாற்போலே. பக். 384.

சாதி குணங்கள் திரவியத்தோடு சேர்ந்தாற்போலே. பக். 388.

இதற்கு முன்பு ஆனந்தம் புதியது உண்டு அறியாதான் ஒருவனுக்கு ஆனந்தம் உண்டாமாறு போலே. பக். 389.

குழந்தை பால் குடிக்கக்கண்டு உகக்கும் தாயைப் போலே. பக். 390.

பல முதலிகள் இருக்க ஆழ்வானைக் கொடுத்தாற்போலே. பக். 400.

பால் குடிக்க நோய் தீருமாறு போலே. பக். 401.

'யானைக்கும் தனக்குத் தக்க வாதம்' என்னுமாறு போலே. பக். 406.

முட்பாய்ந்தால் 'அம்மே!' என்பாரைப் போலே. பக். 410.

இராசபுத்திரனைச் சிறையிலே இட்டு வைத்தால், கைக்கூட்டனுக்கும் பாலும் சோறும் இடுவாரைப் போலே. பக். 111.

'பருவம் அல்லாத காலங்களில் கடல் தீண்டலாகாது' என்றாற் போலே. பக். 419.